



# முண்டக உபநிஷத்துப் பிரவசனம்



தமிழ் உரை ஆசிரியர்

ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்

வேதாந்த ஆச்சாரியாள்,

தலைவர்,

ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

அவனியாபுரஞ்சாலை, தெற்குவாசல்,

மதுரை-1.



1986



22-5



# முண்டக உபநிஷத்துப் பிரவசனம்







தமிழ் உரை ஆசிரியர்

**ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்**

வேதாந்த ஆச்சாரியாள்,

தலைவர்,

**ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்**

அவனியாபுரஞ்சாலை, தெற்குவாசல்,

மதுரை-1.



விலை ரூ. 20—00

**1986**

ௐ

பவசங்கரதேசிகமே சரணம்



ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்
யோக வேதாந்த ஆச்சாரியாள்
ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்
அவனியாபுரஞ்சாலை, தெற்கு வாசல்,
மதுரை—1.

2225

உ

பவசங்கர தேசிகமே சரணம்.

# இரண்டொரு சொல்.

மலர்தலை யுலகில் மண்பதைகளனைத்தும் இரு காரியங்களுக்காக முயற்சிக்கின்றன. அவை—இன்பம் எய்தவும், துன்பந்தொலையவுமாம். இவையிரண்டும் வினையின் வினைவால்வருகின்றன. விழைவால் மனிதன் வினையைச் செய்கின்றான். அதனால் உடலைப் பெற்று இன்பதுன்பங்களால் உளைகின்றான்.

எவ்வுயிரும் இனிப்பைத்தான் விழைகின்றது. கசப்பை விழைகிறதில்லை. இது எங்ஙனந் தெரிகிறதெனின், எறும்பு மதுரத்தை விரும்புகின்றது. கசப்பை விரும்புகிறதில்லை. இதனால் என்ன தெரிகிறது? துன்பம் யாருக்கும் பிரியமில்லை. இன்பமே பிரியமென்பது சொல்லாமலே தெரிகிறது. துன்பத்தின் நீக்கமும், இன்பத்தின் ஆக்கமும் தத்துவ ஞானத்தால் உண்டாகின்றன என்பது தெளிவு.

தத்துவஞானம் உபநிஷத்துக்கேள்வியாலும் மனனத்தாலும், நிதித்யாசனத்தாலும் உதிக்கின்றது. உபநிஷத்துக்கள்பல. அவைகளில் முண்டகோபநிஷத்து சாலச் சிறந்தது. இவ்வுபநிஷத்தை என்னிடங்கேட்டு இன்புற்ற, காலஞ்சென்ற ஸ்ரீமதி தங்கமணியம்மையார் இதற்குத் தமிழ் உரை செய்யவேண்டுமென்று எம்மைத்தூண்டினார். அதனால் இவ்வுரை எழுதலாயினோம்.

அன்னாருடைய தாயார் துளசியம்மையாரும் வேதாந்த விதுஷியாகவும். வேதாந்தத்திற்கு ஆதரவு அளித்துவந்தவராகவும் இருந்திருக்கிறார். அவர்தவப்புதல்வியாகத் தோன்றியவர் திருமதி தங்கமணியம்மையார். அவர் திருவிலும், உருவிலும், தெறலிலும் திகழ்ந்து வந்தவர்.

அத்வைதாமிர்தத்தை அயாரது பருகிவந்தவர். அத்வைதம் தழைக்கவேண்டும் என்று, தாராளமாகவும் ஏராளமாகவும் பொருளை மாரிபோல் வழங்கியவர்.

அன்னாருடைய ஆன்மா சாந்தியடையும் பொருட்டு அருமையான இந்நூல் வெளிவருகிறது.

அம்மையாருடைய தோற்றமும் மறைவும் :-

தோற்றம் — 28—6—1925

மறைவு — 17—4—1986

இந்நூல் உரை ஆசிரியர்—

சுவாமி யோகானந்தகிரி, யோக வேதாந்த ஆசிரியர்

ஸ்ரீபிரஹ்மானந்தசுவாமிகள் மடாலயம்

அவனியாபுரம் சாலை

தெற்கு வாசல்

மதுரை—1

# சூத்திர அடக்கம்



# முண்டக உபநிஷத்துப் பிரவசனம்

நூன்முகம்.

பிரஹ்ம வித்தையைக் கூறுகின்ற வைதிக சப்த ராசிக்குப் பெயர் உபநிஷத்து. ராசி—கூட்டம். வேதத்தில் இரு பாகங்கள் உள்ளன. அவை மந்த்ரபாகம் பிராஹ்மண பாகம். இவ்வுபநிஷத்து மேற்கூறிய இரண்டிலும் வந்திருக்கிறது. இவை நீங்கலாக ஆரண்யபாகம் என்று ஒன்றுளது. அதில் இம்முண்டகமும் இன்னும் பல உபநிஷத்துக்களும் வந்திருக்கின்றன.

இம் முண்டக உபநிஷத்து அதர்வவேதத்தில் உள்ளது. இந்த வேதத்தில் பலஉபநிஷத்துக்கள் முக்கியமாக இருக்கின்றன. இன்றைக்குள்ள அறிஞர் பெருமக்கள், தங்கள் தங்கள் மரபுகளை வெளிப்படுத்துவதற்காக உபநிடதங்களைச் செய்தார்கள்என்கின்றனர்.

இவ்வாறு ஆலோசனைபண்ணுவது நமக்குப்பொருந்தாது. உபநிஷத்து வரலாறு நமது நாட்டின் பழைமையானது. இது இதிகாச காலத்திற்கு முன்னே வந்ததா, இடையில் வந்ததா என்றெல்லாம் எண்ணுவது மதிஹீனம்.

எங்கு இல்லங்கட்டுவதற்கு விதிகூறப்படுகிறதோ அங்கு அது ஸ்த்தாபத்ய கலை, யாண்டு விவாகம், புத்திரோத்பத்தி இவைகளை மொழிந்திருக்கிறதோ அது இல்லற தருமத்தின் கலை. எவ்விடத்தில் ஜீவாத்மா பரமாத்மா இரண்டும் ஒன்று என்று உரைக்கப் பெற்றிருக்கிறதோ அவ்விடத்தில் வேதாந்தகலை-பிரஹ்மவித்தை. இம்மாதிரி நாங்கள் விசாரஞ் செய்கின்றோம். வேதத்திலோ, சாஸ்திரத்திலோ உபநிஷத்துக்

களிலோ அல்லது எங்கேயும் பிரம்மவித்தையைப்பற்றிப் பேச வில்லையோ அங்கு "நேதிநேதி" என்னும் வாக்கியத்தால் தத்வஞானம் சாற்றியிருப்பதாக அறிய வேண்டும்.

தத்வ ஞானத்திற்காக எங்கு நேதி நேதி என்னும் வாக்கியத்தில் இதி யென்று சொல்லியிருக்கிறதோ அது விலக்கை யறிவிக்கின்றது. நிஷேதம் என்பது தெய்வமொழி. வேதத்தில் எந்த கலைகள் வந்தாலும் நாங்கள் ஆஸ்திக வாதி கள். அதனுல் கேடு ஒன்றுமில்லை. உலகில் எந்த கலைகள் காணப்படினும் உலகம் என்ன சொல்லியிருக்கிறதோ, என்ன சொல்லுகிறதோ என்ன சொல்லுமோ அவையனைத் தும் வேதத்திலிருந்துதான் வந்திருக்கின்றன. இதைப் பற்றி மநு பகவானும் பகருகின்ருர்:-

பூதம் பவ்யம் பவச்சாபி।
சர்வம் வேதாத் பிரசித்யதி।। மநுஸ்மிருதி.

இகத்தில் உள்ள ஞானமோ அல்லது பரத்திலுள்ள ஞானமோ, அது இன்றும் இருக்கிறது, நேற்றும் இருந்தது, நாளைக்கும் இருக்கப்போகிறது. இவையெல்லாம் வேதத் தினுல் தான் நிர்ணயிக்கப்படுகின்றன. அங்ஙனமிருக்க இன்றைக்குள்ள இளைய தலைமுறையினர் யாதாவதொன் றைக் கூறினுல் அதுவும் வேதத்தின் ஒரு பகுதியாகவே கருதப்படும். ஆனுல் அது வேதசம்மதமாக இருக்க வேண்டும்.

வேதத்தில் எது கூறப்பெற்றிருக்கிறதோ அது தேசம் காலம் அதிகாரிக்குத் தக்கவாறு அருளப்பெற்றிருக்கிறது. மனிதஇனம் பலவாருக இருக்கிறது. காமி, கோபீ, லோபீ, ராகீ, விராகி, கொடியவன், சாந்தமுடையவன். இவர்களுக் காகவும், சென்ற காலத்திற்காகவும், செல்கின்ற காலத் திற்காகவும், செல்லப் போகின்ற காலத்திற்காகவும், எல்லா தேசங்களுக்காகவும், அந்தந்தநாட்டிலுள்ள மக்களுக்

குத்தக்கபடி விதிகள் மொழிந்திருக்கின்றன. சாதனமும் சாற்றியிருக்கின்றன. இம்மாதிரி வேதத்தில் வருகின்ற வாக்கியங்களில் ஒரு வாக்கியங்கூட நாங்கள் அப்ரமாண மாகக் கொள்கிறதில்லை. எல்லா வாக்கியங்களுக்கும் இடம், காலம், அதிகாரிகளுக்கு அநுசாரமாகப் பொருள் கொள்ளப்படும்.

அதர்வ வேதத்தில் பல நாமங்களுடைய உபநிடதங் கள் பிரசித்தமாக இருக்கின்றன. அவைகளில் மூன்று உபநிஷத்திற்கு பகவான் சங்கரர் (பாஷ்யம்) உரை யெழுதி யிருக்கிருர். அவை—முண்டக உபநிஷத்து, மாண்டூக்கிய உபநிஷத்து, பிரஸ்ன உபநிஷத்து. பழைமையைப் பார்க்கும் போது முண்டக உபநிஷத்து மிகப்பழைமையானது. முநி களிலே புராணமுநி வியாசமுநி. அவர் தனது வேதாந்த சூத்திரத்தில் முண்டகத்தில் வருகின்ற மந்திரத்தை விசாரித்திருக்கிருர். இதனுல் என்ன தெரிகிறது? முண்டக உபநிஷத்து பிராமாணிகம் என்று தெரிகிறது.

முண்டகஉபநிஷத்து சுருதி. வியாசர் முதலிய முநி வர்கள் இதைப்பிரமாணமாகக் கொண்டுள்ளனர். இதற்கு முதன் முதலாக பகவான் சங்கரர் உரை யெழுதியுள்ளார். அதற்கு சங்கர பாஷ்யம் என்று பெயர். இவர் நீங்கலாக இராமாநுஜர், மத்வர், நிம்பார்க்கர் முதலிய துவைதவாதி களும் துவைதபரமாக உரைவரைந்துள்ளனர். இதனுல் எல்லா சம்பிரதாயவாதிகளும் இதைப் பொன்போல் போற்றுகின்றனர் என்பது புலனும்.

தத்வ ஞானம் உபநிஷத்து விசாரமில்லாமல் உண்டாக மாட்டாது என்பது எனது நம்பிக்கை. அது எங்ஙனம் எனின்? அங்கிங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய் நிறைந்த பரிபூர்ணவஸ்துவில் இவன் பகைவன் இவன் உறவன் என்று கற்பிக்கின்றனர். இவ்வாறு மனதினுல் கற்பனை செய்து தொலையாதத் துன்பத்தில் நிலையாக அழுந்துகின்றனர். இந்நிலையில் மெய்ஞ்ஞானத் தைத் தவிர விக்ஞானம் இன்பத்தை நல்கா.

விக்ஞானம் உலகத்தில் உள்ள தூலபாகத்தை விளக்குகிறது. நான் யார் என்பதை விளக்குகிறதில்லை. இன்ப துன்பங்களனைத்தும் நான் என்பதில்தான் இருக்கின்றன. அதுவும் கற்பிதமாக இருக்கின்றன. ஆரோபத்தினால் வருகின்ற துன்பங்கள் அபவாதத்தினால் ஒழியும். எந்த ஞானத்தால் பாவத்தையறிகிறோமோ அந்த ஞானத்தால் புண்ணியத்தையும் அறிகிறோம். அந்த ஞானத்நால்தன்னைப் பாவி, புண்ணியன் என்றெல்லாம் கற்பனை பண்ணி உளண்டுப் பூச்சித் தன் மேனியிலிருந்து நூலைநூற்று அவ்வலைக்குள் அகப்பட்டு அழிவதுபோல் அழிகிறார்கள். அவ்வழியிலிருந்து அகல வேண்டுமானால் அறிவு நூலாகிய உபநிஷத்தை அவஸ்யம் கற்க வேண்டும். அகல்ந்து — விலகுவது.

இவ்வுபநிஷத்திற்குப் பெயர் முண்டகம் என்று ஏன் வந்தது? முண்டமென்பது தலையையுங்குறிக்கும். ஆனால் அது இங்கு தலையைக் குறிக்கவில்லை. ஒரு உடலுக்கு நான்கு பாகம்—தாள், முழந்தாள், மார்பு, தலை. அம்மாதிரி உடலும் நான்கு வகைப்படும். ஸ்தூல சரீரம், சூக்கும சரீரம், காரணசரீரம், துரிய ஆன்மா. முண்டகம் என்னுஞ் சொல்லில் க—பரமாத்மா சுகம். இந்த இன்பவடிவ ஆன்மாவை இவ்வுபநிஷத்து விளக்குவதால் இதற்கு முண்டகம் என்று பெயர்.

இந்த உபநிஷத்து தெளிந்த ஞானிகளால் ஓதவும் ஓதுவிக்கவும் தக்கது. இதை முற்றத் துறந்த முநிவர்கள் அற்றங்களைய ஆதரித்து வந்தனர். எளிய முறையில் தத்வத்தைத் தெளிவாக வெளியுறும்படிச் செய்வதில் இதற்குத் தனிப் பெருமையுண்டு.

1

**அத்யாஸ்ரமிப்ய: பரமம் பவித்ரம்ப்ரோவாச சம்யக்ரிஷிசங்க ஜுஷ்டம் சுருதி.**

இ--ள்.

நான்கு ஆஸ்ரமத்தைக் கடந்து அவதூத கோலம் பூண்டு இவ்வுபநிஷத்தை ஆதரித்து வந்ததால் இஃது முண்டக மெனப்படும். பிரம்மச்சாரி, இல்லறத்தவன், வானப்பிரஸ்த்தன், சந்யாசி. இவர்கள் நான்கு பேர்களும் ஆஸ்ரம தருமங்களை முறைப்படி வழிபடுபவர்கள். இத்தருமங்களை விட்டு நெறிமுறைகளைக் கடந்து நிற்கும் சிவயோகிகளுக்கு உரிய உபநிஷத்து இது. முக்கியமானதால் முண்டகம்.

அதர்வணவேதத்தில் பல விரதங்களிருக்கின்றன. அவைகளில் ஒரு விரதம் சிரோவிரதம். இந்த விரதத்தை முறையாகச் செய்து வருபவன் இதற்கு அதிகாரி. அதர்வ வேதத்தை ஓதும் வேதியர்களுக்கு இவ்விரதம் மிகச் சிறந்தது. சிரசில் அக்னிசட்டியைச்சுமந்து குருசந்நிதிக்குக் கொண்டு போவது. குருசமீபம் பல சீடர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் பிரம்மச்சாரி. அவர் முடிவைத்திருந்தார். ஒரு நாள் தனது மாணுக்களையழைத்து தலைமுடியை எடு என்ருர். அவன் அதைக் கேட்கவில்லை குருபரன் கண்டு கொண்டார். தனதுமாணுக்கனுக்கு தலைமுடியில் மிகுந்த வேட்கையிருக்கிறதென்று நினைத்தார். இரவில் அவன் உறங்கினுன். இவர் கத்தரிக்கோல் கொண்டு அவன் தலை ரோமத்தை வெட்டி விட்டார். அவன் வருந்தினுன். சில நாள் கழிந்ததும்மோகந் தெளிந்தது. உள்ளதையுணர்ந்தான். உவகை கூர்ந்தான்.

இதனுல் என்ன தெரிகிறது? மக்களுக்கு ரோமத்திலும் மயக்கம் இருக்கிறதென்பது சொல்லாமலே தெரிகிறது. ரோமம் உடலில் உள்ள அழுக்கு. நகமும் சரீரத்திலுள்ள மலந்தான். நகத்தையும் உரோமத்தையும் அழகு படுத்திப் பார்ப்பது. சிலருக்குத் தொழிலாக இருக்கிறது. பெரும் பாலும் பாவமுழுவதும் தலை உரோமத்தில்தான் இருக்கின்றது.

விசாரிக்குமிடத்து பாவம் இருப்பது இதயத்தில். ஆனால் அங்கு நிலைத்து இருக்க இயலவில்லை. ஏனெனின்? இதயத்தில் இறைவன் வசிக்கிறான். எப்பொழுது மனிதன் இறைவனை நினைக்கின்றானோ அப்பொழுது மனதில் உள்ள பாவம் மண்டை ரோமத்தில் ஏறி விடுகின்றது. புண்ணிய கருமங்கள் செய்கின்ற போது பாவம் அஞ்சுகின்றது. தீர்த்தாடனஞ் செய்யும் போதும், அடியவர்களைக்காணும் போதும், வேதாந்தத்தைக் கேட்கும்போதும் அஞ்சியலறி நெஞ்சை விட்டேறி தலைமிசை அமர்ந்து விடுகிறது. ஆகவே பாவம் நிலையாக உள்ளத்திலிருப்பதில்லை.

இது முண்டக உபநிஷத்து. எனவே எவன்சிர முண்டனஞ் செய்து சந்நியாசம் பண்ணி உலகிலுள்ள விருப்பு வெறுப்பு இவைகளைத் தியாகஞ் செய்து மனத்தூய்மை யடைந்தவனோ அவன் வீட்டிலிருந்தாலுஞ்சரி காட்டிலிருந் தாலுஞ்சரி கல்லாடை புனைந்தாலும்சரி வெள்ளாடை புனைந்தாலும்சரி அவன் இந்த உபநிஷத்திற்கு அதிகாரி யாவான்.

இவ்வுபநிஷத்தில் மூன்று முண்டகம் இருக்கின்றன. தலையை முண்டம் என்பார்கள். இதனால் மூன்று தலை யென்று தெரிகிறது. விஸ்வன், தைஜசன், பிராக்ஞன். விராட்டு, இரண்யகர்பன், அவ்யாகிருதன் என்று பொருள் கொள்ளினும் அமையும். இம்மூன்றிற்கும் வேறாக (க) ஆத்மா இருக்கிறது. அது அம்மூன்றின் இடத்திலும் நிறைந்திருக்கிறது. அதற்குத் துரியமென்றும், தத்வம் என்றும், ஆன்மாவென்றும் பெயர். இவ்வான்மா மூன்றி லும் நிலைத்திருப்பதால் முண்டகம் மூன்று என்று பெயர்.

ஒவ்வொரு முண்டகத்திலும் இரண்டு கண்டங்கள் இருக்கின்றன. ஒரு மனிதனுக்குத் தலையில் மேற்பகுதி கீழ்ப்பகுதி. அது போலறிக. இவ்வுபநிஷத்து பரவித்தையை

விளக்குகின்றது. பரவித்தையென்பது மெய்ஞ்ஞானத்தைக் குறிக்கும். ஆன்மாவையும் பரமான்மாவையும் ஒன்றென்று உணர்த்துவது இந்நூலுக்கு விஷயம்.

நூன்முகம் முற்றிற்று.

## நூல்.

### சாந்தி பாடம்

4 3 4 3
ஓம் பத்ரம் கர்ணேபி : ஸ்ருணுயாம தேவா
4 3 4
பத்ரம் பஸ்யேம அக்ஷபிர்யஜத்ரா:।
3 4
ஸ்த்திரைரங்கை ஸ்துஷ்டுவாம்ஸஸ்தநூர்பிர்
3 3
வ்யஸேம தேவஹிதம் யதாயு : ।।
ஓம் சாந்தி :। சாந்தி :।। சாந்தி ।।।

இ—ள்.

தேவதைகளே! நாம் நம் ஆயிரம் ஆயிரம் காதுகளைக் கொண்டு பாவன நாமங்களைக் கேட்போமாக. இகபரத்தை ஈயும் எல்லா நன்மையும் தரும் யக்ஞகருமங்களில் ஈடு பட்டுக் கொண்டு ஆயிரம் ஆயிரம் கண்களைக் கொண்டு நன்மைகளைக் காண்போமாக. நம்முடைய உறுதியான நிலையுள்ள உறுப்புக்களைக் கொண்டும் நெடுநாள் வாழும் காயத்தைக் கொண்டும் இறைவழிபாடு செய்துகொண்டு (தேவதை) ஞானிகளுக்குப் பணிபுரிவோமாக. அகத்திலும் சாந்தி, புறத்திலும் சாந்தி, அகிலம் எங்கிலும் சாந்தி யுண்டாகட்டும்.

3 4
ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்த ஸ்ரவா : ஸ்வஸ்திந :
3
பூஷா விஸ்வவேதா : ஸ்வஸ்திநஸ்தார்க்ஷ்யோ
3 3 4
அரிஷ்டநேமி : ஸ்வஸ்திநோ பிருஹஸ்பதிர் ததாது
ஓம் சாந்தி : சாந்தி : ।। சாந்தி ; ।।।

இ — ள்.

சீர்த்தியும் கீர்த்தியும் நிறைந்த வித்வான் இந்திரன் நல்ல கர்மங்களைச் செய்வதற்கு அநுமதி வழங்கி நமக்கு நன்மையைச் செய்யட்டும். ஞானகிரணங்களைப் புவியில் பரப்பும் ஆதவன் நமது கண்களை மங்கள தர்சனத்தில் செலுத்தட்டும். நிறைந்த வலிமை வாய்ந்த ஒலி வடிவ கருடன் நமது நல்ல கர்துகளைப் பாவன கதையில் பதியச் செய்யட்டும். ஞான தேவதை வியாழபகவான் நமது வாக்கை வேதாந்த பிரவசனத்தில் விரையும்படிப் பண்ணட்டும். எங்கும் சாந்தி யினிது உண்டாகட்டும். சாந்திப்பாடம் முற்றிற்று.

தொடர்பு —

எந்த வித்தை எந்த மரபிலிருந்து வந்ததென்று தெரிவது அவ்வித்தையின் பெருமையை அது விளக்குகின்றது. பழைமையான சநாதன தரும மரபில்வந்த சிருஷ்டியும், சமுதாயம் ஏற்றுக் கொண்டதும், தத்வ ஞானியால் அடையப்பெற்ற ஞானந்தான் மானவ இனத்திற்கு மயக்கமில்லாத நலத்தை தரத்தக்கது. எனவே உபநிஷத்திற்குரிய ரிஷிகளை அறிவது அவஸ்யம்.

1-வது மந்திரம்.

3 2 3 4
ஓம் ப்ரஹ்மா தேவா நாம் பிரதம : சம்ப பூவ
4 3
விஸ்வஸ்ய கர்தா புவநஸ்ய கோப்தா ।
3
ஸ பிரஹ்ம வித்யாம் ஸர்வவித்யா பிரதிஷ்ட்டாம்
2
அதர்வாய ஜ்யேஷ்ட்ட புத்ராய ப்ராஹ !! (!) !!

இ—ள்.

பிரம்மா எல்லோர்க்கும் முன்னதாகத் தோன்றினர். அவர் உலகத்தைப்படைப்பவர், படைத்த உலகத்தைக் காப்பவர். அவர் தனது மூத்தமகன் அதர்வாவிற்கு எல்லா

வித்தைகளுக்கும் இருப்பிடமான பிரஹ்மவித்தையை உப தேசஞ் செய்தார்.

ஓம் என்பது இறைவனுக்கு இன்றியமையாத நாம மாகும். இது அசுத்தத்தை சுத்தமாகவும், அமங்கலத்தை மங்கலமாகவும் செய்யும். மேலும் பூர்ணவேதவடிவம். எதனுலோவெனின்? வேதத்திற்கு அன்னே காயத்திரி. எல்லா வேதங்களும் காயத்திரியில் இருக்கின்றன. காயத்திரி பிரணவத்தில் இருக்கின்றது. பிரணவம் (வியாஹிருதி) பூ: புவ : சுவ : இவைகளோடு இருக்கிறதுதென்பது நியமம். காயத்திரியைச் சொல்லி வேதம் படிக்க வேண்டு மென்பது முறை. சகல வேதங்களும் காயத்திரியில் அடக்க மென்று முன்னே மொழிந்திருக்கிறது. காயத்திரி வியா ஹிருதியில் அடக்கம். வியாகிருதி ஓங்காரத்தின் மாத்திரை யில் அடக்கம். மாத்திரை-அ,உ,ம. மாத்திரையின் 'அடக்கம் பிந்துவில். பிந்துவின் அடக்கம் பரமாத்மாவில். இம்மாதிரி ஓங்காரம் இறைவனுக்கு நெருங்கிய நாமமாகும்.

பிரஹ்மா தேவாநாம்பிரதம :- எல்லா தேவர்களிலும் அயன்முன்னே பிறந்தான். இந்திரன் முதலிய இமயவர் கள் கஸ்யபரிஷியினிடந் தோன்றினர். கஸ்யபருடைய பிதா மரீச்சி. மரீச்சியின் தந்தை நான்முகன். அதனுல் அயன் அமரர்களுக்கு பிரபிதாமகன். பாட்டனுர்க்குப் பாட்டனுரென் பது கருத்து.

சங்கை :— பிரம்மா என்றுலே சிருஷ்டியில் முதலில் தோன்றினுரென்பது சொல்லாமலே தெரிகிறதே, அங்ஙனம் இருக்க, பிரதமம் என்று ஏன் சொல்லப்படுகிறது? ஈண்டு பிரதமம் என்றது முதல் என்பதைக் குறிக்கவில்லே. பின்னே? சிறந்ததென்பதைக் குறிக்கிறது. அமரர்களேயெண்ணுகின்ற பொழுது முதலில் கமலாசனன் வருகின்ருன்.

சம்பபூவ :- இந்த சம்பபூவ இறந்தகாலத்தைக் குறிக் கும் வினேச்சொல். இதில் சம், என்ற சொல் ஏன் இணேந்- திருக்கிறது?

பதில்—சம் என்னும் சொல் இணைந்ததால் சுயம்பூ எனப்படுகிறது. எவ்விதகாரணமும் இல்லாமல் தானாக உண்டாவதற்கு சுயம்பூ என்று பெயர். அன்னையின் வயிறு, தந்தையின் வீரியம், ஹோமப் பொருள் இவை இல்லாமலும், அக்னியில்லாமலும் தோன்றுவது சம்பூவ எனப்படும்.

சம்பூவ சேதனத்தை விசாரிக்கும் பொழுது சித்தாதுவிற்குப் பொருள் பிரகாசம். அதுபோல் சத்தை விசாரிக்கும் போது சுயம்பு எனப்படும். சுயம்பு தானாக உண்டாகுந் தன்மையுடையது. சத்தென்பதற்குப் பொருளும் அதுதான். உண்மையில் இரண்டும் உண்மைதான். இரண்டும்—சத்தும் சித்தும்.

தேவாநாம் :- நமது இந்திரியங்கள் வியஷ்டியில் தேவதை. பிரகாசம் உடையவை. இவைகள் தோன்று முன்னர் திசை முகன் தோன்றினான். ஆன்மாவில் செய்கிறேன் என்னும் ஆரோபம் உண்டாகும் போது அது நான் முகனாக ஆகின்றது. பிரஹ்மந்தான் பிரம்மா. ஒய்வுப் பெற்ற அதிகாரி போல. பிரஹ்ம சப்தம் :- நபும்ஸக லிங்கம், பிரம்மா என்னுஞ் சொல் புல்லிங்கம். இதனால் என்ன தெரிகிறது? பிரஹ்மம் யாருக்கும் தந்தையில்லை. ஆனால் பிரம்மா எல்லோர்க்கும் பிதா ஆவார்.

பொறிகளின் தேவதை—கண்ணுக்குத் தெய்வம் சூரியன், காதுக்குத் தெய்வம் திசை, நாக்குக்கு வருணன், மூக்குக்கு அஸ்வினி குமாரர்கள், துவக்குக்கு வாயு, கரத்திற்கு இந்திரன், பாதத்திற்கு விஷ்ணு, வாக்கு இந்திரியத்திற்கு நெருப்பு, மூத்திரேந்திரியத்திற்கு பிரஜாபதி, மல துவாரத்திற்கு யமன்.

இந்திரியங்களுக்கு முன்னர் அந்தக் கரணந் தோன்றியது. படைப்புக்குக் காரணம் வாசனை, வாசனை இருப்பது அந்தக் கரணத்தில். ஆகவே அது முன்னர் தோன்றியது. அது—அந்தக் கரணம். வாசநாநுசாரமாகப் பொறிகள் உண்

டாகின்றன. இவ்வாறு இறைவனது எண்ணந்தான் நான்முகன். எண்ணிறந்த அண்டங்களை ஈயும் எண்ணமே அயனுகத் தோன்றியது. அயன்—பிரம்ம தேவன்.

4

''மநஏவ மநுஷ்யஸ்ய விரிஞ்ச்யாகார தாரிண:! மனிதனது மனமே மலரவனுக மாறியது என்பது மேலே கூறிய வாக்கியத்தின் பொருள். மலரவன்—பிரம்மா.

*விஸ்வஸ்ய கர்தா :-* இத்திசை முகன் உலகத்திற்குக் கர்த்தா. அவன் உலகத்தை யுண்டு பண்ணினுன். அயன் ஒன்பது பிரஜாபதிகளுக்குத் தலைவன். குலபதி, ராஷ்ட்ரபதி, சேனுதிபதி முதலியவர்களைப் போல.

*புவனஸ்ய கோப்தா :-* தன்னுடைய ஞானத்தினுல் அவனியைக் காப்பவனும் அவனே. அவன் நான்முகன். இவ்வாறு ஏன் சொல்லப்படுகிறது? இவ்வுபநிஷத்திற்கு உபதேசம் பண்ணும் குருவும் இவரேயாவார். உபதேசஞ் செய்யும் குரு சிறந்தவராக இருந்தால் அவ்வித்தையும் சிறந்ததாகும். யார் எல்லார்க்கும் தந்தையோ அவர் ஞானத்தை அளிப்பதில் பக்ஷபாதஞ் செய்யமாட்டார். எல்லோரையும் காப்பவன் அனைவர்க்கும் ஹிதம் செய்வான். ஹிதம்-நன்மை. எனவே எல்லோரிடத்திலும் ஒன்றுபோல் எண்ணமிருக்கும். விருப்பு வெறுப்பு இன்றியெல்லோரையும் காப்பவன். அனைவருக்கும் நலத்தைச்செய்பவன். குரு இந்த தத்வ ஞானத்தை யுபதேசித்தார் என்பது பொருள். இதையறிவிப்பதற்காக அயனை விஸ்வஸ்யகர்த்தா புவனஸ்ய கோப்தா என்ருர்.

*பிரஹ்ம வித்யாம் :-* இதனுல் இவ்வுபநிஷத்தில் எந்த ஞானம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த ஞானம் பிரம்ம வித்தை யெனப்படும். இதற்கு இரு பொருள்கள் உள்ளன—பிர்ஹ்மணு ப்ரோக்தா வித்யா பிரஹ்ம வித்யா என்பது ஒரு இலக்கணம், இதன் பொருள்—நான்முகன்

நவின்றுர் அதனுல் இந்த ஞானம் பிரஹ்ம வித்தையெனப் பெற்றது. பிரஹ்ம விஷயா வித்யா பிரஹ்ம வித்யா என்பது மற்ருெரு இலக்கணம். பிரஹ்மத்தை நன்ருக விளக்கு வதால் பிரஹ்ம வித்தை யென்பது இதன் பொருள்.

*சர்வ வித்யா பிரதிஷ்ட்டாம்* :- உலகில் இருவிதமான ஞானம், பரஞானம் அபர ஞானம். அளப்பரிய பிரஹ்மத்தை அறிவிக்கின்ற ஞானம் பரஞானம் — பிரஹ்ம வித்தை. அளவுக்குட்பட்ட அகில உலகத்தை விளக்குகின்ற (வித்தை) ஞானம் அபர ஞானம்.

இதில் பரவித்தை சர்வ வித்யா பிரதிஷ்ட்டாம். எல்லா வித்தைகளும் இதிலிருக்கின்றன என்பது பொருள். இது எங்ஙனந் தெரிகிறதெனின்? ''யஸ்மிந் விக்ஞாதே சர்வமிதம் விக்ஞாதம் பவதி''.

இ—ள்

எதை யொன்றை யறிந்தால் எல்லாம் அறிந்ததா கின்றனவோ என்று கூறியிருப்பதால் சகல கலைகளுக்கும் இருப்பிடம் என்பது சாலப் பொருத்தம். இதுவரை குருவின் பெருமையையும் வித்தையின் அருமையையும் விளம்பி விட்டு இனி அதிகாரியைப் பற்றி பேசப்படுகிறது.

அதர்வாய ஜ்யேஷ்ட புத்ராய ப்ராஹ — நான்முகன் தனது மூத்தமகன் அதர்வனுக்கு இக் கலையை ஓது வித்தார். எங்ஙனம் நாரதரால் ஏவப்பட்டு பகவான் வியாசர் ஸ்ரீ மத் பாகவதத்தைச் செய்து ஓதியுணர்ந்து தன்மகன் சுகனுக் குச் சொன்னுரோ அங்ஙனம் அயன் தனது அருமை அதர் வாவிற்கு இதை அருளினுன்.

நான்முகனுக்கு ஒவ்வொரு யுகத்திலும் பலமாநச குழந்தைகள் தோன்றியிருக்கின்றன. அதில் ஒரு கற்பத்தில் சநகர், சநந்தனர் சநாதநர், சநத்குமாரர் என்னும் நால்வர் தோன்றினர்; மற்ருெரு யுகத்தில் ருத்ரர், ஸ்வாயம்பு மநு, மரீச்சி, அக்கினி, அங்கிரர், புலஸ்த்யர், புலஹர், க்ருது,

பிருகு, வசிஷ்டர், தக்ஷர், நாரதர் இவ்வாறு பத்து பெயருடைய ரிஷிகள் வருகின்றனர். இதில் அதர்வா என்னும் பெயரைக் காணேம். இவ்விஷயத்தில் பகவான் சங்கரர் கூறுவதாவது—ஒரு கற்பத்தில் நான்முகனுக்கு அதர்வா என்பவன் எல்லோருக்கும் மூத்தவனுக இருந்தான் என்கின்ருர்.

வாசஸ்பத்யாபிதான் என்னும் நூலில் அதர்வாவிற்கு இலக்கணம் இவ்வாறு — அத — ரு —வநிந். அத என்னும் சொல்லுக்குப் பொருள் அர்தம், ரு என்னும் சொல்லுக்குப் பொருள் ஞானம், வநிந் என்னும் சொல்லுக்கு உடையவன் என்று பெயர். தத்வ ஞானத்தில் யாருக்குத் திடமான (சிரத்தை) நம்பிக்கையுண்டாகுமோ அவர் அதர்வா எனப் படுவர்.

வேறு இலக்கணமும் உளது. தர்வதி இதிதர்வா — — உறுதியில்லாதவன். நதர்வா அதர்வா — உறுதியுள்ளவன்.

4

"சிரத்தா வான் லபதே ஞானம் தத்பர: சம்யதேந்திரிய: இதயத்தில் நம்பிக்கையிருக்க வேண்டும். ஞானத்தைப் பெறுவதற்குப் பெரும் முயற்சி வேண்டும். பொறிகள் தன் வயமாக இருக்க வேண்டும். இம் மூன்றும் அதிகாரிகளுக்கு அவஸ்யம் வேண்டும். இம்மூன்றில் ஒன்று ஊனமாயின் ஞானம் வாராது. பொறியடக்கம் இருக்கின்றது, பெரும் முயற்சியும் இருக்கின்றது. ஆனுல் குருவாக்கியத்தில் நம்பிக்கையில்லை. அங்ஙனமாயின் ஞானம் எங்ஙனம் உதிக்கும்? உதியாதென்பது கருத்து. நம்பிக்கை இருக்கிறது, புலனடக்கம் இருக்கிறது; ஆனுல் முயற்சியில்லை. ஞானம் எவ்வாறு உண்டாகும்? உண்டாகமாட்டாது. ஆகவே மூன்றுசாதநங்களும் முழுமையாக இருக்க வேண்டும் என்பது கருத்து.

அதர்வாய — யாருக்கு இந்த ஞானங் கொடுக்கப் பெற்றிருக்கிறதோ அவன் சிரத்தையுடையவன் என்பது

தெளிவு. மெய்யுணர்வு எனக்கு உறுதியாக முக்தியை நல்கும் என்பதில் அவனுக்கு அசையாத உறுதியிருந்தது. அவனிடத்தில் ஆசை அணுவளவேனும் இல்லாதிருந்தது. ஜ்யேஷ்ட்ட புத்ராய — இச் சொல் மகனிடத்தில் இருக்கின்ற பிரியத்தைக் குறிக்கின்றது. யாரிடத்தில் பிரியம் இருக்கின்றதோ அவனுக்கு சகலத்தையும் ஈயும்படி நேரும்.

4 3 3 4
''புருயு: ஸ்நிக்தஸ்யசிஷ்யஸ்ய குரவோ குஹ்யம ப்யுத,
(பாகவதம்)

இ — ள்.

எவ்வளவு ரஹஸ்யமாக இருந்தாலும் பிரியமாணுக்கனுக்கு குருமார்கள் அதைக் கூறுவார்கள் என்பது குறிப்பு. புத்திரன் என்பது சீடனுக்கும் பெயர். சந்தானம் இருவிதமாக இருக்கிறது. பிந்து சந்ததி, நாதசந்ததி. பிதாவின் வீரியத்திலிருந்து உண்டாகும் புதல்வன் பிந்துசந்ததி, நாதத்திலிருந்து உண்டாகும் சிஷ்யன் நாதசந்ததி. ஏனெனின் குருநாதன் உபதேச வாயிலாக தனது மாணுக்கனுக்கு ஞான வாழ்க்கையை அளிக்கின்ருர். தீக்ஷையென்னும் சொல்லுக்குப் பொருள் — ''தீயதே க்ஷிப்யதே" இதி தீ க்ஷா. சீடன் ஆசானுக்குத்தன்னையே தானஞ் செய்கிருன் என்பது பொருள். சிஷ்யன் குருவுக்குத் தன்னை ஈயும் போது குரு — சீடனே! நீ யெனக்கு உடலை ஈந்தாய் நான் உனக்கு ஆத்மாவைத் தருகிறேனென்ருர். சீடன் செய்யுந் தானம் ஜடப் பொருள், குரு செய்யும் தானம் சேதனப் பொருள். நாம் உடல் பொருள் ஆவியைக் கொடுக்கின்ருேம். அவர் நமக்கு பரமான்மாவையளிக்கின்ருர். இதற்குத் தீக்ஷை யென்று பெயர்.

## 2—வது மந்திரம்.

### தொடர்ச்சி

அதர்வா நான்முகனுக்குப் புதல்வனும் சீடனும் ஆவர். ஞானபரம்பரை முதன்முதலில் எவ்வாறு வந்தது? அதை

வாழ்க்கையில் எப்படிக் கொண்டு வருவது? அதையடைவதற்கு முறையென்னே? யென்பதைப் பற்றியிங்கு இயம்பப் படுகிறது.

2 3 3
அதர்வணேயாம் ப்ரவதேத பிரஹ்மா
2 1 3 3
அதர்வா தாம்ப்ரோ வாச அங்கிரே பிரஹ்மவித்யாம்
4
ச பாரத்வாஜாய சத்யவஹாய ப்ராஹ
4 3
பாரத்வாஜோ அங்கிரசே பராவராம் (2)

இ—ள்

முந்திய யுகத்தில் எந்த தத்வ ஞானத்தை அயன் அதர்வாவிற்குக் கொடுத்தானே அந்த ஞானத்தை அதர்வா அங்கீ யென்பவர்க்கு அளித்தான். அங்கீ பரத்வாஜர் குலத்தில் தோன்றிய சத்யவாஹனுக்கு ஈந்தார். சத்யவாஹன் அங்கிரர் என்பவர்க்கு அளித்தான். இம்முறையாகப் பெரியவரிலிருந்து சிறியவர்க்குக் கிடைத்தது.

அதர்வா — உறுதியானவன். தெளிந்த ஆகாயத்தில் தினகரன் தெரிவதுபோல தெளிந்த உள்ளத்தில் திடஞானம் உதிக்கும். தெளிந்த மதியுடைய அதர்வா ஜீவனென்னும் அங்கீக்கு மெய்யுணர்வை அளித்தான். ஜீவன் என்னும் அங்கீயென்பவன் வாக்கிற்கு ஈந்தான். அநுபவத்திற்குப் பின்னர் ஞானம் உபதேசத்திற்கு வந்தது. வாணியென்னும் ரிஷி சகல மானவ சமுதாயத்திற்கு ஈந்தார்—கொடுத்தாரென்பது குறிப்பு.

பராவராம் — இந்த தத்வ ஞானம் தூய வழியாக வருகின்றது. மார்க்கம் சுத்தமாக இருப்பதால் ஞானமும் சுத்தமாக இருக்கிறது. மரபுக்குப் பெருமையுண்டு. மக்கள் தங்கள் குலத்திற்கு அதிக மகத்வம் கொடுப்பார்கள். ஒரு தனவான் மற்றொரு அறிஞனை அழைத்து எனக்காகப் பொய் சாட்சி சொல்ல வேண்டும் என்றான். பொய்சாட்சிப் புகன்றால் இவ்வளவு பொருள்தருகிறேனென்றான். அறிஞன்-

ஐயா ! நான் வேதியன், ஆஸ்திகன், மூன்று வேளை சந்தியா வந்தனஞ் செய்பவன், இங்ஙனமிருக்க பொருளுக்காக எங்ஙனம் பொய்யுரைப்பது என்றான். இம்மாதிரி கூறிய என்னை மன்னிக்க வேண்டுமென்று விடை பெற்றான். இஃது இவனது குலத்தின் பெருமை.

பராபரம் பிரஹ்மம் - எதனாலோ வெனின்? இவ்விஷயத்தில் மந்திரம்— ''தஸ்மிந்திருஷ்டே பராவரே'' பரஞானத்திற்கு விஷயம் நிர்குணம், அபர ஞானத்திற்கு விஷயம் சகுணம். அரூபம் உருவம் என்பது பொருள். பிரஹ்மம் என்பதை வருவித்துக் கொள்ளவும். முறையாக முன்னர் மொழிந்தது சிறந்த தென்றும் பின்னர் மொழிந்தது குறைந் ததென்றும் கொள்ளவும். ஒன்றை சிரேஷ்டமாகவும் மற்றொன்றை கநிஷ்டமாகவும் முனிவர்கள் மொழிவார்கள். 2

3—வது மந்திரம்.

தொடர்ச்சி

குருவையடைதல், அவரிடம் வினவுதல். இந்த தத்வ ஞானம் எந்த முறையில் அடையப்படுகிறது? இதைப் பெறுவதற்குரிய அதிகாரிக்கு என்ன யோக்கியதை வேண்டும்? என்பதற்குப் பதில் —

1 3
சௌநகோ ஹவை மஹாசாலோ அங்கி ரசம்
4 4 3
விதிவித் உபசந்ந : பப்ரச்ச கஸ்மிந்நு பகவோ
3 4
விக்ஞாதே சர்வமிதம் விக்ஞாதம் பவதீதி!! (3)

இ—ள்.

சிறந்த முறையில் திகழ்ந்த இல்லறத்தில் வாழும் சௌனகர் முறைப்படி அங்கிரர் இடஞ் சென்று சில கேள்விகளைக் கேட்டனர். ஏ பகவன்? எதைத் தெரிந்த பின்னர் எல்லாம் அறிந்ததாகுமோ அஃது என்னை என்றனர் !

சௌனகோ ஹவை மகாசால—மகாசால என்பதற்கு இரு பொருள்கள். ஒன்று — பெரிய பெரிய யாகங்கள் செய்பவர்; மற்றொன்று விரிவான குடும்பஸ்தர். சௌனகர் மகாசால—அவருடைய வேள்வி நெடுங்காலம் அணையாமல் இருந்தது. நைமிசாரண்யத்தில் எண்பத்தியெண்ணாயிரம் முநிவர்கள் இருந்தனர். அனைவருக்கும் உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இவையனைத்தும் இவர் செய்து கொடுத்தார். இவருடைய வேள்வி காரியம் முடிந்து ஓய்வு பெறுகின்ற பொழுது சூதர் புராணங்களைச் சொல்லுவார்.

சௌனகர் ஜிக்ஞாசு. ஆன்மாவையறிய அவாவு கொண்டவர். ஜிக்ஞாசு—அறிய விரும்புபவர். அவர் மகத்வம் என்னை? பெரிய குடும்பஸ்தர். இதனால் என்ன தெரிகிறது? இல்லறத்தவரும் இனிய வேதாந்தத்திற்கு அதிகாரி யென்பது இனிது புலனும். வேதாந்த விக்ஞானத்தைப் பெறுவதற்கு இல்லறத்தைத் தியாகஞ் செய்ய வேண்டு மென்பதில்லை.

அங்கிரசம் விதிவத்து உபசந் ந :— அங்கிரர் என்னும் முனியின் சமீபம் முறைப்படி சென்றார். சமீபம்—அண்மை. பகவான் சங்கரர் இவ்விஷயத்தில் கூறுவதாவது— சௌனகர் முறைப்படி ஆசான் அண்மைக்குச் சென்றார் என்றதால் அதற்குமுன் குருவினிடம் சென்றவர்கள் முறைப்படிச் செல்லவில்லை என்பது தெரிகிறது என்கின்றார். அவரவர்கள் ஆற்றலுக்குத் தக்கவாறு அவரவர்கள் குருமார்கள் அவரவர் களுக்கு உபதேசம் செய்தார்கள் என்பது குறிப்பு. ஆனால் சௌனகருக்குப் பின் குருபரன் சமீபத்திற்கு முறைப்படி செல்லவேண்டு மென்பது முக்கியமாயிற்று. முறை—விதி.

சிலருடைய மதம்—விதி என்பது இடையில் வருவதால். தேகலி தீப நியாயம் போல இவருக்கு முன்னரும் பின்னரும் உள்ளோர்கள் விதிப்படிச் சென்றார்களென்பது புலனும்.

தேகலிதீப நியாயம் = வாசற்படியில் வைக்கப்பட்டத் தீபம் வாசல் உள்ளிலும் வெளியிலும் விளங்குவது போல் என்பது பொருள். மாணுக்கன் ஆசானிடம் செல்லும் முறை என்னே? சமித்பாணி : சுரோத்திரியம் ப்ரஹ்மநிஷ்ட்டம்.

இ—ள்

நூல் உணர்வும் நுண்ணிய ப்ரஹ்மநிஷ்ட்டையும் உடைய குருவின் சமீபம் செல்லும் சீடன் தனது கரத்தில் சமித்துக்களை எடுத்துக் கொண்டு செல்ல வேண்டுமென்பது விதி. பண்டைய காலத்தில் முனிவர்கள் காலே, மாலே வேள்வி வளர்த்தனர். அதற்குரிய விசேடமான விறகு சுள்ளிக்கு சமித்து என்று பெயர். ஈண்டு சமித்து என்ற தால் குருபரனுக்குரிய பொருள்கள் அனைத்தையும் கொள்ள வேண்டும். எந்த குருநாதன் வேள்வி வளர்க்கிறதில்லையோ அவரிடம் சமித்துக் கொண்டு போவது அறிவுடைமை யாகாது. சமித்பாணி : என்னும் சொல்லுக்கு கருத்து போனவன் வெறுங்கையோடே போகாத வண்ணம் செல்ல வேண்டுமென்பது தான். தன்னுல் இயன்றதை — பத்ரம், புஷ்பம், பழம், பால், தயிர், சந்தனம், ஆடை முதலிய வைகளைக் கொண்டு செல்ல வேண்டுமென்பது குறிப்பு,

சீடனுக்கு (விசுவாசம்) நம்பிக்கை வேண்டும். நம்பிக்கை மாணுக்கன் இதயத்தில் மலரவேண்டும். தடாகத் தில் தாமரை மலர்ந்த போது தடாகத்திற்குத் தனிச் சிறப்பு உண்டாகிறது. தடாகம் — குளம். இதயமென்னும் தடாகத்தில் இனிய நம்பிக்கை என்னும் தாமரை மலர்ந் தால் இதயம் சிறப்புறும். தனக்குரிய அறிவுமில்லை, தமது குருபரனிடத்தில் நம்பிக்கையுமில்லை. அங்ஙனமாயின் இடர் நிறைந்த இன்பமில்லாத துன்பக் கடலிலிருந்து எங்ஙனம் கரையேறுவது? முடியாது என்பது முடிபு.

பயன் சீடனுக்கு. தனது எண்ணம் பூர்ணமாக வேண்டும். அவ்வாறிருக்க ஹே குருதேவ! என்னிடத்தில்

நீங்கள் நம்பிக்கை வையுங்கள். நான் உங்களுக்கு நன்கு பணிபுரிவேன் என்று சீடன் சொல்லுவானுனல் முறை யன்று. ஏனெனின் இவனுல் அவருக்கு ஒரு பயனுமில, ஆனுல், அவரால் இவனுக்கு எல்லாப் பயனும் உள. இந்நெறி சிறந்த நெறியன்று. எனவே குருநாதரிடத்தில் நாம் தான் நம்பிக்கை வைக்கவேண்டும். ஒரு மனிதனுக்கு முதுகெலும்பு எங்ஙனம் முக்கியமோ, அங்ஙனம் மனித வாழ்க்கைக்கு நம்பிக்கை முக்கியமாகும். இந் நம்பிக்கை அஞ்ஞானிகளுக்கு அழியாத செல்வமாம். ஞானிகளுக்கு அன்று. இஃது முத்திக்கு முன்னேடி சாதனம்.

ஆறு சம்பத்தியில் நம்பிக்கை யொன்று. இறைவனை யார் அறிந்திருக்கிருர்களோ அவர்களுக்கு நம்பிக்கைத் தேவையில்லை. அது அவர்கள் அநுபவ வடிவமாக இருக் கிறது. அது—ஆன்மா. ஆகவே அதிகாரிகளுக்கு அவஸ்யம் நம்பிக்கை வேண்டும்.

விரதேந தீக்ஷாம் ஆப்நோதி தீக்ஷயாப்நோதி தக்ஷிணும்
தக்ஷிணு சிரத்தாம் ஆப்நோதி சிரத்தயா சத்யம்
அஸ்நுதே!!

இ—ள்

வாழ்க்கையில் விரதம் வேண்டும். விரதம்—உறுதி. சம்யமமும் வேண்டும். சம்யமம் — புலனடக்கம். இவை யிருக்கும் போது தீக்ஷை வருகிறது. தீக்ஷை-ஆன்மாவை யடைய வேண்டு மென்னும் மிகுதியான வேட்கை. தக்ஷிணு வருகிறபோது சிரத்தையுண்டாகிறது. தக்ஷிணை—நுண்ணு ணர்வு. சிரத்தை நுண்ணுணர்வின் பின் உண்டாகிறது. நம்பிக்கை மூலமாக சத்யம் அடையப் பெறுகிறது. சத்யம்-பரமாத்மா. "சத்யம் பிரஹ்ம" என்பது மறைமொழி.

உபசத்தி—ஆசான் அண்மைக்குச் செல்வது. மறைகளில் இருவிதமான முறைகள் காணப்படுகின்றன (1) "ஸ்வாத்

யாயோ அத்யே தவ்ய:'' மனித இனத்தில் உதித்தவர்கள் குறைந்தது தனது குலாநு சாரம் வேதங்களையும் வேத அங்கங்களையும் ஓதியுணர வேண்டும். ''ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்'' என்றபடி.

(2) ''தத்விக்ஞானார்த்தம் ச குருமேவ அபிகச்சேத்'' ஆத்ம தத்வத்தை யறியும் பொருட்டு அவன் தேசிகன் சமீபஞ் செல்ல வேண்டும் என்கின்றது. வேதங்களையும் வேத அங்கங்களையும் ஓதியுணர்ந்தால் வைதிக சப்தராசியின் ஞானமுண்டாகும். வேதத்தில் எத்தனை மந்திரங்கள், தேவதை யெத்தனை, ரிஷிகள் யாவர், சந்தங்கள் என்னை, எந்த கருமத்தில் அவைகளுக்கு உபயோகம் என்ற ஞானமெல்லாம் உதிக்கும். ஸ்வாத்யாயத்தினால் வேதார்த்தங்கள் விளங்கும். ஆனால் பரமாத்மாவின் ஞானம் உதிக்காது. பரமார்த்த ஞானமுண்டாக வேண்டுமானால் குருசமீபம் அவஸ்யம் போக வேண்டும்.

வேதங்களை யோது பவர்க்கு (சமதமங்கள்) புலனடக்கம் பொறியடக்கம் வேண்டுவதில்லை. வைராக்கியம் இருந்தால் தான் வேதம் படிக்கவேண்டும் என்பதில்லை. எவனுக்கு உபநயன சம்ஸ்காரம் முடிந்து விட்டதோ அவன் விரக்தனோ அல்லது சரக்தனோ, எப்படியிருந்தாலும் அவன் வேதம் ஓதலாம்.

பண்டையகாலத்தில் வேதம் ஓதாத விப்ரகுமாரனுக்குப் பெண்கொடுக்கிறதில்லை. பதினைந்து, முப்பது, அல்லது நாற்பது வருடம் ஆனாலுஞ்சரி. இவ்விஷயத்தில்மநுஸ்மிருதி-

வேதான் அதீத்ய வேதெளவா வேதம் வாபியதாகிரமம்
அவிலுப்த பிரஹ்மசரியாய லக்ஷண்யாம் ஸ்திரியம்
உத்வஹேத்''

இ—ள்

நான்கு, இரண்டு, ஒன்று வேதங்களைக் கற்று படிக்கின்ற பொழுது நிறைந்த பிரம்மச்சரியத்தைப் பெற்று நிலமகள்

போன்ற குலமகளைவிவாகஞ் செய்ய வேண்டும் என்பது பொருள்.

இதனுல் என்ன தெரிகிறது? உயர்குலத்தில் பிறந்த வர்கள் ஆசையற்றவர்களோ ஆசையுற்றவர்களோ யாவ ராஞலும்சரி வேதம் ஓதலாம் என்பது தெளிவு. தத்வஞானம் எல்லோருக்கு மன்று; பின்னே, அதிகாரிக்கு ஆம். வேதாந் தத்தில் அதிகாரி யின்னுரென்று இயம்பப் பெற்றிருக்கிறது-

2
சாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷு : சமாஹித :
4
சிரத்தா வித்தோ பூத்வா ஆத்மந்யேவ ஆத்மானம் பஸ்யேத்!!

இ—ள்

மனதையும் இந்திரியங்களையும் வென்று விருப்பு வெறுப்பு அற்றவனுய், பொறுமை, (விசுவாசம்) நம்பிக்கை முதலிய செல்வங்களையடைந்து தன்னிடத்தில்தன்னைநோக்க வேண்டும் என்பது சுருதியின் பொருள் ''சமதமாதியுபேத: ஸ்யாத்.. பி.சூ. தத்வ ஞானத்திற்கு உதவியாகப் புலனடக்கம் பொறியடக்கம் வேண்டு மென்று பகவான் பாதராயணர்
4
பகர்ந்திருக்கிருர். ''திதிக்ஷஸ்வபாரத'' மதியிற் சிறந்த மைத்துன! பொறுத்துக் கொள்வாயாக என்று கீதா நாயகன் கிளர்த்தினுன். கிளர்த்துதல்—சொல்லுதல். சுருதி நாயகன் சொன்னதும் சொல்வீரன் மொழிந்ததும் என்றபடி. இவை யெல்லாம் அதிகாரியை யுணர்த்துகின்றன. பள்ளியில் ஒருவனைச் சேர்க்க வேண்டுமானுல் நுழைவு தேர்தல் வைக் கிருர்கள். அதுபோல் தத்வ ஞானத்திற்கு அதிகாரியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

தேர்தல் — பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் பிராஹ்ம ணோ நிர்வேதம் ஆயாத் நாஸ்தி அகிருத: கிருதேந''

இ—ள்.

எல்லா உலகத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். என்ன சிந்திப்பது? இவ்வுலகம் நிலே உள்ளதா? அஃது இல்லதா?

ஏனெனின், உலகங்கள் அனைத்தும் கர்மத்தால் செய்யப் பட்டவை. அதனால் அவை அழியும். குடம் போல. குயவன் மண் என்கின்ற வினையினால் குடத்தை வனைகிறான். ஆதலின் அது அழிகின்றது. அது போல் மாயனார் குயவன், மக்கள் வினையினால் உலகத்தை உண்டுபண்ணுகிறான். எனவே முடி வில் அதுவும் மடியும். "மாயனார் குயவன் செய்த மண்ணு பாண்டம் ஓடடா" பொருள் வெளி. மாயனார் = இறைவன். மாயையை உடையவன் மாயனார், சிவனார் என்பது தெளிவு.

இவ்வுலக மட்டுமன்று. ஏனைய உலகங்களும் அழிந்து போகும். ஆத்மாவைத் தவிர அழியாத தொன்றில்லை. அங் ஙனமிருக்க மக்கள் கரும வடிவ உலகத்திலிருந்து வைராக் கியத்தைப் பெற வேண்டும். கருமத்தினால் அகர்ம வடிவ ஆத்மா அடைய மாட்டாது. பிறகு எங்ஙனம் அடைவது எனின் "தத் விஜிக் ஞாஸஸ்வ" உலகத்தை ஆக்கி காத்து அழிக்கும் காரண பிரஹ்மத்தை அறிய ஆசைக் கொள். முத்தொழிலுக்கும் காரணமான பிரஹ்மத்தைத் தெரிய விரும்பு. குலநூல்களை ஓதுவது மறை ஓதுவதாகும். இது முக்குலத்தவர்க்கு முக்கியமானது. முக்குலத்தவர் = அந்தணர், அரசர், வணிகர். வேதத்தில் என்ன கூறப்-பட்டிருக்கிறதோ அதைக் காப்பது அவர்களின் கடமை. நூலை ஓதுவதால் பொதுவாகப் பலன் கிடைத்தாலும், அதன் பொருளை உணர்ந்து அதன்படி ஒழுகினால் மிகுந்த பயன் உண்டாகிறது.

தத்வஞானம் முற்றிலும் அதற்கு வேறு. இதைப்பெறுவ தற்கு நான்கு சாதனங்களை நன்கு பெற்று ஆசான் அடிக் கமலமடைந்து அறிவு நூல்களைக் கேட்க வேண்டும். கேட்ட தை மீண்டும் மீண்டும் நினைக்க வேண்டும். நினைத்ததைத் தெளிய வேண்டும். இவை முறையாக சிரவணம், மனனம், நிதித்தியாசனம் எனப்படும். இம்முறையாக ஜீவோபாதி, அவித்தை அல்லது அந்தக் கரணத்தையும், ஈசோபாதி மாயை அல்லது அவ்யாக்கிருதத்தையும் போக்கி ஆனந்த வடிவ ஆன்மாவை நமது வடிவமாக அனுபவிக்க வேண்டும்.

இதனுல் அஞ்ஞானத்துக்கு நிவர்த்தி உண்டாகும். ஆதலின் இவண் குரு சமீபம் செல்லவேண்டுமென்றது, வேதம் படிப்ப தற்கு குருசமீபம் செல்ல வேண்டுமென்றதற்கு மாறானது. இங்கு குரு சமீபம் செல்ல வேண்டுமென்றது தத்துவ ஞானத்தை விரும்பும் அதிகாரிக்காக. இவ்விஷயம் சௌனகர் கேள்வியினுல் தெளிவாகிறது—

4 3 3
கஸ்மிந்நு பகவோ விக்ஞாதே சர்வம் இதம் விக்ஞாதம் பவதி1 சௌனகர் பெரிய குடும்பஸ்த்தர். மறையவரில் சிறந்தவர். அவருக்கு சகலமும் தெரியும். என்ன தெரியும்? எதை ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்த தாகின்றது என்பது அவருக்கு நன்கு தெரியும். அதைத் தான் விசேடமாக அறிவதற்கு குருவினிடம் சென்று பல வினுக்களை வினவினர். 3

தொடர்ச்சி

சௌனகர் எவ்வாறு வினவினுரோ அவ்வாறு விடைகள் அளித்திருக்க வேண்டும். அவ்வாறு சொல்லாமல் முனிவர் அங்கிரர் வேறு விதமாக அருளியிருக்கிருர், அதற்கு என்ன காரணம் என்பாயாகில், அவர் கேட்ட கேள்வியில் அத்தனை யும் அடங்கி இருக்கின்றன. ஏனெனின் அவர் கேள்வியில் எல்லாக் கலைகளுக்கும் இருப்பிடமாகிய பிரஹ்மகலை பொதிந் திருக்கிறது. ஆகவே அத்தனைக்கும் பதில் சொல்ல விரும்பு கின்றுர். முறையாக ஒவ்வொன்றிற்கும் விடையளிப்பது முனிவரின் கடமை. அம்மாதிரி விடையை அருளுகிருர்—

4 வது மந்திரம்.

3 3 3
தஸ்மை ஸ ஹோ வாச்ச துவே வித்யே வேதி தவ்யே
3 3 3
இதி ஹஸ்ம யத் பிரஹ்ம விதோ வதந்தி பரா சைவ
அபரா ச

இ — ள்.

சௌனகருக்கு அங்கிரமுனிவர் உறுதியாக உரைத்தார்— என்ன உரைத்தார்? இரண்டு வித்தைகள் என்று இனிய தத்துவஞானிகள் சொல்லுகின்றனர் என்றார். அவை — பரா, அபரா.

தஸ்மை — அந்த சௌனகருக்கு, ச — அந்த முனிவர். எந்த முனிவர்? யாரிடம் சௌனகர் சென்றாரோ அந்த முனிவர். ஹ உவாச்ச உறுதியாக உரைப்பதற்கு விரும்பி சுருக்கமாகச் சொல்லாமல் பெருக்கமாகச் சொன்னார் என்பது குறிப்பு. த்வே வித்யே —இருவித்தைகள். வித்தை=ஞானம். வேத்யதே அநயா இதி வித்யா என்பது இலக்கணம். எதனால் அறியப் படுகிறதோ அது வித்தையென்பது பொருள். வேதி தவ்யே— அறிவதற்கு உரியவை. யத், ஏனெனின் 'பிரஹ்ம விதோ வதந்தி' வேதத்தை அறிபவர்கள் அவ்வாறு கூறு கின்றனர். ஆத்மஞானிகள் அருளுகின்றனர் என்றாலும் பொருந்தும். எங்ஙனமெனின்? பிரஹ்மமென்னும் சொல்லுக்கு இரு பொருள்கள் — வேதம் ஒன்று, மற்றொன்று ஆன்மா. இதனால் என்ன தெரிகிறது? வேதத்தையும் பிரஹ்மத்தையும் தேர்ந்து தெளிந்து தெரிந்த ஞானிகள் நவில்கின்றனர் என் பது கருத்து.

அந்த இரு வித்தைகள் எவை? பரா — பரமார்த்த
2
தத்வ ஞானத்தைத் தரத் தக்க வித்தை. அபரா — இவ் வுலகிலுள்ள ஞானத்தையும், அவ்வுலகிலுள்ள ஞானத் தையும் தரத்தக்கது.

ஒரு முறை நான் பல மகாத்மாக்களோடு காசியிலிருந்து நேர் கிழக்கே நான்கு கல்தொலைவில் இருக்கும் வியாசாஸ்ர மத்திற்குச் சென்றேன். அங்கு ஒரு மகான் தவம் புரிந்து கொண்டிருந்தார். அவர் காலையும் மாலையும் பாராயணம் பண்ணிக்கொண்டிருப்பார். அப்படியிருக்கும் போது நான் சுவாமின்! தாங்கள் என்ன பாராயணம் பண்ணுகின்றீர்கள்

என்றேன். அவர் தன் கரத்திலிருந்த புத்தகத்தை இதோ பார் என்று என் வசம் கொடுத்தார். அதை நான் படித்தேன். அதில் ஒரு சுலோகத்தைக் கண்டேன். அது வருமாறு:

3 3
நாநுஷ்ட்டாநம் விநாவேத, வேதநம் பர்யவஸ்யதி!
4 2 3
பிரஹ்மதீ ஸ்தாவஸைதவ ஸ்யாத் பல தேதி பராமதா!

இ---ள்

வேதத்தைக் கற்று அநுஷ்டாநம் இல்லாமல், பயனுண்டாக மாட்டாது. ஒருவன் மறையைக் கற்றுக் கொண்டால், வேள்வி எப்படி செய்ய வேண்டும், வேதி எப்படியமைக்க வேண்டும், அவைகளுக்குரிய (உபகரணங்கள்) சாமான்கள் இன்னது இனியது என்றெல்லாம் தெரிந்து கொண்டான். ஆனால் அதை முறைப்படிச் செய்யவில்லை. அங்ஙனமாயின் அவன் கற்ற கல்விக்குப் பயன் என்னை? ஒன்றுமில்லை யென்பது உறுதி. ஆனால் தத்வஞானம் இதற்கு வேறு. ஈண்டு ஆத்மாவை அறிந்தாலே போதும். அதை அறிவதால் பயனனைத்தும் கிடைக்கின்றன.

ஆத்மாவை அறிந்ததனால் அளவிலின்பம் பெற்றாரம்மா
அதை நன்றா யறியாமலே அளவில் துன்பமுற்றாரம்மா.
(கீதாமான்மியம்)

பொருள் வெளி. ஒரு மனிதன் தன்னை மனிதனாக எண்ணினான், ஆனால் மனிதனுக்குரிய வினையை அவன் செய்யவில்லை. அப்படியிருக்க தன்னை மனிதனாக எண்ணினதால் பயன் என்ன? ஒன்றுமில்லை. அவன் எப்பொழுது மனிதனைப் போன்று நடக்கின்றானோ, மனித இனத்திற்குரிய செயல்களைச் செய்கின்றானோ, அப்பொழுது அவனது எண்ணம் பலிதமாகின்றது.

ஒருவன் தன்னை கர்த்தாவாக எண்ணினான். கர்த்தா - செய்பவன். மனிதன் நல்வினை தீவினை செய்வதில் சுதந்திரன்

என்று தெரிந்து கொண்டான். ஆனால் தீய வினையைத் திறம்படச் செய்கிறான், தூய வினையைச் செய்யவில்லை. அங்ஙனமிருக்க தன்னை சுதந்திரன் என்று அறிந்ததனால் என்ன பயன். தன்னைத் தேகத்திற்கு வேறாக எண்ணினால் நல்லது. புண்ணியம் செய், பாவத்திலிருந்து விலகு. இதனால் உனக்கு நல்ல கதி உண்டாகும்.

ஒருவன் தன்னை நித்தியமாயும், சுத்தமாயும், முத்தனாயும், சச்சிதானந்த வடிவமாய் உள்ள பிரஹ்மமென்றும் தெரிந்து விட்டான். அவனுக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்றுமில்லை. எவன் தன்னைக் கர்த்தாவாக நினைக்கின்றானோ அவனுக்குக் கடமை இருக்கிறது. தன்னை போக்தாவென்று நினைக்கின்றபோது இன்ப துன்பங்கள் உண்டாகின்றன. எவன் ஒருவன் தன்னை அகர்த்தாவாகவும், அபோக்தாவாகவும் நினைக்கின்றானோ அவனுக்குச் செய்ய வேண்டுவதும், துய்க்க வேண்டுவதும் இல்லை.

சில வித்வான்கள் நிஷ்காம கருமத்தை வலியுறுத்திக் கூறுகின்றனர். லோகமான்ய திலகர் தமது கீதா ரகஸ்யத்தில் நிஷ்காம கர்மத்தையே வலியுறுத்திக் கூறியிருக்கிறார் மனிதன் நடைமுறையிலும் தன்னலங் கருதாது பிறர் நலம் பொருட்டு வினைகளைச் செய்தால் அது நிஷ்காம கருமம் எனப்படும். மனிதன் புருடனுக்காகக் கருமம் செய்வானானால் அது தருமம் எனப்படும். நிஷ்காம வினைகளும் தத்வ ஞானம் வந்த பின்புதான் செய்ய இயலும். உடல் உறுப்புக்களிலும், குடும்பாதிகளிலும், எதுவரை யான் எனதென்னும் பற்றிருக்குமோ அதுவரை தன்னலம் போகாது. இனிப்புப் பண்டத்தின் மூலமாகச் சர்க்கரைச்சத்து எவ்வாறு மிகுதியாகிறதோ அதுபோல் ஆன்மாவை அறியாதவரை அபிமானம் வளர்ந்து கொண்டே வரும். சர்க்கரை சத்துக்குச் சர்க்கரை கொல்லி எங்ஙனமோ அங்ஙனம் அபிமானத்தையகற்றுவதற்கு ஞானம் வேண்டும்.

சங்கை — கஸ்மிந்நு பகவோ விதிதே சர்வமிதம் விதிதம் பவதீதி'' என்று சௌனகர் வினவினர், இவ்விஷயத்தில் ஆசாரிய சங்கரர் அருளுவதாவது எதையறிந்தால் புருஷன் சர்வக்ஞனாகிறான், இவ்விடத்தில் அதற்குத் தக்கவாறு உரையாமல் வித்தை யிரு விதம் என்று அங்கீரர் ஏன் சொன்னார் என்பாயாகில், அதற்குப் பதில் — வித்தை இரண்டு என்றதில் பழுதொன்றுமில்லை. ஏனெனின், அபர வித்தை யவித்தை. ஆகையால் அதை அகற்ற வேண்டும். அபர வித்தையை அறிந்ததனால் ஒன்றையும் உணர இயலாது. எதனாலோவெனின், பரபக்ஷத்தை நீக்கிவிட்டு பின்னர் சித்தாந்த பக்ஷத்தை மொழிய வேண்டும். எனவே பூர்வ பக்ஷம் அபரவித்தை. அதைமுன் மொழிவது விலக்கும் பொருட்டு. 4

தொடர்ச்சி

அபரவித்தை பரவித்தையின் சொரூபம். அபரவித்தை யென்னது, பரவித்தை யெதைச் சொல்வது, என்பது ஈண்டு உரைக்கப் படுகிறது. பரவித்தையைப் பகர்ந்து விட்டு அபரவித்தையை அருளுவது முறை, அபரவித்தையை முன் மொழிந்தது அதை யகற்றும் நிமித்தம். ஆதலின் அதற்கு இலக்கணம் இங்கு இயம்பப்படுகிறது.

5—வது மந்திரம்.

3 3 3
தத்ராபரா ருக்வேதோ யஜுர்வேத :
3 2 3
சாம வேதோ அதர்வவேத :
3
சிக்ஷாகல்போ வ்யாகரணம் நிருக்தம் சந்தோ
ஜ்யோதிஷம் இதி
2 3 4 3
அதபரா யயா ததக்ஷரம் அதிகம்யதே—5

இ—ள்

அவ்விரு வித்தைகளில் ருக்வேதம், யஜுர் வேதம், சாமவேதம், அதர்வ வேதம், சிக்ஷா, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தம், ஜோதிஷம், இவையெல்லாம் அபர வித்தை. எதனுல் ஆத்மதத்வம் அடையப்படுகிறதோ அது பரவித்தை யெனப்படும்.

ருக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வவேதம் என்னும் இந்நான்கு வேதங்களிலும் மந்திரசம்ஹிதையும் பிராஹ்மண கிரந்தமும் அடங்கியிருக்கின்றன. எது வைதிக சப்தராசியோ அதுவும், வேதத்தின் ஆறு அங்கங்களும், இவையெல்லாம் அபரவித்தை யெனப்படுகின்றன. சிக்ஷை யென்னும் நூலில் வேதத்தை யெவ்வாறு ஓத வேண்டும், மந்திரத்தை யெவ்வாறு சொல்ல வேண்டும், என்று விதித்திருக்கிறது. கல்பம் என்னும் நூலில் மந்திரங்களை யெப்படி யுபயோகிக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறது. வியாகரணத்தில் எழுத்துக்கள் எத்தனை, எழுத்துக்கள் இணைந்தால் எவ்வாருகிறது, சந்தியென்ன. சமாசை என்னது என்று மொழிந்திருக்கிறது. நிருக்தம்கோச நூல், சந்தம், காயத்ரி, ஜகதி, அநுஷ்டுப்பு, இவைகளைக்கூறு கின்றது. ஜோதிஷம் — நல்லநேரம் எது, விவாகம் எப்பொழுது செய்ய வேண்டும், சடங்குகள் எவ்வாறு நடத்த வேண்டும் என்பதை யுணர்த்தும்.

வேதத்திற்கு நான்கு வடிவம்- ருக்கு, யஜுர், சாமம், அதர்வம். இந்நான்கும் அதற்கு வியூகம். சிக்ஷை முதலியவை அதற்கு அங்கம். இது அபரவித்தை. இதைக்கற்றவர்கள் உலகத்தை யுணர்வார்கள். அணுவிலிருந்து பிரகிருதிவரை, சிறிய புழுவிலிருந்து நான்முகன் வரையுள்ள விவகார ஞானமனைத்தும் அபரஞானம்.

அபரஞானத்தில் கருமம், கர்த்தா, பலன் இவைகள் சொல்லப் பெற்றிருக்கின்றன. எந்தவினை யெப்படிப்புரிய

வேண்டும், வினைக்குரியவன் யார், பயனென்ன என்ற விசாரம் அனைத்தும் பேதத்தில்தான். பேதம் அறியாமையின் காரியம். எனவே இதைமுற்றிலும் கெடுக்கவேண்டும். ''அத இதாநீம் பராசிரேஷ்ட்டா—இதன் பிறகு சிறந்த பரவித்தையைப்பற்றி மொழிகின்றனர் — பிறரைப் பற்றி யறிவோமானால் அவரிடத்தில் விருப்பு அல்லது வெறுப்பு உண்டாகும். மகாத்மாகாந்தியைத் தெரிந்தவர்கள் அவருக் குப் பணி புரிவதற்காக அவர் ஆஸ்ரமத்திற்குச் சென்றார் கள். வேறு பொருளையறிகிறபோது அவஸ்யம் ஆசை யுண்டாகும். ஆசை யுண்டான பின்னர் அதை அடைய முயற்சியுண்டாகும். முயற்சிக்குப் பின்னால் நல்லதோ கெட்டதோ பலன் அவஸ்யம் உண்டாகும்.

எவ்வாறு நாம் ஒருவர் இல்லத்திற்குச் சென்று சில நாள் தங்கியிருந்தோம், பிறகு இல்லத்தவர் நல்லவர் இல்லையென்று தெரிந்தது. அதனால் அவரைவிட்டு அகல வேண்டுமென்னும் இச்சை யுதித்தது. உடனே நாம் அதை விட்டு அப்புறம் சென்றோம். இது அபரவித்தை. பரவித்தை இதிலிருந்து வேறு. பரவித்தையில் முக்கியம் தியாகம். தியாகஞ் செய்வதற்குப் பயம் நேர்ந்தால் நமது மார்க்கம் சரியல்ல. சத்யத்தை யடைய விரும்புபவர்க்கு அச்சம் உண்டாகக் கூடாது

சுருதி கூறுவதாவது—நான் கெட்டுவிட்டாலும் இறைவனை யடைந்தே தீர்வேன். அதிகாரி—நான் என்பதைக் கொன்று சத்யத்தைப் பரிசீலிக்க வேண்டும். இன்றைக்குள்ள மக்கள் பொன், பொருள், மண், மனை, பெண்டு பிள்ளைகள் இவைகளை அகங்காரத்திற்கு அணிகல மாக ஆக்குகின்றனர். எங்ஙனமெனின், என்னுடைய பொருள், என்னுடைய மனைவி, என்னுடைய பிள்ளைகள் என்றபடி, அதுபோல தத்வ ஞானத்தையும் தனது ஆணவத்

திற்கு அணிகலமாகச் செய்யப் பார்க்கிருர்கள். தத்வ ஞானம் எதற்கும் அலங்காரமாகாது. எவன் அகங்காரத்தை வென்று ஆகுதி கொடுக்க விரும்புகின்ருனே, அவனுக்கு ஆத்ம ஞானம் உதிக்கும்.

'பிபர்த்தி இதி பரா' உலகத்திலுள்ள கல்வி அனைத்தையும் எது காப்பாற்றுகிறதோ, அது பரவித்தை எனப்படும். ஒரு மனிதன் தற்கொலை செய்ய முனைந்தான். என்ன செய்தான்? தனது இல்லத்தில் தனியாகத் தூக்குப் போட்டுக் கயிற்றில் தலையை நுழைத்தான், அதற்குள் அக்கம் பக்கத்திலிருந்து சிலர் ஓடி வந்தனர். அப்பா! எதற்காக இந்த வேலையைச் செய்கின்ருய்? இறக்க வேண்டுமென்ற எண்ணம் உண்மையில் உனக்கு இருக்குமாஞல் கதவை ஏன் திறந்து வைத்தாய் என்றனர். அவன் ஐயா! யாராவது வந்து கழுத்திலுள்ள கயிற்றை அவிழ்க்கட்டும் என்று தான் திறந்து வைத்தேன் என்ருன். இதனுல் என்ன தெரிகிறது? அவனுக்கு வாழ்விலும், மாள்விலும் ஆசை இருக்கிறதென்றுதானே தெரிகிறது. அதுபோல ஆணவத்தை விடவும் கூடாது. ஆத்ம ஞானத்தையும் அடைய வேண்டும் என்ருல் எங்ஙனம் கூடும்? இவை இரண்டும் இருளும் ஒளியும் போல் ஒன்றுபட்டு இரா. சுட்ட மண்ணும் பச்சை மண்ணும் போல இவை இரண்டும் இணைய மாட்டா. சதவையும், விதவையும் ஒன்று சேரமாட்டார். ஆணவத்தை ரட்சிக்க வேண்டுமாஞல், ஞானத்தை விடவேண்டும். ஞானத்தைக் காக்க வேண்டுமாஞல், ஆணவத்தை விடவேண்டும். எதுவரை க்ஷரத்தை அறியவில்லையோ, அதுவரை அக்ஷரத்தை எங்ஙனமறிவது? அக்ஷரமென்ருல் என்ன?

'நக்ஷரதீதி' அக்ஷர:' எதில் மாறுதல் இல்லையோ, நலிவு மெலிவு இல்லையோ, எதற்கு அழிவில்லையோ அது அக்ஷரமெனப்படும். மகாபாஷ்யம் எழுதிய பதஞ்சலி முனிவர்

அக்ஷரத்திற்கு இலக்கணம் கூறியிருக்கிறர் — 'அஸ்நுதே வ்யாப்நோதி இதி அக்ஷரம்' என்றார். எது எங்கும் நிறைந் திருக்கிறதோ அது அக்ஷரம் என்பது பொருள். வடிவம் வேறு வேறு இருந்தாலும், தலை எழுத்தை (அ) என்று தான் சொல்வார்கள். ஆங்கிலத்தில் (அ)வுக்கு வடிவம் வேறு. அரிய தமிழில் (அ)வுக்கு வடிவம் வேறு. ஆனல் இருவரும் (அ) என்று தான் சொல்வார்கள். அதுபோல் அறிக.

'யயா அக்ஷரம் அதிகம்யதே; அதிகமம் என்னும் சொல் லுக்குப் பொருள் அடைவதன்று பின்னை, அறிவது. ஏனெ னின் தன்னை அறிவதில் அடைவு ஒன்றுமில்லை. நமக்கு நாம் வேறன்று. நம்மை நாம் அறிவதைத் தவிர வேறு உபாயம் தேவையில்லை. இங்கு ஒரு கேள்வி எழுகின்றது. என்ன எழுகின்றது? நான்கு வேதங்களும், ஆறு அங்கங் களும், அபரா வித்தை. அங்ஙனமாயின் பரவித்தை வேதத் தில் இல்லையா? இல்லையானல் அது வேதத்திற்குப் புறம் பானதால் உயர்ந்தோர்கள் அதை எங்ஙனம் ஒப்புக் கொள் வர்? ஏனெனின் சிலர் வேதத்தில் வருவதை மட்டும் ஒப்புக் கொள்கின்றனர். அதற்குப் புறத்தில் உள்ளதை ஒப்புக் கொள்வதில்லை. இது கீதை வாயிலாகவும் தெரிகிறது—த்ரை
3 3
குண்ய விஷயா வேதா நிஸ்த்ரை குண்யோபவார் ஜுந இவ்வாக்கியம் கீதையில் வந்திருக்கிறது.

அங்ஙனமாயின் கீதை வேதத்திற்கு வெளியேயுள்ள நூலா? இம்மாதிரியான கேள்விகள் மயக்கத்தினல் உண்டா கின்றன. என்ன மயக்கம்? வேதத்தை குரு சந்நிதியில் ஓதா மல் தானே படிப்பதுதான் காரணம். நிற்குண நிராகார தத்வத்தை சொல்லும்போது மறைமுகமாகவும், கற்பிதமாக வும் கூறப்படுகின்றது. ஆதலின் அதன் ரகஸ்யத்தை எது வரை உரைக்கவில்லையோ அதைத் தானக அறிய இயலாது.

வேதத்திற்கு இரண்டு வடிவம் ஒன்று அர்த்தப் பிரதானம், மற்றொன்று சப்தப்பிரதானம்.

பொருள் வடிவமான வேதம் ஞானரூபம். அது அபௌருஷேயம், எதனாலேயெனின் இறைவன் ஞானத்தைச் செய்தால் அதற்கு முன் அவன் அஞ்ஞானியா? ஈஸ்வரனுடைய ஞானமும் ஞானத்தினால்தான் உண்டாகிறது. வேதம் அறிவைக் கூறுவதால் அதுஅபௌ ருஷேயம் எனப்படும். ஞானமும் அபௌருஷேயம். அதைக் கூறும் வேதமும் அபௌருஷேயம்.

மனிதன் அந்தக் கரணத்தின் வாயிலாக சிறிது அறிந்திருக்கிறான். அதில் அவனுடைய சமஸ்காரம், அறியாமை, மயக்கம் முதலியவைகள் பொருந்துகின்றன. இறைவனிடத்தில் இக் குற்றங்கள் வருகிறதில்லை. ஆகவே இறைவனது ஞானம் வேதம் எனப்படும். வேதத்தில் இரண்டு பாகங்கள் இருக்கின்றன. சொல் ஞானம், பொருள் ஞானம், வேதியர்கள் வேத ஞானத்தை ரக்ஷிக்கிறார்கள். அவர்களுக்காக சப்த ஞானம், இந்த சப்தஞானம் அபரவித்தை. ஆனால் எவன் அதிகாரியோ அவன் அர்த்தஞானத்தை ரக்ஷிக்கிறான். அவனுக்கு அர்த்தஞானம். அது பரவித்தை எனப்படும்.

பாவி, புண்ணியாத்மா—பூர்வஜென்மம், வருகிற ஜென்மம் தர்மம், அதர்மங்களைப் பொறிகளைக் கொண்டோ அல்லது மனதைக் கொண்டோ உன்னால் அறிய முடியுமா? முடியாது. இவைகள் வேதத்துக்கு விஷயமாகும். வேதத்தைக் கொண்டு தான் இவைகளை அறிய இயலும். அவ்வேதம்தான் உன்னை பிரஹ்மமென்று உரைக்கிறது. இவன் பிராஹ்மணன். ஆசிரமத்தை நோக்கும் போது சந்நியாசி, வடிவத்தில் மனிதன், சம்பிரதாயத்தில் ஹிந்து, அறத்தை நோக்கும் போது இவன் ஜீவன். சாத்திர திருஷ்டியில் இவன் பிரஹ்மம். சங்கை — இவன் பிரஹ்மம் என்பதற்குப்

பிரமாணம் என்னே? பதில்—எந்தப் பிரமாணத்தினுல் இவன் அந்தணன், துறவி, ஹிந்து, ஜீவன் என்று சித்தமாகின்ருனே அந்தப் பிரமாணத்தினுல் பிரஹ்மமாகின்ருன்.

ஆன்ம வித்தையில் வாசனையில்லை, பயனை விரும்பும் இச்சையில்லை, கர்தா. போக்தா என்னும் எண்ணமும் இல்லை. அக்ஞானத்தின் நீக்கமே ஆத்மானுபவமாகும். விசாரஞ் செய்யாமலும், நன்கு அறியாமலும், ஞானமில்லாமலும் தன்னே பிரஹ்மம் என்று எண்ணினுல் அது உபாசனை யெனப்படும். இஃது அகங்கிரகோபாசனை, இது அவனைப் பவக்கடலிலிருந்து கரையேற்றும்.

''தத் சத்யம் பிராப்யதே தியானுத் மித்யாத்வம் பிரஹ்ம கிம் புந:'' பொய்யாகத் தன்னை பிரஹ்மம் என்று தியானித்தால் உண்மை ஆன்மாவையடைந்து விடுகிருன்; எங்ஙனம் நீ தன்னை பிறரிடம் கேட்டு ஜீவன் என்று எண்ணினுயோ அது போல் சிரவணம், மனனம்; நிதித்யாசனம் செய்து உண்மை நிலையை அடைந்து விடுகிருய்.

வைராக்கியம் இல்லாததால் மனிதன் சாதனத்தினுல் கிடைக்கின்ற பயனை தனக்கு வேருகக் கருதுகிருன். ஒருவன் உரைக்கின்ருன். நான் உண்மையுரைக்கின்றேன், ஆனுல் அதற்குப் பயன் எனக்குக் கிடைக்கவில்லை. இதனுல் என்ன தெரிகிறது, அவன் அதற்குரிய பயனை அற்பமாகக் கருதுகிருன். காசு, பணம், பண்டம், போல் கருதுகிருன். அதைத் தனது வடிவமாக நினைக்கவில்லை. சத்யம் ஆன்மாவின் வடிவம். ஆன்மா நமது வடிவம். எவன் ஒருவன் தனக்கு அன்னியமாக பலனை விரும்புகிருனே அவனிடத்தில் சிறிதளவேனும் வைராக்கியம் இல்லை யென்பது உறுதி.

நீ ஆன்ம ஞானத்தையடைய விரும்புகின்ருய், ஆனுல் அதற்குப் பலன் என்னவென்று கேட்கின்ருய்?

தேச, கால, வஸ்துப்பரிச் சின்னரகிதம், அவிநாசி சின்மய ஞானம் அது. அதற்குப் பலத்தை விரும்புகின்றாய். எதற்காக, உடலுக்காக.

தத்வ ஞானம் தேகாபிமானத்தைக் கொடுக்காது, ஆனால் கெடுக்கும். ஆன்மாவிற்கு வேருக எந்தப் பலனை விரும்பினாலும் அஃது தேகாபிமானத்தை வளர்க்கும். ஆன்ம ஞானம் அத்தகைய பலனைத் தராது. அநித்திய பலனை விரும்புவது வைராக்கியவானுக்கு அழகல்ல. எந்தப் பலன் உண்டானாலும், பலனென்று வருகிறபோது பொறிகளைக் கொண்டு நுகரப்படுகிறது. அதிலிருந்து வைராக்கியம் வர வேண்டும், ஆனால் மனிதன் கரத்தில் தீபத்தை ஏந்தி கிணற்றில் விழுகின்றானே! சிலர் கூறுகின்றனர், எந்த மந்திரத்தைக் கொண்டு ஆத்மாவை அறிவது என்கின்றனர், நீ எதைக் கொண்டு தன்னை ஜீவனாகவும், செய்பவன் நுகர்பவனாகவும், பாவி புண்ணியனாகவும், எந்தயந்திரத்தைக் கொண்டு அறிகிறாய்? இவை அனைத்தையும் அஞ்ஞானத்தினாலேதானே அறிகின்றாய். இத்தனைக்கும் நீ வேருக இருந்தும், தடாகத்தில் நீராடி கரை ஏறிய யானை தன் தடக்கையால் தரையில் கிடக்கின்ற புழுதியை வாரித் தன் தலைமிசை எறிந்தாற் போல நீயாய் ஒப்புக்கொண்டது தானே. சாலை ஓரத்தில் நிற்கின்ற கருங்காலி கட்டையில் தோற்றுகின்ற பூதம் எந்தப் பிரமாணத்திற்கு விஷயம்? நீ தோற்றுவித்ததுதானே. உண்மையில் இல்லைதானே.

ஆத்ம விஷயத்தில் ஆஸ்திக மக்களுக்கு சாஸ்த்திரம் மட்டும் பிரமாணம். சாஸ்த்திரத்தில் தருமம், அதர்மம், பாவ புண்ணியம், பரமாத்மா, இவை எல்லாம் விளம்பப் பட்டிருக்கின்றன. ஜீவன், கர்த்தா, போக்தா, சொர்க்கம், நரகம் இவைகளும் கூறப்பட்டிருக்கின்றன. இதற்கெல்லாம் பிரமாணம் வேதம் ஒன்றேயாம். குரான், பைபிள், பிற

காலத்தில் உள்ளவை. அவைகளில் கூறியிருக்கும் தர்மமும், வேதத்தில் கூறியவைகளே. வேதத்தில் தன்னை ஜீவனென்று சொன்னதை நீ ஏற்றுக் கொண்டது போல பிரஹ்மமென்றதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். பிரமாணத்தினுல் பிரமேயத்தின் சித்தி உண்டாகிறது. பிரமாதாவிற்கு இல்லை. பிரமாதா—ஜீவன்.

3

''நா வேத வித் மநுதே தம் ப்ரு ஹந்தம்'' இ—ள்.

எவன் ஒருவன் வேத தத்துவங்களை அறிய வில்லையோ, அவன் தன்னை ஆத்மா வென்று அறிய இயலாது. உபநிஷத்ஞானமின்றி தத்துவ ஞானம் உண்டாக மாட்டாது.

'ஆசார்யவான் புருஷோவேத' ஆசாரியாதைவ விதிதாத் 'வித்யா சாதிஷ்ட்டம் பிராபத்' ந நரேண அவரேண ப்ரோக்த ஏஷசுவிக்ஞேய, அணுரேஷ தர்ம :

குருவை சரணுகதியாக அடைந்த அதிகாரிதான் ஆத்ம தத்வத்தை அறிகிருன். கணவனை அடைந்தவள் சுமங்கலி ஆவது போல, குருவை அடைந்த அதிகாரிக்கு இந்த பர வித்தை மிகப் பாவனமாகின்றது. சாதாரணமக்கள் வாயிலாகக் கேட்கப்பட்ட பரவித்தை மிகுந்த பயனை அளிக்கமாட்டாது. எளிதில் புரியவும் மாட்டாது. ஏனெனின் இந்த ஆத்ம தத்வம் மிக நுணுக்கமானது. ஆசை உடையவன் உடல் உறுப்புக்களைக் கொண்டு வினைகளைச் செய்கிருன், அதற்குத் தன்னைக் கர்த்தாவாகவும், அதன் பயனை அனுபவிப் பவனுகவும் எண்ணுகிருன். மனிதன் எந்த விதத்திலும் தன்னை ஏதாவது ஒரு வடிவத்தில் எண்ணித் தான் செய்பவனுதை பற்று வைக்கிருன்.

எவன் போர்முனையில் காரியம் செய்கின்ருனே, அவன் துறப்பு எனப்படுகிருன் என்பது நியமமில்லை. பின்னை எவன் துறப்போ அவன் போர்புரிய வேண்டு மென்பது

நியமம். எங்ஙனம் அரசு காவலன் போக்கு வரத்தை ஒழுங்கு படுத்துவதற்குப் பழகியிருக்கிருனே, அவன் போக்கு வரத்தை ஒழுங்கு படுத்த வேண்டு மென்பது முறை. அஃது அல்லாமல் காவலர் போக்கு வரத்தை ஒழுங்கு பண்ண இயலாது. சிறந்த மனிதனை தர்மாத்மா என்பர். அதுபோல் சைதன்யம் பிரதானம்; அதில் ஜீவன், உடல், உறுப்புக்கள் ஆரோபிக்கப் பெற்றிருக்கின்றன. இதில் சைதன்யம் பிரதானம். முக்கியமென்பது பொருள்.

ரஷ்யாவில் மனிதன் முக்கியமல்ல, பொருள்தான் முக்கியம், இதற்கு மாருக பாரதத்தில் மனிதன் முக்கியம் பொருள் முக்கியமல்ல. சாஸ்த்திரம் மனிதனுக்குத் தக்க வாறு தர்ம, அதர்மத்தைப் பிரித்துக் கூறுகின்றது. வர்ணத்துக்கு அநுசாரம், தர்மம் உண்டாகிறது. வர்ணம் அந்தணர், அரசர், வணிகர்முதலியவர். மேலும் ஆசிரமத் திற்கு அநுசாரம் தர்மம் உண்டாகிறது. தர்மத்திற்கு அநுசாரம் வர்ணம் ஆசிரமம் உண்டாகிறதில்லை. இதற்கு அதிகாரி பேத மென்று அருளப்படுகிறது. இதிலும் சைதன்யம் முக்கியம்.

நீ இங்கு இருக்கிருய், தூரத்தில் உள்ள பொருளைப் பெற விரும்புகின்ருய், அங்ஙனமாயின் அதைப்பெறுவதற்கு நீ அங்கு செல்ல வேண்டும். நீ இப்போது இருக்கிருய், இனிமேல் வரும் பொருளை விரும்புகின்ருய், அங்ஙனமாயின் அது வரும் வரை காத்திருக்க வேண்டும். தனது வடிவமான பொருளைத் தனக்கு அந்நியமாகக் கருதினுய். தன்னை நீ பிரஹ்மம் என்று அறிவாயாகில் எங்குஞ் செல்லவும் வேண்டாம், காலத்தையெதிர்ப் பார்க்கவும் வேண்டாம், உபாசனை பண்ணவும் வேண்டாம், இதில் ஞானமாத்திரத்தால் புனிதனுகின்ருய். இதற்குப் பரவித்தை யென்று பெயர்.

''யயாததக்ஷரம் அதிகம்யதே — இப்பரவித்தையினல் அக்ஷரத்தின் அடைவு உண்டாகிறது. அக்ஷரம்—பரமாத்மா. ஒரு கிலோ மண்ணினல் ஒரு குடம் செய்யப் பெற்றது, அது உடைந்தது, ஆனல் மண்ணுசரிக்கு சரியிருந்தது. ஐந்து பவுன் தங்கத்தினல் நகை செய்தோம், நகையையுருக்கினேம், அதுவும் அவ்வளவுக்கு இருந்தது.

குடத்தை மண்ணுக்குவதற்கு அதிக முயற்சி வேண்டுவதில்லை, குடம்மண்ணுதான். அதை மண்ணென்று தெரியத்தான் வேண்டும். நகையின் வடிவத்தையும், நாமத்தையும், மறந்து விடு. அபவாதஞ் செய்துவிடு, பின்னர் தங்கம்மட்டும் மிஞ்சியிருக்கும். இம்மாதிரி தன்னை பிரஹ்மமென்று நினைத்தமாத்திரத்தில் நீ பிரஹ்மமாயிருக்கிருய். இதற்கு வேருக ஒருமுயற்சியும் வேண்டுவதில்லை. உலகத்தைப் பொய்யென்று உறுதி செய்த பின்பு மிச்சம் எது இருக்கிறதோ அது பிரஹ்மம். அக்ஷர அவிநாசி சின்மய ஆன்மாவில் பிரமாணம் அக்ஞானத்தை நீக்கும் பொருட்டேயாம். அவித்தையை நீக்குவது அதிஷ்ட்டானத்தையறிவது.

பகவான் சங்கரர் தனது பிரஹதாரண்ய உபநிடதத்தின் பாஷ்யத்தில் கூறியிருக்கிருர். என்ன கூறியிருக்கிருர்?

''நஹி மோக்ஷ தஸாயாம் விக்ஞாநாந்தரம் ஆனந்தாந்தரம்வா உத்பத்யதே'' முக்தி நிலையில் புதிய ஞானமோ, புதிய ஆனந்தமோ உண்டாகிறதில்லையென்பது பாஷ்யத்தின் கருத்து. அறிகிறவனுகிய நீதான் இருக்கிருய். பிரியமும், ஆனந்தமும் உனது வடிவமே.

தனது ஆன்ம சொரூபம் எப்போதும் உள்ளதால் அதற்குப் பிரயாசம் வேண்டுவதில்லை. முயற்சி அன்னியப் பொருளையடைவதற்குத் தேவைப்படுகிறது. தத்வ ஞானம்

நியமம். எங்ஙனம் அரசு காவலன் போக்கு வரத்தை ஒழுங்கு படுத்துவதற்குப் பழகியிருக்கிருனே, அவன் போக்கு வரத்தை ஒழுங்கு படுத்த வேண்டு மென்பது முறை. அஃது அல்லாமல் காவலர் போக்கு வரத்தை ஒழுங்கு பண்ண இயலாது. சிறந்த மனிதனை தர்மாத்மா என்பர். அதுபோல் சைதன்யம் பிரதானம்; அதில் ஜீவன், உடல், உறுப்புக்கள் ஆரோபிக்கப் பெற்றிருக்கின்றன. இதில் சைதன்யம் பிரதானம். முக்கியமென்பது பொருள்.

ரஷ்யாவில் மனிதன் முக்கியமல்ல, பொருள்தான் முக்கியம், இதற்கு மாருக பாரதத்தில் மனிதன் முக்கியம் பொருள் முக்கியமல்ல. சாஸ்த்திரம் மனிதனுக்குத் தக்க வாறு தர்ம, அதர்மத்தைப் பிரித்துக் கூறுகின்றது. வர்ணத்துக்கு அநுசாரம், தர்மம் உண்டாகிறது. வர்ணம் அந்தணர், அரசர், வணிகர்முதலியவர். மேலும் ஆசிரமத் திற்கு அநுசாரம் தர்மம் உண்டாகிறது. தர்மத்திற்கு அநுசாரம் வர்ணம் ஆசிரமம் உண்டாகிறதில்லை. இதற்கு அதிகாரி பேத மென்று அருளப்படுகிறது. இதிலும் சைதன்யம் முக்கியம்.

நீ இங்கு இருக்கிருய், தூரத்தில் உள்ள பொருளைப் பெற விரும்புகின்ருய், அங்ஙனமாயின் அதைப்பெறுவதற்கு நீ அங்கு செல்ல வேண்டும். நீ இப்போது இருக்கிருய், இனிமேல் வரும் பொருளை விரும்புகின்ருய், அங்ஙனமாயின் அது வரும் வரை காத்திருக்க வேண்டும். தனது வடிவமான பொருளைத் தனக்கு அந்நியமாகக் கருதினுய். தன்னை நீ பிரஹ்மம் என்று அறிவாயாகில் எங்குஞ் செல்லவும் வேண்டாம், காலத்தையெதிர்ப் பார்க்கவும் வேண்டாம், உபாசனை பண்ணவும் வேண்டாம், இதில் ஞானமாத்திரத்தால் புனிதனுகின்ருய். இதற்குப் பரவித்தை யென்று பெயர்.

''யயாததக்ஷரம் அதிகம்யதே — இப்பரவித்தையினால் அக்ஷரத்தின் அடைவு உண்டாகிறது. அக்ஷரம்—பரமாத்மா. ஒரு கிலோ மண்ணினால் ஒரு குடம் செய்யப் பெற்றது, அது உடைந்தது, ஆனால் மண்ணுசரிக்கு சரியிருந்தது. ஐந்து பவுன் தங்கத்தினால் நகை செய்தோம், நகையையுருக்கினோம், அதுவும் அவ்வளவுக்கு இருந்தது.

குடத்தை மண்ணாக்குவதற்கு அதிக முயற்சி வேண்டுவதில்லை, குடம்மண்ணுதான். அதை மண்ணென்று தெரியத்தான் வேண்டும். நகையின் வடிவத்தையும், நாமத்தையும், மறந்து விடு. அபவாதஞ் செய்துவிடு, பின்னர் தங்கம்மட்டும் மிஞ்சியிருக்கும். இம்மாதிரி தன்னை பிரஹ்மமென்று நினைத்தமாத்திரத்தில் நீ பிரஹ்மமாயிருக்கிறாய். இதற்கு வேறாக ஒருமுயற்சியும் வேண்டுவதில்லை. உலகத்தைப் பொய்யென்று உறுதி செய்த பின்பு மிச்சம் எது இருக்கிறதோ அது பிரஹ்மம். அக்ஷர அவிநாசி சின்மய ஆன்மாவில் பிரமாணம் அக்ஞானத்தை நீக்கும் பொருட்டேயாம். அவித்தையை நீக்குவது அதிஷ்டானத்தையறிவது.

பகவான் சங்கரர் தனது பிரஹதாரண்ய உபநிடதத்தின் பாஷ்யத்தில் கூறியிருக்கிறார். என்ன கூறியிருக்கிறார்?

''நஹி மோக்ஷ தஸாயாம் விக்ஞாநாந்தரம் ஆனந்தாந்தரம்வா உத்பத்யதே'' முக்தி நிலையில் புதிய ஞானமோ, புதிய ஆனந்தமோ உண்டாகிறதில்லையென்பது பாஷ்யத்தின் கருத்து. அறிகிறவனாகிய நீதான் இருக்கிறாய். பிரியமும், ஆனந்தமும் உனது வடிவமே.

தனது ஆன்ம சொரூபம் எப்போதும் உள்ளதால் அதற்குப் பிரயாசம் வேண்டுவதில்லை. முயற்சி அன்னியப் பொருளையடைவதற்குத் தேவைப்படுகிறது. தத்வ ஞானம்

எந்த வித்தையால் உண்டாகிறதோ அவ்வித்தை பரவித்தை யெனப் படுகிறது. அதுவே கல்வியிற் சிறந்தது. ''கல்வி யிற் சிறந்தது ஆன்மிகக் கல்வி'' நன்மொழிக் களஞ்சியம் ஐநூறு.

ஞானத்தால் அக்ஞானம் எவ்வாறு விலகுகிறது? இவ்விஷயத்தில் மத்வாச்சாரியர் சில காலத்திற்கு முன் பதாக பத்திரிகையடித்து விளம்பரஞ் செய்தார். அவர் அத்வைதவாதியை சொற்போருக்கு அழைத்தார். சொற் போர்—சாஸ்த்ரார்த்தம். அத்வைதத்தின் சார்பாக சுவாமி கரபாத்திரி மகாராஜ் தயாரானுர். இருவரும் வாதிடுவதற்கு சபதம் வைத்துக் கொண்டனர். வாதம் தொடங்க ஆரம் பித்தது.

முதன் முதலாக மத்வ ஆச்சாரியர் கேள்வியை எழுப் பினுர். அவித்தையின் நீக்கம் சவிகல்ப ஞானத்தால் உண்டாகிறதா? நிர்விகல்ப ஞானத்தால் அவித்தையின் நீக்கம் உண்டாகிறதா என்ற வினுவையெழுப்பினுர். நிர் விகல்ப ஞானத்தில் அவித்தையை நீக்கும் வலிமையில்லே. சவிகல்பஞானம் இயல்பாக வலிமையற்றது. அங்ஙனம் இருக்க அவித்தையை எவ்வாறு விலக்குவது என்று கேட்டார்.

சுவாமிகர பாத்திரிஜீயின் பதில்—தூண்என்னும் ஞானத் தால் கள்வன் என்னும் புத்தியெப்படி நீங்குகிறதோ அப்படி அதிஷ்டான ஞானத்தால் ஆரோபிதமயக்கம் நீங்கிவிடுகின்றதென்ருர். அந்த ஞானம் சவிகல்பமாக இருக்கட்டும், அல்லது நிர்விகல்பமாக இருக்கட்டும். இதில் முக்கியத்வமில்லே. இதுசவிகல்ப ஞானத்தாலேயோ வேறு சமாதி ஞானத்தாலேயோ நிவிர்த்தி யுண்டாக மாட்டாது. உண்மை ஞானந்தான் பிராந்தியைப் போக்கும். பிராந்தி-மயக்கம்.

முறையென்னே? நான் தேகம் என்ற மயக்கம் யாருக்குமில்லை. ஆனல் நான் புருடன், நான் ஹிந்து, நான் அந்தணன் என்ற பிராந்தியனேவருக்குமுண்டு. இஃதல்லாமலும், என்மகன் எனக்குப் பிராணன் என்றுஞ் சொல்லுவார்கள். ஆனல் அவர்களுக்குத் தெரியும் நாம் வேறு, நம் மகன்வேறு, நமது பிராணன் வேறு என்று. ஆனலும் பிள்ளேயின் பாச மிகுதியால் கற்பிதமாகச் சொல்கிருர்கள். இம்மாதிரி நான் இந்து, நான் அந்தணன், நான்தேகம், என்றெல்லாம் எண்ணுவதுபோல, ஜீவனென்றும் தன்னே கற்பிதமாக நினேக்கின்ருன். இவ்வாறு எண்ணுவதும் அக்ஞானந்தான். இதற்கு நிவாரணம் ஞானத்தினல் உண்டாகிறது. ஞானம்—பரவித்தை. அக்ஷரஆத்மா தானக விளங்குகிறது. குடத்துக்குள் இருக்கும் தீபம் குடம் உடைந்ததும் தீபம் விளங்குவது போல. அக்ஷரம்—பிரஹ்மம்.

அபரவித்தை கற்பனேயை யுண்டு பண்ணியது. அதில் கற்பனேயின் விரிவுகாட்டப்பட்டது. எவன்தன்னே கர்த்தாவாக எண்ணுகிருனே அவனுக்கு சுவர்க்கம் நரகம் செல்லும்படி நேரும். ஆகலின் உத்தம பலன் வேண்டுமானல் யக்ஞயாகாதி வினேகளேச்செய். துன்பத்திலிருந்து நீங்கவேண்டுமானல் தீயகருமத்தை விட்டு விடு. தனக்குத் தெரியாமல் தீயகருமம் நிகழ்ந்து விட்டால் அதற்குப் பரிகாரம் பண்ணு.

பரவித்தை பொய்ப்பொருளேப்பற்றிப் பேசாது. அதுமெய்யான சத்யத்தைப் பற்றிக்கூறுகிறது. இவ்வித்தை கண்கண்டப் பலனேத் தருகிறது. பரவித்தையின் பயன் இங்கேயே, இப்போதே கிடைக்கும். இதனல் பாவி, புண்ணியாத்மா என்பவையெல்லாம் கொதிக்கிற நெருப்பில் விழுந்த தண்ணீர் துளி எங்ஙனம் மறைந்து போகுமோ அங்ஙனம் மறைந்து போம். எப்பொழுது

பாவ புண்ணியம் இல்லையோ, ஜென்ம மரணமில்லையோ, அப்பொழுது சுவர்க்கம், நரகம் எங்கிருக்கிறது?

4 3

''ந சாம்பராயே பிரதி பாதி பாலம்'' க.உ. இறந்த பின்பு என்ன நடக்குமென்று குழந்தைகளுக்குத் தெரியாது. வாழ்வில் என்ன இருக்கிறதோ அதுதான் மாள்விலும் இருக்கும். நீ இருக்கும் போது பாவியாயிருந்தால் இறந்த பின்னரும் பாவியாகத்தான் இருப்பாய். இங்கு புண்ணியனுனல் அங்கும் புண்ணியனுக இருப்பாய். வாழ்க்கையில் நீ யெப்படியோ, அப்படித்தான் உடலைவிட்ட பின்பும். இனிமேல் நல்ல வாழ்வை யடைய வேண்டுமானுல் இப்போதே நல்ல முறையில் வாழவிரும்பு. இப்பொழுது நீ முக்தனுனல் மாய்ந்த பின்பும முக்தன்தான்.

அகங்காரத்தோடு நீ தன்னை இணைத்துக் கொண்டது உனது அறியாமையே, ஞானத்தைக் கொண்டு அந்த இணைப்பைத் துண்டித்துவிடு. எனக்கு பந்தமுமில்லை, முத்தியு மில்லை என்று நிச்சயம் செய். இதற்காக அறம், பொருள், இன்பம், வீடு இவைகளின் வாசனையை விட்டு விட்டு குருவின் சரணுகதியை அடை. அங்கு அவரிடம் வேதார்த்தங்களைத் தெரிந்துகொள். ஒருசமயம் நான் ஒரு மகானிடம் சென்றேன். அவர் நீ உண்மை உரைக்கின்ருயா என்று என்னிடம் கேட்டார். ஆம் சுவாமி! என்றேன். அவர் நீ உண்மையாக சத்தியத்தை அறிய விரும்பினுல் இதுவரை தன்னை எப்படி நினைத்திருக்கின்ருயோ அதை விடமுடியுமா? ஏனெனின், தன்னை பிரஹ்மம் மென்று அறிவதற்கு முன்னர் நினைத்தது அனைத்தும் பொய்தான். ஆகவே அதைவிட முயலுமின்.

நாம் நரகத்திற்குப் போகக் கூடாது, தர்மம் அகலக் கூடாது, நமது குடும்பம் துன்பத்தை துய்க்கக் கூடாது, நமது பதவியை யாரும் பறிக்கக் கூடாது, நமது போகப்

பொருளை யாரும் எடுக்கலாகாது என்றெல்லாம் எண்ணிக் கொண்டு சத்தியத்தை அடைய முடியாது. நல்ல நிலையில் இருந்து கொண்டு கிணற்றில் விழுந்தாலும் நல்லது, ஆனால் பைத்தியக்காரனாக இருந்து கொண்டு சொர்க்கத்திலிருந்தாலும் நல்லதல்ல. அறிவோடு இருந்து துயரத்தை அனுபவித்தாலும் நல்லது, ஆனால் அறியாமையோடு இருந்து இன்பத்தைத் துய்ப்பது நல்லதல்ல. இந்த உறுதி சத்தியத்தை அடைய விரும்புவோர்க்கு அவசியம் வேண்டும்.

பரவித்தை உண்மைப் பொருளை உணர்த்தும் வித்தை. உண்மையில் ஓர்ந்து பார்க்கும் போது பரஞானம், அபர ஞானம் இரண்டும் வேதத்தில் வந்தவை. அதில் அபர ஞானம் சப்த ராசி. ராசி—கூட்டம். இது சொல் மாத்திரத்தில் கர்மத்தை தர்மமாக்குகின்றது. கருமகாண்டிகள் வேத மந்திரங்களைப் பொதுவாக அறிகிறதில்லை. அதனால் யக்ஞ, கர்ம, வேள்வி இவைகளைச் செய்து வைக்கிறார்கள். அவர்கள் கர்மம் தர்மமாகிறது. அந்த கர்மம், சகாம்மாக இருக்குமானால் சொர்க்க முதலிய பலனை அளிக்கின்றது, நிஷ்காமமாக இருக்குமானால் அந்தக் கரணசுத்தி யுண்டாகிறது, ஏனெனின், ஆசைதான் அகத்திற்கு அழுக்கு. பரஞானம் அர்த்தப் பிரதான வேத ராசி. அதனால் உண்மைப் பொருள் அடையப்படுகிறது.

### தொடர்ச்சி

பரஞானத்தினால் பரமாத்மாவின் அடைவு உண்டாகிறது என்று முன் மொழிந்திருக்கிறது. அந்தப் பரமாத்மாயார்? வடிவமென்னை? இலக்கணம் யாது? என்பதற்கு மந்திரம்—

### 6—வது மந்திரம்

யத் தத் அத்ரேஸ்யம்[3] அக்ராஹ்யம்[3] அகோத்ரம்[3] அவர்ணம் அசக்ஷு: அஸ்ரோத்ரம் தத் அபாணி பாதம் நித்யம்

4 3 3 4
விபும் சர்வகதம் சுசூக்ஷ்மம் ததவ்யயம் யத்பூத யோநிம்
4
பரிபஸ்யந்தி தீரா : (6)

இ—ள்

(அந்த அக்ஷரதத்வம்) அத்ரேஸ்யம், அதற்குக் கண், காது, குலம், கோத்திரம், நிறம், கை, கால், இவை எல்லாம் இல்லே. அது என்று முள்ளது, எங்கும் நிறைந்தது, எல்லா மானது, முற்றிலும் நுணுக்கமானது, நிறைவு குறைவற்றது' சகலத்திற்குங் காரணமான ஆன்மாவை அறிஞர்கள் அறி கிருர்கள்.

அத்ரேஸ்யம் — பரமாத்மா பொறிகளாலும், மனத் தாலும், புத்தியாலும் அறிய வொண்ணுதவர். எது புலனுகு மோ அது அளவுக்குட்படும். பொறிகள் அளவுக்குட்பட்ட வை. எனவே அவை வரம்புக்குட்பட்ட பொருளேத்தான் பார்க்க இயலும். நேத்திரம் பரந்த ஆகாசத்தைப் பார்க்க முடியாது. காது தூரத்தில் உள்ள தொனியையும், சிறிய, ஒலியையும், புதுமையான ஓசையையும் கேட்க இயலாது. இம்மாதிரி யேனேய பொறிகளுக்கும் வலிமையில்லேயென்ப தை யுணர வேண்டும். மனமும் புத்தியும் அபரிமித பொருளே யறிய முடியாதவை. பரிமிதம்—அளவு. அபரிமிதம்—அள வற்றது. ஆன்மா அத்ரேஸ்யம், அத்ரேஸ்யம் என்றதால் பொறி, மனம், புத்தி, புலன் இவைகளுக்கு அப்பால்பட்ட தென்பது பொருள். அது மேயப் பொருளல்ல, அப்ரமே யம். விஷயமாகாதென்பது குறிப்பு.

2
••அஸப்தம் அஸ்பர்ஸம் அரூபம் அவ்யயம் ததாரசம்
3
நித்யமகந்தவச்சயத்,, இச்சுருதி அத்ரேஸ்யம் என்பதில் அடங்கிவிட்டது. ஆன்மாஅசப்தம், அஸ்பர்ஸம், அரூபம், அரசம், அகந்தம், அவ்யயம், நித்யம். ஆதலின் எதைக் கண்ணேக் கொண்டு பார்க்கிருேமோ, காதைக்கொண்டு

கேட்கிறோமோ, மூக்கைக் கொண்டு முகருகிறோமோ, நாக்கைக் கொண்டு சுவைக்கின்றோமோ, துவக்கைக் கொண்டு தொடுகின்றோமோ அது உன்னுடைய வடிவமன்று. நான் ஒரு முனிவரிடங்கேட்டேன்—முனி பெருமானே ! இறைவனை எய்வதற்கு என்ன செய்வது என்றேன், அவர்—அப்பா ! இருந்தாலும், எழுந்தாலும், நடந்தாலும், கிடந்தாலும், துயின்றாலும், துய்த்தாலும் இறைவனுக்காக இருக்குமாகில் உனது சாதனம் உத்தமம். சம்சாரத்திற்காக இருக்குமாகில் அது முறையல்ல. அது—சாதனம். இறைவனுக்காக எதைச் செய்வாயோ அது இறைவனுக்குச் சாதனமாகும், குடும்பத்திற்காகச் செய்தால் சம்சாரங் கிடைக்கும்.

3 4 3
''மைகிரிதர ஆகே நாச்சுங்கி'' மீரா பாயி. மீரா கூறுகின்றாள்—என்னுடைய நாட்டியம் இறைவனுக்காக. ஆகலின் அவளுடைய ஆட்டம் சாதனமாயிற்று. தாசி மக்களை மகிழ்விப்பதற்காக நடனம் புரிகின்றாள். உனக்கு எது முக்கியமோ, அதை நீ அடைவாய். வேதாந்த ஞானம் தூய்மையான உள்ளத்தில் மிளிர்கின்றது. இதையறிவு நூல்களும் ஆன்றோரும் அருளுகின்றனர். இதன் கருத்தைத் தெரியவேண்டும். அகத்திற்கு அழுக்கு என்னை? அகத்தில் உலகந்தோற்றுவது. அகம் — உள்ளம். எதைக் காண வேண்டும் என்று எண்ணுகின்றாயோ, அது உனது உள்ளத்தில் உதிக்கும். கண்ணாடி முன்னிலையில் எது வருமோ அது அதில் தோற்றும். உள்ளத்தில் உலகத்தை வைத்துக் கொண்டு இறைவனைக் காண இயலாது. உலகமும் உடையவனும் ஒன்றுபட்டு இருக்கமாட்டா. இரவும் பகலும் போல. உயர்ந்தவர்கள் குப்பை மேட்டில் இருக்க மாட்டார்கள். அதுபோல ஆன்மா அழுக்கடைந்த அகத்தில் அமர மாட்டாது.

அக்ராஹ்யம்—பரமாத்மா, ஞானேந்திரியத்திற்கு விஷய மாகாரென்ருல், கருமேந்திரியத்திற்கு விஷயமா? இல்லே. அது அக்ராஹ்யம். கருமேந்திரியம் அதைப் பிடிக்க முடியாது. கை, கால், வாக்கு முதலிய இந்திரியங்கள் பரமாத்மாவின் அண்மைக்குச் செல்ல இயலமாட்டா.

எண்ணிப்பார்த்தால் கருமேந்திரியம் பிரமாணம் ஆகாது. ஞானம் ஞாநேந்திரிய மூலமாக உண்டாகிறது. கர்மேந்திரியம் ஞாநேந்திரியத்திற்குப் பணிப்பெண்கள். கால், கைகளால் ஞானம் உண்டாவது, அதிலிருக்கும் தொக்கிந்திரியத்திஞல் உண்டாகிறது. கர்மேந்திரியத்தால் ஆன்மாவை அடைவது, ஆகாசத்தைக் கறந்து பால் சாப்பிடுவதோடொக்கும்.

கர்மம் பிரமாணமாகும் என்று எண்ணி, தருமம், அல்லது உபாசனே, அதவா சமாதியைப் பற்றிப் பேசுவது முறையன்று. எந்த வஸ்து விருத்தியின் வாயிலாக உள்ளதையுள்ளவாறு உணர்கின்றதோ அது பிரமாணமெனப்படும். எனவே ஞானம் பிரமாணமெனப்படுகிறது. உனக்கு அல்வா செய்ய வேண்டுமென்னும் எண்ணமுண்டாகி செய்து கொண்டிருக்கிருய், அவ்வமயம் கண்ணேயும், மூக்கையும் மூடிக் கொண்டும், கையைக்கொண்டு தொடாமலும் இருந்தால் அல்வா வெந்ததும் வேகாததும் தெரியுமா? தெரியாது தானே.

பொருளின் அடைவு ஞாநேந்திரியத்தால் உண்டாகிறது. கையினுல் கனியைப் பறித்தாலும், சுவைப்பது நாக்கு தானே, கை சுவைக்க முடியுமா? முடியாதென்பது கருத்து. ஞாநேந்திரியமும் உலகப்பொருளேயுணர்த்துமேயொழிய உண்மைப்பொருளேயுணர்த்தமாட்டாது. பொறிகளுக்கு ஆன்மா புலப்படாது. அங்ஙனம் புலப்படுமாஞல்

வாதிகள் ஏன் போராடுகின்றனர். கருமத்தில் பொருளை விளக்கும் வலிமையில்லை.

கருமம், ஞானத்திற்கு உதவிபுரிகின்றது. ஆகலின் அவித்தையென்ருலும், கருமமென்ருலும் ஒன்று தான். வித்தையென்ருலும், ஞானமென்ருலும் ஒன்றேயாம். ஈசாவாஸ்யத்தில் வந்திருக்கிறது-அவித்தையில் அல்லது கருமத்தில் மட்டும் செயல்படுவாயாஞல் மிகுந்த இருளில் அழுந்துவாய். அதுபோல் வித்தையில் அல்லது தேவதைகளில் மட்டும் எவன் செயல்படுகின்ருேனே அவன் அதைப் பார்க்கிலும் கொடிய இருளில் மூழ்கின்ருன் என்று விளம்பியிருக்கிறது. கரும்த்தையும், தேவதையையும், ஞானத்தையும் ஒழுங்குபடுத்தி வினையைச்செய். இவை மூன்றையும் ஒன்றுபடுத்தி நடக்கவேண்டும். ஏனெனின், காரீய காரண அதீத ஆன்மாவையடைய விரும்புகின்ருய். தனியாக கருமமும் போதாது, தேவதை ஞானமும் போதாது. இரண்டும் இணைந்திருக்க வேண்டும். இவ்வாறு காரியம் செய்தால் அகத்தூய்மை உண்டாகும், அதன் பின்பு ஆத்ம ஞானம் உதிக்கும்.

காரிய பிரஹ்மத்தை வழிபடுவது சமுதாய சேவையாகும், காரண பிரஹ்மத்தை வழிபடுவது குடும்பத்திற்கு ஆற்றும் பணியாகும். இவை இரண்டையும் இணைத்து செய்தோமாஞல் அந்தக்கரணத்தின் சுத்தி உண்டாகிறது. இந்த அந்தக்கரணத்தின் சுத்தி பரமார்த்த ஞானத்தைப் பெறுவதற்கு பெரும் உதவியாக இருக்கிறது. இந்திரியத்தாலும், மனத்தாலும், புத்தியாலும், அக்ராஹியம், அடையமாட்டாது என்பது குறிப்பு,

அகோத்ரம்—நமது வம்சத்திற்கு எவன் மூல புருஷனே அவன் மூலமாக நடந்து வருவது கோத்ரம் எனப்படும். எங்ஙனம் கர்ககோத்திரம், கௌதமகோத்திரம், சாண்டில்ய

கோத்திரம் இம்மாதிரி. யாருக்கு கோத்திரம் தெரியாதோ அவர்கள் விஷயத்தில் தர்ம நூல்கள் சில நியமம் செய்திருக்கின்றன — ''அக்ஞாத கோத்ராணும் சர்வேஷாம் கஸ்யப கோத்ரத்வம்''

இ — ள்.

கோத்திரம் தெரியாத மக்கள் தங்களுக்கு கஸ்யப கோத்திரமென்று கூறலாம். ஏனெனின் கஸ்யபர் எல்லாருக்கும் மூல புருஷர். அவர் மூலமாக பிராணிகளின் படைப்பு விரிவடைந்தது, ஆனுல் எவர் கஸ்யபருக்கும் தந்தையோ, அவர் தந்தை பிரஹ்மதேவனுக்கும் தந்தையோ, அந்த பரமாத்மாவிற்கு மூலமில்லாததால் அகோத்ரம்.

முறை என்னவென்ருல் எஜமானுக்கும் புரோகிதருக்கும் கோத்திரம் ஒன்ருக இருக்க வேண்டும். அங்ஙனம் கோத்திரம் ஒன்ருக இல்லாவிடினும், குறைந்த பக்ஷம் வேதமாவது ஒன்ருக இருக்க வேண்டும். ஏனெனின் ஒவ்வொரு வேதத்திற்கும் குலாச்சாரங்கள் வெவ்வேருக இருக்கின்றன. எஜமான், புரோகிதர் இவர்களுடைய கோத்திரம் ஒன்ருக இல்லாது போனுல் கரும அனுஷ்டானத்தில் முரண் உண்டாகும். பரமாத்மா அகோத்ரம், அதனுல் அவர் நமது வடிவம். பரமாத்மாவிற்கு ஏதாவது ஒரு கோத்திரம் இருக்குமானுல் அவருக்கு மூல புருஷன் வேண்டும், அவ்வாறன்று. பகவான் சங்கரரின் விவாஹத்தில் புரோகிதர் வசிஸ்டர் கோத்திரத்தைக் கிளப்பினுர், சங்கர! உமது தந்தையின் பெயரென்ன? சங்கரர் — பிரஹ்மா. வசிஸ்டர் — பாட்டனுருடைய நாமம்? சிவன் — விஷ்ணு. வசிட்டர் — முப்பாட்டனுருடைய பெயர்? சங்கரர் சிரித்தனர். சிரித்துக் கொண்டு வசிட்டரே! இப்படிக் கேட்டுக் கொண்டேபோனுல் எல்லாருக்கும் பிதா நான் தான் என்ருர். பரமாத்மாவிற்கு மூல புருஷன் இல்லாததால் கோத்திரமில்லை. அவர் எல்லாவற்றிர்க்கும் மூலகாரணர். அவருக்கு ஒரு காரணமுமில்லையென்பது கருத்து. எங்ங

ணம் குடத்திற்கு மண் காரணமோ, அங்ஙனம் பரமாத்மா விற்கு உபாதான காரணம் ஒன்றுமில்லை.

நீ. பரமார்த்த ஞானத்தை விரும்பினால் பொறிகள் வாயிலாக வருகிற ஞானத்தை மறந்துவிடு. அம்மாதிரி கர்மேந்திரிய வாயிலாக எதை எதை பற்றுகின்றாயோ அவை அனைத்தையும் விட்டுவிடு. எதில் காரண காரிய பாவம், வியாப்ய வியாபக பாவம் இருக்குமோ அவை அனைத்தை யும் மனத்திலிருந்து விலக்கி விடு.

4

''ந தஸ்ய கஸ்சித் ஜநிதா ந சாதிப :''

இ—ள்.

அந்தப் பரமாத்மாவிற்கு தந்தையுமில்லை, தலைவனு மில்லையென்று சுருதி சொல்லுகின்றது. ராமருக்குத் தந்தை தசரதர், கிருஷ்ணனுக்கு தந்தை வசுதேவர். அவ்வாறு பிரஹ்மத்திற்குப் பிதாவை எண்ணியும் பார்க்க முடியுமா? முடியாதென்பது தானே கருத்து. அகோத்ரம் — பரமாத்மா வை வெளிப்படுத்த வேண்டுவதில்லை. வனத்தில் ஒரு பெரிய சிவன் கோயில் இருந்தது, அது வனத்தில் இருந்ததால் மக்கள் நடமாட்டம் இன்றி இருந்தது. அவ் ஆலயத்தில் பல புருக்கள் வந்து அடைந்தன. அவைகள் மலம் கழித்து அங்கிருந்த சிவலிங்கத்தை மறைத்து விட்டன. இங்ஙனம் இவ்வாறு இருக்க, திடீரென்று ஒரு மகாத்மா அங்கு வந்தார், ஆலயத்தைக் கண்டார். ஆனால் மூர்த்தியைக் காணோம். அவர் எண்ணினார் — இவ் ஆலயத்தில் ஒரு மூர்த்தியை நிறுவுவோம் என்றார். இதற்கு வேண்டிய முயற்சியைச் செய்தார். அதற்குள் ஒரு வனவாசி வந்தான். ஐயா! இதில் சிவலிங்கம் முன்னையே நிறுவியிருக்கிறது, ஆனால் புருவின் மலத்தால் மறைந்திருக்கிறது என்றான். ஆதலின் அதை சுத்தம் செய்வதற்கு ஏற்பாடு செய்யுமென்றான். அவர் அதை அகற்றுவதற்கு முயற்சி செய்தார்.

மகாத்மா ஆலயத்தை தூய்மைப்படுத்தினர். மலமும் அகன்றது, மகாதேவன் தோன்றினர். இவ்வாறு உனது உள்ளத்தில் அறியாமையால் வந்த மலங்கள் பல இருக்கின்றன. மலம்—பாவம். அதனுல் முன்னமே முளைத்திருக்கும் சோதி தெரிகிறதில்லை. அங்கு ஒரு ஆன்மதேவனை நிறுவ வேண்டாம். அகத்தில் உறைந்திருக்கும் பேதமை என்னும் மலத்தை அகற்றிவிட்டால் முன்னே இருந்த சோதி முன் வந்து நிற்கும்.

அகோத்ரம்—அந்த அகோத்ரவடிவ ஆன்மாவை அடைய வேண்டுமானுல், நீயும் அகோத்ரனுக வேண்டும். கோத்ரம் தேகாபிமானம். அதை விட வேண்டுமென்பது பொருள். நீ தன்னை யின்ன கோத்ரத்தில் உள்ளவன் என்று எண்ணும் போது அந்த ஜாதியாலும், அந்த வேதத்திலும், இந்த ஆக்கையிலும் அபிமானம் வருவது இயல்பு. அதனுல் உன்மனம் அகோத்ரஆன்மாவில் எங்ஙனம் செல்லும்? செல்லாதென்பது தெளிவு.

அவர்ணம்—ஆன்மாவில் அந்தணன், அரசன், வணிகன் முதலிய வர்ணங்கள் இல்லை. அதில் வெண்மை செம்மை, கருமை நிறங்களும் இல்லை. வெண்ணிறம், செந்நிறம், கருநிறம் இவைகள் காயத்திற்குத்தான். காயம்—உடல். மத்யஅரசாங்கம் மாநிலங்களைப் பிரித்து அந்தந்த மாநில விவகாரத்தை அவரவர்கள் பார்த்துக் கொள்ளட்டும் என்று கொடுத்தது போல, பகவானும் மக்கள் ஒருவர்க்கொருவர் உபகாரியாக இருந்து, அவரவர் வர்ண தருமங்களைச் செய்து வாழட்டும் என்று வகுத்துக் கொடுத்த ஒரு சிறந்த நெறியாகும். இதுவும் உண்மையில் ஆன்மாவில் இல்லை.

அந்தணன், யாசகன், அரசன் இவர்கள் குடியைக் காப்பவர், முறை செய்துக் காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும். திருக்குறள்.

பொருள் வெளி. வணிகன் வியாபாரஞ் செய்பவன். நான்காவது வர்ணத்தான். நல்லபணி செய்பவன். எண்ணிப் பார்க்கும் போது இவர்கள் நால்வரில் நான்காமவன் உத்தமன். ஏனெனின், அந்தணன் யாசகன், அது இழிவு அரசன் இம்சை புரிபவன். இம்சை-பாவம், வணிகன் வியாபாரி. வியாபாரத்தில் நிரம்ப பொய் புகலும் படி நேரும். அதுவும் குற்றம், நான்காமவன் செய்யும் பணியில் மேற்கூறிய குற்றம் ஒன்றுமில்லை. இவ்வாறிருக்க அவனைத் தாழ்த்தப்பட்டவனென்று சாற்றுகின்றனர். இது தெரியாதத்தன்மை.

சிறிது சிந்திக்க வேண்டும், மேற்கூறிய வர்ணங்களில் பரமாத்மா எந்த வர்ணத்தைச் சேர்ந்தவர்? அந்தணரா, அரசனு, வணிகரா, சூத்ரரா? யார். பரமாத்மா வெளுப்பா, சிவப்பா, கருப்பா என்று எண்ணிப் பாருங்கள். அவர் இவை யெல்லாவற்றிலிருந்தும் வேறு. அதனுல் அவர் அவர்—ணம். அவர் — ஆத்மா. ''வர்ணயந்தீதி வர்ணு.'' என்பது இலக்கணம். எதை வர்ணனைச் செய்ய இயலுமோ அது வர்ணம் வர்ணனை — வாய்விட்டுப் பேசுவது. இது ''வாய் விட்டுப் பேசொணுதது'' திருப்புகழ். பொருள் வெளி.

எப்பொருள் குணமுடையதோ, அது தான் சொல்ல முடியும், ஜாதி, குணம், கிரியை, சம்பந்தம், ரூடி, இவைகளைக் கொண்டு ஒரு பொருளைப் பேச முடியும். எங்ஙனம் மனிதன், பசு, பறவை முதலிய ஜாதியைப் பற்றிப் பேசலாம். வெண்ணிறம், கருநிறம், கோபி, காமியென்னும் குணங்களைப் பற்றிப் பேசலாம், கற்பவன், கற்பிப்பவன், பாச்சகன், அர்ச்சகன் என்னும் வினைகளைப் பற்றிக் கூற இயலும் பெண், ஆண், மகன், மனையாள், மணவாளன் என்னும் சம்பந்தத்தைப் பற்றியுரைக்கலாம். ஆகாசம், வாயு, அனல், ஆதி நாமம். ஆனுல் பரமாத்மாவில் மேலே

மொழிந்த எந்த தன்மையும் இல்லை. ஆகவே அது வாய் விட்டுச் சொல்லொண்ணாதது. வாக்குக்கு எட்டாதென்பது பொருள்.

பரமாத்மா அவர்ணம். அதைப் பண்டம், பாத்திரம் போல் அபிதாவிருத்தியால் சொல்ல இயலாது. லக்ஷணா விருத்தியாலும் மொழிய முடியாது. ஏனெனின், லக்ஷணை யும் குணானுசாரம் உண்டாகிறது. லக்ஷணை மூன்று விதம்— ஜஹத், அஜஹத், பாகத்யாகம், இவைகளில் எதனாலும் ஆத்மாவின் அறிவு உண்டாகாது. அதற்கு நாமம் இருக் குமானால் எந்த விருத்தியாலும் சொல்லலாம்.

ஜஹத் லக்ஷணை — விட்ட லக்ஷணை. வாச்சியத்தை விட்டு லக்ஷியத்தைக்கொள்வது. அஜஹத் லக்ஷணை—விடாத லக்ஷணை. வாச்சியத்தையும் லக்ஷியத்தையும் விடாதிருப்பது. பாகத்தியாகம்—விரோதத்தை விட்டு அவிரோதத்தைக் கொள்வது. முறையாகத்திருஷ்டாந்தம்—மஞ்சம், பகீரதி, யிவை யிரண்டும் விட்ட இலக்கணத்திற்கு, சிவலை நின்றது, வெள்ளை போயின என்பது விடாத இலக்கணத்திற்கு, அந்த தேவதத்தனே இந்த தேவதத்தன் என்பது பாகத்தியாகத் திற்கு என்று அறியவும். லக்ஷணாவிருத்தியும் பிரஹ்மத்தை அறிவிக்க முடியாது. ஆன்மா நிர்குணம். பிரஹ்மத்தை லக்ஷியமென்றதும் கற்பிதம். ''லக்ஷ்யத்வாத்யாஸ்து கல்பிதா .'' பஞ்சதசி. இந்நிலைமையில் ஆன்மா அவர் ணம்.

ஜஹாம் போல் தஹ் அக்கர ஆவா!
3
ஜஹாம் அபோல் தஹம் மன நரஹாவா !!
3 3
போல் அபோல் மத்யஹை ஜோஈ !
ஜஸ்வஹளஹ தஸ் லக்கை ந கோஇ!! குரு —நானக்

இ—ள்.

எங்கு சொல் இருக்கிறதோ அங்கு எழுத்துக்கள் வரும், எங்கு சொல் இல்லையோ அங்கு மனமில்லை, சொல் லுக்கும் சொல்லின் இன்மைக்கும் இடையில் என்ன இருக் கிறதோ அதை யாரும் அறிகிறதில்லையென்பது குருநானக் குத் தேவரின் கருத்து.

ந வர்ணு ந வர்ணுஸ்ரம ஆசார தர்மா
4
நமே தாரணு தியான யோகாதயோ அபி !! பகவத்
பாதாள்.

இ—ள்.

எனக்கு வர்ணமுமில்லை, ஆஸ்ரமுமில்லை, தாரணையும், யோகமுமில்லை. சிதானந்த ரூபசிவோஹம் சிவோஹம் என்று சங்கரர் கூறுகின்றார். மானம்—அளவு. சமயஅளவு, தேச அளவு, பொருளளவு. தேகத்தை எடை போடுகிறோம், அது தேக அளவு. இத்தனை ஆயுள் என்கிறோம், இது கால அளவு. மூன்று காணி நான்கு ஏக்கர், இரண்டு வேலி என்றெல்லாம் சொல்லுகிறோம், இது தேச அளவு. இவை களில் வைக்கப் பெற்ற அபிமானம் மானம் எனப்படும். மானம், பரிமிதம், அளவு, பரிமாணம், பரிசித்தியிவை யெல்லாம் அளவைக்குறிக்கின்ற பலசொற்கள். தேகத்தை நான் என்கிறபோது பரமாத்மா நாம எங்ஙனமாவோம்? நீ ஒருவனைத்தனக்கு அந்நியமாகக் கருதும்போது அவன் உனக்குப் பகைவனுகி இம்சை செய்வான்.

அவர்ணம் — கோத்ராபிமானத்திலிருந்தும், வர்ணுபி மானத்திலிருந்தும் மேலேயேறு. நின்ற இடத்தில்நிற்காதே, சிறிது ஏறப்பழகு. எந்த இடத்திலிருந்தாலும் அவ்விடத் திற்குத் தன்னை வேருக நினை.

அசக்ஷு :— பரமாத்மாவை அத்ரேஸ்யமென்று முன் மொழிந்திருக்கிறது. யாருக்கும் அது காட்சியாகாது. அது — ஆத்மா. அவ்வான்மாவில் பார்க்கும் கண் இல்லை, கேட்கும் செவியுமில்லை. அபாணிபாதம் — அக்ராஹ்யம் என்று முன்னர் அருளியிருக்கிறது. பிடிக்க முடியாது. இப்பொழுது அதில் பிடிக்குங்கருவியில்லை. அதுதிருஸ்யமுமில்லை திருஷ்டாவும் இல்லை, கிராஹ்யமும்இல்லை, கிராஹகமுமில்லை அது—ஆன்மா.

அசக்ஷு :அஸ்ரோத்ரம்—அபிப்ராயம் என்னை? ஆன்மாவில் கண், காது இல்லையென்பது கருத்து. ஞானேந்திரியத்தை இச்சொல் விலக்குகின்றது. அபாணிபாதம் என்றதற்குக் கருமேந்திரீயம் இல்லையென்பது குறிப்பு. நாம் எந்த ஞானத்தைப் பெறுகிறோமோ அந்த ஞானமும், எந்த வேலையைச் செய்கிறோமோ அவ்வேலையும் ஏதாவது ஒரு காரணத்தினுல் உண்டாகின்றன. கண்ணினுல் பார்வையும், காதினுல் ஒலியும், துவக்கினுல் ஸ்பர்சமும், மூக்கினுல் நாற்றமும் நாக்கினுல் சுவையும் உண்டாகின்றன. ஆன்ம ஞானம் இவைகளால் உண்டாகிறதில்லை. தத்வ ஞானத்திற்குக் கரணந் தேவையில்லை.

அத்ரேஸ்யம் — பிரஹ்மம் திருஸ்யமில்லை. நாம் அதைப் பார்க்க இயலாது போனுலும், அது நம்மைப் பார்க்கட்டுமே யென்பாயாகில், அதற்குப் பதிலாகத்தான் அசக்ஷு : அஸ்ரோத்ரமென்றது. பரமாத்மா பார்க்கத்தான் செய்கிருர். ஆனுல் கண்ணைத் திறந்து பார்க்கிறதில்லை. ஜீவனுக்குப் பார்க்க வேண்டுமானுல் கண் வேண்டும், சிவனுக்குப் பார்க்க வேண்டுமானுல் அது வேண்டுவதில்லை. அது — கண்.

‘‘பஸ்யத்யசக்ஷு : ஸ்ருணேத் யகரண:’’ சு.உ.

இ—ள்

நேத்ரமில்லாமல் பார்க்கிறது, காது இல்லாமல் கேட்கிறதென்பது பொருள்.

பக விநு சல இ சுந ஹூ விநு காநா!
கர விநு கரம கரஇவிதி நாநா!!
ஆநந ரஹித சகலரச போகி!
விநு வாணி வக்தாபடுயோகி!!
த நு விநு பரஸ நயந விநு தேக்கா!
கஹை க்ராண விநு வாச அசேஷா!!
4
அசு சப்பு பாந்தி அலௌகிக கரநீ
மஹிமா ஜாஸு ஜாஇ நஹி வரநீ!! து—ராமாயணம்.

இ—ள்.

பக விநு சல இ=காலில்லாமல் நடக்கிறது. சு ந ஹூ வி நு காநா = (ஆத்மா) காது இல்லாமல் கேட்கிறது. கர விநு கரம = கையில்லாமல் கரஇ விதி நாநா — எல்லாவிதமான வினைகளையும் செய்கின்றன. ஆநந ரஹித= வாயில்லாமல், சகல ரசபோகீ = எல்லா ரசங்களையும் பருகு கிறது. விநு வாணி = நாக்கில்லாமல், வக்தாபடுயோகி = பெரும் பேச்சாளி. பெரிய யோகி. தநு விநு பரச = துவக்கு இந்திரியம் இல்லாமல் தொடுந்தன்மையது. நய ந வி நு தேக்கா=கண்ணில்லாமல் காண்கின்றது. எல்லா நாற்றங் களையும் மூக்கு இல்லாமல்அறிகிறது. இவைகளையெண்ணிப் பார்க்கையில் புதுமையாக இருக்கின்றது. அப்படிப் பெற்ற இவ்வான்மாவின் பெருமையாரால் கூற இயலும், இயலா தென்பதுபுலனும். இது துளசியின் கருத்து.

பாஞ்சாலியின் துகிலை துஸ்சாசனன் சபையில் உரிகிறபோது அவள் அரியை அழைத்தாள்—ஏ ஸ்ரீகிருஷ்ண! துவாரிகா வாசின்! இவ்வாறு அழைக்கும் போது அவன்

கால் நடையாகவும், கைகளில் துகிலேயும் அள்ளிவந்திருப்பானுல், எவ்வளவு நேரம் ஆகியிருக்கும் என்று சிறிது எண்ணிப் பாருங்கள். அவன் நடந்து வரவில்லே, மீனுட்சி மில்லிருந்து புடவைகளேக் கொண்டு வரவும் இல்லே. அவனே ஆடையாகி விட்டான். அவன்—கிருஷ்ணன்.

''அநேஜத் ஏகம் மநஸோஜவீயோ நைநத் தேவா ஆப்னுவன் பூர்வம் அர்ஷத்,, ஈசாவாஸ்யம்.

இ—ள்.

இவ்வத்வைத வடிவ ஆத்மா எல்லாருக்கும் முன்னமே சென்றிருக்கிறது. ஆன்மாவில் பொறிபுலன்கள் இல்லே. அது எதையும் தொடுகிறதில்லே. எல்லா வற்றையும் தாங்கும் வலிமை யுடையது, போஷணஞ் செய்வது. ''தாரயாமி அஹம் ஓஜசா,, கீதை. பொருள் வெளி. நிர்குணமாயிருந்தும் குணங்களேயனுப்விக்கின்றது.

அதில் குணமுமில்லே, விஷயமும் இல்லே, கரணமுமில்லே. காரியோபாதி, ஜீவனுக்குண்டாகிறது, காரணுேபாதி ஈசனுக்கு உண்டாகிறது. உடல் உறுப்புக்கள் காரியோபாதி. இவையிறைவனுக்கு இல்லே. எல்லாக்காரியத்திற்கும் நிமித்தம் மாயை. அது இறைவனுக்கு உபாதி. விஷயங்களே நுகருவது இந்திரியங்களால். பொன், பொருள் இவைகள் மூலமாக வரும் இன்பம் போக மெனப்படும். இதை விஷய மென்றும் விளம்பலாம்.

இவைகளேக் கொள்ளுவதாலும், தள்ளுவதாலும் உண்டாகப் பெற்ற வாசனே மனதில் விழுகிறது. இதை சம்ஸ்காரமென்பர். இது மனதை மலினப்படுத்துகிறது. போகத்தின் போதும், தியாகத்தின் போதும் கவனமாயிருக்க வேண்டும். வாசனே மனதில் விழாமல் பார்க்கவேண்டும். தன்னேத் தவிர எல்லாவற்றையும் விடவேண்டுவது தான்.

காரிய காரணம் இரண்டையும் விட்ட பின்பு விடவேண்டிய தொன்றுமில்லை.

அசக்ஷு: அஸ்ரோத்ரம்—கண்ணும் காதும் துளையுள்ளவை. ஓட்டையென்பது பொருள். இந்த துவாரத்தின் வழியாக உனது உள்ளத்தில் உலகம் நுழைகிறது. இதைமூடு. இறைவனை நினைக்கும் பொழுது யோகிகள் ஐந்து ஒட்டையையும் அடைத்துவிடுவார்கள் என்பது உனக்குத்தெரியாதா? ஐந்து ஒட்டையை அடைப்பது ஐம்பொறிகளையடக்குவது. மௌனமாயிருந்து வாக்கையடக்கு. இவையெல்லாம் தத்வஞானத்திற்குச் சிறந்த முறையாகும்.

கண்ணைக் கொண்டு உருவத்தைப் பார்க்காமலும், காதைக் கொண்டு உலகவார்த்தையைக் கேளாமலும், கையைக்கொண்டு உலகப்பொருளைப் பற்றாமலும், நாக்கைக் கொண்டு உலக இன்பத்தை சுவைக்காமலும் பழகி வருவது பொறியடக்குவது. சம்சாரம் கண்வழியாக உள்ளே வருகிறது, காதுவழியாக பகவான் வருகிறார். எனவே காதைக்கொண்டு சிரவணஞ் செய்.

யாரை வழிபடவேண்டுமோ அவ்வடிவமாக இருந்து வழிபடு. நியமமும் அதுதான். தேவோ பூத்வா தேவம் பஜேத்"

இ—ள்

முதன் முதலில் நீ தேவனாகு, அதன் பின்னர் தெய்வத்தை வழிபடு. ததபாணி பாதம். ஆன்மா கால் கையில்லாதது. எனவே உனக்கு அதைப் பெறுவதற்கு எங்கும் செல்ல வேண்டியதில்லை. செய்யவும் வேண்டாம், செல்லவும் வேண்டாம்.

பகவானை நமது வசமாக்கக் கூடாது, நாம் அவன் வசமாக வேண்டும். கணவர்களோடு பாஞ்சாலி கானகத்தில்

வாழ்ந்திருந்தாள். ஒருமுறை கேசவன் தமது இல்லக் கிழத்திகளோடு அவர்கள் வசிக்கும் வனத்தையடைந்தான். அங்கு அவர்கள் அச்சுதனைக் கண்டதும் ஆரவாரங் கொண்டனர். ஐவர்களும் பாரியாளும் இணைந்து அரிக்கு சேவை செய்தனர். இதைப் பார்த்த ருக்மிணி முதலிய எட்டு பட்டராணிகளும் பொருமை கொண்டு சத்தியபாமா—ருக்மிணி! பார்த்தியாடி, நாம் எட்டு பேரிருக்கிறோம், இருந்தும் ஒரு கணவனை நம் வசப்படுத்த இயலவில்லை. ஆனால் பாஞ்சாலி தமது ஐந்து கணவரையும் தன்வசஞ் செய்திருக்கிறாளே, இவளிடம் என்ன மருந்து மாயம் இருக்கிறதோ என்று கேட்டாள்.

ருக்மிணி — சத்யா! அது உண்மைதான், கணவனை வசம் பண்ணுவதற்கு அவளிடம் மருந்து இருப்பது உண்மைதான் வா அவளிடங் கேட்போம் என்றாள். அரிக்குத் தெரியாமல் அனைவரும் பாஞ்சாலியிடஞ் சென்றார்கள். அக்கா! கணவனைவசஞ் செய்ய வேண்டுமானால் என்ன மருந்து செய்ய வேண்டுமென்று எல்லோருங் கேட்டனர். இதைக் கேட்டதும் திரௌபதி நகைத்தாள். தங்கைமார்களே! கணவனை வசம் பண்ண முடியாது, ஆனால் நாம் கணவனுக்கு வசமாக வேண்டுமென்றாள். எல்லோரும் தமது எண்ணத்தை யெண்ணி யெள்ளினார்கள்.

அது போல் ஆன்மாவை நாம் வசப்படுத்த முடியாது, ஆன்மாவிற்கு நாம் வசமாக வேண்டும். கடல் நதியை நோக்கிச் செல்கிறதில்லை, நதிதான் சமுத்திரத்தை நோக்கி வருகின்றது. கடல் ஆன்மா. நதி ஜீவன். இதற்கு நதி சமுத்திர நியாயம் என்று பெயர். காரியப் பொருள் காரணத்தை நோக்கிச் செல்வதுதான் முறை.

நித்யம் கடிகாரத்தில் முள் சுற்றிக் கொண்டே வருகிறது, சிலநேரம் சுற்றுமல் நின்று விடுகிறது. இவையெல்

லாம் காலத்தைக் காட்டும் கருவி ஆகாது, அதுபோல சூரியன் சந்த்ரன் பூமி இவைகளும் சுற்றுகின்றன. இதுவும் பிரகிருதியின் கடிகாரம். ஆனால்காலம் இல்லை. இவைகள் சுற்றிக் கொண்டு வருவதால் இவைகளைக் காலமென்று கருதலாகாது. இவை சுற்றிக் கொண்டிருந்தாலும் சுற்ரு திருந்தாலும், காலம் அப்படியேயிருக்கும். கடிகாரம் நின்று போனாலும் சமயம் நிற்கிறதில்லை. கிரம சம்வித்து காலம். அணுவிலிருந்து கற்பம் வரையுள்ள பொழுதிற்கு எது காரணமோ அது காலசம்வித்து. சம்வித்து ஞானம்.

நாம் ஒரு சொல் சொல்கிறோம் — மனிதன் இதில் ம, னி; த, ன் என்னும் முறை இருக்கிறது. இதற்கு கிரமம் என்று பெயர். இந்த அறிவிற்குக் காலமென்று நாமம். இந்த சமயத்தின் கற்பனை பிரஹ்மத்தில் செய்யப் பெற்றிருக் கிறது, அதற்கு சமயமென்று பெயர். படைப்பு, காத்தல், அழித்தல், நாள், மாசம், அயனம், ஆண்டு, கற்பம், யுகம் இவையனைத்தும் காலத்தில் கற்பிதம், காலம் ஆன்மாவில் கற்பிதம்.

எங்ஙனம் கிரமசம்வித்து காலமோ அங்ஙனம் விரிவும் சுருக்கமும் சம்வித்தின் பெயர். தேசம் — நாம் எதில் உட்கார்ந்திருக்கிறோமோ அது நம்மைப் பார்க்கிலும் பெரிது. அறையிலிருந்து வராண்டா பெரியது. வராண்டாவிலிருந்து, கிரஹம் பெரியது. கிரஹத்திலிருந்து நகரம் பெரியது, நகரத்திலிருந்து தேசம் பெரியது, தேசத்திலிருந்து பூமி பெரியது, பூமியிலிருந்து சூரியமண்டலம் பெரியது. இம் மாதிரி விஸ்த்தாரத்திற்கு தேசமென்று பெயர். கோடி கோடி பிரம்மாண்டங்கள் தேசத்திற்குள் இருக்கின்றன.

வஸ்துவின் வேற்றுமையின் ஞானத்திற்குப் பொருள் என்று பெயர். இது குடம், இது படம். கடம்

படமில்லை, படம் கடமில்லை. கடம் — குடம். எல்லாப் பொருளும் ஐம்பூதத்தின் காரியம், ஆனால் அவைகளுடைய பேதத்தை அறிவிப்பது பொருளெனப்படும். இந்த மாதிரி பிரஹ்மத்தில் சிருஷ்டிரூபமான கல்பித காலமும், தேசமும் இவை எல்லாம் மாயை எனப்படும்.

இம்மாயைக்கு அதிஷ்ட்டானம் பிரஹ்மம். இதை அறிபவர் நாம். கல்பிதத்தை இல்லையென்று எண்ணிய பின்னர் எது இருக்குமோ அது பிரகாஷம் அதுவே நாம். நாம் வேறு. பிரஹ்மம் வேறு என்பது அன்று. துவம்பதத்தை விசாரிக்கும் பொழுது தேகத்தை வைத்து விசாரிக்க வேண்டும், தத்பதத்தை விசாரிக்கும் பொழுது தேசத்தை வைத்து விசாரிக்க வேண்டும். தேகத்தையும், தேசத்தையும் பொய்யென்று தள்ளும் போது ஜீவனும் ஈசனும் வேருக இருக்கிறதில்லை. இதற்கு இடையில் ஈசன், நீசன், நீ நான் இவையெல்லாம் வெறும் மயக்கமே. இதை விளக்கும் பொருட்டு நித்யம், விபும, சர்வகதம் என்று சாற்றப்பட்டிருக்கிறது.

நித்யம்—நித்யம் என்பதற்குப் பொருள் காலத்திற்குள் வராதது. இதை காலப்பரிச்சேத ரகிதம் என்பர். இவ்வுடம்பு இந்த ஆண்டில் உண்டானது, இந்த மாசத்தில் தோன்றியது, இந்தத் திதியில் வந்தது. சில காலத்திற்குப் பின்பு அழிந்து போகும் என்றதால் காலத்தின் அளவுக்குள் வந்துவிட்டது. இதற்குக் காலப்பரிச்சின்னம் என்று பெயர். பரமாத்மா இந்த அளவுக்குள் வரமாட்டார்.

யார் எதை அறிகிறார்களோ அவர் அதற்கு வேறு. நாம் காலத்தை அறிகிறோம், அதனால் அவைகளுக்கு நாம் வேறு. காரியத்திலிருந்து காரணம் பின்னமாக இருக்கிறது, ஆனால் காரணத்துக்கு வேருகக் காரியமில்லை. அதுபோல பிரபஞ்சத்திற்கு வேருக பிரஹ்மமிருந்தாலும் பிரஹ்மத்திற்கு வேருகப் பிரபஞ்சமில்லை என்பது துணிபு.

பரமாத்மாவைத் தேட வேண்டுமானால் நேதி, நேதி என்று தேட வேண்டும், இது பரமாத்மாவல்ல. இது பரமாத்மா வல்ல வென்று எண்ணுவது நேதி, நேதி எனப்படும். பரமாத் மாவின் அடைவு வுண்டான பிறகு ''ஸர்வம் கலு இதம் பிரஹ்ம'' எல்லாம் பிரஹ்ம மென்ற அனுபவம் வரும்.

நாழிகையிலிருந்து நாள் வேறு, நாளிலிருந்து நாழிகை வேறல்ல. நனவில் ஒரு மணி நேரத்தில் கனவில் பல ஆண்டுகள் கழிந்து விடுகின்றன. அதுபோல பரமாத்மா நித்யம், அதில் மூன்று காலமும் கற்பிதம், நிகழ்ந்த காலம், நிகழ்காலம், இனி நிகழும் காலம் இம்மூன்றும் ஆன்மாவில் இல்லை யென்பது கருத்து.

நித்யம் —காலத்தை விளக்குவது என்பது பொருள். எங்ஙனம் ஒரு இறைவனிடத்தில் மூன்றுதேவதை—பிரஹ்மா, விஷ்ணு, சிவன் கற்பிதமோ அங்ஙனம் பிரஹ்மத்தில் கால தேவதை கற்பிதம். காலம் அதற்கு வெளியில் இல்லை. மண்ணினால் விளையாட்டுப் பண்டங்கள் செய்யப்படுகின்றன, அவை உடைந்து விடுகின்றன. அவ்விளையாட்டுப் பண்டம் அநித்யம், மண் நித்யம். தண்ணீரில் தரங்கம் உண்டாகின்றது, அழிகின்றது, அதனால் அது அநித்யம், தண்ணீர் நித்யம். நெருப்பிலிருந்து பொறி உண்டாகிறது, அது அணைந்து விடுகிறது. அந்த பொறி அநித்யம், நெருப்பு நித்யம். காற்றிலிருந்து தூசிகள் கிளம்புகின்றன. மீண்டும் அவை அழிகின்றன. அவை அநித்யம், காற்று நித்யம். ஆகாசத்தில் கடாகாசம், மடாகாசம் அநித்யம், ஆகாசம் நித்யம்.

மனதில் சங்கல்பம், விகல்பம் எழுகின்றன, விழுகின்றன. அவை அநித்யம், மனம் நித்யம் புத்தியில் விசாரம் உதிக்கின்றது ஒடுங்குகின்றது, விசாரம் அநித்யம், புத்தி நித்யம் இவ்வாறு நெடுகிலும் விசாரித்துப் பார்த்தால்

உலகமுழுதும் அநித்யம், ஆத்மா நித்யம், உலகம் மாறு கிறது. ஆத்மா மாறுகிறதில்லை. அதனால் உலகம அநித் யம், ஆத்மா நித்யம். என்றும் நிலையுள்ள ஆத்மாவிற்கு நாம் நண்பர்கள். அதை அடைய விரும்புகின்றோம். சூரியன், சந்திரன், சமுத்ரம், பூமி இவை எல்லா இடங்களிலும் மாறுதல் காணப்படுகின்றன. இந்நிலையில் உறுதியான நித்யப் பொருளை அடையத் தேடுங்கள்.

''இஹச்சேத் அவேதீத் அத சத்யம் அஸ்தி, நச்சேதிஹ அவேதீத் மஹதீ விநஷ்டி :'' கே—உ. இ—ள்.

ஏனெனின், சுருதி சொல்லுகின்றது—அதை யிந்தப் பிறவியில் தெரிந்து விட்டால் உன்னுடைய ஜென்மம் சபலமாய் விட்டது, அதை யிந்த ஜென்மத்தில் அறியவில்லை யென்றால் உனது ஜென்மம் பாழாய் விட்டது. எனவே அதைத் தேடு. அது—பிரஹ்மம். எதை எதனாலும் அழிக்க இயலாதோ அது நித்யம்.

விபும்—விபுவிற்குப் பொருள் தேச அபரிச் சின்னம். தேசத்தில் நான்கு விபாகங்கள் இருக்கின்றன. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு. இன்னும் மேல், கீழ், உள். வெளி. இந்த பேதங்கள் இருக்கின்றன. இவை யனைத்தும் கற்பிதம். நாம், மனிதர்கள், ஆனால், மனித இனம், பசு, பறவை முதலிய இனத்திலிருந்து வேறு. இந்த மனித இனத்திலும் நீ, நான், அவன், இவன் என்னும் வேற்றுமை உண்டாகிறது. ஆனால் ஆன்மாவின் கண் இனமோ, ஜாதியோ, நான் நீ, அது, இது என்னும் பேதமோ இல்லை. தேசம், காலம், பொருள் இந்த சமஷ்டி பேதமும் இல. சமஷ்டி = கூட்டம். இறைவன் ஞானத்தைப் பிரகாசிப்பவன், எங்ஙனம் பழுதையில் பாம்பு பார்க்கப்படு கிறதோ, அங்ஙனம் பார்முழுவதும் பரமனில் இல்லாமலே காணப்படுகின்றன. பழுதை = கயிறு. பார் = உலகம். இறைவனிடத்தில் இனியதேசம், காலம், வஸ்து இவை

அனைத்தும் கானல்நீர்போல தோற்றமாத்திரமே. எப்பொழுது தோன்றுகின்ற பொருளை (அபவாதம்) இல்லையென்று தள்ளிவிடுகின்றாயோ அன்று உனக்கும் அப்பொருளுக்கும் இடையிலுள்ள இறைநிலை இனிது காணப்படும். பேதம் முழுவதும் காட்சியிலிருக்கின்றன. காட்சியிலிருக்கின்ற சாட்சியை நானென்று அறிந்தால் கடலில் விழுந்த உப்புக்கட்டி கரைவதுபோல காட்சியிலிருக்கும் பேதமும். காட்சியும் சாட்சியாகிவிடும். காட்சி = விஷயம். சாட்சி ஆன்மா.

தேசம், காலம், வஸ்து இவைகளின் சமுதாயத்தோடு கூடிய சைதன்யம் ஈஸ்வரன் எனப்படும். நான் நீ, அது, இது, உது என்னும் கற்பனையோடு கூடிய சைதன்யம் ஜீவன் எனப்படும் கற்பனை, கல்ப்பியம் இவை இரண்டையும் விட்டு விட்டால் எஞ்சிநிற்பது சைதன்ய சோதி. ''கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி' என்றபடி. பொருள் வெளி.

4 4 4
விபு: = விவிதம்பவதீதிவிபு :— பரமாத்மா காரியத்தில் காரணம் நிறைந்திருப்பது போல ஜகத்தில் நிறைந்திருக்கிறார். ஜகத் = உலகம். ஒரு ஆன்மா பல உலகப் பொரு-
4 4 4 4 4
ளாகக் காணப்படுகிறது. ''ஏகதாபவதி துவிதாபவதி திரிதா
4 4 4 4 4
பவதி பஞ்சதா சப்ததா நவதாபவதி ஏகா தசதா பவதி''.

இ—ள்.

ஆத்மா ஒன்றாகவும், இரண்டாகவும், மூன்று ஐந்து ஏழு ஆகவும், ஒன்பது பதினொன்றாகவும், இருக்கின்றது. கண்ணாடியால் கட்டப்பட்ட பவனத்தின் நடுவில் ஒரு மெழுகு பத்தி ஏற்றி வைத்தால் அது பல மெழுகுவதியாகக் காணப்படுகின்றன. அது போல மாயை என்கிற பவனத்தில் ஆத்மா என்கின்ற மெழுகுபத்தி ஒன்றாக இருப்பினும் பலவாகக் காணப்படுகின்றது என்பது சுருதியின் பொருள்.

சர்வகதம்—பரமாத்மா வஸ்துவினல் பரிச்சின்னம் இல்லே. பரிச்சின்னம் அளவு. எங்கும் நிறைந்த பொருளுக்கு அளவு ஏது? கரையை அளக்கலாம் கடலே அளப்பாரில்லே. பூமியை அளக்கலாம். வானத்தை அளப்பாரில்லே. வானம்—ஆகாசம். இதை விளக்குவதற்காக சர்வகதம் என்று சாற்றப் பெற்றது. குடம் எப்படியோ அப்படிதான் சிருஷ்டி. அக்குடம் எவ்வளவு நேரம் இருக்குமோ அவ்வளவு நேரம் அது அரனுக்கு அன்னியம் இல்லே. அரன் — ஆன்மா. இதை விளக்குவதற்காக ஆத்மா நித்தியமென்று நிகழ்த்தப் பெற்றது. குடம் உண்டு பண்ணுவது எவ்வவு தூரமோ அவ்வளவு தூரம் அதற்கு ஈஸ்வரன் வேறல்ல. பிரஹ்மத்தைப்பற்றி நாம் பேசும் போது நம்மை தேகத்திற்கு வேருக நினைத்துக்கொண்டு பேச வேண்டும். நாம் அறியாமையோடு இருந்து ஆன்மாவை ஆராய்வோமானல் அபராதமாகும். பிரம்மத்தை நமது சொரூபமாக எண்ணினல் மெய்யாகவே நாம் பிரம்மமாவோம். புலி வருகின்றது புலி வருகின்றது என்று பொய்யுரை ஆடிய பின்பு மெய்யாகவே எப்படி புலி வந்ததோ அங்ஙனம் நாம் ஆன்மாவை அறியாது இருப்பினும் ஆன்மாவை அறிந்த பின்னர் ஆன்மா ஆகின்ருேம். நாம் மட்டும் அல்ல, இழிந்த புழு கூட தன்னே பிரம்மம் என்று அறிந்தால்—பிரம்மம் ஆவதற்கு அதிகாரம் உண்டு. ஏனெனின் அதுவும் அதனின் அம்சம்தான். அது ஆத்மா. ஒரு தந்தைக்கு நான்கு புதல்வர்கள் இருத்தனர். அவர்களில் மூவர் கல்விமான். ஒருவன் கல்வி இலாதவன். அங்ஙனம் இருக்க தந்தையின் உடைமை நான்கு பேருக்கும் சமானம்தானே. அதுபோல் அறிந்தவனுக்கும் அறியாதவனுக்கும் ஆத்மாவை அடைவதற்கு உரிமையுண்டு.

பரமாத்மா நித்யம். எனவே இப்போதும் இருக்கின்ருர். அவர் ‘விபு’ எனவே இங்கேயும் இருக்கின்ருர்.

அவர் சர்வகதம். ஆதலின் எல்லாமாய் இருக்கின்றார். எதை நாம் பார்க்கின்றோமோ எப்படிப் பார்க்கின்றோமோ அது பரமாத்ம ரூபம். ''பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே'' என்கிறார் தாயுமானார். இதன் பொருள் இனிது புலனாகும். இவ்விஷயத்தில் எல்லா ஆன்றோருக்கும் ஒரே சம்மதம். இதை யாரும் மறுப்பாரில்லை. பரமாத்மா இப்பொழுதும் இருக்கிறார். எப்போதும் இருக்கின்றார். இங்கேயும் இருக்கிறார். அங்ஙனம் ஆயின் எல்லோரும் அவரை ஏன் பார்ப்பது இல்லை? இதற்குப்பதில். சூட்சுமம். அது முற்றிலும் நுணுக்கமானது. எந்த பொருளில் குணமிருக்குமோ அது தூலமாகும். ஊறு, ஓசை. சுவை, ஒளி, நாற்றம், பரத்வம், அபரத்வம், குருத்வம், லகுத்வம், திரவத்வம், ஆதிகுணங்கள் பரமாத்மாவில் இல்லை. எதில் குணமில்லையோ அது சூக்குமம் ஆகும். ஆன்மா அதைப் பார்கிலும் சூக்குமம். எனவே ஆன்மாவிற்கு சூக்ஷ்மம் என்று பெயர்.

ததவ்யயம். எது வியயமில்லையோ அது அவ்யயம். அவ்யயத்திற்குப் பொருள் மாறுதல் இல்லாதது. பரமாத்மா விகாரம் இல்லாதவர். அரசனுடைய (கோசம்) பணப்பெட்டியும் குறைந்து போகும். குறைவது வியயம் எனப்படும். பரமாத்மாகோசம் ஒரு போதும் குறைகிறதில்லை. ஆய — வரவு. வியயம் — சிலவு

இந்த உடலின் வரலாறு என்னை? அன்னையின் உதரத்தில் ஒருதுளி விழுந்ததினால் இந்த தேகம் வந்தது. மெள்ள மெள்ள பெருக ஆரம்பித்தது. ஐம்பது ஆயுள் கழிந்ததும் குறைய ஆரம்பித்தது. பெருத்தலும் இளைத்தலும் ஆக்கையின் கூறே என்பது பெரியோர் வாக்கு. ரோமம் வெளுத்துப்போயிற்று. கண், காது, மற்றுமுள்ள பொறிகளின் வலிமை குறைந்து விட்டது. ஒருநாள் இவ்வுடம்பு ஒழியும். இவ்வுடம்போடு எந்த பொருள் சேருமோ, அது அமங்கல

மாகும். எது தேகத்தோடு பற்றுமோ, அது நாற்றமுறும். அன்னம் உண்கிறோம், அது மலமாகிறது, தண்ணீர் பருகினால் அது மூத்ரமாகிறது. ஒருமுறை ஆக்கையில் ஆடை அணிய ஆரம்பித்தால் அது அசுத்தமாகிறது.

நான் என்பதோடு சேரும் போது எல்லாம் புனித மாகின்றன. நானை விட்டு விலகும் போது எல்லாம் தீமை யாகின்றன. மலம், மூத்ரம், நகம், ரோமம், பல், கபம், எச்சியிவையெல்லாம் எது வரை தேகத்தில் இருக்குமோ, அதுவரை பவித்திரம். தேகத்திலிருந்து வெளியேறியதும் நிந்திக்கத்தக்கதாகின்றன. இவ்வநுபவம் உனக்கு உண் டாகுமானால் —

''அஹம் அரி: இதம் ஜநார்தநோ நாந்யம் தத காரண காரிய ஜாதம்'' நான் பகவான் இவையெல்லாம் பகவான், பகவானிடத்தில் இருந்து உண்டான உலகம் அதற்கு அன்னியமாயில்லை. இவ்வாறு அநுபவமுண்டான பின்பு உனக்காக உலகத்தில் அசுத்தமான வஸ்து ஒன்று மில்லை.

எந்தப்பொருள் வயிற்றுக்குள்ளிருக்கிறதோ அதை அசுத்தமென்றுரைக்க இயலாது, எது வயிற்றிலிருந்து வெளியே வருகிறதோ அதுதான் அசுத்தமெனப்படும். எவருடைய வயிற்றிலே எல்லா உலகமும், சிருஷ்டி, திதி, பிரளயம் உண்டாகின்றனவோ அந்த ஆன்மாவிற்கு அசுத்தம் ஏது, இல்லையென்பது குறிப்பு. நாம் நம்மைக் குறைந்தவனாக எண்ணும் போது படைப்பில் அசுத்தம் வருகிறது.

அவ்யயம் — காயத்தைப் போல தூய ஆன்மாவில் வியயமில்லை. வியயம் என்னும் சொல்லில், வி, உபசர்கம். (அடைமொழி) அய என்னுஞ் சொல் இணைந்து வியயம்

என்னும் சொல் உண்டாயிருக்கிறது. விபரீதம் இதி வியய:. விபரீதம் என்னே ? தோன்றுதல், வளர்தல், பெருத்தல், இளேத்தல், குறைதல், முடிவில் மடிதல். இவை ஆறும் ஆறு விகாரமென்பர். பரமாத்மா நிர்விகாரி.

மகாத்மா உபதேசஞ் செய்கிறார். இதற்கு ஞானதானம் என்று பெயர். இந்த ஞானம் கூடுதலும் குறைதலும் இன்றியது. அதனுல் இது அவ்யயம். ஞானம் பிரஹ்மத்தின் வடிவம். உடலுக்கும், உறுப்புக்கும், உடைமைக்கும் வியயம் உண்டு. உள்ளிருக்கும் ஆன்மாவிற்கு வியயமில்லே. ரோஜாமலருக்கு குணம், — ரூபம் மணம். மலர் வாடிய பிறகு உருவமும் குணமாகிய மணமும் கெட்டுவிடுகின்றன. ஆனுல் பரமாத்மா மலர் அல்ல மணமல்ல. ஆகையால் அவ்யயம்.

யத்தீரா : பூதயோநிம் பரிபஸ்யந்தி — விவேகிகள் அந்த ஆத்மாவை உலகத்திற்கு நிமித்தமாக நோக்குகின்றனர். நிமித்தம் — காரணம். நோக்குதல் — பார்ப்பது. தீரா : — வீரன் கரையிலிருப்பவரைக் காண்கிருன். கங்கையில் குதிக்க வேண்டும். வெள்ளத்தில் செல்லக் கூடாது, அவன் வீரன். தீரன் — தீரம் — கரை. அதையடைபவன் தீரன். கரை இன்ப நிலேயமாகிய முக்தி. வெள்ளத்தில் மிதந்து கொண்டு போகுமவன், எங்ஙனம் கரையைப் பார்க்க முடியும், அதில் இருப்பவரை யறிய முடியும்? முடியாதென்பது முடிபு. புலன்களே நோக்கிப் பொறிகளின் வெள்ளம் புரண்டோடுகின்றது. அதன் பின் யார் செல்வதில்லேயோ, அவர் கரையென்னும் கனிந்த முக்தியைப் பணிந்த முறையில் அடைகிருர்.

அஸரீரம் ஸரீரேஷு அநவஸ்த்தேஷு அவஸ்த்திதம்,
4
மஹாந்தம் விபும் ஆத்மாநம் மத்வா தீரோந
1
ஸோசதி

க. உ. இ—ள்.

ஆத்மா ஆக்கையிலிருக்கிறது, ஆனால் ஆன்மா ஆக்கையல்ல. நிலையில்லாத இந்த ஆக்கை சம்சாரமென்னும் வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டாலும் இது நிலையாக இருந்து விளங்குகின்றது. இது — ஆன்மா. அதைத்தனது ரூபமாக அறிபவன்தீரன் — வீரன். அவனுக்குச் சோகமில்லை. சோகம் — கவலை. பிறந்தால் கவலை வரும்; அது இல்லாததால் கவலையும் இல்லை.

உலகத்தைப் பார்க்கும் புருடர்கள் பலர். அவர்களில் சிலர் தீரர் சிலர் அதீரர். வீரமில்லாதவர்கள் ஜெகத்திற்குக் காரணமாக எதைப் பார்க்கிறார்கள்? அவர்களால் எதையும் நோக்க இயலாது. அவர்கள் நிலைகுலைந்து நிற்கிறார்கள். வீரபுருஷன் ஆன்மாவை அவனிக்கு நிமித்தமாக அறிகிறான். ஞானிதான் வீரபுருஷன். அவன் எதை ஜகத்திற்குக் கரணமாகப் பார்க்கிறானே அதுதான் உலகத்திற்கு உண்மையான காரணம். பைத்தியக்காரன் எதைக் காரணமாகக் காண்கிறானே அது காரணமாகாது.

பிரஹ்மத்தில் அவித்தை பரோக்ஷமா? அபரோக்ஷமா? இவ்விஷயத்தில் இருமதம். ஒன்று அக்ஞானம் அபரோக்ஷம், எங்ஙனம் எனின், ''அஹம் அக்ஞ:'' என்பது அபரோக்ஷ அநுபவம். ''அஹம் ந ஜானாமி'' இதில் அக்ஞானத்திற்கு ஆஸ்ரயம் அஹம். இது அநுபவ பிரமாணம். ஆனால் இது தெளிந்த மதியுடையவனுக்கா அல்லது தெளியாதமதியுடையவனுக்கா? இவ்வநுபவம் தெளிந்த மதியுடையவனுக்கல்ல, அக்ஞானிபுருஷனுக்கு பிரமாண அநுபவம் உண்டாகாது. அதிகாரிக்காக அவித்தையைக் கற்பித்திருக்கிறது. ஞானிகள் பார்வையில் அது இல்லை. அவித்தையில்லையென்பது பொருள். ஆகையால் அவித்தை பொய். ''ஞாதே துவைதம் நவித்யதே'' ஆத்மாவையறிந்த பின்பு உலகமில்லை என்பது காரிகை. அவித்தை அநிர் வசனீயம். சொல்லொணாதது.

''அவித்யாபி ந கிஞ்சித் சா காபுபுத்சா ததாபிதே'' அவித்தை யென்று ஒரு பொருள் இல்லாதிருக்க, அதை யறிய வேண்டுமென்னும் ஆசை பயனற்றதாகும். அவித்தைக்கு இலக்கணமும் இதுதான்—நவித்யதே இதி அவித்யா யென்றபடி. எதற்கு இருப்பு விளக்கமில்லையோ அது அவித்தை யென்பது குறிப்பு. எனவே எவன் அக்ஷர புருஷனே அவன்தான் வையகத்திற்குக் காரணம்.

பௌத்தர் -- உலகத்திற்கு ஒரு காரணமும் இல்லை யென்கின்றனர். இவருக்குச் சூன்யவாதி யென்று பெயர். இவர்கள் தாய் தந்தையில்லாமலே புவியில் வந்திருக்கின்றனர் போலும். அதிஷ்டானம் இல்லாமலே உலகம் தோன்றுகிறது என்கின்றனர். சூன்யத்தில் தோற்றுகிறது என்று சொல்கிறார்கள்.

உலக காரண விஷயத்தில் மூன்று விதம். 1—எவன் ஒருவன் தனக்கு வேருக ஜெகத்திற்குக் காரணத்தைப் பார்ப்பானுனல், அவன் யுக்திவாதியாகவும் இருப்பானுனல் வையகத்திற்கு நிமித்தம் இல்லை யென்றே யுணர்வான். பௌத்தர்கள் இவ்வரிசையில் வந்தவர்கள். 2 — யாராவது ஜகத்திற்கு ஜடத்தைக் காரணமாக ஒப்புக்கொள்வாராகில், அவர்களும் பௌத்தர்கள்தான். இன்றைக்குள்ள விக்ஞானிகளும் இதைத்தான் ஒப்புக்கொள்கிறார்கள். இவர்கள் விகாசவாதி யெனப்படுவர். விகாசம்—ஜகத்து முன்னேற்றம்.

3 — அன்பர்களாக இருப்பார்களானுல்—பகவானைப் பார்முழுவதற்குங் காரணம் என்பர். பகவான் — சகுண வடிவம். உலகத்திற்கு ஜடத்தைக் காரணமாக உரைப்பவர்களும் பலவிதம். சிலர்பரமாணுவிலிருந்து சிருஷ்டி உண்டானதாகக் கூறுகின்றனர். சிலர் பிரகிருதியிலிருந்து உண்டானதாக உரைக்கின்றனர். எந்த அன்பர்கள் இறைவனைக் காரணமாகக் கொண்டிருக்கின்றனரோ அவர்கள் மதத்தில்

அதுவேதான் காரணம். அது—இறைவன். சிலர் அருவம், உருவம் இரண்டையும் காரணமாகக் கூறுவர். அவர்கள் கிறிஸ்தவர்கள, இஸ்லாமியர், ஆரிய சமாஜி, மீமாம்சகர். கர்ம காண்டிகளும், ஜைனர்களும் உலகிற்குக் கருமத்தைக் காரணமாக மொழிகின்றனர். இவர்கள் உலகிற்கு உற்பத்தி யையும், ஒடுக்கத்தையும் ஒப்புக்கொள்வதில்லை சிருஷ்டியை அனுதி, நித்யம் என்கின்றனர்.

உருவக் கடவுளை உலகிற்குக் காரணமாக ஏற்பவர் களில் சைவர், சாக்தர், காணுபத்யர், சௌரர், வைஷ்ணவர், ஆக அநேகர்கள். அவர்கள் தங்கள், தங்கள் இஷ்ட தெய்வ மான சிவன், சக்தி, கணேசன், சூரியன், நாராயணன், ராம கிருஷ்ணன், இவர்களை ஜகத்திற்குக் காரணமாக எண்ணுகின்றனர். உலகத்தில் இவ்வளவு வேற்றுமைகள் கருமத்திஞல் காணப்படுகின்றன என்று கர்மவாதிகள் உரைக்கின்றனர். இவர் அந்தரங்கவாதி. ஏனெனின் கர்மம் இருப்பது உள்ளே. பரமாணுவாதி பகிரங்க உபாதானவாதி. பிரகிருதியும், ஈஸ்வரனும் உள்ளே இருக்கின்றனர். பௌத் தர்கள் நிருபாதானவாதி. ஆனல் மறைகள் ஜகத்திற்கு உபாதான காரணம் எனப் பரமாத்மாவைப் பகருகின்றன.

தத் பூத யோனிம் — பவந்தி இதி பூதானி. எது உண்டாகிறதோ அது பூதம் எனப்படும். தோன்றும் தருமம் உடையது பூதம். எது தோன்றும் தருமமுடையதோ, அது அழியும் தர்மமுடையதாகும். எது பிறக்குமோ அது இறக்கும். பழுத்த இலையும், அசைந்த பல்லும், நரைத்த ரோமமும் விழுவது போல. யத் த்ருஷ்டம் தந் நஷ்டம் யத் ஜன்னியம் தத் அநித்யம்.

இ—ள்.

எது தெரியுமோ அது திருஸியம், அழியும் என்பது பொருள். பிறப்பும், இறப்பும் உடம்போடு வரும். பிறப்பின்

தலையில் இறப்பு எழுதியிருக்கிறது. காலையில் சூடிய மலர் மாலையிலும், மாலையில் சூடியது மறுநாள் காலையிலும் வாடுவது மரபு.

எது முன்னும் பின்னும் இல்லையோ அது இடையில் இருப்பினும் இல்லாததேயாம்.

யத் வஸ்து "ஆதௌ அந்தேச்ச யந்நாஸ்தி வர்த்தமாநேஅபி தத் ததா" கா — கை.

இ—ள்.

யத்வஸ்து = எந்தப் பொருள். ஆதௌ அந்தேச= முன்னும் பின்னும். நாஸ்தி = இல்லையோ, தத் = அந்தப் பொருள். வர்தமானேபி = நிகழ்காலத்திலும். ததா=அப் படியே, இல்லையென்பது பொருள். இது மாண்டூக்யகாரிகை. இரவில் திரிகிறபோது பூதம் தோற்றுகிறது, எண்ணிப் பார்க்கும் போது அது ஒரு தூண். மயக்கத்தினால் எது தோற்றுகிறதோ அதற்குப் பிறப்பும், இறப்புமுண்டு. கயிறு தெரியாத தோஷத்தால் அதில் பாம்பு தோற்றியது, விசாரம் பண்ணியதும் அங்கு அது இல்லை.

ஒரு மனிதன் இரவில் மயானத்திற்குச் சென்று பிணத்தின் மீது உட்கார்ந்து கொண்டு ஜெபம் செய்தான். பிணம் வாயைத் திறந்தது, அதன் வாயில் இரும்புக் கடலையைப் போட்டான். அது அதை விழுங்க ஆரம்பித்தது. அவ்வாறு அவன் செய்யாதிருந்தால் அவனையே விழுங்கி யிருக்கும். அப்பொழுது அவனுக்கு நான்கு பக்கங்களிலும் பூதங்கள் தெரிய ஆரம்பித்தன. அவன் ஜெபத்தை நிறுத்தி னான், பூதங்கள் மறைந்தன.

பூதமென்று எதைச் சொல்லுவது? எது திடீரெனத் தோன்றி விசாரம் பண்ணிய பிறகு இல்லாமல் போகிறதோ அது பூதமெனப்படும். பூதம் = கழிந்தது. எது ஒன்று

காணப்படுகிறதோ — மனிதன், பசு, பறவை, மரம், கொடி இவை எல்லாம் மகா பூதத்தின் குழந்தைகள். ஆகையால் அவைகளும் பூதங்களே. இதில் வர்த்தமானம் இல்லை. பூதத்தில் நிகழ்காலம் ஏது? இல்லை என்பது குறிப்பு. தத்பூத யோநி — உலகம் உண்டாயிருக்கிறது. இதற்கு முதற் காரணம் ஈசுவரன். உலகம் உண்டாகும்பொழுது தேசம், காலம், பொருள் இவைகளுக்குள்ள வேற்றுமையும் உண்டாகிறது. எங்ஙனம் குடம் என்று எழுதுகிறோம் — இதை எழுதுவதற்குப் பொழுதும் தேவைப்படுகிறது, இடமும் தேவைப்படுகிறது, உருவமும் உண்டாகிறது. இவையெல்லாவற்றிற்கும் முதற் காரணம் அக்ஷரவடிவ ஆன்மா.

இந்த பூதயோநி — ஜகத் காரணத்தை. தீரா: — வீர புருஷன் பார்க்கிறான். "தியாயந்தி இதி தீரா:" வீரன் அதையறிகிறான். வீரன் என்பவன் உண்மையை தரிசிப்பவன்.

யம் ஹி[2] ந வியதயந்தியேதே புருஷம் புருஷர்ஷப![4]
சமதுக்க[3] சுகம்[2] தீரம்[4] ஸோ அம்ருதத்வாய கல்பதே"
கீதை.

இ—ள்.

காண்டீவனிடம் கண்ணன் கழறுகிறார் — வீர அருஜுன! யாரை இந்த மாத்ரை, ஸ்பர்சம், சீதம், உஷ்ணம், இன்பம் துன்பம் இவையெல்லாம் கஷ்டத்தைச் செய்கிறதில்லையோ, யார் இன்ப துன்பங்களில் சமமாயிருக்கிறாரோ, அவர் வீரர் எனப்படுவர். அவர் அழியாத வெற்றியைப் பெறுகிறார். அழகுள்ள பெண்ணும், உயரிய உணவும் முன்னேயிருந்தாலும், சித்தத்தில் அவா எழுமானால் அவன் உயர்ந்தவனாகான். யாருடைய சித்தத்தில் இவையெல்லாம் எதிரில் இருந்தும் இச்சை யெழவில்லையோ அவன் தீரன்—வீரன்.

பகைவன் முன்னே நிற்கிறான். ஆனால் கோபம் வரவில்லை. பொருள் இருக்கிறது, உலோபமில்லை.

இவ்வாறு காரணம் இருந்தும் காரியம் நிகழாமல் இருக்குமானால் அவன் வீரன் காரியம் — விகாரம். எவனை சம்சார போகங்கள் தன்வயமாக இழுக்கவில்லையோ அவன் வீரபுருஷன். உலகில் உள்ள போகங்கள் உன்னது மனதைத் தன்வயமாக இழுத்து விட்டால் அப்பொழுது உனது மனம் பரமாத்மாவில் இருக்க மாட்டாது. நினைக்கவும் மாட்டாது. இறைவனை நினை அல்லது உலகத்தைநினை. இரண்டையும் நினைக்க இயலாது. உலகம் உன்னை அதிகமாக இழுக்கு மானால், அதிலிருந்து விலகமுயலு. முயலுதல் — முயற்சி பண்ணுதல். விஷய இச்சை மிகுதியாகுமானால், அவை களைத் திரட்ட வேண்டும் என்னும் எண்ணம் பாசிபோல் படரும். எண்ணிப்பார். நீ தேடுகின்ற திரவியம் இன்றைக் காகவா? அல்லது பத்து வருஷத்திற்குப் பின்னால் செலவிடு வதற்காகவா? சிந்தனை பண்ணிப்பார். அன்றைக்காக இன்றே பொருளைத்தேட விரும்பினால் உனக்குத் தைரிய மில்லை.

எந்த மகாத்மா இமயமலையில் வசிக்கிறாரோ, அவர் ரிஷிகேசம் வந்தாலும் அவருக்கு இங்கு உள்ள வெப்பந் தாங்க முடியவில்லை. நமக்கு அங்குள்ள சீதம் தாங்க இயல வில்லை. அவர் குளிரைப் பொறுக்கும் வலிமையுடையவர், நாம் வெப்பத்தைத் தாங்கும் வலிமையுடையவர்கள். இதனால் தத்வஞானம் அவருக்கு அதிகம், நமக்குக் குறைவு என்று கூற இயலாது. ஞானத்தில் சிறிது, பெரிது, குறைவு, நிறைவு என்பன இல்லை. சிறிய ஞானம் அக்ஞானம். அகண்ட ஞானம் எங்கும் ஒரே படித்தாக இருக்கிறது.

சம்சாரி புருஷன் பதி. பத்னி, புத்ரன், தலைவன் இவர் களால் வரும் இன்ப துன்பங்களைப் பொறுப்பதைப் போல் நாம் பொறுத்துக் கொண்டால் சித்தனாகி விடுவோம். நாம்—

துறவிகள். ஆனல் சம்சாரி மக்கள் உலக இன்பத்தைத் துய்க்குப் பொருட்டுப் பொறுத்துக் கொள்கிருர்கள், சாதுக் கள் ஆன்மாவையடையும் நிமித்தம் பொறுத்துக் கொள் கிருர்கள்.

4 3

''தமேவ தீரோ விக்ஞாய பிரக்ஞாம் குர்வீத பிராஹ்மண:''

வீர மனிதன்அந்த ஆன்மாவை யறிந்து அதில் புத்தியை உறுதிபடவைக்கிருன். இதற்கு நிரம்பப் படிக்க வேண்டுமென்பதில்லை. ''நாநுத்யாயேத் பஹூந் சப்தான் வாசோ விக்லாபநம் ஹி தத்''

இ—ள்,

நிரம்பிய கல்வி வேண்டுவதில்லை. ஏனெனின், இதில் மூச்சும் வாக்கும் பயனற்றுப் போகின்றன. இவ்விஷயத்தில் விவேகம் அவசியம்—

கோஹம் கஸ்மிந் நிதம் ஜாதம் கோ அஸ்ய கர்த்தா சவித்யதே.

இ—ள்

நான் யார்? இவ்வுலகம் எங்கிருந்து வந்தது? இதைச் செய்தவன் யார்? இவ்வாறு விசாரிக்கும் பொழுது வெளியில் உள்ள இன்ப துன்பம் இன்னல் செய்ய மாட்டாது. விஷயங்கள் எவனுடைய சித்தத்தை தன் வயமாக இழுக்கிறதில்லையோ,எவன்அது வயமாகிறதில்லையோ அவனே வீரனுவான். அவ்வீரன் அழிவற்ற ஜகத் காரண பிரஹ்மத்தைப் பார்க்கிருன். பரிபஸ்யந்தி—பரித: பஸ்யந்தி—எங்கும், யாவுமாய்ப் பார்க்கிருன். விக்ஞாதே பரமாத்மநி—ஆத்மாவைப் பரமாத்மாக அறிந்த பின்னர், ''யத்ர யத்ர மநோ யாதி தத்ர தத்ர சமாதய:'' ஞானிகளுக்குத் தனித்து சமாதிகூட வேண்டுவதில்லை. அவர்கள் மனம் எங்கு சென்ருலும், அங்கு சமாதி தான்.

பரிபஸ்யந்தி — இதில் விவர்த்த ரூபகிரியை எங்கு மூல (தாது)ப்பகுதி மாறுகின்றதோ அங்கு (வினைகள்) கிரியை விவர்த்தமாய்விடும். பஸ்யந்தி—இதற்குப் பொருள் எல்லாம் பரமாத்மா. மூலதாது திருஸ்தர்ஸநே, கிரியை — பஸ்யந்தி. இதனுல் எல்லாம் விவர்த்த ரூபம்: கண்ணில் மஞ்சக்காமாலை வந்தால் காணும் பொருளெல்லாம் மஞ்ச ளாகக் காணப்படும், அதுபோல் (கருத்தில்) ஞானக் கண்ணில் குற்றம் வருமாளுல் உலகந் தெரியும், பரமாத்மா தெரியாது.

திருஷ்டிக்குப் பொருள்—ஞானம்: அது தேசத்தையும் விளக்குகின்றது. காலம், பொருள் எல்லாவற்றையும் இனிது விளக்குகின்றது. இதனுல் அது மூன்றையும் கடந்து நிற்கிறது. ஞானம் அவிநாசி; அவிநாசி யென்றதால் காலங் கடந்தது. பரிபூரணம்—தேசங் கடந்தது. வஸ்து கடந்தது என்றதால் அத்விதீயம் என்பது பொருள். ஞானம் சேதன வடிவம். இதில் போக்குவரத்து இல்லை.

ஞானத்திற்கு விஷயம் ஞானமாகாது. ஞேயம் ஞானத்திற்கு விஷயமாகும். ஞானம் ஒருபோதும் ஞேய மாகாது, ஜடமுமாகாது. அளவுக்குள் அமையாது. ஞானத் திற்கு அன்னியமாக வேறு பொருள் இல்லை. அங்ஙனம் இருக்க எதை விளக்குவது? ஞானமே ஞேய வடிவமாகத் தோன்றுகிறது. ஞானம் உலாவுவது எங்ஙனம் தெரியுமா? தெரிய விரும்பு. இவ்வுலகம் நமக்கு எப்படித் தோற்றுகிறது? நமது இதயத்தின் ஞானம் நேத்ர வாயிலாகப் புத்தகம் வரை செல்கின்றது. அங்கு அந்த எழுத்தோடு முட்டி திரும்பும் போது அதைப் படிக்கத் துவங்கினேம். இதுதான் ஞானம் உலாவுவது. இது பழைய காலத்தின் முறை.

இன்றைக்குள்ள விக்ஞானிகளும், வேதாந்திகளும் ஞானம் நேத்ர வாயிலாகப் புத்தகம் வரை செல்வதில்லை

யென்று செப்புகின்றனர். உருவந்தான் நேத்ர சமீபம் வருகின்றது என்கின்றனர். எழுத்தினுடைய நிழல் நமது கண்முன் வருகின்றது, அதை நாம் படிக்கிறோம். இதயத்தில் தான் வாசனையிருக்கிறது. இன்ன இன்ன சமஸ்காரம் இன்ன இன்ன வடிவத்தையடைகிறது என்னும் தன்மை யும் மனதில் இருக்கிறது. விஷயம் இந்திரியம்வரை வருகிறது, பொறிகள் விஷயதேசத்திற்குச் செல்வதில்லை. ஐந்து விஷயங்களும் ஐம் பொறிகளிடஞ் செல்கின்றன.

ஞானம் எப்பொழுது உடலோடு பற்று வைக்கிறதோ, அப்பொழுது பொறிகளோடு புணரும் விஷயங்களைப் படம் பிடிக்கத் துவக்குகின்றது. அதனால் அது ஞாதாவாகின்றது. அது — ஞானம். ஞேயமும் அதுதான். ஞானத்தில் தேசமில்லை, காலமில்லை, வஸ்துவில்லை. இந்நிலையில் உள்ள பரிபூர்ண ஞானத்தை வெளியில் சிரவணம் பண்ண வேண்டு வதில்லை.

ஞானம் இதயத்தில் இருக்கும் பொழுது அது அஹம் எனப்படும். வெளியே செல்லும் போது ஞேயப் பொருளா கின்றது. ஞேயம் — கடம், படம், வீடு, வாசல். ஞானம் விஷயமாக மாறும்போது ஞேய ரூபமாகத்தான் மாறும்.

''அநந்யாஸ்சிந்த யந்தோமாம் யேஜநா: பர்யுபாசதே'' கீதை. கீதையில் பகவான் — ''பர்யுபாசதே'' என்கின்றார். இங்கு பரிபஸ்யந்தியென்று சுருதி சொல்கின்றது. இறைவனை அநுபவிக்க வேண்டுமென்று ஈரிடத்திலும் இயம்பியிருக் கிறது. பரிபஸ்யந்தியின் கருத்து ஞானி புருஷன் பூதயோ நியைக் காரிய காரணம் இரண்டையும் விட்டுவிட்டு கேவலம் பிரஹ்ம ரூபமாகப் பார்க்கிறான்.

இம் மாதிரி ஆன்ம சாக்ஷாத்காரஞ் செய்து தருமத்தைக் காத்து வந்தோமானால், அது நமது அமைதிக்குத் துணை புரிகின்றது. ஆன்மாவை யறியாமல் தருமத்தைச் செய்தோமானல் அது அசாந்தியைத் தருகின்றது. எது செய்யத் தக்கது, எது செய்யத்தகாதது என்று சிந்திக்க வேண்டும்.

சாஸ்த்ர விதாநோக்தம் கர்மகர்த்து மிஹார்ஹஸி! கீதை.

இ—ள்.

எறும்பு முதல் யானை ஈராக எல்லா உயிர்களும் வினைகளைச் செய்கின்றன. மனித இனமும் வினைகளைச் செய்கின்றன. ஆனால் மற்றைய இனத்திற்கு முக்தியில் அதிகாரம் உண்டு, சாஸ்திரத்தில் அதிகாரமில்லை. மற்றைய இனம் மனதில் வந்ததைச் செய்கின்றது. ஆனால் மனித இனம் வழியில் செல்வது போல் வினைகளை நூல் வழியில் சென்று முறைப்படி செய்ய வேண்டும். மனிதனுக்காக வேதத்தில் விதானம் — நெறி செய்யப்பெற்றிருக்கிறது. அருஜுனா! அவ்வழியில் அறங்களைச் செய்வது மனிதனின் கடமையாகும் என்பது கீதையின் பொருள்.

அதர்மவந்தோஜீவா தர்மாசரணே ந பிரவர்த்தந்தே அதர்மாச்சரணே பிரவர்த்தந்தே !!

இ—ள்.

பாவிகள் புண்ணியத்தில் ஈடுபடுவதில்லை, மாறுகப் பாவத்தில் பயமில்லாமல் ஈடுபடுவர். நல்லதைச் செய்தாலும் பலன் கிட்டாவிடத்து அசாந்தியுண்டாகும். கிட்டியவிடத்து அகங்கார முண்டாகும். எனவே கருமம் விவேகத்தோடு செய்ய வேண்டும். நிறைந்த சாந்தி தத்வஞானத்தால் உண்டாகும்.

1 2 4 2
த்நே சுககலாகாசித் தர்மேது பரமம் சுகம் !

இ—ள்.

பொருளில் இன்பம் முள்ளின் தேன்போல, தருமத்தில் அழிவில் இன்பம். ஈண்டு தருமம் என்னுஞ் சொல் ஞானத்தைக் குறிக்கும். ஞானம் பரமம் சுகம் என்பது ஞானியின் கருத்து. முள்ளின் நுனியளவில் உள்ள இன்பத்தைத் தருகின்ற பொருளைத் தேடுவதிலும், அதைக் காப்பதிலும், காத்ததைச் செலவிடுவதிலும் வரும் தொல்லைக்கு எல்லையில்லை. போகத்தில் இன்பம் என்று எண்ணினால், அதுவும் துய்ரத்தில் கொண்டு விடுகின்றது. அங்ஙனம் ஏன்? அதன் தன்மையை அறிகிறதில்லை. நமக்கு எங்கே போக வேண்டும், எதையடைய வேண்டும் என்று தெரிகிறதில்லை. நாம் எங்கேயிருக்கிறோமோ அதுவும், எங்கே போகிறோமோ அதுவும் ஆன்மாதான். இரண்டும் ஆன்மாதான். வண்டி வாகனமல்ல. வாகனம் இத்தேகம். கண், கை, கால், காது இவையெல்லாம் இத்தேகமென்கின்ற வாகனத்திற்கு உறுப்புக்கள். உணவு உண்டபின் அது செமித்து வலிமையுண்டாகிறது. இக்காயம் என்கிற (மோட்டார்) பஸ்ஸுக்குப் போகவேண்டிய இடம் பிரஹ்மம். இவ்வுடல் நமதுமன்று, ஆன்மாவும் அன்று. எங்கும் போக வேண்டுமானால் காரில் அமருங்கள். போக வேண்டாமென்றால் காரில் இருப்பதனால் என்பயன்? சரீரம் இறைவன் வரை நம்மைச் சேர்ப்பித்தால் சரீரம் பயனுள்ளதாகும்.

இவ்விஷயத்தை வேறு விதமாகத்தெரிந்து கொள். பிரகாசம் ஒரு பொருள். சூரியன், சந்திரன், அக்னி முதலிய பொருள் அதற்கு மண்டலம். மண்டலம்—இடம். அவ்வொளி ஒரு இடத்திற்குச் செல்லும் போது, ஒரு அளவுதான் விளக்குகின்றது. பல்பு எத்தனை வலிமை வாய்ந்ததோ அத்தனை பிரகாசத்தைக் கொடுக்கும், அது போல் சூரியன் பாரதத்தில் உதயமாகும் போது அமெரிக்

காவில் இரவு ஆகிறது. ஏனெனின், பிரகாசம் சூரிய மண்டலத்தின் வாயிலாக விளங்குகிறது.

சைதன்யம் ஒரு ஒப்பற்றதத்வம். அது நமது இதய மண்டலத்தை யேற்றுக் கொண்டு அதில் என்ன வாசனை யிருக்கிறதோ, அதுபோல் சேதனம் விளங்கு கின்றது. இதய மண்டலத்தை விட்டு விட்டால் அநந்த கோடி பிரம்மாண்டத்திற்கு அது பிரகாசமாகும். எங்ஙனம் பல்பு எந்தநிறத்தில் இருக்குமோ அந்தநிறத்தில் அதிலுள்ள ஒளியும் மிளிரும். அங்ஙனம் ஞானரூப ஒளியும் மனதில் உள்ள வாசனை மாதிரித் தோற்றும். அனந்த கோடி பிரம் மாண்டத்தின் தோற்றத்தையும், நிலையையும், ஒடுக்கத் தையும் சேதனம் விளக்குகின்றது. ஞான ஒளியில் பிரம் மாண்டம் வந்ததினுலும், போனதினுலும் மகத்வமில்லை.

வேதாந்த பாஷையில் எப்பொழுது சேதனம் அகம் விருத்தியில் ஏறுகின்றதோ, அப்பொழுது அகம் விருத்தி யையும், சேதனத்தையும் ஒன்றென்று உணர்கின்றனர் உலகத்தவர்கள். இது பரஸ்பர அத்யாசம் எனப்படும். அத்யாசம்—மயக்கம். இது ஒரு மண்டலத்தில் இருப்ப தாகும். மண்டலம் — அளவு. இவ்வளவுக்குட் பட்ட சேதனத்தின் வழியாக இவ்வுலகத்தை யறிவோமாஞல், குறைந்த அளவைத்தான் அறிவோம். இருபொருள் இல்லாமல் பேதம் உண்டாகமாட்டாது. பேதஞான முண்டாவது அஞ்ஞானிகளுக்கு, ஞானிக்கல்ல.

இதயத்தில் இருந்து கொண்டு சைதன்யம் உலகத்தை விளக்கும் போது, அது குறைந்ததேசத்திற்குள் வருகிறது. அது—சேதனம் இதயம் குறைந்த இடம். சேதனம் இயல்பாகத் தூய்மையாக யிருந்தாலும் இதயத்தில் இருக்கும் வாசனையோடு கலந்து அதுவும் மலினம் உறுவது

போல் காணப்படுகிறது. இந்ததேகம் என்னும் காரிலிருந்து இறங்கி உலகத்தையுற்று நோக்குவோமானால் சேதனம் எங்கும் பிரகாசமாய் நிறைந்து, சிறந்து, உயர்ந்து திகழும். எல்லைக்குள் இலங்கியது எல்லையற்று இலங்கும் அகண்ட சைதன்யத்தின் திருஷ்டியில் சிருஷ்டியேயில்லை.

ஒரு கிராமத்தில் ஒருவனிருந்தான். அவன் உண்மையான நீதிமானாக இருந்தான். எல்லாருக்கும் பிரியனாகவுமிருந்தான். காலம் யாரை விட்டது? அவன் இறந்துபோனான் இறந்தது என்னது? உடலா, உயிரா? உயிர்—ஆன்மா. உடல் இறந்தது. ஆனால் அவனது நியாயம், நேர்மை, வாய்மை, தூய்மை, நீதி, நெறி யிவை யிறக்கவில்லை. இவை இவனோடு செல்லும். இவன் முக்தனாகிவிட்டால் அவையும் பிரஹ்மத்தில் ஒடுங்கிவிடும். ஒருதேகமழிவதால் மண்டலமுழுவதும் அழிகிறதில்லை. அனைவர் அவித்தையும் அழியுங்கால் அகில மண்டலமும் அழிந்துபோகும். மண்டலம் என்னது? ஐம்பூதத்தின் கூட்டம். ஞானத்தால் அவித்தை நீங்கிய பின்னர் குறைவிலிருந்த நிறைவு புத்தி நீங்கிவிடும்.

ஆத்மாவிற்கு வடிவம் தத்வஞானம். வருவது போவது ஆன்மாவின் தொழிலல்ல. அத்தொழில் காயத்திற்கு. காயம் வரும் போகும்.

போக்கும் வரவும் புணர்வுமிலா புண்ணியனே. திருவாசகம். இதன் பொருள்—பிறந்து, இறந்து, அலையும் பொல்லா பவப் புணரியில் திரியாத புண்ணிய சீலனேயென்று திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான் அணிவாசகமாக அருளியிருக்கிறார். இதனானும் ஆன்மாவிற்குப் போக்குவரத்தில்லையென்பது புலனாம். ஒரு பொருள் (தத்வம்) எல்லா பொருளையும் அறிகிறது. அதை எதும் அறிகிறதில்லை. மற்றொன்றால்

அறியுந் தன்மை அதற்கில்லை. ''யத்ஸ்வயம் அந்யாந் வ்யநக்தி ந அந்யேந வ்யஜ்யதே தத் பிரஹ்ம'' ச. பாஷ்யம்.

இ—ள்.

எது தானுக எல்லாவற்றையும் விளக்குகின்றதோ, பிறவற்றுல் விளங்குகிறதில்லையோ அது ஆன்மா என்பது பாஷ்யத்தின் கருத்து.

அஞ்ஞானத்தின் நிவிருத்திதான் ஞானம். ஞாநோத்பத்திக்குப் பெயர் ஞானமன்று. நான் அத்விதீய ஞான வடிவன் என்பதுதான் ஞானம். இந்த அநுபூதியின் பெயர் ஞானமாகும்.

நிவிர்த்திராத்ம மோஹஸ்ய ஞாதத்வேந உபலக்ஷித:

இ—ள்.

தனது மோகத்தை நீக்குவதுதான் ஞானம். இருளை யகற்றுவது தானே இனிய ஆதவன். மரணம் ஆத்மாவிற்கு மில்லை, பஞ்ச பூதத்திற்குமில்லை. அந்தக் கரணத்திற்கு மில்லை. பின்னை? தேக அத்யாசத்தால் மரணம் இல்லாதிருந்தும் இருப்பதுபோலத் தோற்றுகிறது. உடலில் பற்று இல்லாது போனுல் மரணம் ஒரு பொருளாகத் தோற்ருது. ஒரு கட்டையை யெரித்துச் சாம்பலாக்கினுல் கட்டையளவுக்குச் சாம்பல் எடையிராது. அதிலுள்ள தண்ணீர் அம்சம் எரிந்து வியர்வையாகிப் பறந்து போயிற்று. ஐம்பூதத்தில் ஒரு கணமும் குறைகிறதில்லை.

உலகத்தில் எப்பொருளும் உண்மையாக இருக்கட்டும், ஆனுல் மரணம் உண்மையில்லை. தன்னைத் தூல உடல், அல்லது சூக்கும உடல், அல்லது காரண உடல் என்று எண்ணினுலும் சரி, அல்லது தன்னை பிரஹ்மம் என்று எண்ணினுலும் சரி, மரணம் எதற்குமில்லை. மரணத்தினுல் வரும் துயரம் காயத்தில் வைக்கின்ற பற்று மூலமாக வருகிறது.

எனவே வீர புருஷன் மரணத்தை உண்மையென்று உணர்கிறதில்லை. அவன் உலகிற்கு முன்னவனையே பார்க்கிருன். காரண வடிவமாகப் பார்க்கிருன். பாகவதத்தில் ஒரு இதிகாசம் வருகிறது. எந்த நாளில் 'பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் வைகுண்டத்திற்குப் புறப்பட்டாரோ, எந்தக் கணத்தில் அவருடைய திருவடி தரையிலிருந்து கிளம்பியதோ, அப்பொழுது கலியுகம் வர ஆரம்பித்தது.

இதற்கிடையில் அவையில் ஒருவர் எழுந்து ஒரு கேள்வியை யெழுப்பிஞர். பகவான் கீதையில் சொன்ஞரே, என்ன சொன்ஞர்? நான் சாதுக்களைக் காக்கவும், தீயவர்களை யழிக்கவும், தருமத்தை இரக்ஷிக்கவும், தருமத்தை நிலை நிறுத்தும் பொருட்டும் அதர்மத்தை நீக்கும் நிமித்தமாகவும் அவனியில் அவதரிப்பேன் என்ருர். அங்ஙனமாயின் கலியை ஆக்ரமணம் பண்ணவிட்டுச் செல்வது முறைதாஞ வென்று அவர் வினவிஞர். அவர் — இடையில் எழுந்தவர்.

அவர் அவ்வாறு கேட்கும் பொழுது மற்றவர்கள் அவரை அமரும்படி செய்து விட்டார்கள். எதஞலோ வெனின், பாகவதசப்தாகஞ் செய்யும் பொழுது சங்கை, சமாதானஞ் செய்வதற்குச் சமயமில்லை. ஆஞல் தெரிய வேண்டிய விஷயமென்னை? கலியுகம் வரும் போது வந்து தானே தீரும். பகவான் இனிமேல்தான் இரக்ஷிக்கப் போகிருரா? இப்பொழுது இரக்ஷிக்கிறதில்லையா, இதயத் திலிருந்து புரப்பவனைப் புரிந்து கொள்ள வீரம் வேண்டும் புரப்பவன்—காப்பவன் தீரா : பரிபஸ்யந்தி. ம. 6 |

7 — வது மந்திரம்.

தொடர்ச்சி.

அக்ஷரதத்வத்தை ஜகத்திற்குக் காரணமெனல்.

யத்பூத யோநிம்பரிபஸ்யந்திரதீரா : என்று தெளிவு படுத்

தியிருக்கிறது. ஈண்டு அவ்வக்ஷர ஜகத்திற்கு எவ்வாறு காரணம் என்று இயம்பப்படுகிறது. சம்சாரிகளின் முந்நிலை-யில் பல பிரச்னைகள் எழுகின்றன. பொருளை எப்படித் தேடு-வது, குடும்பத்தை எங்ஙனம் பாலனஞ் செய்வது, பெரிய பதவி. பெரிய புகழ், எல்லோரும் நம்மைப் பெரிதாக எவ்வாறு கருதுவார்கள் என்ற பிரச்னை யெத்தனையோ இருக்கின்றன. இங்ஙனம் இருக்க, நான்யார், சம்சாரம் என்னது, இதை யிறைவன் எவ்வாறு செய்தார், என்ற கேள்வி அவர்கள் உள்ளத்தில் எப்படி யெழும், இவ்விஷயம் எல்லாம் அறிவாளி கள் உள்ளத்தில் தோன்றுகின்ற விஷயம்

ஒரு எதிரி—பிரஹ்ம ந காரணம் சகாயசூந்யத்வாத்.

இ—ள்

பிரஹ்மத்திற்குச் சகாயமில்லாததால் ஜகத்திற்குக் காரணம் ஆகமுடியாது என்கின்முன். அவன்தரும் தருக்கம்—பிரஹ்மம் உலகிற்குக்காரணமாகாது, ஏனெனின், அதற்கு ஒருசகாயமும் இல்லை. சகாயம்—உதவி. குயவன் குடம் செய்கிருன். அவனுக்கு அநேகசகாயந் தேவைப் படுகின்றன. மண், சக்கரம், தண்ணீர், நெருப்பு முதலிய துணைகாரணம் அவசியம் ஆகின்றது. ஆன்மாவிடத்தில் ஒரு சகாயகாரணமும் இல்லை. அங்ஙனம் இருக்க உலகத்தை யெவ்வாறு உண்டுபண்ண இயலும்? இயலா தென்பது எதிரியின் வாதம்.

இதற்குப் பதிலாக இன்ன விதத்தில் இதுகாரணம் என்று ஈண்டு மொழியப்படுகிறது. பரமாத்மா ஜகத்திற்கு அபின்ன நிமித்தகாரணம் என்று இங்கு அருளப் பெறு கிறது.

7—வது மந்திரம்.

2 4 3 1
யதோர்ண நாபி : சிருஜதே கருஹ்ணதேச
2 2 4 4
யதா பிருதிவ்யாம் ஓஷதய : ஸம்பவந்தி !
2
யதா சத: புருஷாத் கேசலோமாநி
2 4
ததா அக்ஷராத் சம்பவதீஹ விஸ்வம் !! 7

இ—ள்

எவ்வாறு புழுவலையை உண்டுபண்ணுகிறதோ, பின்பு விழுங்கி விடுகிறதோ, எங்ஙனம் நிலத்திலிருந்து வனஸ்பதிகள் உண்டாகின்றனவோ அவ்வாறு அக்ஷரவடிவ ஆன்மாவிலிருந்து இவ்வுலகம் உண்டாகிறது.

ஊர்ணநாபி : யதா — ஊர்ண — ஊன் — உன்னி. எத்னுடைய நாபியில் ஊன்—கம்பளி நூல் இருக்கிறதோ அப்புழு ஊர்ணநாபி யெனப்படும். ஊர்ணநாபி யென்னும் சொல்லுக்குப் பொருள் ஒருவிதபுழு. பறவை உலர்ந்த திரணங்களைக் கொண்டு கூடுகளைக்கட்டுகின்றன, நரி, எலி, பூமியில் குழிதோண்டி வாசம் பண்ணுகின்றன. ஆனல் இப் புழு தனது மேனியிலிருந்து நூல் நூற்று வலையமைத்து வாழ்கிறது. அது எண்ணினல் தான்இயற்றிய வலையைத் தானே விழுங்கிக் கொள்கிறது.

இந்தத்திருஷ்டாந்தம் எதற்காக? ஒரு உதவியும் இல்லாமல் அற்பப்புழு வலையை யுண்டு பண்ணுகிறது, நினைத்தால் விழுங்குகிறது. குயவன் வெளியிலிருந்து மண்ணைக் கொணர்ந்து, மற்றையசாதனங்களைக் கொண்டு குடத்தைச் செய்கிறன். குடத்திற்கு மண் உபாதான காரணம், தண்டம், சக்கரம், குயவன் நிமித்தகாரணம். புழுவின் விஷயத்தில் உபாதானகாரணமும், நிமித்தக்காரண

மும் புழுவொன்றேயாம். இதுபோல இறைவனும் யாதொரு உதவியின்றித்தானகவே உலகத்தைப் படைக்கிருன். அவன் உலகத்திற்கு அபின்ன நிமித்தக் காரணன்.

மீண்டும் சங்கை, என்னசங்கை? புழு ஒரே மாதிரி வலையையுண்டு பண்ணுகிறது, இறைவன் உலகத்தை யெத்தனை விதமாகவோ படைக்கிருர். மற்ருெருவிதம் புழு வேறு, வலைவேறு. தார்ஷ்ட்டாந்தத்தில் ஜகத் இறைவனுக்கு அபின்னமாக இருக்கிறது. காரியம் வேருகாமல் இருந்தால் காரணமும் வேருகாமல் இருக்கும். தன்னுடைய வடிவம் இன்னென்றுக்குக் காரணமாக முடியாது. யாரும் தனக்குத் தானே பிதாவாக முடியாது. இத்தனை கேள்வியும் எதிரி யின் கேள்வி. இதற்குப்பதில்—யதா பிருதிவ்யாம் ஒஷதய : சம்பவந்தி—எங்ஙனம் பூமியிலிருந்து பலவித செடி, கொடி, மரம், புல், பூண்டு உண்டாகின்றனவோ அங்ஙனம் ஆன்மா விடத்தில் அநேக விதமான அகிலபொருள்களும் உண்டா கின்றன.

பூமியில் தோன்றும் உணவுப்பொருள்கள் அனைத்தும் ஓஷதி யெனப்படும். ''ஓஷதய: பலபாகாந்தா :!! ஒருமுறை பலனையளித்து விட்டு எதுபட்டுப் போகுமோ அது ஓஷதி யெனப்படும். நிலம் ஒன்று, அதில் எழும் ஓஷதிகள் பல. எல்லாப்புல்களும் பூமியிலிருந்து உதிக்கின்றன. காய்ந்து மண்ணில் மடிகின்றன. எல்லா ஓஷதிகளும் மண்வடிவமே. ஒரு பஞ்ச பூதத்தில் காரிய காரண வியவகாரம் உண்டா கிறது. இவ்வாறு ஆன்மாவிலிருந்து அகில உலகமும் உதிக்கின்றன. அவை ஆன்மாவிற்கு அந்நியமில்லை. அபின்னமாயிருக்கிறது.

முன்னர் மொழிந்த புழுதிருஷ்ட்டாந்தத்தால் இறைவனுக்கு ஒரு சகாயமில்லாமலே உலகத்தை ஆக்க வலிமை யிருக்கிறதென்றும், வேறு உதவி தேவையில்லை யென்றும், இரண்டாவது திருஷ்ட்டாந்தத்தால் நிலத்தி லிருந்து வேறு வேறு ஓஷதிகள் தோன்றுவது போல் பிரஹ்மத்திலிருந்து பல வடிவ ஜகத்து உண்டாகக் கூடு மென்றும் ஒரு வஸ்துவில் காரிய காரண பாவம் பொருந்தும் என்றும் புகலப் பெற்றிருக்கிறது. மண்ணிலிருந்து குடமும், பொன்னிலிருந்து நகையும் உண்டான போதினும், காரிய காரணபாவம் பொருந்தும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

இப்பொழுது மூன்ருவது சங்கை — ஓஷதி — ஜடப் பொருள், அதற்குக் காரணமான பூமியும் ஜடம். அது போல சிருஷ்டி ஜடமானதால் அதற்கு நிமித்தமான பிரஹ்மமும் ஜடமா? ஜகத் ந பிரஹ்ம உபாதாநம் தத் விலக்ஷணத்வாத்,, சம்சாரத்திற்கு (உபாதானம்) காரணம் பிரஹ்மம் ஆகாது. பிரஹ்மத்திற்கு வேருனதால். காரியம் தனது காரணத்திற்கு அன்னியம் ஆகாது. தங்கத்தால் செய்த நகைகள் தங்கத் திற்கு வேருகாதது போல. மண்ணினுல் வனைந்த குடம் மண்ணிற்கு வேருகாததுபோல. ஆனுல் பரமாத்மா வையகத்திற்கு வேருக இருக்கிருர், அவர் புவிக்குக் காரணம் எங்ஙனம் ஆக இயலும் என்பது எதிரியின் வாதம்.

மேலும் ஈசுவரன் சேதனன், திருஷ்ட்டா, அவனிடத்தில் சிருஷ்டி நிகழ்வதற்கிடமில்லை. ஜன்மமும், மரணமும் இல்லை ஆனுல் உலகம் ஜடம், திருஸ்யம், பிறப்பு இறப்புடையது. சிலகுழந்தைகளுக்கு அதன் குலத்தின் சம்ஸ்காரம் வரத் தான் செய்கிறது. ஒருகிராமத்தில் ஒரு பிராம்மணி விதவை யாளுள். அப்பொழுது அவளுக்கு ஒரு பாலகன் இருந்தான். அவனுக்கு வயது ஏழாகியிருந்தது. அவன் அட்டூழியம்

பண்ண ஆரம்பித்தான். கைகளில் படைகளை வைத்திருப்பான். அயலாத்துக் குழந்தைகளின் காதையறுத்து விடுவது, உறங்கும் பையன் ரோமத்தைக் கத்திரிக் கோலால் வெட்டி விடுவது, முதலிய சேஷ்ட்டைகளைச் செய்து வந்தான். இவன் செய்கின்ற கொடுமையைக்கண்ட பெரியோர்கள் ஒன்றுகூடி அவன்தாயை அழைத்து — அம்மா! உன் மைந்தன் விப்ரகுமாரனாக இருந்தும் இவ்வளவு கொடூர வினைகளைச் செய்கிறானே அதற்குக் காரணம் என்னவென்றனர்.

அவள் சிறிது நாணமுற்று ஐயா! என்செய்வேன்யான். விதியின் வலியை வெல்லுவர்யார்? எனது நாயகன் என்னை விட்டு இறந்து போனார். அப்பொழுது ஒரு பாவி கசாயி என்னை பலவந்த படுத்தினான். இவன் அவனுக்குப் பிறந்தவன் என்றாள். இதனால் குலத்தின் சமஸ்காரம் குழந்தைக்கு வரும் என்பது தெள்ளிவாயிற்று. ஆகையால் இறைவனிடத்திலிருந்து இவ்வுலகம் உதிக்குமானால் இவ்வளவு வேற்றுமை ஏன்? இதற்குப்பதில்—''யதாசத: புருஷாத் கேசலோமானி''.

இ—ள்.

உயிருள்ள மனிதனிடத்திலிருந்து அவன் ரோமமும், நகமும் உண்டாகின்றன. மனிதன் உயிருடன் இருக்கிறான், ரோமமும், நகமும் செத்திருக்கின்றன.

இவ்வாறு சில இடங்களில் உபாதானத்திற்கு வேறாகவும் சிருஷ்டி காணப்படுகின்றது. உடல் ஒன்று. ரோமமும், நகமும் பல. உடல் சிகப்பு, ரோமம் கருப்பு. உடல் உயிருடன் இருக்கிறது, ரோமம் உயிரற்றிருக்கிறது. இவ்வாறு ஆன்மா அவிநாசி, அதிலிருந்து உதிக்கும் ஜகத்து விநாசி. மற்றும் பரமாத்மாவிற்குத்தலைரோமம், பரமாத்மா நிர்விகார சேதனம், ஜகத், விகாரி, ஜடம்.

எந்த வஸ்துவை உண்டுபண்ணவேண்டுமானாலும் பல காரணங்கள் தேவைப்படுகின்றன. எதிலிருந்து எது உண்டாகிறதோ அது உபாதான்காரணம் எனப்படும். கடத்திற்கு உபாதானம் மண்ணு. நகைக்கு உபாதானம் தங்கம். சோற்றுக்கு உபாதானம் அரிசி. நிமித்தகாரணம் பொருளைச்செய்பவன். மற்றவை சாதனம் இவ்வுலகத்தை யுண்டுபண்ணும் விஷயத்தில் இறைவன் உபாதானகாரணம். உபாதானகாரணம் மட்டுமல்ல, நிமித்தக் காரணமும் அவன் தான். "பார்ப்பவனும் அவனே, பார்க்க வைப்பவனும் அவனே; பருகுபவனும் அவனே. பானம் செய்யவைப்பவ னும் அவனே. தேடுபவனும் அவனே. தேட வைப்பவனும் அவனே.

சங்கராசாரியர், சைவாசாரியர், சாக்தாசாரியர், வைஷ்ணவாசாரியர் முதலிய எல்லோரும் ஈசுவரனை ஜகத் திற்கு அபின்ன நிமித்த உபாதான காரணமாக ஒப்புக் கொண்டிருக்கின்றனர். ததா அக்ஷராத் சம்பவதீஹ விஸ்வம். உலகம் அந்த அக்ஷரவடிவ ஆன்மாவிலிருந்து உண்டாயிருக் கின்றது. இது சுருதி வாக்கியம். இவ்வாக்கியம் எல்லா ருக்கும் சம்மதம். மதபேதம்—அக்ஷர ஆன்மா புவிக்கு எப்படிக்காரணம் என்பதில்தான். சிலர் ஆன்மா மாறுதலை யடைந்து ஜகத்திற்குக் காரணம் என்கின்றனர். சிலர்—(விவர்த்த) தோற்ற மாத்திரம் என்று ஒப்புக்கொள்கின்றனர்.

அக்ஷரத்திலிருந்து வையகம் உதித்திருக்கிறது என்ற தால் இக்கேள்வி எழுகின்றது. பிரஹ்மத்திலிருந்து புவி எம்முறையாக உதிக்கிறது? கனவில் ஞாலம் காணப் படுகிறதே, அதன் முறை யென்னை? அது ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும், முறையாக உண்டாயிருக் கின்றனவா என்பது கேள்வி. எது அளவுக்குள் வருமோ அது பரிச்சின்னம். எது பரிச்சின்னமோ அது ஜடம். ஒரு பொருள் வியாபகமாயிருந்து கொண்டு மற்றொன்றிலிருந்து வேறாக இருக்கும் என்பது பொருந்தாது. பிரஹ்மத்தை

ஆத்மாவென்று அறிவாயானல், அப்பொழுது சிருஷ்டி யுண்மையும் இன்மையும் ஆம் என்பது இனிது புலனும்.

பிரயாகையில் ஒரு மகாத்மா கும்பமேளாவிற்கு வந்திருந்தார். அவர்கையில் பலபுத்தகங்கள் இருந்தன. அவ்வமயம் அங்கொரு இளைஞன் வந்து அவரை அணுகி சுவாமின்! இது என்னபுத்தகம் என்று வினவினன். அவர் அப்பா! தெய்வ மொழியில் எழுதப்பெற்றபுத்தகம், இலவசமாக அன்பர்களுக்குக் கொடுக்கிறேன் என்ருர். இளைஞன்—சுவாமின்! எனக்கொரு புத்தகங் கொடுங்களே னென்ருன். அவர்—அப்பா! யாருக்கு இலவசமாகக் கொடுத்தாலும் உனக்குப் பணம் வாங்கித்தான் கொடுப்பேனென்ருர். இளைஞன்—இதோ விலையை வாங்கிக் கொள்ளுங்கள் என்ருன். அவர்—உன்னிடம் விலையை வாங்கமாட்டேன், பின்னை? என்னிடம் நீ நட்புக்கொள் தருகிறேனென்ருர்.

அவரிருவருக்கும் நட்பு உண்டாயிற்று, சில ஆண்டுகள் கழிந்தன. பின்பொருநாள் பிரயாகை விஸ்வ வித்யாலயத்திற்கு அவர் சென்றிருந்தார். அப்பொழுது அவ்விளைஞன் அவரைக் கண்டான். இருவரும் ஒருவர்க்கொருவர் உரையாடி சென்றகால நினைவை நினைந்தனர். உடனே சுவாமியை தானிருக்கும் அறைக்கு அழைத்துச் சென்ருன். அவன் அவரிடம் தனது கஷ்டத்தைச் சாற்றினன். சிறிது வேதாந்தமும் விளம்பினன். நான் என்னை திருஷ்டா வென்று தெரிந்து கொண்டேன். இவ்வுலகமும், இத்தேகமும் திருஸ்யம், ஆனல் எல்லாவுலகமும் திருஷ்யம், திருஷ்டாவிற்கு அன்னியம், பொய் என்பது எனக்குப் புரியவில்லையென்ருன். மேலும் நான்திருஷ்டா, எல்லாந்திருஸ்யம் என்பது எனக்குத் தெரிகிறது என்று சொன்னன்.

அவர் இதில் கஷ்டம் என்னே? அவன்—சுவாமின்! நான் திருஷ்டாவென்று தெரிந்துகொண்டேன், இவ்வுடலும்,

இவ்வுலகமும் திருஸ்யம் என்றுந் தெரிந்தேன் என்ருன். அன்னமயனல்லன், பிராணமயன் அல்லன், மனோமயன் அல்லன், விக்ஞானமயன் அல்லன். ஆனந்தமயமும் அல்லன் என்று அவன் தெரிந்து கொண்டான். மேலும் தன்னை நன்வு, கனவு, உறக்கமிவைகளுக்கும் வேறு என்று எண்ணினான். இவையெல்லாம் திருஸ்யம்தான். நான் திருஷ்டா. இதில் இன்னும் சிறிது சிந்திக்க வேண்டியதிருக்கிறது. அது என்னை? திருஸ்யம் என்ன தென்பதை எண்ணிப் பார்க்கவேண்டும். இத்திருஸ்யவடிவ பஞ்சகோசம் எங்கிருந்து வந்திருக்கின்றது? என்று தன்னைப்பற்றி யெண்ணினானே ஒழிய தலைவனைப்பற்றி யெண்ணவில்லை. தன்னைப் பற்றி எண்ணுவது துவம்பத விசாரம், தலைவனைப்பற்றியெண்ணுவது தத்பத விசாரம், ஈசுவரனைப்பற்றி நினைக்கவில்லை.

எவன் ஒருவன் தத்பதார்த்தத்தை அன்புடன் நினைக்கவில்லையோ, எவனுக்கு மனத்தூய்மை உண்டாகி பூர்வஜென்மத்தின் வேதாந்த சம்ஸ்க்காரமும் இருக்குமோ அவனுக்கு, தத்பதவிசாரஞ் செய்யாமலே காட்சிகளனைத்தும் திருஸ்யமாகக்காணப்படும், நான் திருஷ்டா என்றவுணர்வு இயல்பாக உண்டாகும். அதனோடு விசாரமும் செய்வானானால் திருஸ்யம் கானல் நீர் போல்தோற்ற மாத்திரமே யென்ற நிச்சய ஞானம் உண்டாகும்.

இது திருஸ்யமில்லை, திருஷ்டி மாத்திரமே. திரவ்யமில்லை. திருக்கு என்று தெரியும். எங்ஙனம் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என பல திசைகள் வெறும் கற்பனை மாத்திரமே; அங்ஙனம், மேல், கீழ், அக்கப் பக்கம் எல்லாம் பெய்ரளவுதான். நல்ல சுபவாசனை யிருக்குமானால் தன்னைத் தவிர அன்னியம் ஒன்றுந் தோற்றமாட்டாது. மனத் தூய்மை இல்லையென்றால் தத்பத விசாரனை அவசியஞ் செய்ய வேண்டும்.

தத்பத விசாரத்தில் இவ்விவேகம் அவசியம் வர வேண்டும். என்னவிவேகம்? எல்லா ஜீவராசிகளின் தேகமும் மண்ணில் இருந்து செய்யப் பெற்றன. மண் நீரிலிருந்தும், நீர் நெருப்பிலிருந்தும், நெருப்பு, காற்றிலிருந்தும், காற்று ஆகாயத்திலிருந்தும், ஆகாயம் அகந்த்த்வத்திலிருந்தும் கிரமமாக வந்திருக்கிறன. இக்கிரமம் இறைவனிடம் முடிவடைகிறது. இம் முறையாக எண்ணிப்பார்ப்பது அநுசந்தானம் எனப்படும். இம்முறையில் என்ன கஷ்டம்? ஒன்றுமில்லையென்பது உறுதி. ''சுசுகம் கருது மவ்யயம்'' கீதை. அறிவதற்கும், அடைவதற்கும் எளிது என்பது தெளிவு.

வேதாந்தத்தை எளிதாகப்புரிந்துகொள்ள வேண்டுமானல் சிருஷ்டி முறையைத் தெரிய வேண்டும். ஒடுக்கத்தை உணர்த்தும் பொருட்டு உற்பத்தி முன் மொழியப் படுகிறது. உபநிடதத்தில் முதற்கண் படைப்பும் பின்னர் லயமும் சொல்லப்படும். வேதாந்த நூல்களில் விசாரசந்த்ரோதயம் என்னும் ஒருநூல். அதில் இம்முறைவருகிறது. கடத்தைப் பார்ப்பவன் எவ்வாறு கடத்திற்கு வேறே, அது போல் உலகத்தையறிபவன் உலகத்திற்கு வேறு என்பது உறுதி. இல்லத்தையறிபவன் இல்லத்திற்கு வேறே, அது போல் நனவு, கனவு, உறக்கம் இவைகளை அறிபவன் இவைகளுக்கு வேறு என்பதில் என்ன சந்தேகம், ஒன்றும் இல்லையென்பது துணிபு.

நமது உடம்பில் உள்ள கை, கால், நாடி, நரம்பு, மாம்சம், தோல் இவையெல்லாம் பஞ்ச பூதத்தின் காரியம். எதுவரை இத்தூல தேகத்தில் நான் என்னும் புத்தியிருக்குமோ அதுவரை இவ்வுடல் அன்னமய கோசம். கரத்தில் நீட்டுதலும், மடக்குதலும், அசையும் சக்தி பிராணமய கோசம். இவைகளை இயக்கி வைக்கும் எண்ணம் மநோமய கோசம். இன்னது இனியது என்னும் தன்மையையுண்டு

பண்ணும் வலிமையுடையது விக்ஞானமயகோசம். அனுபவ பிரதானகோசம் ஆனந்தமயகோசம்.

எப்பொழுது நாம் தேகத்தோடு அபிமானம் வைக்கிறோமோ அப்பொழுது நம் பெயர் அன்னமய புருஷன். பிராணனோடு அபிமானத்தை வைக்கும் போது நமக்கு பிராணமயன் என்று பெயர். மனதில் பற்று வைக்கிறபோது மநோமயன் என்று முறையாக நாமங்கள் வருகின்றன. ஐந்து கோசங்களும் நாம் வசிப்பதற்கு ஐந்து அறைகள். நாம் இவைகளுக்கு வேறு, திருஷ்டா.

பட்டுப்பூச்சி நூல்களை நூற்று அதற்குள் நுழைந்து மடிவது போல, தனது அறியாமையால் பஞ்ச கோசத்தின் காரிய சரீரங்களில் யான்யெனது என்னும் பற்றை வைத்து ஐந்து கோசம் என்னும் கூண்டுக்குள் தலையைக் கொடுத்து மனிதன் மடிகிருன். ஐம்பூதத்தின் காரியமான பஞ்ச கோசத்தை யான் எனதென்பது அறிவுடைமையா? இதை அறியாத மனிதனை அறிவுடையவன் என்று எவ்வாறு உரைப்பது?

ஐந்து பூதங்களும் உனது சத்தையில் தானே விளங்குகின்றன. அவைகளா உன்னை விளக்குகின்றன? நீ சத்தாவான். உனது சத்தையில் உலகம் விளங்குகின்றது. இதையுணர்த்துவதுதானே ஆறறிவு. சத்தா, சத்தை, சத்து என்பன ஒரு பொருள் சொற்கள். தஸ்ய பாசர சர்வமிதம் விபாதி. க,உ. தஸ்ய = ஆத்மாவின். பாசா = பிரகாசம். சர்வம் இதம் = எல்லா உலகத்தையும், விபாதி = நன்ருக விளக்குகின்றது என்பது சுருதிப் பொருள். ஞானத்தில் சத்தையில்லை யென்ருல் ஞானம் வெறும் கல்பனை மாத்திரமாகும். பௌத்தர்களும் நான் திருஷ்டா வென்று சொல்லுகிருர்கள். அவர்கள் சொல்வது வெறும் கற்பனையே. சத்தை

யில் ஞானமில்லையானால் அதுவும் ஜடந்தான். எனவே சத்தையும் ஞானமும் இரண்டும் இணைய வேண்டும்.

பிருந்தாவனம் என்னும் புனித தலத்தில் உடியா பாபா வென்று ஒரு மகான் இருந்தார். அவர் ஆஸ்ரமத்தில் அடிக்கடி சத்சங்கம் நடக்கும். ஒருநாள் சத்சங்கத்தில் ஒரு கேள்வியை ஒருவர் எழுப்பினார்—கோவர்த்தனகிரி சின்மயம் என்றார். எல்லோரும் இன்புடன் கேட்டனர். மீண்டும் கேள்வியை எழுப்பினார்—கோவர்த்தனகிரி சின்மயம் எப்படி?

ஒருவர் உடனே எழுந்து, சுவாமின்! ஒரு மகாத்மா கோவர்த்தனகிரியை வலம் வந்தார், வருகிறபோது அவர் மனதில் ஒரு ஐயம் எழுந்தது. இம்மலையரசன் சின்மயன் எப்படி? இதற்கு இடையில் ஒரு அடியவர் தோன்றினார். நீ கிரிவலம் வருகின்றாய், ஆகையால் மலையரசன் சின்மயன் என்னும் விஷயத்தில் ஐயம் கொள்ளாதே. அங்ஙனமாயின் சோதித்துப்பார் என்றார்.

இவ்வாறு இவர் இசைத்ததும், அவ்வாறு அவர் செய்தார். அவர் மலையில் உள்ள ஒரு சிறிய கல்லை எடுத்து மலையில் எறிந்தார். அப்பொழுது அதிலிருந்து உதிரம் சொரிந்தது. அதையறிந்த அவர் அச்சிலையைச் சின்மயம் என்று அறிந்தார். ஆனால் இரத்தஞ் சொரிவது யானை முதல் எறும்பு ஈருக உயிர் அத்தனைக்கும் உதிரம் வரும், அதனால் அது சின்மயம், சேதனம் என்று எண்ணுவது சரியன்று.

அன்பு மார்க்கத்தில் கோவர்த்தனகிரி மலையில் உள்ள ஒவ்வொரு புல், பூண்டும் சேதன வடிவமே.

உண்மையாக ஓர்ந்து நோக்கினால் சேதனத்திற்கு இது சோதனையல்ல. சேதனத்தை வேதாந்த ரீதியாகச் சோதிக்க வேண்டும். ஜடம், சேதனம் இன்னது என்பதை யினிது அறிய வேண்டும். எது காட்சியோ, இன்னொன்றால் அறியப்படுகிறதோ, அது ஜடம்.

எது திருஸ்யமில்லேயோ, எது இன்னென்றை விரும்பாமல் இலங்கிக் கொண்டிருக்கிறதோ, அது சேதனம். மேலும். எது தானுக விளங்கிக் கொண்டு பிறவற்றையும் விளக்கிக் கொண்டிருக்கிறதோ அது சேதனம் சேதனம், ச்சைதன்யம், ஞானம் என்பன ஒரு பொருள்.

எது தன்னேயும் அறிந்து, பிறவற்றையும் அறிந்து, தானும் இயங்கி யன்னியத்தையும் இயக்கி வைத்துக் கொண்டு, வேறு ஒன்ருலும் விநாசம் உருமல் இருக்கிறதோ அது அழியாத ஞானம், என்றும் ஒரே படித்தாக இருப்பது ஞானம். அது நீயாய் இருக்கிருய். திருஷ்டா, அல்லது சாக்ஷி இவைகள் தியானத்திற்கு விஷயமல்ல. அது தியானத்திற்கும், தியாதாவிற்கும், தியேயத்திற்கும், பிரகாசன் இத்தனையையும் விளக்குந்தன்மையது. இது துவம் பதத்திற்குச் சோதனம். இது ஞானமில்லே.

எப்பொழுது ஈசுவரன் நமக்கு விஷயம் ஆவானே, அப்பொழுது நாம் திருஷ்டா. நாம் இறைவனே நமக்கு அந்நியமாகப் பார்த்தால் இறைவன் திருஸ்யமாவான். வேதாந்தத்தில் திருஷ்டா, புழுவிலிருந்து இறைவன் வரையொருவன்தான். புல்லில் இருந்து அவ்யாகிருதம் வரை எது திருஷ்டாவாக இருக்கிறதோ, அதுதான் சுத்தச்சேதனம்.

ஒரு மகான் ஒரு குகையிலிருந்து தவஞ் செய்தார். அங்கு ஒரு அன்பன் ஓடிவந்து அந்த மகானிடம் சுவாமின்! நான் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடைந்து விட்டேன் என்ருன். சுவாமி—எப்படியடைந்தாய்? பக்தன்—நான் குகையில் சமாதி கூடியிருந்தேன். குகை முழுதும் ஒரே பிரகாசம் தோன்றியது. சுவாமி—இது பிரஹ்ம சாக்ஷாத்காரமல்ல. ஒளி மயமாக் இருந்து விட்டால் சாக்ஷாத்காரமல்ல.

ஒரு அடியவர் கடற்கரையோரம் இருபது ஆண்டுகள் தவஞ் செய்தார். அவர்—நான் இவ்விருபது ஆண்டுகள் தவஞ் செய்து எதுவரை சென்றிருக்கிறேனே அதுவரை

ஸ்ரீ கிருஷ்ணன் செல்லவில்லையென்றார். இது என்னே? இதுதான் கற்பனை விலாசம். மனங்கடந்த பேச்சு. உண்மை ஞானம் எல்லாருக்கும் பொது. ஞானத்தில் கூடுதல், குறைதல் இல்லை. ஸ்ரீ கிருஷ்ணன் எந்த உண்மையையுணர்ந்தாரோ, அந்த உண்மை ஞானத்தை நாம் உணர்ந்தோமானால் நாம் கண்ட ஞானம் சரியானது. அதற்கு வேறாக அறிவது கானல் நீராகும், மயக்கமாகும். சத்தியம் ஒன்றுதான், எல்லாரனுபவத்திலும் ஒரே மாதிரிதான். ஞானம் பெரிது, சிறிது அல்ல. சிறிய ஞானம் அக்ஞானம்.

நான் திருஷ்டா என்பது குறைந்த ஞானம். ஒருதலையானது. நீதிருஷ்டா, அது உண்மைதான், ஆனால் திருஸ்யம் எது? இதைப்பற்றி யெண்ணிப் பார்த்தாயா? இவ்வுடல் பஞ்சபூதத்தின் காரியம். உடலில் உள்ள மண்ணும், உலகில் உண்டான மண்ணும் ஒன்றுதான். இந்நிலையில் உடலும், உலகமும் வேறு வேறு இல்லை. இவை ஐம்பூதத்தில் கற்பிதம். நாம் நுகர்கின்ற இன்பதுன்பம் வினையின் விளைவு. கருமம் காயத்தால் செய்யப்படுகிறது. காயம் உலகில் இருக்கிறது. உலகம் உலகசத்திலிருக்கிறது. ஆகாசம், அனிலம், அனல், புனல், நிலம் இவை யெல்லாம் உலகம். இருப்புருபமாக விளங்கும் உலகமெல்லாம் சத்தில்தான் தோற்றுகின்றன.

பஞ்சபூதம் அகங்காரத்திலும், அகங்காரம் மகத்திலும், மகத்தத்வம் ஹிரண்ய கர்ப்பனிலும், ஹிரண்யகர்ப்பன், ஈஸ்வர எண்ணத்திலும், இறைவன் தனது நிஜவடிவ பிரஹ்மத்திலும் நிலை பெற்றிருக்கிறான். யாத்திரைக்கு ஒரு நியமம் இருக்கிறது. நாம் போகும் இடம் வரைமார்க்கந் தெரியவில்லையானால். நாம் எங்கிருக்கிறோமோ அங்கிருந்து நடைபோடவேண்டும். நின்ற இடத்திலிருந்து செல்.

வெறும் நூலறிவுடையவர்க்கு நூலில் என்ன என்ன வாக்கியம் எழுதியிருக்கின்றன என்பது நன்கு தெரியும்.

ஆனுல் உண்மைத்தத்துவம் இன்னதென்பது தெரியாது. நான் ஒரு மகானிடம் சென்றேன். அவர் வடிவத்தில் சிறியவர். சரள சுபாவமுடையவர். அவர் அடியவர் ஆனதால் நிர்மாணமாக இருந்தார். இறைவனைத் தவிர வேறு எந்த வார்த்தையும் இயம்பார். ஊர் வார்த்தையையும் ஈசுவரார்ப்பணமாக ஆக்கிவிடுவார்.

நான் காலையில் பிரஹ்ம முஹூர்த்தத்தில் அவரிடம் சென்றேன். என்னை யந்நேரத்தில் கண்டதும் அவருக்கு அளவில் ஆனந்தம் வந்தது. அவர்—மகனே! இவ்வேளையில் இங்கு வந்த தென்னை யென்ருர். நான் ஐயனே! இப் பையன் மனதில் ஒரு ஐயம் எழுந்தது. அதையகற்றும் பொருட்டு வந்தேன் என்றேன். அவர் உடனே—மகனே! மனதில் இருக்கிறநிலத்தை விட்டு விடு என்ருர்.

அங்ஙனமாயின் காயம், மரம், செடி, கொடி, பசு பறவை யெல்லாம் மண்ணிலிருந்து உண்டாயிருக்கின்றன. நிலம் என்கின்ற புத்தி நீங்கிவிட்டால் அதிலிருந்து உண்டான நாமமும், ரூபமும் மறைந்துவிடும். காமம், வெகுளி, மயக்கம் இவைகளும் பறந்துவிடும். வியக்தி, ஜாதி இவைகளும் அகன்றுவிடும். திருஷ்டா வாகிய நீ மட்டும் எஞ்சியிருக்கிருய். நீ சங்கல்பத்தை விட்டு விடு. உனது எண்ணத்திஞல்தான் இறைவனிடத்தில் சர்வக்ஞத்வமும் உன்னிடத்தில் அற்பக்ஞத்வமும் வருகின்றன.

எவ்வாறு உனது எண்ணத்தில் கனவோ, அது போல் இறைவன் எண்ணத்தில் சிருஷ்டி. உன்னிடத்திலுள்ள உள்ளத்தையும் இறைவனிடத்தில் உள்ள உபாதியையும் விட்டுவிட்டால் இரண்டும் ஒன்ருகி விடும். ''தத்வமசி'' என்னும் மகா வாக்கியம் இந்த வேற்றுமையை யகற்றுகின்றது. 7

தொடர்ச்சி

இப்பேதம் தத் பத விசாரஞ் செய்யாமல் நீங்காது. படைப்பு என்னது என்றும், காட்சியென்னது என்றும், அநு சந்தானம் செய்யும் நிமித்தம் ஈண்டு அக்ஷர சிருஷ்டியை அருளுகின்றது.

8—வது மந்திரம்.

4

தபஸாச் சீயதே பிரஹ்ம ததோஅந்நம் அபிஜாயதே !
அந்நாத் பிராணோமந : சத்யம் லோகா : கர்மசுச்சாம்ருதம் !

இ—ள்

(ஞான வடிவ) தவம் மூலமாக பிரஹ்மம் தூல வடிவத்தை யடைகிறது. அப்பொழுது அதிலிருந்து அன்னம் உண்டாகிறது. அன்னத்திலிருந்து பிராணன் உண்டாகிறது. பிராணனலிருந்து மனமும், மனதிலிருந்து சத்யமும், சத்தியத்திலிருந்து உலகமும், உலகத்திலிருந்து கருமமும், கருமத்திலிருந்து அமிர்தரூப பலமும் உண்டாகின்றன என்பது பொருள்.

பிரஹ்மம்—பரமாத்மா. 'தபசா சீயதே'—தபசு—ஞான வடிவ ஆலோசனை. விசாரம் என்பது தெளிவு.

''பிரஹ்ம—பரமாத்மா ஆலோசநாத்மகேந ஞாநேநச் சீயதே உபச்சீயதே'' என்பது சங்கரபாஷ்யம். இறைவனுடைய மனதில் இறந்த காலத்தின் ஞாபகமும், எதிர் காலத்தின் கற்பனையும் உண்டாகிறதில்லை. எதனுலோ வெனின் இறைவனுக்கு இறந்தகாலம், எதிர்காலமில்லை. ஈசுவரன் காலத்திற்குள் வருபவனல்லன். இதனுல் இவனை இனிய வேதாந்தத்தில் காலங்கடந்தவனென்றும், கால அபரிச்சின்னன் என்றும் மொழிந்திருக்கிறது.

ஒருநாள் இறைவன் எண்ணினுர்—எல்லாநூல்களும் நம்மைப் படைப்பதில் நிபுணன் என்று கூறுகின்றனவே யென்று எண்ணியினிதுள் மகிழ்ந்தார். எங்ஙனம் தனது

மகன் தோன்றுங்காலத்தில் தந்தை மகிழ்வாரோ அங்ஙனம் ஆன்மாவும் மகிழ்ந்தது. ''ஆத்மாச்ச பிரஹ்ம'' என்கின்றது சங்கரபாஷ்யம். கடலை முளைவரும் நேரம் எவ்வாறு உப்பி யிருக்குமோ அவ்வாறு ஆன்மதேவன்உள் மகிழ்ந்தான். உலகத்தை உண்டு பண்ணு நிலைம் சித்.

ததோ அந்நம்—உண்டாக்க வேண்டுமென்று எண்ணம் உதித்தது. அதன் பின் அங்குரத்தில் இருந்து மலர் மலரும் நிலை வந்தது. இந்நிலைக்கு அவ்யாகிருதமென்று பெயர். இதற்கு அன்னமென்று பெயர். இரண்யகர்ப்பனுக்குப் பிராணனென்று பெயர். பிராணவடிவ பிரஹ்மாவிடம் இருந்து மன வடிவ அகங்காரம் உண்டாயிற்று. அதில் இருந்து சத்யம் பஞ்ச பூத வடிவ ஐம்பூதங்களும் தோன்றின. ஐம்பூதத்திலிருந்து லோகா :—அவனிமுழுவதும் எழுந்தன. அவனி—அநந்த கோடி பிரஹ்மாண்டங்கள் உதித்தன.

''கர்மசு நிமித்தேஷுசத்சு அமிர்தம்'' சங்கரபாஷ்யம். சில உலகங்களில் கருமங்கள் தோன்றின, அதில் வரும் விளைவுகளை நுகராமல் அவைகள் அழிகிறதில்லை. சம்சாரத் தில் காணப்படும், கேட்கப்படும் இன்பதுன்பங்கள் வினை யின் விளைவுகள். கருமத்தின் பலன் துய்க்காமல் தொலை யாது. கருமம் மனிதன் வாயிலாக உண்டாகிறது. கருமம் இருப்பது மனிதனில்.

மனிதன் ஐம்பூதவடிவினன். ஐம்பூதம் அகங்காரத் திலிருந்து வெளிவந்தன. அகங்காரம் அயனிடத்திலிருந்து வந்தது. அயன் அவ்யாக்கிருதத்திலிருந்து வந்தான். அவ்யாகிருதம் இறைவன் எண்ணத்தில் உதித்தது. இறை வனுக்கு அன்னியமாக ஒரு பொருளும் இல்லை. இங்கு நீ பார்ப்பவன், அங்கிருந்து அவன் பார்ப்பவன். அவன்— இறைவன், பார்வையில் உள்ள உபாதியை நீக்கிவிட்டால் சைதன்யம் ஒன்றுதான். உபாதியென்ன ஆயிற்று? நெருப் பில் விழுந்த நீர்த்துளி போல அனந்த, அகண்ட

இ—ள்.

அத்விதீய பிரஹ்மத்தில் ஒடுங்கி விட்டது. இம் மந்திரத்தில் சில அரும்பதங்கள் வந்துள்ளன. முறையே, தபசு, விசாரம், பிரஹ்மம், அன்னம், அவ்யாகிருதம். பிராணன், பிரஹ்மம். மனம் அகங்காரம். சத்யம் — பஞ்சபூதம். அமிர்தம் — கருமபலம். 8

தொடர்ச்சி

துவக்கத்தின் முடிவு. (உபசம் ஹாரம்)

9—வது மந்திரம்.

ய : சர்வக்ஞ : சர்வவித் யஸ்ய ஞானமயம் தப : !
தஸ்மாத் ஏதத் பிரஹ்ம நாம ரூபமன்னம்ச ஜாயதே!!9

இ—ள்

எது நிறைந்த அறிவுடையதோ, பொதுவாக எல்லா வற்றையும் அறியும் தன்மையதோ, அது சர்வவித். எது எல்லாவற்றையும் விசேடரூபமாக அறியும் வலிமை யுடையதோ, எதற்கு ஞான வடிவமே தபசோ அதிலிருந்து இந்த நான்முக பிரஹ்மாவும், நாமமும், ரூபமும், அன்னமும் உண்டாயின என்பது பொருள்

இறைவன் எல்லாம் அறிந்தவன். ஆகவே சர்வக்ஞன், சர்வவித்து. எங்ஙனம் நாம் அற்ப அறிவுடையவர்களோ, அதனால் குறைந்த அறிவு நமக்கு இருக்கிறதோ, அங்ஙனம் இறைவனுக்கு நிறைந்த அறிவிருப்பதால் சகலத்தையும் அறிகிறான். அறிவு பூரணம் என்பதைச் சிறிது சிந்தித்துப் பார். சிறிது எண்ணிப் பார்த்தால் சகலமும் உனக்கு விளங்கும். ஈ சு வ ர ன் எல்லாவற்றையும் எப்படி அறிகிறான்? ஒருவன் குடத்தையறிகிறான், நீ அவனை அறிமுகப்படுத்துகின்றாய் இவன் குடத்தையறிகிறான் என்று.

இதனுல் என்ன தெரிகிறது, அவன் குடத்தை யறிகிருன். நீ குடத்தையும் அறிகிருய், அவனேயும் அறி கிருய் குடத்தையும் அதையறிபவனேயும் நீ யறியாது போனுல் இவன் குடத்தையறிகிருன் என்று எங்ஙனம் தெரியும்? குடஞானமும் அவன் ஞானமும் இரண்டும் உனக்குத் தெரிந்ததால் அவன் குடத்தையறிகிருனென் ருய். இந்த இரு ஞானமும் இல்லாது போனுல் உனக்கு எப்படித் தெரிந்தது இவன் குடத்தையறிகிருனென்று?

ஈசுவரன் எல்லாவற்றையும் அறிகிருன் என்ருல் உனக்கு இறைவனேப் பற்றியுந் தெரிய வேண்டும். அவன் அறிகின்ற அனேத்தையும் தெரிய வேண்டும். இறைவனுக்கு ஒரு ஞானமிருக்குமானுல், உன்னிடம் இரண்டுஞானம் இருக்க வேண்டும். அவனிடம் ஒரு பங்கு, உன்னிடம் இரண்டு பங்கு இருக்க வேண்டும். ஆகையால் இறைவன் சர்வக்ஞன் என்பதில் விசுவாசம் வை. இது நம்பிக்கைக்கு விஷயம்.

நான் ஒரு முறை பிருந்தாவனத்தில் ஒரு ஆலயத் திற்குத் தரிசனம் செய்யப் போனேன். அங்கு இறைவன் முன்னிலேயில் பாத்திரத்தில் நீர் நிரம்பி இருந்தது. அந் நீரின் மேலே யெரிந்து கொண்டிருந்த வெளிச்சம் நீரில் விழ ஆரம்பித்தது. மேலேயும் வெளிச்சம், விளக்கிலும் வெளிச்சம், ஜலத்திலும் வெளிச்சம். ஆனுல் இந்த வெளிச்சம் தண்ணீரில் விழுந்த பிரகாசம் இல்லாது போனுலும் விளக்கொளி கூடாமல் குறையாமல் ஒரு படித்தாக இருக்கிறது. விளக்குக்குச் சமானம் சைதன்ய பிரகாசம். அது என்றும் ஒரே மாதிரியாக இருக்கும். அது சேதன வடிவமாதலால் ஒரு போதும் குன்ருத ஒளியாகும். திருஸ்யத்தில் உள்ள ஒளி தண்ணீரில் தெரிகின்ற ஒளிக்குச் சமானம்.

பொருள்களெல்லாம் சுயம்பு மண்டலத்திலிருந்து உண்டாகின்றன. இரு கண்களும் இனிய ஒளியுடையவை. பார்ப்பவன் சேதனத்தில் திருஷ்டாவாகிறான். திருஷ்டா தான் சுயம் பிரகாசம். திருஸ்யத்தில் சுயம்பு வாசம் பண்ணுகிறது. சத்தை திருஸ்யத்தில் எங்கும் இருக்கிறது. திருஷ்டா திருஸ்யமுழுவதிலும் சேதன வடிவமாக இருக்கிறது. திருஸ்யம் பரிச்சின்னமாக இருப்பதால் பூரண சொரூபத்தைப் பொருந்த முடியவில்லை. இவைகளை ஆராய வேண்டும். இந்நிலை எதற்காகநேருகிறது என்று சிந்தித்துப் பார்.

திருஸ்யம் ஒரு மண்டல வடிவம். எல்லா மண்டலமும் நமது கண்முன் வரமாட்டா. திருஷ்டாவும் ஒரு மண்டலம் என்று நீ நினை. ஒரு பொருளை யொரு கருவி மூலமாக அறிய விரும்புகின்றோம். அதைப் பார்க்கும்போது, அது வேறு விதமாகத் தோற்றுகிறது. சமீபமான பொருள் தூரத்தில் காணப்படுகிறது. சில நேரம் விளங்குகிறது, சில நேரம் விளங்குகிறதில்லை. தனக்கு அன்னியவஸ்துவை நோக்க வேண்டுமானால் கருவிகள் வேண்டும். ஆனால் நமது வடிவத்தை நாம் அறிய வேண்டுமானால், கருவி, கரணம், சாதனம் வேண்டுவதில்லை.

கிரியதே அநேநேதி கரணம்—என்பது கரணலக்ஷணம். எது மூலமாக கருமஞ் செய்யப்படுகிறதோ அது கரணம். கரணம் எது? மனம், புத்தி, பொறிகள் முதலியவை. நமக்கு எவ்வளவு ஞானம் எங்கிருந்து வந்தாலும், அவையனைத்தும் கரணங்கள் வாயிலாக வருகின்றன. எதனாலோ வெனின் நாம் தேகாபிமானிகளாக ஆகி விட்டோம். நமக்கு இடம் இறைவன், நாம் அதை மறந்து தேகத்தைக் கேந்திரமாகக் கொண்டிருக்கிறோம். கேந்திரம் — இடம். நமக்கு இடம் தேகமில்லையானால் கரணங்களை நாம் விரும்ப வேண்டுவதில்லை.

இறைவன் ஒரு இடத்தைப் பிடித்துக் கொண்டு இருப்பானுனால் அவனுக்கு மேற்கு, கிழக்கு, தெற்கு, வடக்கு, கீழ், மேல், அக்கம் பக்கம், உள், வெளி, நிகழ்ந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம், தரை, ஆகாசம் இப்பேதம் உண்டாகும். அவன் ஏக தேசியல்ல, பின்னை? சர்வதேசி. ஆகையால் அவனுக்குப் பேதஞானம் இல்லை. அவன் — இறைவன்.

இறைவன் அவிநாசி, உலகம் தோன்றும் அழியும். சிருஷ்டி ஒரு காலத்தில், ஒரு தேசத்தில் உண்டாகின்றது. ஆகலின் அது காலப்பரிச்சின்னம். யாருக்கு உடலில் அபிமானம் இருக்கிறதோ, அவனுக்கு இறைவன் தூரமாகவும், நேரமாகவும் இருக்கிறுன். தேகத்தில் நமக்குப் பற்று இருக்கிறதனுல் நாம் மறந்து விடுகிறோம், ஆன்மா மறைந்து விடுகிறது. நம்மைப்போலவே நாம் இறைவனையெடை போடுகிறோம். நாம் எப்படியோ அது போல இறைவனும் இருப்பார் போலிருக்கிறது. நமக்கு உலகம் எப்படித் தெரிகிறதோ அப்படித்தான் இறைவனுக்கும் தெரியும் போலிருக்கிறது என்று நினைக்கிறோம். கருப்பு, சிகப்பு, வெள்ளை, நீலம், ஊதா என்னும் நிறம் நமது பார்வையில்தான். ஏனெனின் நாம் சூரிய வெளிச்சத்தில் நமது கண்ணைக் கொண்டுப் பார்க்கிறோம். ஈசுவரன் அவ்வாறன்று. ஈசுவரன் ஆதவன் ஒளியில் தனது கண்ணைக் கொண்டு நோக்குகிறதில்லை. அவனுக்கு எல்லா வண்ணமும் ஒரே வண்ணமாகத் தெரிகிறது.

எல்லாக்காரிய காரணமும் தனது வடிவமாகக் காணப் படுகிறது. அத்தனைக்கும் அவனே யுபாதானகாரணன். ஆன்மாவின் பார்வையில் உபாதானம், நிருபாதானம் என்னும் பேதம் இல்லை. இறைவனுடைய ஞானத்தை இப்படி யப்படி யென்று உறுதியாக உரைக்க இயலாது.

ஒரு முறை நாங்கள் கங்கைக் கரையில் இராம கட்டம் என்னும் பெயருடைய குளிக்கும் துறையில் இருந்தோம். அங்கு அநேக மகான்கள் இருந்தனர். அவ் விடம் மிக அழகுடையது. ஒரு பக்கம் கங்கை, மறுபக்கம் நகரம். இரு மருங்கிலும் கண்ணைக் கவரும் கானகம். அங்கு நிர்மலானந்த சுவாமிகள் ஆஸ்ரமம் இருந்தது. அங்கு நாங்கள் உண்டு, களித்து, உறங்கினேம். அவ்வமயம் ஒருவர் திடீர் என என்முன் தோன்றி நான் நாளைக்குச் செய்யப் போகும் காரியம் ஈசுவரனுக்குத் தெரியுமா, தெரியாதா என்று வினவினர்.

அவரிடம் நான் கேட்டேன் — ஐயா உம்முடைய எண்ணம் என்னை யென்றேன். அவர் இறைவனுக்கு நான் செய்யப் போகிற காரியம் தெரியுமானல் நான் பாவம் செய்யும் போது அவர் என்னைத் தடுத்தாலென்ன? தெரிந் திருந்தும் ஏன் தடுக்கவில்லை? அங்ஙனம் ஆயின் அவ்வினைக் குப் பொறுப்பு யார்? இறைவனு, நானு? நான் செய்யும் வினையவருக்குந் தெரியாது போனல் அவர் எல்லாம் தெரிந்தவர் எங்ஙனமாவர்?

நான் — ஐயா! இறைவன் உமக்குக் கிடைத்து விட்டானு? அவர் — கிட்டவில்லை நான்—பிறகு? அவர்— தேடுகிறேன். நான் — உமக்கு இன்னும் இறைவன் கிட்ட வில்லையே. இறைவன் எல்லாம் அறிந்தவனென்று எப்படித் தெரிந்தது? யாரிடம் கேட்டீர்? இறைவன் உமக்கு உண்மை யாக சர்வக்ஞன் என்று தெரியுமானுல் பாவ கருமத்தைக் கண்டு ஏன் பயப்படவில்லை அங்ஙனம் பயந்தால் நீ யவனை சர்வக்ஞன் என்று அறிந்தது பயனுள்ளதாகும். அஃது இல்லையேல் நீ யெண்ணியது வெறுங் கற்பனைதான். கற்பனை மட்டுமல்ல, அவனை அறிந்தும் பயனில்லை. அவர் மௌனமாய்ச் சென்று விட்டார்.

அரண்மனையில் வசிக்கின்ற அரசனுடைய காவலர்கள் அரசனைப் புகழ்ந்து பாடுவார்கள். என்ன சொல்லி? நீ பெரிய கொடையாளி, நீ தான் வீரன், நீ கர்ண மகாராஜா என்றெல்லாம் சொல்லிப் பாடுவார்கள். பின்பு அரசனிடம் ஐந்து அல்லது பத்து ரூபாய் வாங்குவார்கள். அப்படிப் பட்டவர்கள் இறைவனையறிவதுமில்லை. எல்லாந்தெரிந்தவ னென்றும் தெரிவதுமில்லை. அவர்களுக்கு அவர்கள் குடும்ப மும் சுயநலமும் மட்டும் தெரியும். அவர்கள் அறிவு அவர்கள் பலஹீனத்தை மென்மேலும் உண்டுபண்ண உதவுகின்றது.

ஈசுவரனுடைய சர்வக்ஞத்வம், சர்வசக்தித்வம் முதலி யவை அவரவர்கள் அறிவுக்கு எட்டியவாறு பயன்படும். உண்மையில் ஓர்ந்து பார்த்தால் சர்வக்ஞத்வம், சர்வசக்தித் வம் எல்லாம் அவ்னிடத்தில் கற்பிதம். அவன் இறைவன். இதனால் ஜீவன் ஈசுவரன் இருவர் உபாதியையும் விட்டு விடுவது நலம். இருவருபாதியும் நீங்காது போனால் இரு வரும் ஒருவராய் எங்ஙனமாவர்? ஆகாரென்பது கருத்து. அநுமானம் — பர்வதோவஹ்னிமான் தூமத்வாத் = மலையில் நெருப்பிருக்கிறது, புகை காணப்படுவதால். இது அனு மானம். இந்த அனுமானம் எதற்காக இயம்பப்படுகிறது? நாம் எங்கெல்லாம் புகையைப் பார்க்கிறோமோ அங்கெல்லாம் நெருப்புக் காணப்படுகிறது. இம்மாதிரி நாம் பொன், பொருள், வீடு வாசல், இடம், கடம், படம் முதலிய பொருள்களைப் பார்க்கிறோம். இவையனைத்தும் செய்வதால் காணப்படுகின்றன. இவைகளைப் பண்ணுபவன் ஒருவன் உண்டு. அப்பொருளை அவன் செய்வதற்கு அறிவுடையவன். இதனால் சிருஷ்டியும் ஒருவனால் செய்யப்பெற்றது. இதை உண்டு பண்ணினவன் நிறைந்த அறிவுடையவன் என்று அனுமானம் செய்கிறோம்.

நீங்கள் உலகப் பொருளைப் பொறிகளைக் கொண்டுப் பார்க்கிறீர்கள், ஆகலின் இப்புலன்களை ஆபாசபாஸ்யம் என்கின்றனர், ஏனெனின் சேதனத்தின் தோற்றம் பொறி

களில் வந்தது. அதனுல் விஷயங்கள் விளங்கின. நீங்கள் உங்களுடைய உறக்கத்தைப் பொறிகளின் உதவியில்லாமலே அனுபவிக்கிறீர்கள். இந்நித்திரை, சுகம், துக்கம், இன்பம், துன்பம் இவையெல்லாம் சாக்ஷிக்கு விஷயம். ஆகையால் இவைகளையும் பொறிகளின் உதவியில்லாமலே நுகருகிறீர்கள். இன்பம் துன்பம் எல்லாம் சாக்ஷிபாஸ்யம்—ஆன்மாவிற்கு விஷயம். ஆன்மா அவைகளை விளக்குகின்றது.

இறைவனைப் பொறிகளைக் கொண்டு பார்க்க இயலாது. இறைவன் இந்திரியங்களுக்கு விஷயம் அன்று. சாக்ஷிக்கும் விஷயமன்று. ஏனெனின், இறைவன் சுயம் சாக்ஷி, சுயம் பிரகாசம். ''ஜோதி ஜோதி ஜோதி சுயம், ஜோதி ஜோதி ஜோதி பரம். ஜோதி ஜோதி ஜோதி யருள். ஜோதி ஜோதி ஜோதி சிவம்,, இராமலிங்க சுவாமிகள். பொருள் வெளி.

ஆத்மதத்துவத்தைத் தனக்கு அந்நியமாக அறிய இயலாது. அறிவது அதனது தருமம். அது—ஆன்மா. இறைவன் இரண்டு விதமாக அறிகிருன்—சர்வக்ஞன், சர்வவித் ரூபமாக அறிகிருன். மனைவிதனது மணவாளனைப் பூர்ணமாக அறிகிறதில்லை. தாய் தனது மகனை நன்ருகத் தெரிகிறதில்லை. யாரும் யாரையும் யதார்த்தமாக உணர்கிறதில்லை. ஆனுல் ஈசுவரன் சர்வக்ஞன் சர்வவித்து. எல்லோருடைய இதயத்திலும் ஜீவவடிவமாக இறைவன் நுழைந்து நான் என்று அமர்ந்து இருக்கிருன். அதனுல் அவனுக்கு அனைவரையும் தெரியும். ஒவ்வொரு அந்தக் கரணத்திலும் திருஷ்டாவாக இருந்து அகத்திலுள்ள அனைத்தையும் அறிகிருன். மாயையிலிருந்து அறிவது தேசவிசேடம், அந்தக் கரணத்திலிருந்து அறிவது இடவிசேடம். குறைந்த தேச மென்பது குறிப்பு.

இறைவனுக்கு அந்தக்கரணமில்லை. அவனுக்கு மாயைதான் கரணம். மாயையில் இருந்து கொண்டு

மாயாப் பிரபஞ்ச முழுவதையும் அறிகிருன். மாயையால் அவ்யாகிருதத்தையும் அறிகிருன். அவ்யாகிருதம் பீஜாவஸ்த்தை. மாயாவி மாயாசக்தியால் பிறருடைய பெட்டியில் இருக்கிற (சாமானே) பொருளேயறிவதுபோல. இது ஈசுவரனது (பொதுவான) சாமான்ய ஞானம். இதுதான் இறைவனுடைய எல்லாம் அறியுந்தன்மை.

இறைவன் இரண்டு விதத்தில் சர்வவித்து—சாமான்ய வடிவமாகவும், விசேடவடிவமாகவும். சாமான்ய வடிவமாக அயன்முதல் அகில உயிர்களேயும், அவர்களது அறிவையும் இறைவன் அறிகிருன். ஒவ்வொரு உயிருடைய இதயத்தி லிருந்து கொண்டு அவரவர்கள் என்ன என்ன செய்கிருர்கள் என்று அறிகிருன். இறைவனுடைய ஞானம் மூன்றுவிதம். 1 ஜீவவடிவமாக ஒவ்வொரு இதயத்திலும் இருந்து கொண்டு அறிவது. 2 மாயை வாயிலாக எல்லா உயிர்களின் அறிவை யேககாலத்தில் அறிவது. 3 எல்லாம் நானே, என்னே யன்றி யொன்றுமில்லே யென்றறிவது.

அதிகாரிகளுடைய மதி யற்பமாக இருக்கிறது. குடத்திற்குள் இறைவன் வர இயலாது, ஆனல் அவன் வர வேண்டுமென்று நினேக்கிருன். அவிவேகிகள்மதியும், சிறுவர் மதியும் ஒன்றுபோல. பிடிவாத குழந்தையும், பேதமையுடையவனும் சமானம். ஒருமுறை ஒரு அரசகுமாரன் அழ ஆரம்பித்தான். அரசன் கேட்டான்—என் மைந்தன் ஏன் அழுகிருன்? மந்திரி — அழுவது குழந்தையின் இயல்பு அக்குழந்தை பிடிவாதமானது. இவ்வாறு மந்திரி கூறுவது அரசனுக்குப் பிடிக்கவில்லே. அவன் தனது புதல்வனே யழைத்து அன்பு கூர்ந்து மகனே! உனக்கு என்ன வேண்டும் என்ருன். குழந்தை—மைக்கூடு வேண்டுமென்றது. நிருபன் —மந்திரி! என்குழந்தை யொரு மைக்கூடுக்காக அழுகிறது, மைக்கூடு கொடுக்கக் கூடாதா என்ருன். : மந்திரி—அரசே!

சிறிது பொறும் என்றுகூறி குழந்தையின் கையில் மைக் கூட்டைக் கொடுத்தான். அது மீண்டும் அழத் தொடங்கியது. பார்த்திபன்—மைந்தவா! ஏன் அழுகின்ருய் என்ருன். குழந்தை—எனக்கு யானை வேண்டும் என்றது. யானை யழைக்கப்பட்டது. மீண்டும் அக்குழந்தையழத்துவங்கியது. வேந்தன் — மந்திரி! நீ உரைத்தது சரியாகி விட்டது. என்ருன். குழந்தாய்! மீண்டும் ஏன் அழுகிருயென்ருன். குழந்தை — யானையை மைக்கூட்டுக்குள் நுழைக்க வேண்டு மென்றது. குழந்தையழுவதற்குக் காரணம் கண்டுபிடிக்க இயலாது. அது போல் அதிகாரிகளும் மனதிற்குள் இறைவனை நுழைக்கப் பார்க்கிருர்கள்.

அதிகாரிகள் மனம் காயைப் போல அபக்குவமனம். ஞானிகள் மனம் கனியைப் போல பக்குவமனம். மனம் தூய் மையடைந்த பின்பு ''சத்ய ஞானநந்த வடிவ பிரஹ்மத்தை அந்த மனதில் நுழைக்க நினைப்பார்கள். முன்னமே நுழைந் திருக்கிறது என்று நினைக்கமாட்டார்கள். அங்ஙனமாயின் தேசம் காலங்கடந்த வஸ்துவை தேசமென்னுந் விருத்தியில் எங்ஙனம் நுழைப்பது? இயலாதென்பது தெளிவு.

மாண்டூக்கிய உபநிடத்தில் சுஷுப்தி நிலையைப்பற்றி ஒரு சுருதி வருகிறது — ஏஷ சர்வேஸ்வர : ஏஷோ அந்தர்யாமி ஏஷயோநி : சர்வஸ்ய பிரபவாப்யயௌஹி பூதாநாம். இதற்குப் பொருள் பண்ணும் பகவான் சங்கரர் சர்வஸ்ச அசௌ க்ஞஸ்ச என்று அருளுகின்ருர். அதுவே யெல்லாம். அதுவே ஞானம் என்பது பொருள். அது — ஆன்மா. அகண்ட தத்துவத்தில் நான் ஞாதா, இதுஞேயம் என்னும் வேற்றுமையில்லை. எல்லாம் தனது வடிவமாகத் தோன்றுகிற போது தனக்கு வேருக வேற்றுமை வருவதற்குக் காரணம் யாது? இல்லையென்பது இனிது புலனும்.

யஸ்ய ஞானமயம் தப : இங்கு தவத்திற்குப் பொரு ளென்னை? இறைவன் அடியவர்களைப் போல் பஞ்சாக்னி

தவம், பெண்கள் கணவனுக்காக கௌரி நோன்பு(விரதம்) இருக்கிறார்கள், இது அவர்களுக்கு தவம், வைஷ்ணவர்கள் ஏகாதசிவிரதம்; சைவர்கள் சிவராத்திரி விரதம் இருக்கிறார் கள். இது இவர்களுக்கு தவம். இம்மாதிரி இறைவன் தவம் பண்ணுவதில்லை. இறைவனுடைய தவம் எல்லா ருடைய ஞானத்தையும் தன்வயமாக்கிக் கொள்வதும் மறைந் திருந்து வெளிப்படுவதும் அவன் தவமாகும். அவன் — இறைவன். நாம் நமது ஞானத்தால் வேறு ஒரு பொருளை நினைத்துக்கொண்டால் அப்பொழுது அது மறைந்திருந் தாலும் வெளிப்படுகின்றது. மறைந்திருந்த பொருள் ஒரு வடிவமாக முன்வருகிறது. வடிவம் அறிவை அளவுக்குட் படுத்தி முன்வருகிறது. ஒருவன் ஒருவனை நினைக்கிறான், அவன் நினைப்பவனது ஞானத்தில் வடிவத்தோடு வெளிப் படுகின்றான். அது போல் இறைவனது தவம் உலகவடிவமாக தனது ஞானத்தில் வெளிப்படுகிறது. ஈண்டு தனது என்றது இறைவனை.

இறைவன் எண்ணினான், என்ன எண்ணினான்? உலகம் இவ்வாறு உதிக்கட்டுமென்று எண்ணினான். இந்த எண்ண மானது இறைவனுடைய ஞானவடிவ தவமாகும். எது வரை இறைவன் சிருஷ்டியைப் பற்றி எண்ணவில்லையோ அதுவரை இது அவதூத கோலம். எப்பொழுது எண்ண ஆரம்பித்தானோ அப்பொழுது ஆச்சாரிய வடிவமாயிற்று. அது — பிரஹ்மம். அவதூத கோலம் — சும்மாயிருப்பது. ஆச்சாரியர்—செயல்படுபவர்.

"தஸ்மாத் ஏதத் பிரஹ்ம" இறைவனுடைய ஞானத்தில் சிருஷ்டி இல்லை. அவன் எப்பொழுது தனது ஞானத்தைத் தியானமாக்குகின்றானோ, மாயையினால் தியானநிலையை ஏற்றுக் கொள்கின்றானோ, அப்பொழுது அக்ஷரவடிவ ஆத்மா விலிருந்து திசைமுகன், அல்லது அவ்யாக்ருதம் உண்டா கின்றது.

நாமரூபம் அந்நஞ்ச ஜாயதே—அப்பொழுது அந்த அன்னம—அவ்யாக்ருதம் அதாவது நுகருவதற்கு யோக்ய போக்யமாகிவிடுகிறது. நீங்கள் சோறு உண்கிறீர்கள், அது போக்யமெனப்படும். 'அந்த சோறு, உங்கள் பல், நாக்கு, உதரம் இவைகளை உபபோகம் பண்ணுகின்றது. இறைவன் இவைகளைப்படைக்க வேண்டு மென்று எப்பொழுது எண்ணுகின்ருனே, அப்பொழுது போக்கிய வடிவ அயனுகின்ருன். அதனுல் பலவித வடிவமும், பலநாமங்களும் நிகழ்கின்றன. அவன் சர்வக்ஞன், சர்வவித்து, அந்தப்பிரபு ஞானவடிவதவத்தால் நான்முகனை உண்டுபண்ணுகிருன்.

முதன் முண்டகத்தின் முதலாவது கண்டம்

முற்றிற்று.

முதன்முண்டகத்தின் இரண்டாவது கண்டம்.

கரும நிருபணம். தொடர்ச்சி—

மனிதன் தன்னைக்கர்த்தாவென்று எண்ணுது போனல் அவனுல் ஒரு கருமமும், ஒருதருமமும் உண்டாக மாட்டா. அதுமட்டுமல்ல உபாசனையும் நிகழாது. தன்னைக்கர்த்தா வென்று நினையாத காலத்தில் உடலினுல் வினைகள் எழுந் தாலும், ஒரு பயனுமில்லை. நாம் உறங்குகிருேம். நமது மேனியில் கொசு கடிக்கிறது, அதைக்கரத்தைக் கொண்டு விரட்டுகிருேம். அதனுல் புண்ணியமோ, பாவமோ உண்டா கிறதில்லை. இம்மாதிரி தியானம் அல்லது சிந்தனம் செய்யப் படுகிறது. நமது மனதில் எது தானுக வருகிறதோ அது ஒரு பலனையும் தராது. சாதனம் தானுக உண்டாகு மென்பது வெறும் மயக்கம். அஞ்ஞானம் தானுக நீங்காது. பின்னை? சிரவணம் மனனம், நிதித்தியாசனம் இவைகளைச் செய்யும் போது நீங்குகின்றது.

தானுக சம்சாரம் உண்டாகிறது. மனதில் விகாரமும் தானே உண்டாகிறது. மனிதன் தானுக கீழே விழுகிருன், ஆனுல் எழுந்திருப்பதற்கு பிறர் உதவியை நாடுகிருன். ஈண்டு விழுவது, எழுவது என்பது முறையாகத் தீமையை யும், நன்மையையும் குறிக்கும். தானுக (கட்டு) பந்தனம் உண்டாகும், மோக்ஷம் தானுக உண்டாகாது. ஆகையால் மனதில் தோன்றியது கருமமோ தருமமோ ஆகாது. உபா சனையும் அவ்வாறே, அறநூல்களும், அறிவுநூல்களும் எதைக் கருமமென்றும், தருமமென்றும், உபாசனையென்றும் கூறுகின்றனவோ, குருபரன் எதை இவ்வாறு ஏற்றுக் கொள்கின்ருரோ அதுவே கருமமும், தருமமும், உபாசனை யுமாகும். குருவாயிலாகத்தத்வஞானத்தைக் கேட்டால் அது நல்ல பலனை நமக்கு நல்கும்.

இதனுல் இந்த உபநிஷத்தின் ஆரம்பத்தில் சௌன கர் முறைப்படி குருசமீபம் சென்ருர் என்று செப்பியிருக்

கிறது. அவர் அங்கு சென்று குருவைக் கண்டு, குருபர! எதை அறிந்தால் எல்லாமறிந்ததாகுமோ அது என்னே? என்றார். அதற்கு அவர் பதில் — வேதத்தில் இருவித்தைகள் இருக்கின்றன. பரவித்தை, அபரவித்தை. இவ்வாறு வித்தையை இருகூறாக இயம்பினர். அவை இரண்டில் இதுவரை ஒன்பது மந்திரங்களில் பரவித்தையைப் பகர்ந்தார். பரவித்தை பகரப் பெற்றது என்பது குறிப்பு.

அதில் பண்டப்பைப் பற்றிப் பலவாருகப் பேசியிருக்கிறது. அதற்குக் காரணம் அத்விதீய ஆன்மதத்துவத்தை விளக்கும் பொருட்டேயாம். சிருஷ்டியை விளக்கும் பொருட்டு அன்று. இதனல் பரமாத்மா சிருஷ்டிரூபமாக விளங்குகின்றரென்பது தெளிவாகின்றது.

படைப்பு பரமனைப் பார்ப்பதற்கு ஒரு தெளிவான கண்ணுடி. இப்பொழுது முதலாவது முண்டகத்தின் இரண்டாவது கண்டத்தில் அபரவித்தையருளப் படுகிறது. இந்த அபரவித்தை அஞ்ஞானத்தின் ஒரு கிளையாகும். கிளையிருவகைத்து — பாதனி, பாவனி. கீழே தள்ளுவது பாதனி, மேலே தூக்குவது பாவனி. நம் மனம் போல எந்தவினைகளைச் செய்கின்றேமோ, அதுவும், இவன் பகைவன் இவன் கொலையாளி, இவன் சூதாடி யென்னும் எண்ணங்களும், வேதத்தில் விதிக்காத வினைகளைச் செய்வதும், இவையெல்லாம் பாதனி கிளைகள்.

சாஸ்த்ர சம்மத கருமங்களைச் செய்வதும், குரு சம்மத கருமங்களைச் செய்வதும் இறைவழிபாடு, குருவழிபாடு உபாசனை, சாஸ்த்ரச்சிந்தனம் இவைகளைப் பண்ணுவதும் பாவனிகிளை. பாதனி-அமங்கலம். பாவனி-புனிதம். ரிக்வேத சாஸ்த்ரம் பாவனிகிளை, மனதில் எழுகின்ற காமம், வெகுளி, மயக்கம் முதலியவைபாதனிகிளை. பரவித்தையைப் பெறுவதற்கு ஜிக்ஞாசுவிற்கு மனத்தூய்மை வேண்டும். மனத்தூய்மைக்காக பாவனி கிளை வேண்டும். கிளை — சாகை.

பாவனி கிளையில் நான்கு விபாகம் உண்டாகின்றன, — கர்த்தா, கருமம், கருமத்தின் சாதனம், கருமத்தின் பலன். உலகம எப்பொழுதும் உருண்டு பிரண்டு கொண்டேயிருக்கிறது. இதில் போக மார்க்கத்தில் செல்வாயானல் ரோகங்கிடைக்கும். யோக (ஞான) மார்க்கத்தில் செல்வாயானல் சம்சாரத்தில் வியோகமும் பரமாத்மா சாதனமுங் கிடைக்கும். இவ்வுலகம் ஒரு நதி, இது அனாதி காலமாக ஓடிக் கொண்டிருக்கிறது. இதில் பாவ புண்ணியம், இன்ப துன்பம் என்னும் வேகம் சென்று கொண்டேயிருக்கிறது. ஆத்ம தேவன் சம்சாரத்தில் தொடர்பு வைத்து சம்சாரியாகி விட்டான். சம்சார தொடர்பைத் துண்டித்து விட்டால் இவன் பரமாத்மாவாகி விடுகிருன். நீ நதியில் விழுந்து செல்லுகின்ருய். நீ நதியின் தாரையல்ல. நதியிலிருந்து கரையேறி நித்ய சுத்த ஆன்ம வடிவமாயிரு. அப்பொழுது சுதந்தரனுகின்ருய்.

கங்கைக் கரையில் வித்யா நகர் என்று ஒரு நகர் இருக்கிறது. அங்கு ஒரு ஆஸ்ரமம் இருக்கிறது. அதில் போலா பாபா என்ஞெரு மகான் இருந்தார். அவர் நூல் ஒன்று செய்தார். அந்நூலுக்கு வேதாந்தச் சந்தாவலி என்று பெயர். அவர் திடீரென காலமாயினர். ஒருவர் அங்கிருந்து ஓடி வந்து மற்ஞெரு மகானிடம் சுவாமின் போலா பாபாவிற்கு முக்தியுண்டாயிற்று என்ருர். அதற்கு அம்மகான் — போலாபாபா என்றைக்குப் பத்தராக இருந்தார், இன்றைக்கு முக்தரானர்? என்ருர். முக்தரை முக்தரென்பது புதுமையாக இருக்கிறதென்றுஞ் சொன்னர்.

உண்மையில் ஒருவரும் பத்தருமல்லர் முக்தருமல்லர். பந்தனம் என்னும் பிரவாகத்தில் யார் விழுந்து கிடக்கிருர்களோ அவர்கள்தான் பத்தர்கள். முக்தியைப் பெறுபவர்களும் அவர்கள் தான்.

"பந்த முக்தி தானும் மந்தப் பரந்த புத்தி தனக்கேயாம்." கீதா சாரத் தாலாட்டு. பந்தமும், முக்தியும் விரிந்த புத்திக்கு என்பது பொருள். இதனுல் ஆன்மாவிற்கு இல்லை என்பது தெளிவு. தனக்குத் துன்பமென்று எண்ணினுல் துன்பம், இன்பமென்று எண்ணினுல் இன்பம். பந்தமும் முக்தியும் நாமே தேடிக் கொண்டதுதான். சம்சாரத்தில் இராமல் கரையிலிருக்கப்பழகு. இதற்காக உபநிஷத்தை ஓதுவதும், உணர்வதும் இன்றியமையாததேயாம். உபநிஷத்தில் பர வித்தை பகரப்பெற்றிருக்கிறது, அதில் அநந்தம், அஜரம், அமரம், நித்யம், சுத்தம் பூரண வடிவ பரமாத்மா நிரு பிக்கப்பெற்றிருக்கிறது. ஆதலின் அந்த பரவித்தை சம்பந்த மாக முதலாவது கண்டத்தில் சுருக்கமாகச் சொல்லப் பட்டது. இப்பொழுது இந்த இரண்டாவது கண்டத்தில் பர வித்தை விரிவாகக் கூறப்படுகிறது. அதைப் பரிசோதிப் பதற்காக ஈண்டு கரும சம்பந்தி, அபர ஞானம் அருளப் படுகிறது,

1—வது மந்திரம்

தத் ஏதத் சத்யம் மந்த்ரேஷு கர்மாணி கவயோ யாநி
3 4
அபஸ்யன் தாநி த்ரேதாயாம் பஹு தா சந்ததாநி,
1 2 2
தாநி ஆசரத நியதம் சத்ய காமா ஏஷ : வ : பந்தா :
சுகிர்தஸ்ய லோகே.

இ—ள்

கிராந்த தரிசி முனிகள் எந்த கருமத்தை மந்திரத்தில் கண்டார்களோ அது சத்யம். திரேதாரூப யக்ஞத்தில் அந்தக்கருமங்களைப் பற்றி விரிவாக விளம்பியிருக்கிறது. நமது எண்ணம் நிறைவேறுவதற்காக நியமத்தோடு அவை களைச் செய்ய வேண்டும். இதுதான் உங்களுக்கு உலகத்தில் உத்தம மார்க்கம்.

கிராந்ததரிசி—முக்காலத்தையும் உணர்பவர். தத் ஏதத் சத்யம்—இந்த வார்த்தை உண்மைதான். சம்சா ரத்தில் எவன் தன்னைக் கார்த்தா, போக்தாவாக எண்ணிக் கொண்டு செய்கிறானோ, அவனுக்கு இந்த வார்த்தை முற்றி லும் உண்மையே, அசத்யமில்லை.

கவய :— வசிட்டர், விஸ்வாமித்திரர், வியாசர் முதலிய முனிவர்கள். மந்த்ரேஷு — வேதமந்திரங்களில். யாநி கர்மாணி அபஸ்யன் — எந்தக்கருமத்தைப்பார்த்தார்களோ, எந்த மந்திரத்தை எந்தக் கருமத்தில் உபயோகிப்பது என்று எண்ணினார்களோ, அதை ''த்ரேதாயாம் பஹுதா சந்த தாநி'' அந்த மந்திரங்களுக்கு யாகத்தில் முக்கிய உபயோகம். எந்தக் கருமத்தில் ஹோதா, அத்வர்யு, உத்காதா இம்மூன்று பேர்களும் தமது கடமையைச் செய் கின்றார்களோ, அந்தக்கருமத்திற்கு த்ரேதா என்று பெயர். இந்தத்திரேதா கர்மத்திற்கு உபகாரியானதால் அக்நியை த்ரயியென்றார். ரிஷிகள் என்பது கருத்து.

சத்யகாமா:— நீ உனது ஆசைகளை நிறைவேற்ற வேண்டுமென்றால், நியதம்—நியமமாக, தாநி—அந்தக் கரு மங்களை, ஆசரத—முறைப்படிசெய். சாஸ்த்திர முறைப்படி மனதை அடக்கி செய்ய வேண்டிய வினைகளைச் செய் என்பது குறிப்பு. மனதில் வந்ததைச் செய்யாதே. 'மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்' என்பது ஆன்றோர் அருள் மொழி, பொருள் வெளி. வாசனை என்கின்ற வெள்ளத்தால் அடிபட்டுச் செல்லாதே.

ஏஷவ: பந்தா: சுகிர்தஸ்ய லோகே—உலகத்தில் உனக்காக இது புண்ணிய மார்க்கம். நல்வழி என்பது கருத்து. இக் கருமம் உனக்கு இகபர இன்பத்தை ஈயும்.

எப்பொழுது நீ சந்தியா வந்தனம் செய்ய வேண்டுமோ அப்பொழுது நீயே செய்ய வேண்டும். உனது

கடமையை உனது சிஷ்யனையோ, மகனையோ செய் என்று சொல்லக் கூடாது. மகனே! அல்லது சிஷ்யனே! எனக்காக இக் காலைக்கடனைச் செய், எனக்காக நீராடு, அறத்தைச் செய், ஆலயத்திற்குப் போ என்றெல்லாம் கூறுவது முறையாகாது. எனக்காக நீ உணவை உண் என்று நீ சொல்வதில்லை, அது போல் மேற்கூறியதையும் சொல்லாதே. எங்ஙனம் ஒருவர்க்காக ஒருவர் உணவு உண்கிறதில்லையோ, ஒருவர்க்காக ஒருவர் மலங்கழிக்கிறதில்லையோ, ஒருவர்க்காக ஒருவர் உறங்குவதில்லையோ, அங்ஙனம் ஒருவர்க்காக ஒருவர் தியாகம் பண்ண இயலாது. தியானம், சிந்தனம், வழிபாடு இவைஎல்லாம் தாமே செய்ய வேண்டும் கர்த்தவ்ய கருமங்களைத் தானே செய்வது முறையாகும்.!

## 2 வது மந்திரம்

### தொடர்ச்சி

எவன் பாமரனோ அவன் பாவகருமத்தைப் பயப்படாமல் செய்வான், பாவகருமத்தைச் செய்வதில் யாருக்கு இன்பமுண்டாகுமோ அவன் பாமரன் எனப்படுவான். அவனுக்குச் சாஸ்த்திரங்களில்லை. யாருக்கு இவ்வுலகத்திலும், பரலோகத்திலும் நம்பிக்கையிருக்கிறதோ, யார் இரு உலகத்தையும் ஒப்புக்கொள்கிறாரோ, அவர்க்குச் சாஸ்த்திரம் உண்டு. எங்ஙனம் மக்களில் ஆசையோடு கூடியவன் விஷயி—பாமரன். அவனைநோக்கி, மனிதனே சகாமகருமத்தை விட்டு நிஷ்காம கருமத்தைச் செய் என்று நூல்கள் நுவலுகின்றன. நுவலுதல்—சொல்லுதல். இதனால் தனது மனம்போல் வினைசெய்து வந்தவனுக்கு ஒரு தடை ஏற்பட்டது. நூல்களில் கருமத்தை விதித்தது மனம் போல் செய்வதற்கன்று. ரிஷிகள் கருமத்தைச் சொன்னது மனதை ஒருமைப்படுத்துவதற்காக, நினைத்தபடி செய்வதற்கல்ல. விவசாயத்திற்கு நிலம் இன்றியமையாதது, அதுபோல்

வேதாந்தத்திற்கு மனம் முக்கியம். அதனுல் அதிகாரி மனதை சாவதானமாக வைத்திருக்கவேண்டும். வைதிக கருமங்களில் முக்கியமான கருமம் அக்னி ஹோத்ரம். ஏனெனின் அதில் நிரம்ப நியமங்கள் விதிகள், முறைகள் கையாளப்படுகின்றன. தியாகம், பொறுமை, விழிப்பு, புனிதம், பொறி புலன்கள் அடக்கம் இவையெல்லாம் தேவைப்படுகின்றன.

ஒரு வேளை மனதில் எது வருகிறதோ, அதைச் செய்வாயாகில், அது தருமமார்க்கமாகாது. யாகம் செய்ய வேண்டுமானுல் நிரம்பப்பொருள் வேண்டும். அதுவும் தூய வழியிலிருந்து வரவேண்டும். பொருள் சுத்தமாக இருக்க வேண்டும். கருமமும் சுத்தமாக இருக்க வேண்டும். குறைந்த அளவாவது அறநூல், அறிவுநூல் அவசியம் கற்றிருக்க வேண்டும். வாழ்க்கையில் நியமம் வேண்டும். இம்மாதிரி பொருள்சுத்தம், வாழ்க்கை சுத்தம், கல்வி, ஒழுக்கம் சதாசாரம் இவையெல்லாம் தேவையாகின்றன.

யாகத்திற்குப் பலன் சுவர்க்கத்தில் கிடைக்கின்றது. அடுத்த ஜென்மத்தில் கிடைக்கும். கிடைத்தால் கிடைக்கட்டும் என்னும் நம்பிக்கையிருந்தால்தான் யாகத்தில் முயற்சியுண்டாகும். இதனுல் என்ன தெரிகிறது? தேகத்திற்கு ஆன்மாவேறு என்பது தெளிவாகிறது. இந்த ஆன்மா பலவான். தேகஅபிமானம் அழியும்.

(சகாமன்) ஆசையுடையவன் தேக போகங்களுக்காக சாஸ்த்ர கருமங்களைச் செய்யக்கூடாது. உடலில் கவனத்தை வைக்காமல் உடலுக்கு வேருக இருக்கும் உத்தமன் இடத்தில் கவனத்தை வைக்கவேண்டும். தேக அத்யாசம் ஒழிய வேண்டும். இம்முறைக்காக சுருதி, ஹோமத்தை விதிக்கின்றது.

2—வது மந்திரம்

3 4
யதா லேலாயதே ஹி அர்ச்சி : சமித்தே ஹவ்யவாஹநே
3 3 3 3
ததா ஆஜ்யபாகா வந்தரேண ஆஹுதீ : பிரதிபாதயேத். 2

இ—ள்

எப்பொழுது நெருப்பு கொழுந்து விட்டு எரியுமோ அப்பொழுது இரண்டுக்கும் நடுவில் ஹோமம் செய்ய வேண்டும்.

ஹவ்யவாஹன்—ஹவ்யம்—தேவர்களுக்குக் கொடுக்கும் உணவு. மனிதன் உண்கிற உணவு அன்னம். அமரர் உண்ணும் உணவுஹவ்யம். மானவர் இமையவர்க்கு ஈயும் உணவை யெடுத்துக் கொண்டு எவன் செல்கிருனே அவன் ஹவ்யவாஹனன். அக்னியென்பது பொருள். அவ்வக்னி மந்தரமூலமாகப் புனிதமானது.

சமித்தே ஹவ்ய வாஹநே யதா அர்ச்சி : லேலாயதே—அணைந்துபோன நெருப்பில் வேள்வி செய்யக் கூடாது. வேள்வி—ஹவனம். எப்பொழுது நெருப்பிலிருந்து புகை கிளம்புமோ, அப்பொழுதும் ஹோமம் செய்யக்கூடாது. எப்பொழுது அக்னிகொழுந்துவிட்டு எரியுமோ அப்பொழுது ஹவனஞ் செய்ய வேண்டும். நெருப்பிலிருந்து ஜ்வாலைகள் எழவேண்டும், நான்கு பக்கங்களிலும் பரவ வேண்டும், அவ்வமையம், அவ்வனலில் ஆகூதி கொடுக்க வேண்டும் என்பது குறிப்பு. இந்த அனலோனுக்கு ஹவ்ய வாகனனென்று பெயர்.

ஆஜ்ய பாகௌ அந்தரேண—தர்ச பௌர்ணமாசம் என்னும் ஒருயாகம். அதில் ஆஹவனீய யாகத்திற்குப் பின்னர், அக்னயே ஸ்வாஹா என்றும், தெற்குத்திசையில் சோமாய ஸ்வாஹா என்றும் இவ்விரு மந்த்ர மூலமாக

ஒவ்வொரு ஆகூதியும் கொடுக்கப்படுகிறது. இதை ஆஜ்ய பாகம் என்று சொல்வார்கள். எங்கு இவ்வாகூதி ஈயப்படுகிற தோ அதற்கு மையமான இடத்தை ஆவாபஸ்த்தானம் என்று மொழிந்திருக்கிறது. மற்றைய ஆகூதிகளை, ஆவா பஸ்த்தானத்தில் கொடுப்பார்கள்.

இதற்கு என்ன தாத்பரியம்? வைதிககருமங்களை முறைப்படி செய்ய வேண்டும் என்பது தெரிகிறது. நெய்யை நெருப்பில் வார்க்கும் பொழுது கவனமாக இருக்க வேண்டும். ஏனெனின் நெய்த்துளி அக்கம்பக்கம் சிதறக்கூடாது. சிதறின காரியம் செம்மையாகாது என்பது சிறந்தோர் தீம் மொழி. சாவதானந்தான் சாதனம். 2

தொடர்ச்சி

நிரம்பிய கவனம் மனிதனுக்கு இருக்கிறதில்லை. கவனம் அவசியம் வேண்டும் என்று ஏன் சொல்லப் படுகிறது? கவனமில்லாமல் கருமத்தைச் செய்தால் அதற்குப் பலன் விபரீதமாகும். கவனக்குறைவால் எவ்வளவுகேடு உண்டாகும் என்பதை யிம்மந்திரங்கூறுகின்றது

3—வது மந்திரம்.

3
யஸ்ய அக்னி ஹோத்ரம் அதர்ஸம் அபௌர்ண

1 3
மாசம் அசாதுர்மாஸ்யம் அநாக்ரயணம்

2 1
அதிதி வர்ஜிதஞ்ச | அஹுதம் அவைஸ்வதேவம்

4
அவிதி நாஹுதம் ஆசப்தமாம்ஸ்தஸ்ய லோகான்

ஹிநஸ்தி || 3

இ — ள்.

யாருடைய வேள்வி, தர்சம், பௌர்ணமாஸ்யம், சாதுர்மாஸ்யம், ஆக்ரேயணம் ஆகிய இந்தக் கருமங்கள் இல்லாமலும், அதிதிகளுக்குச்செய்ய வேண்டிய காலத்தில் ஹோமத்தைச் செய்யாமலும், வைஸ்வ தேவன் என்னும் கருமத்தைச் செய்யாமலும், செய்தாலும் முறைப்படி செய்

யாமலும் இருக்குமானால், அவனுடைய ஏழு உலகங்களும் அழிந்து விடுகின்றன. அந்நெறி இல்லாத கருமங்கள் அவனது ஏழு உலகத்தையும் அழிக்கின்றன.

சாஸ்திரத்தில் கருமங்கள் மூன்று விதமாக மொழியப் பெற்றிருக்கின்றன. — நித்ய கருமம், நைமித்திக கருமம், காமிய கருமம். சந்தியாவந்தனம் நித்ய கருமம். கிரஹணம், அமாவாசை, பௌர்ணை ஆகிய காலத்திலும், குழந்தை பெறுகின்ற காலத்திலும், என்ன செய்ய வேண்டுமென்று நூல்களில் இயம்பி இருக்கிறதோ அந்தக் கருமம் நைமித்திக கருமம். இந்த நித்ய கருமமும், நைமித்திக கருமமும் செய்ய வில்லையானால் (பிரத்யவாயப்) பாவமுண்டாகும். காமிய கருமம் செய்யாவிடில் பாவம் உண்டாகிறதில்லை, ஏனெனின் ஏதோ ஒரு ஆசையைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று செய்யப்பட்ட கருமம் காமிய கருமம் எனப்படும். புதல்வனைப் பெறுவதற்காகப் புத்ரேஷ்டியாகம் செய்ய வேண்டுமென்று அவசியமில்லை.

சந்தியாவந்தனம், தர்ச பௌர்ணமாஸ்யம், மகா சங்ராந்தியில் ஸ்நானம் பண்ணுவது இவையெல்லாம் நித்ய, நைமித்திக கருமமாகும், பயனைப் பெறுவதற்காக இவைகளைச் செய்கிறதில்லை. கடமைக்காகச் செய்வது. 'என்கடன்பணி செய்துகிடப்பதே' என்றபடி. இது நிஷ்காம கருமம். தர்ஸகருமம் — அமாவாசையில் செய்யும் கருமம். அதை அமாவாசையில் செய்கிறான். பௌர்ணமி யில் செய்யப்பட்ட நல்ல கருமங்கள் பௌர்ணமாஸ்யம் எனப்படுகின்றன. இவ்விரு கருமங்களும் அக்னிஹோத்ர யாகத்தோடு சம்பந்தம் வைத்திருக்கின்றன. இம் மாதிரி சாதுர் மாஸ்யம் — மழைக்காலத்தில் நான்கு மாதங்களில் அனுஷ்டிக்கப்பட்ட கருமங்கள் சாதுர்மாஸ்யம் எனப்படும். இதுவும் அக்னிஹோத்ரத்தோடு தொடர்பு வைத்திருக்

கிறது. ஆக்ரேயண கருமம் சரத்காலத்திலும் அதற்குப் பின்னுலும் செய்யப்பட்ட கருமம். இந்த யாகம் சரத் காலத்திலும், அதற்குப் பிறகும் செய்யப்படுவது.

உணவு உண்கிறபோது திடீரென வருபவர் அதிதி எனப்படுவர். இல்லறத்தவர்கள் அவர்களுக்குச் சத்காரம் அவசியஞ் செய்ய வேண்டும். கால நேரம் பார்த்து ஆகூதி நித்யம் பண்ண வேண்டும். உணவு சமைத்து முடிந்தவுடன் தினந்தோறும் வைஸ்வ தேவனுக்குக் கொடுத்து உண்ண வேண்டும். இக்கருமங்களெல்லாம் அந்தந்த நேரங்களில் தவருமல் செய்ய வேண்டும். முறைப்படி செய்ய வேண்டும். இவைகளில் யாதாவதொன்றை, எப்போதாவது, யாதொரு காரணத்திலைாவது செய்யாதொழியின், அதனுல் பாவம் உண்டாகும்.

என்ன பாவம் உண்டாகும்? ஆசப்தமாந் தஸ்ய லோகான் ஹிநஸ்தி—இந்தக் கருமங்கள் குற்றம் உடைய வைகளாகவும், விதியில்லாமலும், ஒன்று ஊனம் உறு மானுலும், செய்பவனுடைய ஏழுலகமும் அடியோடு அழிந்து போகும். கர்த்தா புண்ணியஞ் செய்து பணந்தேடி வைத்தது போல ஏழு உலகத்தைத் தேடி வைத்திருந்தான். அவை யனைத்தும் அழிந்துவிடுகின்றன என்பது கருத்து. ஏழு உலக மாவன—பூ, புவ, ஸ்வ, மஹ, ஜந, தப, சத்யம். பணம் இருப்பவர்கள் எந்த ஊருக்கும் போகலாம், அதுபோல் புண்ணியம் உள்ளவர்கள் மேலே சொன்ன ஏழுலகத்தில் எந்த உலகத்திற்கும் செல்லலாம். அதற்கு நிமித்தமாக இருப்பது புண்ணியம், அந்த புண்ணியத்தை இந்த தவருன கருமங்கள் அழித்துவிடுகின்றன. எனவே வினைகள் செய்கிற பொழுது கவனமாக இருக்க வேண்டும் என்பதை இம் மந்திரம் உணர்த்துகின்றது. 3

தொடர்ச்சி

ஏந்த அக்னி ஹோத்ரத்திற்கு இவ்வளவு மகத்துவமோ, அவ்வளவு மகத்துவம் கரும பலத்தில் இல்லை. இனி இங்கு தெய்வ வடிவத்தை இம் மந்திரம் கூறுகின்றது :-

1 1
காலி கராலீச மநோா ஜவாச
4
சுலோஹிதா யாச்ச சுதூம்ரவர்ணு
3 1 1 3
விஸ்புலிங்கிநீ விஸ்வருசீ ச தேவீ
லேலாயமாநா இதி சப்த ஜிஹ்வா : 4

இ — ள்.

காலீ, கராலி, மநோஜவா, சுலோஹிதா, சுதூம்ரவர்ணு, விஸ்புலிங்கிநி, விஸ்வருசீச தேவீ, இவை ஏழும் யாக சாலையில் கொழுந்துவிட்டு எரிகின்ற அக்னிக்கு ஏழு நாக்குகளாம். 4

தொடர்ச்சி

அக்கினிக்கு ஏழு நாக்குகள், இந்த ஏழு நாக்குகளை எண்ணினதால் என்ன பயன்? பதில் கூறுவதற்காக இம் மந்திரம் வருகின்றது.

5—வது மந்திரம்

1 4
ஏதேஷு யஸ்சரதே ப்ராஜ மாநேஷு
3 3 3
யதாகாலம் ச ஆஹுதயோ ஹி ஆததாயந்
தம் நயந்தி ஏதா : சூரியஸ்ய ரஸ்மயோ
3 1
யத்ர தேவாநாம் பதிரேகோ அதிவாச : 5

இ—ள்

எந்த மனிதர்கள் இந்த கொழுந்துவிட்டு எரிகின்ற அக்னியின் நாக்குகளில் அந்தந்த நேரங்களில் ஆகுதிகொடுக்கின்ருர்களோ, யாகத்திலுள்ள நெறிமுறைகளைக் காப்பாற்றுகின்ருர்களோ அவர்களை இந்த ஜுவாலைகள் சூரிய கிரணமாகி மேல் உலகத்திற்குக் கூட்டிச் செல்கின்றன. எங்கே செல்கின்றன என்பாயாகில் எங்கு இமயவர்க்குத் தலைவன் இந்திரன் இருக்கின்ருனே, அங்குக் கூட்டிச் செல்கின்றன என்பது பொருள்.

புகை வருகின்ற நெருப்பில் ஹவனம் செய்யக் கூடாது. பிராஜமாநேஷு — கொழுந்துவிட்டு எரிகின்ற நெருப்பில் ஹவனம் செய்ய வேண்டும்.

யதா காலம் ச ஆகுதயோ ஹி ஆததாயந் — ஆகுதி கொடுக்கின்ற வேளையில் அக்னி ஹோத்ரத்தின் முறைகளைக் கையாண்டு குறித்த நேரத்தில் ஹவனம் கொடுக்க வேண்டும். இந்நியமங்களைக் காத்து வருகின்ற போது அந்த அக்னி ஜுவாலைகள் சூரிய கிரணவடிவமாகின்றன, அவ்வடிவமாகி ஹவனம் செய்பவனை அமரர் உலகத்திற்கு அழைத்துச் செல்கின்றன. அமரர்கள்—தேவர்கள், அவர்கள் உலகம் சொர்க்க லோகம். அதற்குத் தலைவன் இந்திரன். அவன் வசிக்கும் தலைநகரம் அமராவதிப்பட்டிணம். இந்த ஹவனம் செய்பவனை மேற்கூறிய ஜுவாலைகள் அப்பட்டிணத்திற்குக் கொண்டு சேர்க்கின்றன. 5

தொடர்ச்சி

அக்னி ஹோத்ரஞ் செய்பவனுக்குத் தவறுதல் மூலமாக எழும் தீங்கினை முந்திய மந்திரத்தில் மொழியப் பெற்றது. அதற்குப் பிந்திய மந்திரத்தில் அக்னிக்கு ஏழு நாக்குகள் இன்னது, இனியது என்றும், இவ்வேழும் இவனையின்ன உலகத்திற்குக் கூட்டிச் செல்கின்றன என்றும் இயம்பப் பெற்றது. இனி வருகின்ற மந்திரத்தில் யஜமானை யெங்

னம் கூட்டிச் செல்கின்றதென இயம்பப்படுகிறது.

6—வது மந்திரம்

ஏஹி யே ஹீதி தம் ஆஹுதய : சுவர்சஸ : 1

சூரியஸ்ய ரஸ்மிபிர் யஜமானம் வஹந்தி | 4

ப்ரியாம் வாசம் அபிவதந்தியோ அர்ச்சயந்த்ய 1 4 3

ஏஷ : வ : புண்ய : சுக்ருதோ பிரஹ்ம லோக :

இ—ள்

அந்த ஒளிமய ஆஹுதிகள், வாருங்கள், வாருங்கள் என்று அழைத்து நீங்கள் செய்த தவத்தால் உங்களுக்கு இந்த பிரஹ்ம லோகம் கிடைத்திருக்கிறது. வாருங்கள், வாருங்கள் என்று மதுர மொழிகளை மொழிந்து, யஜமானுக்கு இனிய உபசாரங்களைச் செய்து, அவனை சூரிய கிரஹணத்தின் வழியாகக் கூட்டிச் செல்கின்றது.

சுவர்ச்சஸ—யஜமானுடைய ஆகுதியானது அழகுடையதாகின்றது. அவனஞ் செய்பவனை அரிய மொழிகளால் உரிய நேரத்தில் முறையான சத்காரம் பண்ணிக் கூட்டிச் செல்கின்றன. சூரியரஸ்மிபி :— ஒளிமயமான மார்க்கத்தில் (பிரஹ்ம) சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்கின்றன. ஈண்டு பிரஹ்ம லோகம் என்றது சுவர்க்க உலகத்தை. 6

தொடர்ச்சி

எங்ஙனம் அக்னி ஹோத்ரத்தின் வாயிலாக சுவர்க்கம் கிடைக்குமானால் பின்னர் மனிதன் அங்ஙனம் ஞானத்தை யேன் நாட வேண்டும், அதற்கு ஏன் முயற்சிக்க வேண்டும்? வாழ்நாள் முழுதும் கருமங்களைச் செய்பவனுக்கு மற்றைய முயற்சி செய்ய இயலாதே யென்னும் கேள்விக்குப் பதில்.

7—வது மந்திரம்

3 4
ப்லவாஹ்யேதே அத்ருடா யக்ஞரூபா
3
அஷ்ட்டா தசோக்தம் அவரம் யேஷு கர்ம!
4 3 4
ஏதத்சிரேயோ யே அபிநந்தந்தி மூடா
ஜராம்ருத்யும் தே புநரேவாபியந்தி 7

இ—ள்

ஈண்டு உருவகப்படுத்தியுரைக்கின்றார் ரிஷி. யாகரூபம் கருமம் — திரவ்யம், தேவதை, தியாகம் இம் மூன்றும் யாகம் எனப்படும். எந்த யாகமென்னுந் தோணிக்குப் பதி னெட்டுப் பேர்கள் ஓட்டுபவர்களோ, எந்த யாகமெனும் தோணி யிழிந்த கருமத்தோடு கூடியதோ, மிக மெலிந்த ஓடமோ அது யாக வடிவ தோணியாகும். இதன் நிலைமை யைத் தெரியாத அறிவிலார் இதை நிலையுள்ளதாகக் கருது கின்றனர். அத்துடன் நில்லாமல் இதுவே நமக்கு மேலான நிலையைத் தரத்தக்கதென்று நினைக்கின்றனர். இவ்வாறு எண்ணும் மனிதர்கள் இறப்பையும், பிறப்பையும் இழிந்த கிழப்பருவத்தையும் எய்துவர்.

ஹி யக்ஞரூபா ஏதேப்லவா: கிந்து அத்ருடா:— நிச்சய மாக இந்த யாகவடிவகருமம் தோணிகளே. ஆனாலும் இதைக் கொண்டு பவக்கடலைக்கடக்க இயலாது. ஏன்? இவை மிகுந்த மெலிவடைந்தவை. திடம் இல்லாதவை. மண்குதிரை மேலேறி ஆற்றில் இறங்குவது போலாகும் இந்த தோணி யை இழுத்துச் செல்பவர் பதினெட்டுப்பேர்கள். இவ்வேலையை பதினெட்டு பேர்கள் செய்கின்றனர். பதினாறு புரோஹிதர் கள் -1பிரஹ்மா, 2பிரஹ்மணஸ்பதி, 3ஹோதா, 4உத்காதா, 5 பிரதிஹர்தா, 6 சுப்ரமண்யம், 7 மைத்திராவருணன், 8 பிரஸ்தோதா, 9 அச்சாவாக்கு, 10 கிராவஸ்துத, 11 நேஷ்ட்டா 12 உந்நேத்தா, 13 அத்வர்யு, 14 பிராஹ்மச்

சம்சி 15 ஹோதா, 16 இந்திரன். யஜமான், யஜமானின் துணைவி, ஆக மொத்தத் தொகை (18) பதினெட்டு.

அவரம் ஏஷாகர்ம—இந்த பதினெட்டு பேர்களுடைய கருமம்—அவரம், இழிந்தது. ஞானத்தைப் பார்க்கிலும் மிக தாழ்த்தப்பட்டது. இக்கருமம் சுவர்க்கத்தை மட்டும் கொடுக்கக் கூடியது. இதனுல் தத்வ ஞானம் வருகிறதில்லை. தத்வஞானம் நிஷ்காம கருமத்தால் வரும்.

ஏதத்சிரேயோ யே அபிநந்தந்தி மூடா:—ஏனெனின் சுவர்க்கத்திற்குக் கொண்டு போனபுண்ணியம் அழிந்து போனதும் மரத்திலிருந்து கீழேவிழுந்தவன்போல் துறக்கத்திலிருந்து தலைகீழாக விழுகின்ருன். க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விஸந்தி கீதை. என்றபடி ஜராமரணம், பிணி, மூப்புசாக்காடு நிறைந்த சம்சாரத்தில் விழுகின்ருனென்பது துணிபு. கறங்குபோல் சுழன்றுவரும் கவலைநிறைந்த அவலக்கடலிலிருந்து ஒருபோதும் கரையேறுகிறதில்லை. கறங்கு—காற்ருடி. 7

தொடர்ச்சி

ஏதத்ச்சிரேயோ யே அபிநந்தந்தி மூடா — எவன் இந்தக்கரும மார்க்கத்தையே மேலாகக் கருதி வாயார வாழ்த்துகிருனே அவன் மூடன்—மூர்க்கன். இப்பேதமையால் அவனுக்கு என்ன கேடு என்பதை இதிலிருந்து மூன்று மந்திர மூலமாக மொழியப்படுகிறது.

8—வது மந்திரம்

3
அவித்யாயாம் அந்தரே வர்த்தமாநா :
4 3
ஸ்வயந்தீரா : பண்டிதம் மன்ய மாநா : !
4 4
ஜங்கந்யமாநா : பரியந்தி மூடா : !
4 2 4
அந்தேநைவ நீயமாநா யதா அந்தா : !!

இ—ள்

எவன் அறியாமையில் மூழ்கியிருந்து கொண்டும் ஆனால் தன்னைப் பெரிதாக எண்ணிக்கொண்டும் நான் அறிஞன், விவேகியென்று கூறிக்கொண்டும் திரிகிறானே, எங்ஙனம் குருடன் மற்றொரு குருடன் கழுத்தைப்பற்றிக் கொண்டு திரிவானோ அது போல் இம்மூர்க்கனும் படு குழியில் விழுகின்றான்.

அவித்யாயாம் அந்தரே வர்த்தமாநா:— கற்றவர்க்குச் செருக்கு வருவது இயல்பு. ஆனால் கல்வியில்லானும் கல்வி மான் போல்நடிக்கிறானே, அவன் சேற்றில் விழுந்த புழு தன்னை கங்கையில் இருப்பதாக நினைப்பதுபோல் அறிவிலி அற்பநூல்களைக் கற்றுக் கொண்டு தன்னைப் பேரறிஞனாக எண்ணி நிமிர்ந்து, திமிர்ந்து, உயர்ந்து தடம்புரண்ட வண்டி தடுமாறி விழுவதுபோல்குழியில் விழுவான்.

குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்கா குருவினைக் கொள்வர்
குருடும் குருடும் குருட்டாட்டமாடி
குருடும் குருடுங் குழி விழுந்தவாறே. தி—ம.

இ—ள்

குருட்டினை நீக்கா—குருட்டு—இருட்டு—இருள் என்றபடி. இருள் இருவகைத்து—அகஇருள், புற இருள். உலகத்தை மறைக்கும் இருள் புறஇருள். ஆன்மாவை மறைக்கும் இருள் அகஇருள். அகம்—ஆன்மா, அதை மறைப்பது அகஇருள். நமது பிறப்புக்கு நமது மறதியே காரணம். ''தன்னை மறந்தவன் பிறந்திறந்து'' என்கின்றது கைவல்யம். தன்னை —ஆன்மாவை, மறந்து—நான் ஆன்மா வல்லன், ஆனால் நான் தேகம், அல்லது ஜீவன் என்று நினைப்பது. அதனால் பிறந்து இறந்து=பிறப்பு—ஜனனம். இறப்பு மரணம். இவ் விரு அலைகளில் அலமந்து மரம் விட்டு மரம்தாவும் மந்தி போல் திரிகிறான்.

இருள்—அஞ்ஞானம். அஞ்ஞானம் அரைகுறை ஞானம். பேர்பாதி யென்பது பொருள்.

''இருளெனப்படுவது இழிந்த அஞ்ஞானமே'' சமயோசிதமாலை. இழிவு— அழியும் இயல்பினை உடையது. மற்றவை வெளி. கதிரவன் புற இருளை கடிகிறான். அக இருளைக் குருபரன் அகற்றுகிறான். அப்படிப்பட்ட குருவைக் கொள்ளார்—கொள்ளாதவர். குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்—அக்ஞானத்தையகற்றும் வலிமையில்லாத குருவைக் கொள்வர்—கொள்ளும் இயல்பினையுடையவர். குருடும் குருடும் இரு குருடர்கள். குருட்டாட்டம் ஆடி—ஒருவர் தோளை யொருவர் பற்றி தட்டுண்டு தடுமாறி. குழி விழுந்தவாறு — பிறவிப்பெருங்கடலில் தானும் உருண்டு தன்னையண்டிய வரையும் உருட்டுவர். இஃது திருமூலர் கருத்து.

உலகியல்பு—தனக்கு வழிதெரியாது போனாலும் பிறர்க்கு வழிகாட்டுவது என்பது போல என்றபடி. குருடன் யார்? குடத்தில் எவன் மண்ணைப் பார்க்கவில்லையோ அவன்தான் குருடன். கண்ணில்லாதவன் குருடனன்று, பின்னை? கருத்தில்லாதவன் குருடன். கண்ணில்லாதவனுக்குச் சொன்னாலுந் தெரியாது.

டில்லியில் அக்பர் ஆட்சி புரிந்து வந்தார். ஒருநாள் அவர்க்கு ஒருஐயம் எழுந்தது. நமது ராஜ்யத்தில் எத்தனை குருடர்கள் இருப்பார்கள் என்று. அவருடைய அமைச்சர்களில் ஒருவன் வீரபலன். அவனையழைத்தார். அவன் வந்தான் அருகாமையில். அரசன்—வீரபல! நமது நாட்டில் எத்தனை குருடர்கள் என்று எண்ணிவா என்றான். வீரபலன் —அரசே! இதோ வருகிறேன் என்று கரத்தில் காகிதமும் எழுதுகோலும் எடுத்துக் கொண்டு முச்சந்திக்குச் சென்றான். அங்கு வருபவர் போபவர் பார்க்கும்படி யெழுதத் துவங்கினான்.

வழியில் வந்தவன்—ஐயா என்ன செய்கிறீர் என்ருன். வீரபலன்—உடனே இவன் ஒரு குருடன் என்று எழுதினுன். அடுத்தவன் வந்து அவ்வாறு வினவினுன். வீரபலன்—இவனும் குருடன் என்று எழுதினுன். யாரெல்லாங் கேட்டார்களோ அவர்கள் அனைவரையும் குருடனென்று எழுதினுன். இதற்குள் அக்பர் வந்தார். வீரபல! என்ன செய்கின்ருயென்ருர். வீரபலன்—இவரும் குருடரென்று எழுதிமுடித்து அக்பர்கையில் கொடுத்தான்.

அக்பர் வாங்கி வாசித்துப் பார்க்க, தாள் முழுதும் குருடன் என்று எழுதியிருந்தது. இறுதிப் பக்கம் பார்க்கும் போது, தானும் குருடனென்று எழுதப்பட்டிருந்தது கண்டு வியப்பும் வேதனையும் அடைந்தார். வேந்தன்—வீரபல! நமது ராஜ்யத்தில் எல்லாரும் குருடர்கள் நானும் குருடனுவென்று கேட்டார். வீரபலன் ஆம் என்ருன். மன்னன்—எங்ஙனம் என்ருன். வீரபலன் — நிருப! நான் எழுதிக் கொண்டுதானேயிருந்தேன், நீர் என்ன செய்கிருய் என்றீர். ஆகையால் நீரும் குருடர் என்ருன். இதைக்கேட்ட அக்பர் குலுக்கென்று சிரித்தார். இதனுல் என்ன தெரிகிறது? உள்ளதையுள்ளவாறு உணராதவன் கண்ணிருந்தும் குருடன் என்பது கருத்து. அறிவில்லாதவன் தானும்கெட்டு பிறரையும் கெடுப்பான் என்பது இனிது புலனும். 8

9 — வது மந்திரம்

அவித்யாயாம் ப்ஹுதா வர்த்தமாநா
வயம் க்ருதார்த்தா இதி அபிமந்யந்தி பாலா : 1
யத்கர்மிணோ நப்ரவேதயந்தி ராகாத்தேந
ஆதுரா : க்ஷீணலோஸ்ச்யவந்தே. 9

இ — ள்.

பொதுவாக மனித இனம் அறியாமையில் அழுந்துகின்றது. விவேகமில்லாத மக்கள் ஆணவத்தில் அழுந்துவர். பிறரை மதியார். இவ்வாறிருந்தும் தங்களைப் பெரிதாக நினைப்பர். இவர் மூர்க்கர். மூர்க்கர் கரும கிடங்கில் இருப்பதால் தனக்கு நிகர் யாரும் இலர் என்பர். இவர்களுக்குக் கருமத்தில் அழுத்தமும், பலனில் இராகமும் இருக்கும். ராகம் பற்று. இவையிரண்டின் காரணமாகத் தத்வ ஞானம் உதிக்கிறதில்லை. இதனால் கவலைக்குள்ளாகி, புண்ணியம் நஷ்டமானவுடன் துறக்கத்திலிருந்து மலையின் உச்சியிலிருந்து தலைகீழாக விழுபவன் போல் விழுகிறான்.

அவித்தையில்—குரங்கு கிளையில் இருப்பது போல் அறிவிலார் அவித்தையில் வாசம் பண்ணுகின்றனர். இவனுக்குப் புண்ணுக்கு மேல் புண் வந்த வண்ணமாக இருக்கிறது. இவனுக்கு ஆணவம் கார்க்காலத்தில் வெள்ளம் போல பொங்கிக் கொண்டிருக்கிறது. நான் இவ்வளவு யாகஞ் செய்தேன், இத்தனை தரும சாலை பண்ணியிருக்கிறேன். மருத்துவமனை, கல்வி நிலையம், உணவு விடுதியெல்லாம் செய்துவைத்திருக்கிறேன் என்னும் அகங்காரம் கழிவுநீர் சாக்கடையில் விழுவது போல் இவன் இதயத்தில் எழுகின்றது.

சிறுவர்கள் தலைவாயலின் மணலால் வீடு கட்டி விளையாடுவர். அப்பா அம்மாவிடஞ் சென்று அப்பா! நான் ஒரு பெரிய பவனம் கட்டியிருக்கிறேன் பார்த்தாயா, அம்மா! நான் ஒரு மாளிகைக் கட்டியிருக்கிறேன் வந்துபார் என்றால் பெற்றோர்கள் நகைப்பார்கள்தானே. அதுபோல் அகங்காரிகள் நான் அதைச் செய்தேன், இதைச் செய்தேன் என்பது, கோபுரத்தின் நடுவில் இருக்கும் பொம்மை நான்தான் கோபுரத்தைத் தாங்குகின்றேன் என்று எண்ணினால் எவ்வளவு இழுக்கோ அவ்வளவு இக்கருமிகள் சொல்வது.

கருமிகளும் குழந்தைகளும் ஒன்றேதான். குழந்தைகள் இது நல்ல நீர், இது கெட்ட நீரென்று தெரியாமல் சாக்கடையிலும், கழிவு நீர் நிறைந்த குண்டத்திலும் விழுந்து நீராடி களிக்கும். அதுபோல், இந்த அறிவில்லாத கருமிகள் ஆயாசத்திலும் பிரயாசத்திலும் துன்பம் நிறைந்த துறக்கத்திலும், தொலையாதப் பிணியில் விழுந்தும் தங்களைப் (கிருதார்த்த) புண்ணியாத்மாவாக நினைக்கின்றனர். இதற்குக் காரணம் இவர்களுக்கு பற்று தேகத்திலிருக்கிறது. இவர்கள் தேகாபிமானிகள். ஆன்மாவின் உண்மை வடிவத்தை யுணரார். விண்மிசை யெறிந்தகல் சிறிது நேரம் வேகமாகப்போம், வேகம் குறைந்ததும் மண்மிசை விழும். அதுபோல் இவர்களும் சிலகாலம் மேலேயிருந்து கொண்டு போன புண்ணியம் அழிந்ததும் ஒடிந்த மரம் கீழே விழுவது போல் விழுவார்கள். இதில் ஐயம் ஒன்றுமில்லை. 9

தொடர் மந்திரம்—

இஷ்டா பூர்த்தம் மன்யமாநா வரிஷ்ட்டம்
3
நாந்யச் சேரேயோவேதயந்தே ப்ரமூடா : |
4
நாகஸ்ய ப்ருஷ்ட்டேதே சுக்ருதே அநுபூத்வா
இமம் லோகம் ஹீநதரம் வா விஸந்தி | | 10

இ—ள்

இஷ்டம், பூர்த்தம் என்னும் கருமத்தை மட்டும் எல்லாவற்றிற்கும் மேலான சாதனமென்று நினைப்பவர்கள், வெறும் முரடர்கள். இவர்கள் வேறு எந்த சாதனத்தையும் சிறந்ததாக எண்ணுவதில்லை. இவர்கள் துறக்கத்தில் புண்ணிய பயனை அடைகின்றார்கள். நுகர்ந்து இந்த (மனித) உலகத்தில், அல்லது இதற்குக் கீழேயுள்ள எந்த உலகத்திலாவது (அவசியம்) விழுகிறான்.

யாகம் பண்ணுவது, இறைவழிபாடு செய்வது, பித்திருகளுக்குச் செய்யுங் கருமம் இவையெல்லாம் இஷ்டம் என்று இயம்பப்படுகிறது. கிணறு தோண்டுவது, குளம் வெட்டுவது, மரம் நடுவது, கல்வி நிலையம், மருத்துவமனை, நந்தனவனம் உண்டு பண்ணுவது, இவையெல்லாம் பூர்த்தம் எனப்படும். இவ்வுலகத்தில் எவ்வுயிருக்கும் உபகாரம் செய்வதும் பூர்த்தமாகும். சுருக்கமாகச் சொல்லப் போனால் பூர்த்திக்காகச் செய்யும் கருமம் பூர்த்தமென்பது இலக்கணம் சமூகத்திற்கும் சமுதாயத்திற்கும் இவை இன்றியமையாதவை. இருப்பினும் மனிதன் மேற்கூறிய வினைகளில் விழுந்து உண்மையை உணருகிறதில்லை.

இஷ்ட கருமத்தையும் பூர்த்த கருமத்தையும் செய்பவன் சுவர்க்கத்தையடைகிறான். ஆனாலும் கருமத்தால் உண்டாகும் (சக்தி) வலிமை சிறிதளவேயாம். அதுமட்டுமல்ல. வினையைச் செய்யும் போது நான் செய்கிறேனென்னும் அபிமானம் உண்டாகிறது. வினையின் வலியால் மேலே சென்றவன் அதன் அழிவால் கீழே விழுகிறான். கீழே என்பது பூமியை. மேலேயிருந்து விழுபவனுக்கு நிலையென்ன? தரையில் விழுவானா? அல்லது தலைகீழாய் அதற்கும் கீழே போவானா என்று சொல்ல இயலாது. தரையிலும் விழலாம், சகதியிலும் விழலாம், கிணற்றிலும் விழலாம், நதியிலும் விழலாம், சமுத்திரத்திலும் விழலாம். எங்கும் விழலாம். சுவர்க்கத்திலிருந்து தவறியவன் மனிதனாகப் பிறப்பான் என்று சொல்ல முடியாது மனிதனாகவும் பிறக்கலாம், மாடுகளாகவும் பிறக்கலாம், மற்றைய யோநிகளிலும் புகுதலாம். எந்த யோநியில் பிறப்பானென்று யாவர் அறிவார் இறைவா என்றபடி. 10

தொடர்ச்சி

காமிய கருமத்தால் மரணத்தில் இருந்து முக்தியுண்டாகிறதில்லை யென்றால் நிஷ்காம கருமம் செய். இந்த

விஷயத்தில் சிறிது சிந்திக்க வேண்டும். நிஷ்காம கருமத்திலுைம் ஆன்மாவின் அடைவு உண்டாகாது.

11—வது மந்திரம்

4
தப : சிரத்தே யே ஹி யுபவசந்தி அரண்யே,
4
ஸாந்தா வித்வாம்ஸோ பைக்ஷ சர்யாம் சரந்த :-
3
சூர்ய துவாரேண விரஜா : ப்ரயாந்தி,
யத்ராம்ருத : ஸ புருஷோஹி அவ்யயாத்மா.. 11

இ—ள்

சாந்தமாகவும், அறிவாளியாகவும், வனத்தில் வசிப்பவனுகவும், பிக்ஷை வாங்கி உண்பவனுகவும், உடலை மட்டும் ஓம்பி, தபசு, சிரத்தை முதலியவை செய்பவனுகவும், எவன் இருக்கின்ருனே. அவன் புண்ணிய சீலனுகி உத்தராயண வழியாகச் செல்கிருன். எங்கே செல்கிருன்? எங்கே அவ்யய வடிவமாயும், அமிருத வடிவாயும் புருஷன் இருக்கிருனே, அங்கே செல்கிருன்.

எவனெருவன் வானப்ரஸ்த்தனே அல்லது சந்நியாசம் பெற்றுக் கொண்டு வனத்தில் ஏகாந்தத்தில் வசிக்கிருனே, நம்பிக்கையோடு காலங் கழிக்கிருனே, எவனுடைய சித்தத்தில் இறைவனது நம்பிக்கையிருக்கிறதோ, முக்கரணங்களால் தபம் செய்கிருனே, அவன் வேதசாத்திரத்தில் பண்டிதனுக இருக்கிருன். அவன் போக போக்யங்களை விட்டு விலகியிருக்கிருன். இல்லந்தோறும் இரந்து உணவு உண்கிருன். மகா தபஸ்வி, அவனது மனதில் விசுவாசமிருக்கிறது. அவனுக்கு ஒரு போதும் பதட்டமுண்டாகிறதில்லை.

சாந்தமுடைய தபோதனன். எனவே, 'விரஜா'' அவனது உள்ளம் தூய்மையாயிற்று. அப்படிப்பட்ட மனிதன் அழிவற்ற அமிருத வடிவ அயனுலகத்திற்குச் செல்கின்ருன். அயன் அழிவற்றவனென்றும், அமிருத வடிவினன் என்றும்

சொன்னது உண்மையல்ல, உபசாரம். நான்முகன் உலகத்திற்குப் போகும் போது கதிரவன் வழியாகப் போகிருன்.

4

"ஆ ப்ரஹ்ம புவனு லோகா: புநராவர்த்திநோ அர்ஜுந! கீதை கீதையில் கீதா நாயகன் சொன்னதாவது—

அர்ஜுந! அயன் உலகம் வரை யெல்லா உலகமும் புநராவர்த்தி. மீண்டும் திரும்பும் வழி. அங்கிருந்து இவ்வுலகத்திற்குத் திரும்பி வரும் நிலையையுடையன. மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாரும் என்றபடி.

இந்த அறிஞன் சாந்தமாகவும், தபஸ்வியாகவும், பிக்ஷா ஜீவியாகவும், அரண்ய வாசியாகவும், அக்காரணத்தினுல் தூய்மையான உள்ளத்தையுடையவனுகவும், இருந்து கொண்டு தத்வஞானத்தை விரும்புவானுகில் அவனுக்கு கிரமமுக்தியுண்டாகும். ஆதவன்வழியாக அயன் உலகத்திற்குச் செல்லவே செய்கிருன். மகாப் பிரளயம் வரை யங்கு அவன் இருக்கிருன். மகாப்பிரளயம் வரும் பொழுது எவனுக்கு வேதாந்த விக்ஞானத்தில் வேட்கை யுண்டாகிறதோ, அவனுக்கு நான்முகன் நல்ல ஞானத்தை உபதேசிக்கிருர்.

அயன் உபதேசத்தால் பரிபக்குவம் அடைந்து அவனேடு விதேக முக்தியை அடைகிருன் என்பது சாஸ்த்திர மரியாதை. அங்கு சென்ருலும் யாருக்கு வேதாந்த விக்ஞானத்தில் விருப்பமில்லையோ, அவன் மீண்டும் சிருஷ்டியுண்டாகும்போது இகத்தை நோக்கி வருகிருன். ஆகையால் காலத்தைப் பாழாக்காமல் ஞானத்தைப் பெற முயல வேண்டும்.

"கால விலம்பனம் சாலவும் தீதே" மனோன்மணீயம். பிறகு கருமானுசாரம் கதியென்பது ஒரு நியாயம். அது

போல் மீண்டும் மீண்டும் பிறந்து இறக்க வேண்டி வரும். ''புநரபிஜனனம் புநர்பி மரணம். ப. கோ. என்றபடி. | |

தொடர்ச்சி --

காமிய கருமம் நிஷ்காம கருமம் இவை யிரண்டின் மூலமாக முக்திகிட்டவில்லை யென்ருல் இனியென்ன செய்வது என்பதற்குப் பதில் —

பரவித்தையில் உள்ள நானென்னும் அபிமானத்தை விட வேண்டும். அதுவும் எளிய முறையில் தெளிவாக அகற்ற முடியாது. அங்ஙனமாயின் என்ன செய்வது என்பாயாகில், பரவித்தையைத் துவக்கவேண்டும். அதற்காக வைராக்கியத்தையும், குருவை யடைவதுபற்றியும் ஈண்டு விசாரிக்கப்படுகிறது —

12 — வது மந்திரம்.

பரீக்ஷ்ய லோகாந் கர்மச் சிதாந் பிராஹ்மணோ
3
நிர்வேதம் ஆயாத் நாஸ்தி அகிருத : கிருதேந
4
தத் விக்ஞாநார்த்தம் ச குருமேவ அபிகச்சேத்
சமித்பாணி : ஸ்ரோத்திரியம் பிரஹ்ம நிஷ்ட்டம் 2

இ — ள்.

பிராமணர்கள் வினையின் பலனை விரும்பாதிருக்க வேண்டும். இதனுல் என்ன தெரிய வேண்டும்? (அகிருத) நித்திய தத்வம், கருமத்தால் அடைய மாட்டாது. எனவே அந்த நித்யதத்வத்தை அடையும் பொருட்டு கரத்தில் உபகரணங்களை யெடுத்துக்கொண்டு பிரஹ்ம ஞானியிடஞ் செல்ல வேண்டும்.

கர்மச்சிதான் லோகான் பரீக்ஷ்ய — வீடு கட்டுகிருேம், அதற்குரிய சாமான் — செங்கல், சுண்ணும்பு, சிமிண்டு, இரும்பு, கட்டை முதலிய பொருள்கள் வேண்டும், அது போல் சுவர்க்கத்தை யுண்டுபண்ணுவதற்குக் கருமம்

வேண்டும். மேற்கூறிய பொருள்களால் பவனம் உண்டா கிறது கருமத்தால் சுவர்க்கமுண்டாகிறது. ஒரு பவனம் உண்டு பண்ணுவதற்கு நிரம்ப சிரமம் உண்டாகிறது. ''கிரஹாரம்போ ஹி துக்காய'' ஸ்ரீ மத் பாகவதம். இல்லங் கட்டுவது இணையில் கஷ்டம் என்பது மேற்கூறிய வாக்கி யத்தின் பொருள்.

யாருக்குப் போகத்தில் ராகம் (ஆசை) அதிகம் இருக்குமோ அவருக்கு வீடு கட்டுவதால் உண்டாகும் கிலேசம் தெரியாது ஆசை அறிவைக்கெடுக்கும் கருவி யென்பது பழம் சொல். பொருளுக்காகவும் மனைக்ளைக் கட்டி வாடகைக்கு விடுவார்கள். பணத்தின் முந்நிலையில் துன்பந்தோற்றுது. யாரிடத்தில் ஆசையில்லையோ, உலோபம் இல்லையோ, அவர்கள் இதைப் பரீக்ஷை பண்ணிப் பார்க்கட்டும். சிந்தனை செய்து பார்க்க வேண்டு மென்பது இதன் பொருள்.

எந்த உலகத்தையடைய விரும்புகிறேமோ, அந்த உலகத்தின் ஆக்கத்தையும், அழிவையும், ஆராயவேண்டும். ஆராயாதவர் உள்ளத்தில்ஆன்மா இருந்தும் தெரிகிறதில்லை. ''ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே'' என்று திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான் அணிவாசகமாக அருளியதை நோக்குக. ஓருதல்—ஒருமையோடு எண்ணிப் பார்ப்பது.

''தத் கர்மச் சிதோ லோக : க்ஷீயதே யேவம்
ஏவ அமுத்ர புண்ய ச் சிதோ லோக :க்ஷீயதே''

சிந்தனை செய்து பார், இந் நிலமிசை, வினையினால் விளைந்த பவனம், சதனம், மாடம், கூடம் எல்லாம் அழிந்து போகின்றன, அது போல் மேலுலகத்திலும் புண்ணியத் தால் புவனங்கள், உலகங்கள் அழிந்து போகும்.

பலபொருளைக் கொண்டு பவனஞ் செய்கிறோம், அதைக் கட்டும் முதன்மைக் கொத்தனர்—ஐயா! ஒழுங்காக இப்பவனத்தை வைத்திருந்தால் நூறு ஆண்டுகள் இருக்கும், அதன் பின்னர் அழிந்துவிடும் என்கின்றார். அங்ஙனம் மாயனார் என்னும் கொத்தனார் — இத்தேகம் என்னும் பவனத்தையுண்டு பண்ணி நமக்குத்தந்து மகனே! இதையொழுங்காக வைத்திருப்பாயாகில் இதுவும் நூறு ஆண்டுகள் இருக்கும், அஃது இல்லையேல் என்றும் அழியும் என்று காலத்தைக் குறிப்பிட்டார். இதனால் முடிவில் எல்லாம் மடியும் என்பது முடிவு.

நாம் வசிப்பது பவனம், நான்முகன் வசிப்பது புவனம். நமக்கு நூறு ஆண்டுகள் கழிந்ததும் நமது தேகமும் நமது பவனமும் மாயும், நான்முகனுக்கு நூறு ஆண்டுகள் கழிந்ததும் அவன் தேகமும் அவனது புவனமும் மாளும். இங்ஙனம் இருப்ப, இதை நிலையென்று எண்ணுவது மூடத்தனம். ஆயுள் நூறென்பதை— ''சரதாம் சதம்'' வா.மீ.ரா. ''ஸதாயுர்வை புருஷ:'' வேதம். ''அரன்நமக்கு ஆயுள் நூறு அள்ளித் தந்தானம்மே'' வேதாந்தரத்னம். ஆயுள் நூறு என்பதை யிவ்வாக்கியங்கள் மூலமாக ஈண்டு ஊகித்துணர்க.

நாம்கட்டிய வீடு நம் கண்முன்னே யழிகிறது, நாம் இருக்க நம் மகன் இறந்து விடுகிறான். இவை யெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது உலகமனைத்தும் ஒழிந்து போகும் என்றுதானே தெரிகிறது. கொஞ்சமும் நிலையில்லாத உலகத்தைத் தஞ்சம் என்று எங்ஙனம் எண்ணுவது? ''ஊரும் சதமல்ல உற்றார் சதமல்ல.... நின்றாள் சதம் கச்சியேகம்பனே'' என்றார் பட்டிணத்து சுவாமிகள். நின் தாள்—உனதுதிருவடி. எஞ்சியது வெளி.

பறவை இரவுக்காகக் கூடு செய்கிறது, பகலில் பறந்து போகின்றது. இச் சீவனுக்கு இறைவன் ஆக்கையென்னும் கூட்டை சிறிதுகாலம் இருக்கட்டும் என்று ஈந்தான். அதில்

நாம் உடும்புபோல் ஒட்டிக்கொண்டிருக்கிறோம். அது விட்டாலும் போச்சு அலதுநாம் விட்டாலும்போச்சு. விழுந்த பல்லும், உதிர்ந்த ரோமமும் ஒன்றுக்கும் உதவா, அது போல் ஜரை, நரை, மூப்பு வந்ததும் இக்காயம் மாயமாய் மறைந்துவிடும்.

பறவையைப் போல ஓடியாடி வினைகளைச் செய்கின்றாய். சிறிது எண்ணிப்பார் இதனால் என்ன கிடைக்கிறதென்று. இதனால் காயத்திற்கு இன்பம் உண்டாகிறதா? மனத்திற்கு இன்பம் உண்டாகிறதா? போகமுண்டாகிறதா? அல்லது ஆத்மானந்தம் உண்டாகிறதா என்று எண்ணிப்பார். பரீக்ஷை செய்து பார்த்தால் தெரியும்.

வேதாந்தத்தில் (கருமங்களை) வினைகளை நிந்திப்பதற்கு என்ன காரணம் என்பதை யெண்ணிப் பார்க்க வேண்டும். வேதாந்தத்தில் கருமத்தைஇகழ்ந்தும், ஞானத்தைப் புகழ்ந்தும் கூறியிருப்பதை சம்சாரிகள் தெரியாத்தனமாகக் குறை கூறுகின்றனர். சாஸ்த்ரம் எல்லோர்க்கும் பொது. தாய் எந்தப்பிள்ளை யெதைவிரும்புமோ அந்தப்பிள்ளைக்கு அதைக் கொடுப்பாள், அதுபோல கருணைநற்றாயாகிய வேதம் அதிகாரிகளுக்குத் தகுந்தவாறு கருமம், பக்தி, ஞானம் இவைகளையருளியிருக்கின்றது.

வேதம் பரமாத்ம வடிவம், இறைவனிடத்தில் எல்லாம் இருக்கின்றன. ''சர்வோபேதாச்ச தத் தர்ஸநாத்'' பி. சூ. ஜீவனுக்காக என்ன என்ன வேண்டுமோ, அத்தனையும் அவனிடத்திலிருக்கிறதென்பது சூத்திரத்தின் பொருள். அவன்— ஈசன், இறைவன் கொடையாளி, பரமதயாலு, கருணைக் கடல், எல்லோர்க்கும் எதையும் ஈயும் இயல்பினன். ''வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'' அப்பர் தேவாரம். அன்பன் எதை விரும்புகிறானோ அதையளிப்பவன் என்பது பொருள்.

வேதபகவான் வினையை விரும்புபவர்க்கு வினையையும், பக்தியை நாடுபவர்க்கு பக்தியையும், ஞானத்தை விரும்புபவர்க்கு ஞானத்தையும் ஈவான் கண்டாய். நாம் ஒன்றை நாடும்போது இறைவனொன்றைத் தரமாட்டான். நமக்கு நன்கு தெரியும், ஞானமிலாது முக்தி கைகூடாதென்று, பெண்டுபிள்ளையை நாம் விரும்புவோமானால் வேதம் நமக்கு ஞானத்தைத் தராது.

இறைவனிடத்தில் குழந்தை வேண்டுமென்று வினவினால் குழந்தை கிடைக்கும். இன்பம் கிடைக்காது. இன்பம் ஞானத்தால் வரும். அறிவால் வருவது இன்பம், அறியாமையால் வருவது துன்பம் என்றபடி. பசி வந்தால் உணவு விடுதிக்குச்செல், பண்டம் வேண்டுமானால் அங்காடிக்குச் செல், பிணி போகவேண்டுமானால் வைத்தியரையணுகு, குளிக்க வேண்டுமானால் நதியை மேவு, ஞானம் வேண்டுமானால் குருவையடை. தடம் புரண்டு தடுமாறாதே.

ஒரு பொருளை ஒருவருக்கு உணர்த்த வேண்டுமானால் பிரமாணம் வேண்டுமென்பது சர்வமத சம்மதம். வஸ்துவின் நிரணயம் பிரமாணத்தால் உண்டாகிறது. இதனால் 'பரீக்ஷ்ய' என்று வேதம் கூறுகிறது. உருவ நிரணயம் கண்ணினாலுண்டாகிறது. கண்ணிழந்தவன் படிக்கவேண்டுமானால் அவனுக்குரிய எழுத்தறிவு இருந்தால்தான் படிக்கமுடியும். அதுபோல் பிரமாணம் இல்லாமல் வஸ்து ஞானம் உண்டாகாது. வஸ்து ஞானமில்லாமல் நிச்சயம் உண்டாகாது.

பிரமாணம் ஞானவடிவமா அல்லது கருமவடிவமாவென்று நாம் சிந்திக்க வேண்டும். சித்தத்திற்கு வேலையென்ன? சிந்திப்பதுதானே. ஞானத்தில் இருளில்லை, கருமத்தில் ஒளியில்லை. பிரமாணம் அறிவு சொரூபம். அறியும் வலிமையறிவுக்கு இருக்கிறது, கருமத்திற்கில்லை. பொருளை விளக்குந்தன்மை தீபத்திற்குத்தான் உண்டு, எண்ணைக்கில்லை. ஒலியை அறியவேண்டுமானால் காது பிரமாணம், உருவத்தை

யுணரவேண்டுமானுல் கண் பிரமாணம், ரசத்தையறிய வேண்டுமானுல் நாக்கு பிரமாணம். இதுபோல் ஈசுவர விஷயத்தில் ஞானம் பிரமாணமா அலது கருமம் பிரமாணமா வென்று சிந்தித்துப் பார்.

கருமம் கரணம் என்ருல் சாதாரண கரணமா அல்லது அசாதாரண கரணமா? ஒரு மனிதன் ஒருவனிடங் கேட்டான் — ஐயா! உங்கள் பார்வையில் உருவந் தெரிகிறதா தெரிய வில்லையா என்று, அவன் தெரியவில்லையென்ருன். உடனே இவர் - ஐயா! அங்ஙனமாயின் நீர் வைத்தியரையடைந்தால் அவர் உமக்குக் கண்ணொளி தருவாரென்ருர். அவன் அங்கு சென்ருன், தன் நிலைமையை வைத்தியரிடம் சொன்னுன், அவர் அவன் கண்ணில் மருந்தையூற்றி கண்ணிலுள்ள குற் றத்தை நீக்கி கண்ணுடியைக் கொடுத்துப் பார்க்கச் சொன் ஞர். அதன் பிறகு உருவம் நன்ருகத் தெரிந்தது. அது போல் இறைவனும் தனது தரிசனம் தர விரும்பினுல் ஞான வாயிலாகத்தானே தருவான். இதை விமலன் பதினோரா வது அத்யாயத்தில் பார்த்தனுக்குச்சொல்லவில்லையா? என்ன சொன்னுர்? ''திவ்யம் ததாமி தே சக்ஷு : பஸ்யமே யோகம் ஐஸ்வரம்'' ப.கீ. தனஞ்ஜய! உனக்கு ஞான நேத் திரத்தைத் தருகிறேன் அதைக்கொண்டு எனது ஐஸ்வரிய யோகத்தைப் பார் என்று பகவான் பகர்ந்தார் என்றதாலும் ஞானம் காரணமென்று காணலாம்.

முடிவு என்னை? இயல்பாக நேத்ரம் தூய்மையாக இருந் தாலும் சரி அல்லது வைத்யர் மூலமாக இருந்தாலும் சரி உருவ விஷயத்தில் கண் பிரமாணம் என்பது உறுதி. கருமம் ஞானத்திற்கு பிரமாணமில்லை, ஆனுல் அகத்தூய்மைக்குச் சாதனம். ஆசையில்லாமல் வினைகளைச் செய்தால் இறைவன் பிரசன்னமாகி சித்தசுத்தியை அளிக்கிருன். அதன் பின்பு உள்ளத்தின் ஒருமைப்பாடு உண்டாகிறது. ஞானத்திற்குக்

கண்ணுடி உள்ளத்தின் ஒருமைப்பாடுதான். சமம், தமம், உபரதி முதலியவை மருந்து.

இம் மருந்துகளைக் கண்ணில் விடுவது ஞானத்தோடு கலந்து கொள்வது. அதன் பிறகு ஞானஒளி மிகுதியாகி ஆத்ம தரிசனத்தையளிக்கின்றது மேற்கூறிய உபாயம். இறைவனுல் இயற்றிய திரணத்தோடும் வெறுப்பு வைப்பாயாகில் அவனையடைய இயலாது. அவன் — இறைவன். என்று கீதையில் கீதா நாயகன் கிளத்திஞன். இதனுல் இறைவன் அடைவில் விருப்பு வெறுப்பு பெருந்தடை.

பரீக்ஷ்ய லோகாந் கர்மச்சிதாந் — கருமத்தால் உலக உன்னதியுண்டாகக்கூடும். உன்னதி—க்ஷேமம். உண்மையின்பம் உண்டாகாது. நல்ல எண்ணத்தோடு வினையைச் செய்தோமாஞல், அது புத்தியைப் புனிதமாக்கும். புத்தி புனிதமானதும் பரமாத்மா அடைவு உண்டாகும். மனம் மலினமாஞல் ஞானமுண்டாகாது, அது இன்மையால் ஆன்மாவின் பிராப்தியுண்டாகாது. நீ லக்ஷ்யத்தை அடைய வேண்டுமாஞல் விழியைத் தூய்மைப்படுத்து. கையில் ஏந்திய துப்பாக்கியைக் கவனமாகப்பிடி, லக்ஷ்யத்தில் கருத்தை வை. அப்பொழுது உனது எண்ணம் நிறைவேறும். இல்லையேல் எவ்வளவு முயன்ருலும் லக்ஷ்யத்தையடிக்க இயலாது. கண்ணையுங் கருத்தையும் குறியில் வை. குறி தவருமல் இருக்கவேண்டும் நமது கருத்திலிருக்கும் குண்டு மகாவாக்யம். ''மறவாதிருமனமே உனக்கு மகாவாக்கியம் துணையே'' சமயோசிதமாலை.

''சத்யம் ஞானம் அநந்தம் பிரஹ்ம'' மனிதனது கடமை சத்தியத்திலிருக்கவேண்டும். ''உண்மையே யுனதடி தந்திடும் இறைவா'' என்கின்றது சமயோசிதமாலை. வாய்மையே வளமளிக்கும் வள்ளல். இறைவனுக்கு இல்லம் சத்யம். சூரியகுலமன்னன் அரிச்சந்திரன் — தரணியையிழந்தான்,

தாரத்தையிழந்தான், தனத்தையிழந்தான், தனயனையிழந் தான், தனது அரசுமுழுதையும் அன்புடன் துறந்தான்; சத்யம் ஒன்றையே தனக்கென நினைந்தான். இதனால் இவன் இடையறு இன்பத்தை எய்தினான். விரிவை அரிச்சந்திர புராணத்தில் காண்க.

சத்யம் பரமாத்மாவின் வடிவம். ''சத்யம் பிரஹ்ம'' பிரு—உ. விவகாரத்தில் சொன்ன சொல்லை மாறாதிருப்பது சத்யம். வேதாந்தத்தில் ஆன்மாசத்யம். விவகாரத்தில் வேதாந்தத்தைப் பார்ப்பதுதான் மனிதத்தன்மை. விவகாரம் வேதாந்தத்திற்கு முன்னோடி சாதனம். மேலேறுவதற்கு ஏணி சாதனம் போல.

சத்தியபுரியென்னும் நகரில் மெய்யாளன் என்னும் ஒரு வேந்தன் இருந்தான். அவன் திருவிலும், உருவிலும், தெறலிலும் சிறந்து திகழ்ந்தான், மிகுந்த போர்வீரன். கல்வியில் கடல்போல் வடகலை தென்கலை வழுவறப் பயின் றவன். சத்தியத்தைத் தனக்குக் குலதெய்வமாகக் கொண்ட வன். அவன் தனது நகரில் ஒரு ஆணையிட்டிருந்தான். இந்நகருக்கு எந்த வியாபாரி என்ன பண்டம் கொண்டு வந்து விற்காமலிருக்குமானால், அதை அரண்மனையில் எடுத்துக் கொண்டு அதற்குரிய பணத்தை அவ்வியாபாரிக்குக் கொடுக்க வேண்டும் என்று ஆணையிட்டிருந்தான்.

பல வியாபாரிகள் பல பண்டங்களை அங்கு கொண்டு வந்து விற்பது வழக்கம். விற்காத பண்டங்களை அரண்மனை யில் கொடுத்துவிட்டு (பொருளை) பணத்தைப் பெற்றுப் போவது மரபு. ஒரு நாள் சனி வியாபாரி மண்ணினால் சனி மூர்த்திகளைச்செய்து சாக்கில் நிறப்பி, அந்த ராஜ்யத்திற் குக் கொண்டு போனான். தெருத்தெருவாக அலைந்தான். மக்களைக் கூவியழைத்தான். மக்கள் திரண்டு வந்தனர், பண்டத்தைப் பார்த்தனர், அவ்வளவும் சனிமூர்த்திகளாக

இருந்தன. அதைக்கண்டு அனைவரும் அஞ்சினர். ஒருவரும் பண்டத்தை வாங்காமல் கொண்டுபோம் என்று அவரைக் கெஞ்சினர்.

அவர்—என்ன மாயம், கொண்டு வந்த பண்டம் ஒன்று கூட விற்கவில்லையேயென்று கவலை மனதில் கொண்டார். இதற்குள் மற்றொருவர் வந்து ஐயா! கவலை கொள்ளாதீர் அரண்மனைக்குக் கொண்டுபோம், அவர்கள் வாங்கிக் கொண்டு பணம் தந்துவிடுவார்கள் என்றார். வியாபாரி உவகையோடு அரண்மனையுள்ளே புகுந்தான், அங்குள்ள காவலர்கள் என்னவென்று வினவினர். ஐயா! கொண்டு வந்த பண்டம் விற்கவில்லை, ஆகையால் அரசன் ஆணைப்படி வாங்கிக்கொண்டு பணத்தைக் கொடும் என்றான். அவர்கள் அவிழ்த்துப் பார்த்தனர். எல்லாம் சனிமூர்த்திகளாக இருந்தன.

அனைவரும் அஞ்சி கொண்டுபோவென்று வெகுண்டனர். வியாபாரி—ஐயா இது நியாயமா, நீதிதானோ, அரசன் ஆணையை மறுக்கலாமா? என்று போராடிக்கொண்டிருந்தான். அந்நேரம் அரசன் வெளியில் வந்தான். என்னவென்று வினவினான். பாவலனுக்கு காவலர்கள் நிகழ்ந்ததை நிகழ்த்தினர். மன்னன்—மூர்த்திகளை உள்ளே வாங்கி வைத்துவிட்டு உரிய பணத்தை அவனுக்கு அளியுங்கள் என்று ஆணையிட்டான். காவலர்கள்—ஐயே! இது சனி மூர்த்தியென்றனர். வேந்தன் — என் குலதெய்வம், சத்யம் ஆகையால் அதைக் காப்பது என்கடமை, அரசன் எவ்வழி குடியவ்வழி, மன்னன் எப்படி மன்னுயிரப்படியென்பது மனுநீதி. எனவே மூர்த்திகளை வாங்கிக்கொண்டு பணத்தைக் கொடுங்கள் என்று கூறி உள்ளே நுழைந்தான் மன்னன்,

வேந்தன் விதிப்படி சேவகர்கள் அவ்வாறே செய்தனர். சனிமூர்த்திகள் அரண்மனைக்குள் வந்தன. அங்ஙனம் இருப்ப முதன் முதலாக தருமம் வந்து — அரசனே! நான் வெளியே போகிறேனென்றது. அரசன்—ஏனென்றான். தருமம்—சனி வந்துவிட்டது ஆகையால் நான் போகிறேனென்றது. அரசன் — போகலாம் என்றான். கலைமகள் வந்தாள். நானும் போகி றேனென்றாள். ஏனென்றான் அரசன். அவளும் முன்போலவே சொன்னாள். அரசன்—தாராளமாகப் போகலாம் என்றான். அவளும் போனாள். எட்டு அலைமகளும் வந்தார்கள். அரசே! நாங்களும் போகப்போகிறோம் என்றார்கள். ஏனென்று கார ணம் வினவ, அவர்களும் அவ்வாறே கூறினர். நீங்களும் போகலாம் என்றான் மன்னன்.

சத்தியம் வந்தது, அரசன் — நீயாரென்றான். நான் சத்தியம். நானும் போகப்போகிறேனென்றது. நிருபன்—நீ போகப்படாதென்று மறுத்தான். சத்தியம் — ஏனென்றது. பார்த்திபன்—உன்னைக் காப்பதற்குத்தானே சனிமூர்த்திகளை வாங்கினேன், நீ போவது நியாயமில்லை என்று தடுத்து விட்டான் சத்தியம் நின்று விட்டது. சத்தியம் நின்றுவிடவே, போனவர்கள் அனைவரும் திரும்பி வந்தனர். விண்ணும் மண்ணும் வேந்தனைப் புகழ்ந்தன. இவன் சத்தியத்திற்கு எடுத்துக்காட்டாக இகத்தில் திகழ்ந்தான்.

இதனால் என்ன தெரிகிறது? எந்நிலையிலும் சத்தியத்தை விடப்படாதென்றும், சத்தியம் எங்கிருக்கிறதோ அங்கு சகலமும் இருக்கும் என்றும் தெற்றெனத் தெளிவாகின்றது. "சத்யம் ஞானமநந்தம்" என்கிறது சுருதி. உண்மைப் பொருளையுணர்த்தும் நிமித்தம் சில இன்மைப் பொருளையும் இருப்பதாக இயம்ப வேண்டியிருக்கிறது.

"கற்பனை வந்தவாறு காட்டினோம்" என்கின்றது வேதாந் தம். கருமம் இவ்வுலக நலங்களைத் தரும். இதில் ஐயமில்லை.

மகரிஷி விஸ்வாமித்ரர் கருமத்தினுல் புதிதான சிருஷ்டி யுண்டுபண்ணி திரிசங்கு மன்னனுக்காக நவீன சுவர்க்கத்தை யும் படைத்தார். புத்தகம் படிக்கவேண்டுமானுல் கண்ணைக் கொண்டுதான் படிக்க வேண்டும். ஒரு பொருளை அறிய வேண்டுமானுல் கருத்தைக் கொண்டுதான் அறியவேண்டும். ஞானத்திற்குத் தூய்மையான பிரக்ஞை வேண்டும். அந்த பிரக்ஞை எந்த வாயிலாக வந்தாலும் சரி, யோகத்தாலோ, அல்லது சமாதி மூலமாகவோ, அல்லது சிரவணத்தின் பழக் கத்தினுலேயோ ஞானம் அவசியம் வரவேண்டும்.

''பரீக்ஷ்ய லோகாந் கர்மச்சிதாந் — இதில் அதிகாரிக் குரிய இலக்கணம் அருளியிருக்கிறது. ஏன் என்ருல், பிராஹ்ம மண:' என்று கூறியிருக்கிறது. இதற்குப்பொருள் — குல நூலாகிய வேதத்தையோதி யிருக்கவேண்டும். அதன் பின்பு கரும காண்டத்தின் மூலமாக எவ்வுலகம் அடையப்படுமோ, அதைப்பற்றி ஆராயவேண்டும்.

இங்கு வேதத்தில் கருமத்தை விதித்ததும், கருமத்திற் குப் பலன் சுவர்க்கம் என்றதும், அஞ்ஞானிகளுக்காக. கரு மத்திற்குப் பலன்—தக்ஷிணுயனம், அல்லது உத்தராயனம். விதி, நிஷேதம், சுவர்க்கம், நரகம் இவைகளின் அடைவு, இன்னும் பற்பல முறைகளைப் பற்றிப் பேசியிருக்கிறது. இவை களின் நிலைமையைச் சிந்திக்க வேண்டும்.

''பிராஹ்மண:— சுருதியில் அந்தணனென்றது அவர் களுக்குத்தான் கருமத்தில் அதிக மோகம் உண்டாகும், கரும பாசத்தில் அவர்கள்தான் மிக விழுவார்கள். பறவைகள் அற்ப இரைக்காக வலைக்குள் அகப்படுவதுபோல் கரும வலை யில் இவர்கள் கட்டுண்டு இருப்பார்கள். இதைக் கருதி தான் சுருதி பிராஹ்மண : என்றது. அவர்களைக் குறித்து சொன்னது இனிமேலாவது சாவதானமாக இருங்கள் என் பதற்காக.

ஏ அந்தணர்களே! பொன் பொருள், மண்மனை, பெண்டு பிள்ளை, இவைகளால் உங்களுக்கு என்ன நலம் உண்டாகப் போகிறது, தலைமேல் ம ர ண ம் தாண்டவம் ஆடுகிறது. யாருக்கு எந்த நேரம் மரணம் வரும் என்று யாவராலும் சொல்ல இயலாது. ஏ வேதியரே! உமது பிதாமகர் எங்கே? உமது பிதா எங்கே? விழிமின்—உமக்கும் அதே வழிதான்.

பிராஹ்மண :— என்றதால் அந்தணர்களுக்குத்தான் ஞானத்திலும், மோனத்திலும், அதைக்கூறும் உபநிடதங் களிலும் உரிமையிருக்கிறதென்று எண்ணலாகாது. யாரு டைய மனதில் சத்யத்தைப் பெறவேண்டும் என்று ஆவல் மிகுந்திருக்குமோ, அவர்களைத் தடுப்பவர் ஒருவருமிலர். பிராஹ்மண :— பிரஹ்மத்தையடைய விரும்புபவர். விவகா ரத்தில் முக்கியமானவர்கள் பெயரைச் சொல்வது வழக்கம்.

'சத்ரிஞ்ஞேயாந்தி' அரசர்கள் குடைபிடித்துக்கொண்டு செல்கின்றனர் என்று கூறுகின்றனர். அங்கு அரசனுடைய சிரசில் மட்டும் குடையிருக்கிறது. மற்றவர்கள் சும்மாதான் போகிருர்கள். இருப்பினும் சொல்வது இவ்வாறு. அதற்கு என்ன காரணம்? அக்குழுவில் அரசன் முக்கியம், ஆகை யால் அவன் பெயர் முன் மொழியப்படுகிறது.

போர்க்களத்தில் வெற்றியை வாங்கித் தருவது படை வீரர்கள். சொல்வது என்னை? அரசன் வெற்றியடைந்தான் என்கின்றனர். இது விடாத இலக்கணை. ஈண்டு அரசனை விடாமல் எல்லோரையும் சேர்த்து சொல்லப்படுகிறது. இம் மாதிரி பிராம்மணன் என்று சொன்னதனுல் மற்றைய மூன்று வர்ணத்தாரையும் கொள்ளவேண்டும். ஞானத்தில் தாகம் யாருக்கு இருக்குமோ, அவர்கள் அனைவரையும் இங்கு கொள்ளவேண்டும்.

பிராஹ்மண :— என்றது ஈண்டு கல்வியறிவு நிரம்பப் பெற்றவன், பிரஹ்மத்தையறிய அவாவுள்ளவன் என்பது

பொருள். வேத மந்திரங்களையோதியுணர்ந்து, உணர்த்தி வந்ததால் வேதம் காக்கப் பெற்றது. இதனால் இவர்கள் மறையவர் என நாமம் பெற்றனர். இவர்கள் வேதத்தைக் காத்து வந்தனர். வேந்தர்கள் குடியைக் காத்து வந்தனர். எங்ஙனம் நாட்டைக் காப்பதற்குத் துருப்புக்கள் வைக்கப் படுகிறதோ, அதுபோல் வேதத்தைக் காப்பதற்கு வேதியரை வைக்கப்படுகிறது.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக ... என்கின்றது சேக்கிழார் புராணம். மேற்கூறிய ஐவரும் நன்றாக இருந்தால்தான் நாடும் நாட்டு மக்களும் நலம் பெறுவர். அந்தணர்க்கு அறிவு இருக்க வேண்டும். வினையின் விளைவுகளைப்பற்றி விசாரிக்க வேண்டும்: காயாமரம், கல்லானை, வறளாங்குளம், பேய்க்கரும்பு போல பெயரளவுக்கு பிராமணரென்று இருக்கக்கூடாது. வறளாம் குளம்—வற்றிப்போன குளம்.

'நிர்வேதம் ஆயாத்' — அறிவோடிருந்து அந்தணர்கள் கருமத்தினால் உண்டான உலகத்தை யெண்ணிப்பார்ப்பார்களானால், அவர்களுக்குத் தெரியும், இவ்வுலகமுழுவதும் அழிவுடையன, இன்பம் இல்லன, துன்பம் உடையன என்று. நேற்றிருந்தவர் இன்றில்லை, இன்றிருப்பவர் நாளையிருக்கப் போவதில்லை என்ற புன்றலை மாக்கள் நிலையிது.

ஒரு இல்லத்திற்கு ஒரு மகான் உணவுக்கு ஏகினார். அங்குள்ள இல்லக்கிளத்தி வெகுண்டாள்., யாருடைய வீடென்றுதெரியுமா என்றாள். மகான் — தெரியாதென்றார். இவள் — என்வீடு என்றாள். அவர் — மண்வீடு என்றார். மீண்டும் அவர் இதை யார் கட்டினார் என்றார். அவள்—எங்கள் முப்பாட்டனார் என்றாள் அவர்—அவர் எங்கே என்றார். அவள்—அவர் இறந்து போனார் என்றாள். அதன் பிறகு பாட்டனார் என்வீடு என்றார். அவர் எங்கேயென்றார் மகான்.

அவரும் இறந்துபோனரென்றாள். மகான் — பிறகு? என் தகப்பனர் எனது வீடு என்றார் என்றாள். மகான் — அவர் எங்கேயென்றார். அவள்—அவரும் பட்டொழிந்தாரென்றாள். மகான்—அவர் இறந்த பிறகு நீ எனது வீடு என்கிருய், இதை யாரெல்லாம் எனது எனது என்று அபிமானித்தார்களோ அவர்கள் அனைவரும் மடிந்து போயினர், நீயும் மடியப் போகிருய், இங்ஙனம் இருக்க, வீடே. உன்னை யாரெல்லாம் நான் எனது என்று அபிமானித்தார்களோ, அவர்கள் அனை வரையும் அனுப்பிவிட்டாயே, நீ எப்பொழுதுபோகப்போகிருய் என்றார். வீடு — சுவாமின்! எத்தனை பேரையோ அனுப்பி விட்டேன், இன்னும் எத்தனை பேரையோ அனுப்பவேண்டி யிருக்கிறது, நான் இப்போதைக்குப் போகிருப்போல இல்லை என்றது வீடு. இதைக் கேட்டதும் மகான் குலுக்கென்று சிரித்தார்.

இந்நிலைதான் அந்திம சத்யம். ஆனல் அக்ஞானிகள் இதையறிகிறதில்லை. ஆப்ரிக்கா என்னும் நாட்டில் நெருப்புக் கோழி என்று ஒருவித கோழி இருக்கிறது, அக்கோழிக்கு விபத்து வருங்கால் தலையைக் கீழே தொங்கவிட்டுக்கொண்டு நிற்கும், அதுபோல் அறிவிலிகள் மரணத்தையெண்ணிப் பாராமல் நிமிர்ந்து, திமிர்ந்து தலையை ஒட்டகையைப்போல உயர்த்திக்கொண்டு திரிகிருர்கள். பார்த்தும் பாராதவர் போல் இருக்கின்றனர். என்ன செய்யப் போருேம் என்று சிறிது எண்ணிப் பாருமம்மா, எமன் வந்தழைக்கும்போது நீங்கள் என்ன செய்யப் போறீரம்மா, கீதையின் பெருமை. பொருள் தெளிவு.

4 3 3 4 4
போகே ரோக பயம் குலேச்சுதி பயம் ——— வைராக்ய
4
மேவாபயம், — பர்த்ரஹரி. மிகுதி போகம் அதிக நோயை உண்டு பண்ணுகிறது, அதனல் பயம் உண்டாகிறது. குலேச் சுதிபயம் — உயர் குலத்தில் பிறந்தவர்க்கு குலதர்மத்தி

லிருந்து நழுவி விடுவோமோ என்ற அச்சமுண்டாகிறது. இன்னும் பற்பல விஷயத்தில் பயம் இருந்துகொண்டேயிருக்கிறது. விசாரஞ் செய்து பார்த்தால் வைராக்யமேவாபயம் — வைராக்கியத்தை பெற்றுவிட்டால் அபயமே அபயம்— அச்சம் இல்லையென்பது பொருள்.

ஆகலின் உண்மையை அறிய விரும்பும் அவர்கள் இகலோக போகத்தையும், பரலோக போகத்தையும் புல்லெனத் தள்ள வேண்டும். விரக்தியடைய வேண்டும். விரக்திக்குப் பொருள் வீடு வாசலை விட்டுவிட வேண்டும் என்பது பொருள் அல்ல. வீட்டை விட்டு வனவாசம் பண்ணவேண்டும், துணி மணியில்லாமல் இருக்கவேண்டும், என்பதில்லை. பின்னை? உலகத்தில் உள்ள வெறுப்பும், விருப்பும் இரண்டையும் விட வேண்டும். நம்மைப் பார்க்கிலும் அதிகப்பொருள் படைத்தவரைக்கண்டால் பொருமையும், பிறர் புகழைக்கேட்டு சகியாமலும், மற்றொருவர் அழகைக்கண்டு உள்ளம் எரிவதும், இன்னும் பற்பல தீய குணங்களை உதறித்தள்ளுவதே விரக்தியாகும்.

உன்னுடைய இதயம் மென்மையானதும், அற்பமுமாம். பிறருடைய செல்வத்தைக் கண்டு பொறுத்துக்கொள்ளாதத் தன்மை கொதிக்கின்ற விருத்தியாகும். இதயத்தில் இறைவனும் இருக்கட்டும், எரிகின்ற அக்னியும் இருக்கட்டும் என்றால் அது ஒவ்வாது. ஹிந்துதருமஅநுசாரம் இரு கடவுள் ஏட்டில் வருகின்றன. ஒருவர் சிவன், மற்றொருவர் திருமால். இவர் இருவரும் கொதிப்பில் இருந்தவரல்லர். இருவருக்கும் குளிர்ச்சிதான் தேவை. முன்னவர் இமயத்தில் வசிப்பவர், பின்னவர் இனிய பார்கடலில் வசிப்பவர். இவர் இருவரில் யாருக்கும் கொதிப்பு இஷ்டமில்லை. எனவே இதயத்தில் இறைவனை நிறுத்த வேண்டுமானால் விருப்பு, வெறுப்பு என்னும் நெருப்பை அடியோடு விட்டுவிட வேண்டும். 'நிர்வேதமாயாத்' இதில் ஆயாத்து தனிப்பதம்.

இப்பதம் அவசியம் வைராக்கியத்தையடைய வேண்டும் என்னும் தன்மையை வலியுறுத்தி உணர்த்துகின்றது. நமது வாழ்க்கையில் வைராக்கியம் வரட்டும் நான் பகவானை நினைக்கிறேன் என்று யாராவது சொன்னால் அது பொருந் தாது. அவரால் ஒரு போதும் இறைவனை நினைக்க இயலாது. வைராக்கியத்திற்குப் பொருள் துணியை மாற்று வதோ, வேறு கோலத்தையேற்றுவதோ அல்ல. பின்னை? ''விராகங்காரணமன்றி வே ட ம ன் றே'' என்கின்றது வேதாந்தம்.

மனிதன் பேசுகிறான், அதனால் அவன் அவனது உள்ளத் தில் உள்ளதை வெளிபடுத்துகிறான். ஆகாரம் — உணவு. வெளியிலிருந்து வாய் வழியாக உள்ளே போவதால் உணவு ஆகாரம் எனப்படும். வியாகாரம் — பேசுவது. உள்ளே யிருந்து வெளியே வருவதால் பேசுவதற்கு வியாகாரம் என்று பெயர் ''சட்டியிலிருப்பதுதானே அகப்பையில் வரும்'' என்பது பழமொழி. மனிதன் மனதில் உள்ளதைத்தான் வெளியில் பேசுகிறான்.

விரக்தி — கௌபீனம் அணிந்ததனால் விரக்தி வந்து விடாது. ''முகடாக்யா தேக்கே தர்ப்பணமே'' தயா தர்ம நஹி மநமே' கபீர்தாஸ். காலையில் எழுந்ததும் கரத்தில் கண்ணாடியை எடுத்து மனிதன் முகத்தைப் பார்க்கிறான், ஆனால் ஈவு, இரக்கம், தயை, தருமம் இதயத்தில் இருக்கிறதா வென்று நோக்கிறதில்லை. முகம் அகத்தையறிவிக்கும் ஒரு அடையாளம். அகத்தில் இருக்கும் செயலை முகந் தெரிவிக் கிறது. அகம்—உள்ளம்.

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். — திருக்குறள்.

இ—ள்

பளிங்குபோல்—பளிங்கு என்பது ஒருவிதமான தூய்மை யான கல். அது அடுத்தது—அடுத்ததைக் காட்டும். தனது

அண்மையில் இருக்கிற பொருளைக் காண்பிக்கும். அதுபோல் நெஞ்சம் கடுத்ததை, நெஞ்சுக்குள் இருக்கும் இயல்பினை, முகம் எடுத்துக்காட்டும். நெஞ்சும், பளிங்கும் சாம்யமாயிருப்பதால் இஃது உவமையணி. நெஞ்சில் ஈரமில்லை, இனிய குணங்கள் ஒன்றுமில்லை. அங்ஙனமிருப்ப முகத்தை மட்டும் பார்ப்பதால் என்பயன்? ஒன்றுமில்லையென்பது பொருள்.

இம்மாதிரி வேடம் போட்டதாலும், மலைமிசையேறியதாலும், வனத்தின்கண் வாழ்வதாலும் விரக்தி வந்துவிடாது. பின்னை? உள்ளத்தில் உறைந்திருக்கும் ஆசைநோய் அற்றிருக்க வேண்டும். மனத்தில் உள்ள மாசு மடிந்திருக்கவேண்டும். அப்பொழுது விரக்தி வந்ததாக நினைக்க வேண்டும். விரக்தசிரோமணி, வைராக்கிய துரந்தரன் என்னும் பெயர்களை வைத்ததால் வைராக்கியம் வந்துவிடாது. இம்மை மறுமை இவ்விரண்டின் நிலைமையைத்தெரிந்து, இகத்தின் நிலைமையையும், இறைவன் தலைமையையும் உணர்ந்து வைராக்யத்தைப் பெறவேண்டும். விவேகத்தோடு இன்பம் இன்னது, துன்பமின்னது, அர்த்தமின்னது, அனர்த்தமின்னது என்று தெரிந்து அநர்த்தத்தை தியாகம் பண்ணுவதே விரக்தியாகும்.

விருப்பும் வெறுப்பும் மாதா பிதா மூலமாகவோ அல்லது பூர்வ ஜன்ம வாசனையாலோ வருகின்றன, தானாகவே வந்து சித்தத்தில் உறைந்துவிடுகிறது. வந்தது தானாக வந்தாலும், தானாகப் போகிறதில்லை. இதையகற்றுவதற்குச் சாதனம் வேண்டும். காமவாசனை தானாக வருகிறது, பிரமச்சரியம் தாரணை பண்ணப்படுகிறது. இதுபோல் வைராக்கியம். குணம், சம்பத்தி, இவைகளை மிக முயன்று தேடவேண்டும். ''யத்தநேந சாத்யம் வைராக்கியம்'' என்கின்றது இனிய வேதாந்தம்.

பிரத்யக்ஷம், அநுமானம், உபமானம், சாஸ்த்ரம் முதலிய பிரமாணங்களைக் கொண்டு, விவேகம் செய்து பார்க்

கும் போது, இகலோக போகமும் பரலோக போகமும் நிஸ்சாரம் என்று தெரியவருகிறது. நிஸ்சாரம்—சாரமில்லாதது. ஈருள்ளியை உரித்துக்கொண்டே போனால் கையில் ஒன்றும் கிடைக்காது, அதுபோல வினையினால் விளைந்த பழத்தில் ரசம் இருக்கிறதில்லை. கானல்நீர் கயிற்றரவு, சொப்பனம் போல பார்ப்பதற்கு மட்டும் பளப்பளப்பாக இருக்கும். ஒவ்வொரு க்ஷணமும் அழியும் இயல்புடையது.

உலகத்தில் விதிவந்து சாகிறவர்கள் கொஞ்சம், விசாரம் பண்ணாமல் சாகிறவர்கள் நிரம்ப. நாம் இவ்வளவு போகத்தையும் துய்க்கிறோமே இதனால் என்ன நேரும் என்பது பலருக்குத் தெரியாது. கட்டையில் பிடித்த கரையான் கட்டையைக் கரைப்பது போல போகம் மனிதனை நோய்வாயிலாக அழிக்கிறது. இதைத் தெரியாமல் மனிதன் பொருளைத் திரட்டுவதிலேயே காலத்தைப் பாழாக்குகிறான். ''கோடி தொகுத்தார்க்கும் துய்த்தலரிது'' வள்ளுவர். தேடிய பொருள் இங்குஇருக்கிறது, திரட்டியவன் அங்கு சென்றுவிட்டான். அங்கு — எமலோகம். ஆகையால் நீ விசாரப்பண்ணு. விசாரம் செய்து ''நிர்வேதம் ஆயாத்'' இப்போகங்களிலிருந்து விரக்தனாகுக.

வைராக்கியவான் யார்? எவன் கருமத்தினால் உண்டாகும் பொருளனைத்தும் ஒருநாளைக்கு அவசியம் அழியுமென்று அறிகிறானோ, அவன் வைராக்கியவான். எனவே நீ போகத்தில் மனதைச் செலுத்தாமல் சத்யத்தில் மனதைச் செலுத்து. நமது ஜன்மபூமிக்குச்சமீபம் மூன்று கல் தொலைவில் ஒரு மகான் இருந்தார். அவர் திருநாமம் தனுஷ்கோடி சுவாமி.

அவரிடம் பலர் வந்து போயிருப்பார்கள். ஒரு நாள் நான் எனது நண்பர் இருவரோடு அங்கு சென்றிருந்தேன். எங்களைக் கண்டதும் சுவாமிகள் சிரித்துக்கொண்டு வாருங்கள், என்னிடத்திற்குச் சிலர் பிள்ளை வரங்கேட்டு வருகிறார்கள், சிலர் பொருள் வேண்டும் என்று வருகிறார்கள். சிலர்

உடல்நலம் கருதி வருகிறார்கள். இன்று தான் நீங்கள் ஆத்மாவைப் பற்றிக் கேட்க வந்திருக்கிறீர்கள் என்றார். நீங்கள் புண்ணியம் செய்திருக்கிறீர்கள். ஆகையால் இங்கு வந்தீர்கள் என்றார்.

நாங்கள்—ஐயனே! ஒன்றுஞ்செய்யவில்லையே என்றோம். அவர்—ஒன்றுஞ்செய்யாமலே இவ்வளவு கிடைத்திருக்கின்றன. இனி செய்தால் இன்னும் எவ்வளவு கிடைக்கும் என்றார். செய்தால் பெருகத்தான் செய்யும், குறையாது. ''விசிர் பிரதக்குப் பாவே'' என்னும் பகுதியிலிருந்து விவேகம் என்னும் சொல் பிறந்திருக்கிறது. நெல்லும் அரிசியும் கலந்திருந்தால் அதைப் பிரிப்பது நெல்லு அரிசி விவேகம். எள்ளும், அரிசியும், கலந்து போனால் அதைப் பிரிப்பது திலதண்டுல நியாயம் (விவேகம்). இவ்வாறு எங்கு இரு பொருள்கள் இணைந்திருக்குமோ அவைகளை வேறு வேருகப் பிரிப்பது விவேகம் எனப்படும். நித்தியம் அநித்தியம், தருமம் அதருமம், செய்வன தவிர்வன, உண்மை யின்மைகளை யுள்ள வாறு ஒருவது விவேகம். இதைத்தெரிந்து அநித்தியத்தையும், அதர்மத்தையும், இன்மையையும் விட்டு விடுவது வைராக்கியம்.

'நாஸ்தி அக்ருத: க்ருதேந' மோக்ஷம் கருமத்தினால் உண்டாகிறதில்லை. விவேகம் செய்து பார்க்கும் போது மோக்ஷம் செயப்படு பொருள் இல்லையென்பது நன்கு தெரியும். முக்தி, கருமத்தினால் கிடைக்குமா? கிடைக்காதா? இம்மாதிரி கேள்வியையெழுப்பு. ஒருவேளை கருமத்தினால் முக்தி கிடைக்கும் என்றால் கருமத்தின் வேகம் நீங்கிய பின்னர் மோக்ஷத்திலிருந்து திரும்ப வேண்டியதாகும். மீமாம்சகர் கருமத்திற்குக்கதி சுவர்க்கம் என்கின்றனர். சுவர்க்கத்திலிருந்து திரும்புவதாகவும் சொல்கின்றனர்.

சிலர் உபாசனையினால் முக்தியுண்டாகும் என்கின்றனர். ஈசுவரன் முக்தியைத் தருவான். அங்ஙனமாயின்

இறைவனால் முக்தி தரணியில் வரும்படி நேரும். அது மட்டும் அல்லாமலும் முக்த புருஷனும் புவிமிசை வருவான் என்று கொள்ள வேண்டும். முக்தி கருமத்தினால் வந்தாலும், யார் மூலமாக வந்தாலும், மீண்டும் திரும்பித்தான் ஆக வேண்டும். முக்தியியல்பாக உள்ளது, தனது வடிவமானது என்று வேதாந்தம் விளம்புகின்றது.

எதிரி—முக்தி நமது வடிவமென்றால் நாம் அதற்காக ஏன் முயல வேண்டும்? பதில்—தெரியாததால் முக்தியை அடைய வேண்டும் என்று அக்ஞனுக்காகச் சொன்னது. சிரவண மனன நிதித்யாசனம் முக்தியைத் தருகிறதில்லை, பின்னை? தெரியவில்லையேயென்று சொன்னனே அந்த அறியாமையை அகற்றுகின்றன. சிரவண மனனாதி. முக்தியை எங்கிருந்தும் கொண்டு வந்து கொடுக்கிறதில்லை.

ஒருவர் அறையில் கெடிகாரம் தொங்குகிறது. அதைப் பார்க்கவில்லை. கெடிகாரம் இங்கு இருக்கிறதாக நினைக்கவுமில்லை. திடீரென மணியடித்தது. மேலே பார்த்ததும் கெடிகாரம் ஞாபகத்திற்கு வந்தது. அது போல் தத்வஞானத்தால் முக்தியின் அறியாமை அகலுகின்றது. அறியாமையகன்றதும் முக்தி இயல்பாக உள்ளது என்று தெரிய வருகிறது.

விருத்தி ஞானரூப முயற்சியால் முக்தி யுண்டாகுமானால் அநித்தியமாகும். முக்தியவ்வாறன்று. விருத்தி எப்பொழுது ஆன்மாவோடு கலந்து கொள்ளுமோ அப்பொழுது அவித்தையை நீக்குகின்றது. அவித்தையின் உபஹித ஆன்மா என்றும் உள்ளதாயும், சுத்தமாயும், ஞானவடிவமாயும், பூர்ணமாயும் இருக்கிறது. முக்தி நித்தியமா அலது அநித்தியமா என்பதில் அநேகமதங்கள். பௌத்தமதாநுசாரம் அளவோடு கூடியஅகம்ரூபம் ஆன்மா. அளவு (பரிச்சின்னம்) அதிலிருந்து நீங்குவது மோக்ஷம்.

ஜைன மதத்தில் பதினெட்டு குற்றங்கள் நீங்கின உடன் ஆன்மா முக்தனுகின்றது என்பது. நியாய மதத்திலும் வைசேஷிக மதத்திலும் ஏழு பொருளைத் தெரிவது முக்தி யென்பர். சாங்கிய மதத்திலும், பதஞ்ஜலி மதத்திலும் திருஷ்டாரவை திருஸ்யத்திலிருந்து வேறு பிரித்து விபு என் றறிவது முக்தி. ''பிரகிருதி சம்பந்த விலயோமோக்ஷ: ) என்கின்றனர் அவர்கள். பிரகிருதியில் இருந்து முற்றிலும் விடுபடுவது முக்தியென்பது அதற்குப் பொருள். சார்வாக்கன் முக்தியை ஒப்புக்கொள்கிறதில்லை. அவன் வீட்டில் துன்பமே துன்பம். அவனைப் பொருள் படுத்தவேண்டியதில்லை. பக்தர் கள் தங்கள் பகவானுடைய உலகத்தின் அடைவை முக்தியென்கின்றனர். இம்மாதிரி அவரவர் மதாநுசாரம் முக்தியை ஏற்றுக்கொள்கின்றனர்.

சுருதியின் அநுசாரம் எண்ணிப்பார்க்கும்பொழுது எது உண்டாகுமோ அது அழியும். ஆகையால் அது மோக்ஷ மல்ல. மோக்ஷம் அடையப்படுவதுமல்ல. மந்திரம் தெரியாது போனுல் குருவாயிலாகக் கற்றுக்கொள்ளலாம். குடம் இல்லையென்ருல் பிறரிடம் வாங்கிக்கொள்ளலாம். இதுபோல் மோக்ஷம் ஆப்யம் இல்லை. ஆப்யம்—அடைவு. சம்ஸ்காரிய மும் மோக்ஷமல்ல. எங்ஙனம் பண்ட பாத்ரங்களை விளக்கித் துப்பரவு செய்து வைக்கிருேமோ அதுபோல சித்தத்தின் சம்ஸ்காரத்திற்கு மோக்ஷம் என்று பெயரல்ல. மோக்ஷத்தைச் சுத்தம் பண்ண இயலாது, மோக்ஷம் இயல்பாக சுத்தமுடை யது. முக்தி விகாரியமும் இல்லை, அரிசியை சமைத்து சோருக்குவது விகாரியம். அவ்வாறு மோக்ஷத்தைச் செய்ய இயலாது. ''நிர்விகாரம் பரம் பிரஹ்ம'' என்பது ஆரணம். ஆரணம் — வேதம். முக்தியழிவுடையதல்ல. குடத்தை ஒடைக்கலாம், முக்தியை அழிக்கமுடியாது. எனவே மோக்ஷம் 'கிருதேந' கருமத்தினுல் அடையமாட்டாது.

3 4 3

"தத் விக்ஞாநார்த்தம் ஸ குருமேவ அபிகச்சேத்" வினையினால் முக்தியுண்டாக மாட்டாதென்று நிச்சயம் வந்துவிட்டால் அங்ஙனமாயின், அதை அறிவதற்கு விக்ஞானம் வேண்டும். அது எங்கேகிடைக்கும்? அதை தெரிவதற்கு குருவின்பால் செல். தத்விக்ஞானார்த்தம்—ஞானத்திற்குப்பலன் மரணத்திற்குப் பிறகில்லை, ஜீவித காலத்திலேயே கிடைக்கிறது. "ஞானம் திருஷ்டப்பலதாயி" என்கின்றது ச.பா. உடனே கிடைப்பதால் அதற்கு விக்ஞானமென்று பெயர்.

குருமேவ அபிகச்சேத்—இந்தஞானம் பள்ளியிலோ. உயர்நிலைப்பள்ளியிலோ, புத்தகாலயத்திலோ, சர்வகலா சாலையிலோ கிடைக்காது. ஒரு புத்தகத்தில் ஒருவிதமாக இருந்தால், மற்றொரு புத்தகத்தில் மற்றொரு விதமாக இருக்கும். இஷ்டமந்திரம், இஷ்ட தெய்வம், இஷ்டகுரு, சுயம் நீ, யிவைகளுக்கு வேறாக உலகத்தில் ஒன்றுமில்லை. புத்தகத்தைப் படித்து மதி யொருவழி நில்லாது. ஆத்மாவிற்கு வேறாக சத்யமில்லை. இவையெல்லாம் எவ்வாறு தெரியும்?

4

ச குருமேவ அபிகச்சேத்—என்னும் வாக்கியத்தில் ச என்னும் சொல் என்ன சொல்கிறது — வைராக்கியம் வந்ததும் குருவையடை. மற்றவரிடஞ் செல்லாதே யென்கின்றது.

ஒரு சஜ்ஜனன் ஒரு மகானிடஞ் சென்றான். ஐயனே! எனக்கு பூரண வைராக்கியம் வந்துவிட்டது என்றான். மானம் அபிமானம் பன்றி மலம்போலக் காணப்படுகிறது. போகத்தைக் கண்டால் ரோகத்தைக் கண்ட மாதிரி இருக்கிறது. அயனுலகம் புல்லுபோல் தெரிகிறது என்றான். மகாத்மா—அப்பா! உன்னிடத்தில் ஏதாவது இருக்கிறதா? அவன் — ஐயா! பத்தாயிரம் பணம் இருக்கிறதென்றான். மகாத்மா — அதையிங்கு வைத்துவிடு என்றார். அவன் — இப்பணம் இல்லாவிட்டால் உணவு எப்படி அருந்துவதென்றான்.

மகாத்மா — உணவு இல்லாது போனல் உடல்தானே யழியும். நீதான் விரக்தனுகிவிட்டாயே, உடலுக்காக ஏன் கவலேகொள்ளவேண்டும் என்ருர். இந்த மாதிரி வைராக்கியவான் உலகில் நிரம்ப உண்டு. இம்மாதிரி வைராக்கியம் கானல்நீரும், கயிற்றரவும் போல வெறும் மயக்கமே. உண்மையில் வைராக்கியம் வந்துவிட்டால் குருவை நாடிச் செல்லவேண்டும். அதுவும் ஞானத்தைநாடிப் போக வேண்டும். வேறு எதையும் நாடியோ, எதையும் தேடியோ, எவரிடமும் செல்லலாகாது.

ஒருவனுக்குத் திடீரென வைராக்கியம் வந்தது. குருவை நாடி விரைந்தான். சென்னேக்குப்போனல் குரு கிடைப்பார் என்று கேள்வியுற்ருன். மதுரையிலிருந்து சென்னேக்குச் சென்ருன். அங்கு நெடுகத் தேடினன். எங்குங் குரு கிடைக்கவில்லே. காசியில் கிடைப்பாரென்று தெரிந்தது. அங்கே சென்ருன். அங்கும் கிடைக்கவில்லே. இமயமலேக்குச் சென்ருன். அங்கும் குரு கிடைத்தபாடில்லே. விரதம் பூண்டான்—இனி நான் குரு கிடைக்கும் வரை உணவு உண்கிறதில்லே, நீர் பருகுகிறதில்லே. இதை விட்டு எங்கும் செல்வதில்லேயென்று உறுதியுடன் கண்மூடியிருந்து விட்டான்.

சம்போ! சங்கர! அம்பிகாபதயே! யென்று அமர்ந்தான். உமாகாந்தன் பார்த்தான். ஐயோ ! பாவம். நமது இடத்தில் வந்து குருவிற்காக தவம் செய்கிருனே, உணவு அருந்தி மூன்று நாளாகி விட்டன. என் செய்வது என்று சிவனர் எண்ணினர். அவன் திண்மையையுன்னினர். மனதில் எண்ணினர்—தங்கப்பாத்திரமும் தங்கக் கிண்ணமும் வெள்ளி டம்ளர்களும், கண்ணேப்பறிக்கும் கரண்டிகளும் வந்தன. மீண்டும் முக்கண்ணனர் எண்ணினர். அந்தந்தப் பாத்திரங்களில் அருசுவையோடு கூடிய அடிசில் வந்தன. அடிசில் — உணவு. இவையனைத்தும் அவன் முன்னே ஏகட்டும்

என்ருர் இறைவஞர். அவைவேயகி அவன் முன் அமர்ந்தன.

அருந்தவம் உடையவனுக்கு அருந்தப்பசி யெழுந்தது. மூடிய கண்ணைத்திறந்தான். முன்னிருந்த உணவைக் கண்டான். அவ்வளவும் உயர்ந்த பாத்திரங்கள் என்று உள்ளம் மகிழ்ந்தான். மெள்ள உணவையுண்டான். நமக்குச் சித்தி வந்துவிட்டதென்று எண்ணினுன். தங்கப் பாத்திரங் களைப் பையில் எடுத்துக்கொண்டு ரிஷிகேசம் புறப்பட்டான். குருவைமறந்தான். லக்ஷ்யத்தையிழந்தான்.

கண்ணுதற் பெருமான் எண்ணி வருந்திஞர். இவன் உண்டு மீண்டும் தபசு பண்ணட்டும், நாம் அவனுக்கு ஞானத்தையளிப்போமென்று எண்ணியல்லவா உணவைக் கொடுத்தோம், இவன் பாத்திரத்தைக் கொண்டுபோகிருனே யென்று வருந்தி பாத்திரம் திரும்பி வரும்படி நினைத்தார். பாத்திரம் மாயமாய் மறைந்தது. அவன் பதறி மீண்டும் குருவை நாடி, தேடி, கைலைக்கு வந்தான். அங்கு அரனுரைக் காணேம். பாத்திரத்தையும் இழந்தான், குருவையும் இழந்தான். இழந்ததை நினைந்து இடையில் நின்று தவித் தான்.

துவிதாமே தோநோகயே மாயாமிலி ந ராம், கவிர் தாஸ். மாயா—தங்கப் பாத்திரம். ராமன்—குரு. இவ்வாறு தேடுவது குருவை நாடுவதல்ல. குரும் ஏவ அபிகச்சேத்— அதிகாரிக்குத் தீவிர விரக்தியுண்டாக வேண்டும். சிலர் — நான் இங்குமல்லாமல் அங்குமல்லாமல் இருக்கிறேன் என்கின்றனர். இவர்கள் இந்நிலையில்தான் இருப்பார்கள். ஆற்றில் ஒருகாலும், சேற்றில் ஒருகாலும் என்றபடி. உனக்கு இகத்திலும் ஆசை பரத்திலும் ஆசையென்ருல் உண்மை நிலையை யெவ்வாறு பெறப்போகின்ருய்? மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசையென்பது முதுமொழி. உண்மையான வைராக்கியம் இருக்குமாஞல் சம்சாரத்தைப்பற்றி உனக்

கென்ன கவலே. இங்கு இவ்வளவு காலம் பார்த்தது போதாதா, இனி அங்குதானே பார். அங்கு—பரமார்த்தம்.

அபயம் சிவம் நித்யம் பதம் யத் தத் விக்ஞானுர்த்தம்—இகலோகம் பரலோகம் இரண்டையும் கக்கிய அன்னம் போலத் தள்ளிவிட்டு, பயமின்றியதாயும், கல்யாணவடிவமாயும், உள்ள நித்யபதமான ஆன்மாவையறிய வேண்டுமென்று ஆசை கொண்டு குருவிடம் செல். அதிகாரிகள் தானுக தத்வஞானத்தை முயற்சிக்கக் கூடாது. ''மேதாவி நோபி ஆத்மஞானமந்வேஷணம் சுவாதந்திரியேண நகுர்யு:, அறிவாளியாக இருந்தாலும் தத்வ ஞானத்தைத் தானுகத் தேடுவது நியாயமில்லே. இதைத் தவிர்க்கும் பொருட்டு குருவையடைய வேண்டுமென்று சுருதி கூறியது.

இன்றைக்குள்ள அதிகாரிகளுக்கு தலேகனம் மிகுந்திருக்கிறது. குருபரன் யுக்திக்குமேல் யுக்தி சொல்லிக்கொண்டே போகிருர், மாணுக்கன்—இவ்வளவுதானு, இதுதான் எனக்குத் தெரியுமேயென்கிருன். இம்மாணுக்கனேயென்ன சொல்வது. இச்சொல் அவனது புத்தியின்மையைக் காட்டுகிறது. அங்கைப்புண்ணுக்கு ஆடி வேண்டுமோ என்பது ஒரு எடுத்துக்காட்டு. ஆடி—கண்ணுடி. புத்தியின் வேலேயென்னே? தத்வத்தைச் சிந்தனே பண்ணுவது. சிந்தனம்—சாதனம். கலப்பைக்கிட்டப்போனதினுல் சாதனமில்லே, பின்னே? ஏரு கட்டி உழுவதுதான் சாதனம்.

குரு என்னும் சொல்லுக்குப் பொருள் கனம். காற்று இலேயையெடுத்துச் செல்லுகின்றது. ஆனுல் கல்லேயெடுத்துச் செல்வதில்லே. சம்சாரம் நதி. இதனுடைய வெள்ளம் சிருஷ்டியிலிருந்து சென்றுகொண்டேயிருக்கிறது. இதில் சிரிப்பு, அழுகை, இன்பம், துன்பம், பிணி, மூப்புசாக்காடு வெள்ள வெள்ளமாய் வந்துகொண்டே இருக்கின்றன. இவ்வெள்ளத்தில் யார் விழுகிறதில்லேயோ, எந்நிலேயிலும் தந்

நிலை குலையாமல் எவர்கள் இருக்கிறார்களோ, அவர்கள் குரு எனப்படுவார்கள். மேலும் நன்மை தீமைகளில் ஒருபடித்தாக கலக்கமில்லாமல் எவர் இருக்கிறாரோ, மேலும் வையகத்தில் வரும் புயல், வெள்ளம், நெருப்பு, இன்னும் பல இன்னல்கள், இவைகளால் நோவாமல் எவர் இருப்பரோ அவர் குரு.

யசோதை தன் மகன் கிருஷ்ணனை குரூர் என்று பார்த்தாள். "அவா குரத்" என்று பாகவதத்தில் வந்திருக்கிறது. அதட்டினுள் என்பது பொருள். சிஷ்யனுடைய குணம் குற்றங்களைக் கண்டித்து தத்வ ஞானத்தை யுபதேசிப்பவர் குரு என்று உரைக்கப்படுவர். கிரு—நிகரணேயென்னும் பகுதியிலிருந்து குரு என்னும் சொல் பிறந்திருக்கிறது. சிஷ்யன் குற்றத்தை மனதில் வைத்துக்கொள்பவர் குரு என்று கொள்ளினும் அமையும்.

தத் விக்ஞானார்த்தம்—அந்த ஆன்மாவையறிய வேண்டிய ஞானம் விக்ஞானம் எனப்படும். விக்ஞானம் இருவகைப்படும். ஒன்று பிறரையறிவது, மற்றொன்று தன்னையறிவது. பிறரை அறிவது உலகியல் விக்ஞானம்—யந்த்ர விக்ஞானம். ஆலைகளில் அமைக்கப்பெற்றது. மநோவிக்ஞானமும் இதைச் சேர்ந்ததுதான். இதுவும் அந்நிய விஷயக ஞானமாகும். இது — மநோவிக்ஞானம். மனம் ஆன்மாவிற்கு அன்னியமாயிருக்கிறது. புறப்பொருளையறிவிக்கும் விக்ஞானம் வேறுவிதமாக இருக்கிறது. இங்கு அகிருத விக்ஞானம் சொல்லப்படுகிறது.

எப்பொருள், செய்வதால் அடையப்படுகிறதில்லையோ, இயல்பாக உள்ளதோ, அதையறிவது அகிருத விக்ஞானம். எனவே அதையறிவதற்கு குருவின் சமீபம் போவது அவசியம். அதையறிந்தவர்தான் பிறருக்கு அறிவிக்க முடியும். இன்றைக்குள்ள அறிவாளிகள் குருவிற்கு என்ன தேவையென்பார்கள், நாங்கள் சுயம் குரு என்கின்றனர். மக்கள்

மனதில் கல்வி அபிமானம், பதவியபிமானம், பொருள் அபி மானம், இன்னும் பல அபிமானம் இருக்கின்றன. அவர்கள் எண்ணுவது என்னே? இவ்வளவு பெரிய வித்வான் நான். பிறர் சொல்வதைக் கேட்கிறதா என்ற ஆணவம் அவர்களைப் பிடித்து ஆட்டுகிறது. ''ஆணவம் மனிதனை நரகத்தில் தள்ளும்'' என்பது நன்மொழிக்களஞ்சியம்.

பம்பையில் மலபார்ஹில் என்பது ஒரு பகுதி. அங்கு ஒரு மாது. அவள் பெரும் பொருள் படைத்தவள். நான் அங்கு ஒருமுறை சென்றிருந்தேன். அவள் என்னிடம், சுவாமின்! நான் எங்குஞ்சென்று வேதாந்தம் கேட்கிறதில்லை, யார் வேதாந்தஞ் சொல்லுகிருரோ அவர் என் வீட்டில் வந்து சொல்லட்டும் என்ருள். இதைக் கேட்டதும் சிரித்து விட்டுத் திரும்பினேன்.

குரும் ஏவ அபிகச்சேத் — உன்னிடத்தில் எவ்வளவு பொன் பொருள் இருப்பினும், உயர்ந்த பதவி இருப்பினும் தத்வஞானம் குருவினிடந்தான் கேட்கவேண்டும். ''குருவி லான் கொண்ட ஞானம் குணங்களை நல்காதென்றும்'' என் பது சமயோசிதமாலை. தானுகத் தேடிய ஞானம் மோக்ஷத் திற்கான சாதனங்களைக் கொடுக்காது. அரசன் முகர்வைத்த பின்னர் தாள் பணமாகிறது. அது போல், ''குருவினுல் கொண்ட ஞானம் கோதிலா இன்பமீயும்'' சத்குருநாதனிடம் பெற்ற ஞானம் குற்றமற்ற இன்பத்தைத் தரும்.

''பிராஹ்மணேந நிஷ்காரணே ஷடங்கோவேதோ த்யயோ ஞேயஸ்ச'' சுருதி. அந்தணன், ஒன்றையும் கருதா மலும், பிரதி பயனை விரும்பாமலும், ஆறு அங்கங்களோடு வேதத்தை யோதவேண்டும் என்பது சுருதிப்பொருள். பின்பு அதன் ஞானத்தைப் பெறவேண்டும். வேத அத்யயனம் செய் வது வேதியர்களுக்குக் கடமை. வேதம் தானுகவும் கற்கலாம். பிரஹ்மத்தை யறியவேண்டுமானுல் தானுக அறிய இயலாது

ஆரணம் அவ்வாறு அனுமதி வழங்கவில்லை. "தத் விஜிக் ஞாஸஸ்வ, தத் பிரஹ்ம" அதையறிய விரும்பு. அது பிரஹ்மம், இந்த ஜிக்ஞாசை யெல்லாமறையவர்க்கும் இல்லை. பின்னை? எந்த வேதியர்களுக்கு பூரண விரக்தி அடைந்து, வினையின் பலன்கள் அழியும் இயல்பின என்று அவைகளில் விருப்பமில்லாமல் ஞானதாகம் மிகுதியாக இருக்குமோ அவர்களுக்கு அருளப்பெற்றது.

எந்த அந்தணன் விரக்தனுகவும், ஆசாபாசம் அற்ற வனுகவும் இருக்கிருனே, அவனுக்கு விக்ஞானம் விளம்பி யிருக்கிறது. இதில் தனது பரிச்சின்ன வடிவத்தைப் பலப் படுத்த வேண்டியதில்லை. பின்னை? பரிச்சின்ன தனது வடி வத்தை வெட்டிவிட வேண்டும். மோக்ஷத்தில் நானென்னும் எருமையைப் பலிகொடுக்க வேண்டும். இப்பலியை யேற்றுக் கொள்வது மகாவித்தை. இதற்குப் பெரிய புரோகிதர் வேண் டும். இந்நிலையில் உலகியற்கல்வி, மானம், தனம், புத்தி, யிவையெல்லாம் உதவுகிறதில்லை.

நான் என்னும் முடிச்சு அருதுபோனல் முக்தியுண்டா காது. அதையறுக்கவேண்டுமானல், குருவினல்தான் முடி யும். குருபரன் அருள் செய்வானுனல் அஹம் என்னும் முடிச்சு அற்றுப்போகும். ஆசான் அருளால் அடையலாம் இறைவனை. நான் என்னும் முடிச்சு உண்மையாகயிருக்கு மாளுல் அதையறுப்பதற்கு வாள், கத்தி வேண்டும், அறுப்ப தற்கு முயலவேண்டும். அதிகாரி யிதையறிகிறதில்லை.

அதிகாரி பார்வையில் நான் என்னும் முடிச்சு சத்யம். ஆதலின் அவனுடைய திருஷ்டியில் குருவினுடைய வாளும் சத்யந்தான். ஆசான் பார்வையில் 'தத்வமசி' என்னும் வாளும் அசத்யமே. மகாவாக்கியவடிவ கத்தியும் கற்பிதம். அகம் என்னும் முடிச்சு பொய். ஆகையால் அதை அறுக்கும் கத்தியும் பொய்.

ஒரு குடிகாரன் குடித்துவிட்டு தன் வீட்டு தலைவாய லில் விழுந்து கிடந்தான். ஆனால் வெறியில் தான் சிறையில் அடைபட்டு இருப்பதாக நினைக்கிறான். அழுகிறான், தொழு கிறான். ஐயோவென்று அலறுகிறான். இவனுக்கு உண் டாகும் துன்பங்கள் (மித்யா) பொய், அதைப் போக்குவதற் காகப் பொய்யான உபாயம் சிறிது செய்யவேண்டும். அவ் வழியாக ஒரு மகான் வந்தார். அவன் நிலையை உணர்ந் தார். அவன் குடுமியைப் பிடித்தார். மூன்றுமுறை அங்கேயே சுற்றினார். அடே! நீ சிறையிலிருந்து வீடுவந்து சேர்ந்தாயென்றார். அவனது வெறி தணிந்தது. தந்நிலைக்கு வந்தான்.

இதையுணர்வதற்கு முன்னும் இல்லத்தில்தான் இருந் தான், உணர்ந்த பின்னும் இல்லத்தில்தான் இருக்கிறான். அதுபோல சம்சாரம் என்னும் போதப்பொருளைப்பருகி தன்னை மறந்து தடுமாறி தட்டுண்டு திரிகிறான். உன்னிடத் தில் இவ்வளவு பொன்னிருக்கு, பொருளிருக்கு, மண்மனை யிருக்கு, எல்லாம் இருக்கு. இவையனைத்தும் ஆணவத்தை யுண்டுபண்ணுமேயொழிய அதைக் குறைக்காது. ஆசான் அண்மைக்குப் போகாது போனால் அபிமானம் நீங்காது.

பிரயாகைக்குச் சமீபம் ஜூசியென்று ஒரு சிறிய கிராமம் இருக்கிறது. அங்கு ஒரு பிரம்மச்சாரி இருந்தான். அவனுக்கு மாசம் (60)ரூபாய் ஒய்வு சம்புளம் வந்தது. நல்ல குணசீலன். நித்தியம் கங்கையில் நீராடுவான். தினந்தோறும் மூன்று வேளை சந்தியாவந்தனம் பண்ணுவான். நெறிமுறைகளை நியமமாய் அநுஷ்டிப்பான். குருவழிபாடு இறைவழிபாடு குறையாமல் புரிவான். இவ்வளவு இருந்தும் சாது, சந்நி யாசிகளை வைவான். வேதாந்தத்தை வெறுப்பான்.

ஒருமுறை பிரயாகையில் கும்பமேளா நடந்தது. அங்கு எல்லா மகான்களும் வந்திருந்தனர். உடியபாபா என்னும் மகானும் வந்தார். அவரிடம் சில சாதுக்கள் சென்று

சுவாமின்! இந்த பிரம்மச்சாரி அந்தணக்குமாரன். நல்ல இயல்பினன், யமம், நியமம் இவைகளைக் கடைப்பிடிப்பவன். அடியார்களை நிந்திக்கிருன், வேதாந்தத்தை வெறுக்கிருனே யென்று கேட்டனர். உடியாபாபா—வேறு ஒன்றுமில்லை, அவனுக்கு மாதம் (60) ரூபாய் ஓய்வு சம்பளம் வருகிறது. அந்த அபிமானத்தால், நாம் நமது உழைப்பினல் உண்கிரேம். இந்த சாதுக்கள் பிறரிடத்தில் பிக்ஷைவாங்கி யுண்கிருர்கள் என்று தன்னை உயர்வாகவும், சாதுக்களை யிழிவாகவும் எண்ணி யிகழ்கின்ருன் என்ருர். அந்த அறுபது ரூபாய் சம்பளம் அவனைப் படாத பாடு படுத்துகின்றது என்றதும் எல்லோரிடமிருந்தும் சிரிப்பொலி எழுந்தது.

அகங்காரம் அகத்தில் இருக்கும்வரை மோக்ஷம் வெகு தூரம். எனவே தனது அபிமானத்தைப் பன்றி மலமென தள்ளிவிட்டு குருவின் சமீபம் செல்ல வேண்டும். குருவின் சமீபம் சென்று என்ன செய்ய வேண்டும்? பணிபுரிய வேண்டுமா?

சமித்பாணி :— ஆசான் அண்மைக்கு எப்படிப் போக வேண்டும்? கையில் விறகுச்சுள்ளி யெடுத்துக்கொண்டு போக வேண்டும். ஈண்டு விறகுச்சுள்ளி யென்றது குருநாதனுக்கு என்ன பொருள் தேவையோ அதையெடுத்துக்கொண்டு செல்லவேண்டுமென்பது பொருள்.

முந்திய காலத்தில் ரிஷிகள், முனிவர்கள் வனத்தில் வசித்து வந்தனர். காலை மாலை ஓமம் வளர்த்தனர். அதற்கு ஆலம், அத்தி, அரசு, வன்னிக்குச்சிகள் தேவைப்பட்டன. அதனல் சமித்து என்று வேதத்தில் விளம்பப் பெற்றது. எப்பொருளைக் கொண்டுபோனல் இறைவனும் குரு உவகை கொள்வரோ, அப்பொருளை அவரிடம் கொண்டுபோக வேண்டும்.

குருவிற்குப் பிரியமான பொருளைக் கொண்டு செல்ல வேண்டும் என்பது வேதத்தின் ஆணை. அது ''பிரியம் தனம்

ஆஹிருத்ய''தை — உ. பிரியமுள்ள பொன் பொருளைக் கொண்டு செல்லவேண்டும் என்பது பொருள். மேலும்—

''ஆனபின் மனைவி மக்கள் அருத்தவேடணைகள் மூன்றில் கானவர் வலையிற்பட்டு கைதப்பியோடுமான்போல் போனவன் வெறுங்கையோடே போகாதவண்ணஞ் சென்று ஞானசத்குருவைக் கண்டு நன்ருக வணங்கினானே'' கைவல்யம். ஆனபின்=மேலே சொன்ன நிலைகளைப்பெற்று. மனைவி மக்கள் அருத்த ஏடணைகள் மூன்றின்=பெண்டீர், பிள்ளை, பொருள் இவை மூன்றின்—மூன்றையும் (முறைப்படி விட்டு) விரக்தியுடையவனுய்) ஓடவேண்டும். எதுபோல? கானவர் வலையிற்பட்டு கைதப்பியோடு மான்போல். கானகம் — வனம். அதில் வசிப்பதால் கானவர் எனப்பட்டார். வேடுவர் என்பது தெளிவு. வேடுவர் பொதுவாக மாம்சாகாரிகள். விலங்கு பறவைகள் இவைகளைத் தங்களுக்குரிய உணவாகக் கொண்டவர். விலங்கில் மானும் ஒன்று. அதைப் பிடிப்பதற்காக வனத்தில் வலையை வீசினுன். மான் வலையில் அகப்பட்டுவிட்டது. அதனுல் வேடுவன் ஓடிவருவதைக் கண்ட மான் தெய்வத்திருவருளாலும் தனது முயற்சியாலும் வலையிலிருந்து விடுபட்டுவிட்டது. தலைபிழைத்தது தம்பிரான் புண்ணியத்தாலென்று திரும்பிப் பாராமல் எடுத்ததேயோட்டம். மான்போல். மான்—புமான். புருடன். தாருமாருக ஓடக்கூடாது. அது மான் விவேகம் இல்லாதது. எப்படியும் ஓடலாம். இவன்புமான் — புத்தியுள்ளவன் எங்கு செல்ல வேண்டுமோ அங்கு செல்லவேண்டும் என்பது குறிப்பு.

நீர் வேண்டுமானுல் நதிக்கரைக்குச் செல்லவேண்டும், உணவு வேண்டுமானுல் சமையல் பறைக்குச் செல்லவேண்டும். துணி வேண்டுமானுல் ஜவுளியங்காடிக்குப் போக வேண்டும். ஞானம் வேண்டுமானுல் தேசிகனிடம் ஏகவேண்டும். இதைக் குறிப்பதற்காக ஓடுமான் போலென்ருர்.

சம்சார வலையில் சிக்குண்டவன் அவ்வலை தானுக அறும் என்று எண்ணலாகாது. நோய் தானுக வரும், போவது மருந்து உண்டபிறகு தான். தேசிகன் நூல் சொல்வழியில் செல்லுவாயே. வாசிட்டம். பொருள்வெளி. போனவன்—

நோய்வந்ததும் மருத்துவனைக்குச் செல்வதுபோல் பிறப் பிறப்பென்னும் பிணி வந்ததும் ஞானதேசிகன் எங்குளான் என்று தேடிப்போகவேண்டும். போனவன் என்று சொல்லா மல் வெறும் கையோடே போகாத வண்ணம் — கையில் இலை, பூ, பழம், பால், காணிக்கை, மாலை, சந்தனம், விபூதி, குங்குமம், ஆடையிவைகளில் யாதாவது ஒன்று கையில் இருக்கவேண்டும். ''ரிக்த ஹஸ்தோ ந கச்சேத ராஜானம் தேவதாம் குரும்'' மூன்று பேர்களிடஞ் செல்லும்போது வெறும் கையோடு போகலாகாது. மூவர் யாவர்? ராஜா—அரசன். தேவதை—அரன்—அறவடிவினன், அரி—அன்பு வடிவினன். குரு. இவரிடஞ் செல்லும்போது என்பது பொருள். இது வரை சிஷ்ய இலக்கணம் கூறப்பட்டது.

ஞானசத் குருவைக்கண்டு—இதில் குருவிற்கு இலக்கணம் கூறப்படுகிறது. இதில் ஞானம், நல்ல தேசிகனுக்கு அடை யாக நின்றது. அடை—விசேஷணம். குரு எப்படியிருக்க வேண்டும் என்பார்க்கு ''சுரோத்திரியம் பிரஹ்ம நிஷ்டம்'' என்றது சுருதி. குரு குலீனனுக இருக்க வேண்டும், அவரும் நல்ல தேசிகர்க்கு சிஷ்யனுக இருந்திருக்க வேண்டும். அதா வது அவருடைய பரம்பரை உத்தமமாக இருக்க வேண்டும். தமது குரு முன்னிலையில் இருந்து அறநூல், அறிவு நூல் களைக் கற்றிருக்க வேண்டும்.

காசியில் ஒரு சந்நியாசி யிருந்தார். அவருக்குப் பல நாமங்கள் இருந்தன. வேதாந்தவாரிதி, வேதாந்த வித்யாநிதி, வேதாந்த அமிருதவர்ஷி, வேதாந்தகேசரி, இந்த மாதிரி பல நாமங்கள் அவர் பெயரோடு இணைந்

திருந்தன. ஒரு நாள் சுவாமி கரபாத்திரி ஜீ மகராஜ் அவரிடம் வந்து சுவாமின்! சரீரம் எத்தனையென்று வினவினர். அவர்—சரீரம் ஒன்றுதானே என்றார். சுவாமிஜீ—ஆத்மாவென்று எதைச் சொல்வது என்றார். அவர்—அது எனக்குத் தெரியாது என்றார். அங்ஙனமாயின் இந்தப்பட்டம் எல்லாம் உமக்கு யார் கொடுத்தார் என்றார் சுவாமிகள். அவர்—நான் பிறரிடம் பட்டம் வாங்குகிறதில்லை, நானே வைத்துக் கொண்டேன் என்றார்.

சுவாமிகள்—எள்ளி நகைத்தார்கள். மீண்டும் அவர்—சுவாமின்! நீங்கள் வருந்தாதீர்கள், குஜராத் சௌராஷ்ட்ர முதலிய மாநிலங்களுக்கு பிரசங்கம் செய்யப் போக வேண்டுமானால் இப்படி மேலே சொன்ன (உபாதிகள்) நாமங்கள் இருந்தால்தான் நல்ல பிரசங்கியென்று எண்ணுவார்களாம். ஆகையால் நானும் எந் நாமத்தோடு இந்த நாமங்களையும் சேர்த்துக்கொண்டேன் என்றார்.

இப்படி நாமங்களை வைத்ததனால் குருவாக ஆக இயலாது. பின்னை யெவ்வாறிருக்க வேண்டும்? சுரோத்திரியம்— வேதாகமங்களை விதிப்படி கற்றிருக்க வேண்டும். வேதம் மூன்று பகுதியாக இருக்கிறது—மந்திரபாகம், பிராம்மணபாகம், ஆரண்யகபாகம், இவைகளை குருமூலமாகக் கற்றிருக்க வேண்டும். சுரோத்திரியம்—சாஸ்த்ரத்தைக் குறிக்கும். ''சாஸ்த்ரயோநித்வாத்'' பி. சூ. பரமனைப் பெறுவதற்கு சாஸ்த்ரம் காரணமாக இருக்கிறதென்பது சூத்திரத்தின் சாரம்.

பிரஹ்மநிஷ்டம்—வேதங்களைப் படித்தால் மட்டும் போதாது. பள்ளியில், உயர்நிலைப் பள்ளியில், கல்லூரியில் பேராசிரியர்கள் நிரம்பப் பேரிருக்கின்றனர். அவர்களில் சிலர்தத்வ நூல்களையுங் கற்றிருக்கின்றனர். தத்வநூல்களைப் படித்துவிட்டாலும் போதாது. சுரோத்திரியத்தோடு விவே

கம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்வம் முதலிய சாதனங்களும் வேண்டும். அப்பொழுதுதான் மெய்யுணர்வு உதிக்கும். தன்னிடத்தில் நிஷ்டாவானுக இருக்க வேண்டும். தான்—ஆத்மா.

ஒருமுறை சுவாமி கரபாத்திரி மகாராஜிடம் ஒருவர் வந்தார், சுவாமின்! குரு அவசியம் வேண்டுமா என்ருர். சுவாமிகள், நீ இதை அவசியம் கேட்கவேண்டுமா என்ருர். யாருக்கு அபிமானம் நிரம்ப இருக்குமோ அவர் குருவை யேற்றுக்கொள்கிறதுமில்லே, ஒருவாறு ஏற்றுக்கொண்டா லும் மதிக்கிறதுமில்லே. குரு வேண்டாம் என்று சொன்னுல் என்னே? ஒரு நகரவாசி கிராமத்திற்குச் சென்ருன். வழி தெரியாமல் கானகத்தில் புகுந்தான். திசை தெரியவில்லே. திகைத்து நின்ருன். ஐயோ யாரையும் காணுேமேயென்று அலறினுன்.

அங்கு அவனுக்கு ஒரு சகாயகன் வேண்டுமா, வேண் டாமா, என்று சிறிது எண்ணிப்பாருங்கள். ஒரு கன்னிப் பெண். அவளுக்கு நாயகன் வேண்டுமா வேண்டாமா? பரமார்த்தத்திற்கு இவர்கள் உதவி புரிவார்களா? நினேத்துப் பாருங்கள். அதற்கு குரு வேண்டுந்தானே. வீடு இல்லாமல் இருக்கமுடியாது, மனேவியில்லாமல் இருக்கமுடியாது, மக்கள் இல்லாமல் இருக்கமுடியாது, பொன் பொருள்கள் இல்லா மல் இருக்கமுடியாது. பேரன், பேத்தியில்லாமல் இருக்க முடியாது. இங்ஙனம் இருக்க, குருமட்டும் இல்லாமல் எங் ஙனம் இருக்க முடியும்?

குரு வேண்டாம் என்று சொல்வது முறையா? கண்ணில் லாதவனும் நடந்து போகத்தான் செய்வான். ஆனுல் அத னுல் அவனுக்கு எவ்வளவு துன்பமுண்டாகிறதென்பது அவனுக்குத்தானே தெரியும். அது போல குரு இல்லாமல் முக்தியை அடையலாமென்ருலும் அதனுல் எழும் துன்பம்

எண்ணிறந்தவை. அதிகாரிக்கு ஞானக்கண் பொன்றிருக் கிறது, அதனுல் அவனுக்கு ஒரு ஆசான் கண்டிப்பாக வேண்டும். உன்னுடைய கார் தரையில் போக வேண்டு மானுல் சாலே வழியாகச் செல்ல முடியும். விமானத்தில் போக வேண்டுமானுல் சித்ரம் வேண்டும். விண்வழியாக விமானம் பறக்கிறது. (விமானசித்ரம்) வழியைக்காட்டும் படமில்லாது போனுல் விமானஞ் செல்ல இயலாது.

இந்த சாலே வழிகளும், வழிகாட்டும் படமும், திசை காட்டும் கருவியும் பரமார்த்தத்திற்கு உதவா. உண்மை நிலேயில் செல்லவேண்டுவதில்லே. எதையடையவேண்டுமோ அதை இழக்கவில்லே. அது வேறு இடத்திலும் இல்லே, வேறு ரூபமுமில்லே, வேறு சமயத்திலும்இல்லே, அது நமது வடிவம், அதை மறந்துவிட்டோம். இவ்வுண்மைநிலேயை நாம் உணரவில்லே. எனவே யதையறிவிப்பதற்கு ஒருவன் வேண் டும். அவன் என்ன அறிவிக்க வேண்டும்? நீ யெதைத் தேடு கிருயோ, அது நீ தான் என்று அறிவிக்க வேண்டும்.

நமது முயற்சியால் நாம் அடையவில்லே, அடைந்திருந் தால் ஏன் நாம் இங்கு வந்திருக்க வேண்டும். அந்த தத்து வத்தையடைவதற்கு குரு அவசியம் வேண்டும். அதனுல் அவரிடஞ் செல்வது இன்றியமையாதது. குரு இரு விதமாக இருக்கிருர்—1. சாஸ்த்ர முறைப்படி 2 அசாஸ்த்ர முறைப் படி. ஒரு குருநாதனுக்கு கல்வியிலும், கற்றவர்பாலும், வேதாந்தங்களேக் கேட்பதிலும் பிரியமுண்டாகும். மற்ருெரு வருக்கு மேலே சொன்னதில் ஒன்றிலும் பிரியம் இருக்காது.

இதில் யாருக்கு நூல்களில் பிரியம் இருக்குமோ அவர் நூல் கூறிய வழியில் நடப்பார். மற்ருெருவர் தனது மனம் போல நடப்பார். நூல் காட்டிய வழி (அநுசாசனம்) முறை யானவழி. இக்காலத்தில்உள்ளவர்கள் வேதமந்திரங் களுக்கும், புராணங்களுக்கும் கற்பித அருத்தம் பண்ணுகிருர் கள். அவர்கள் காட்டுகிற வழியும் கற்பனே மார்க்கந்தான்.

சுரோத்ரியம் பிரஹ்மநிஷ்ட்டம் — குரு சம்ப்ரதாய மார்க்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். அம்முறையாக வேதங்களை யோதவேண்டும், பிறருக்கு உணர்த்தவேண்டும். ''மஹாஜநோ யேநகத : ச பந்தா:'' ம—பா. பாண்டவர்கள் வனவாசம் பண்ணும்பொழுது தருமதேவதை யக்ஷ வடிவம் தாங்கி தருமரை சோதிக்க வந்தது. பல வினுக்களையெழுப் பியது. அத்தனைக்கும் அறத்தின் மகன் விடையருளினன். யக்ஷ தேவதை— மற்றொரு கேள்வியையெழுப்பியது. அது— சீரியபரமனை யுறுவதற்குக்கூறியவழி யாது என்றது. தருமர்—மஹாஜநோ யேநகத : ச பந்தா : என்றார். மகான் கள் எவ்வழியில் சென்றார்களோ அதுதான் நமக்கும் என்றார். இதனால் என்ன தெரிகிறது? முன்னோர் மரபுகளைக்காக்க வேண்டும் என்பது தெளிவு.

குருபரன் எப்படியிருக்க வேண்டும் என்பது கேள்வி. குருபரனுக்கு நிஷ்ட்டை கருமத்திலோ, யோகத்திலோ, உபாசனையிலோ இருக்கக்கூடாது. பின்னை? பிரஹ்மத்தில் இருக்கவேண்டும். சாதகர்களுக்கு மேலே கூறிய கருமம், யோகம், உபாசனை, இவைகள் இருக்க வேண்டியதுதான், குருவிற்கு நிஷ்ட்டை ஆன்மாவில் இருக்கவேண்டும். கரும முதலியவைகளில் வைக்கப்பட்ட நிஷ்ட்டை சாதன நிஷ்ட்டை. சமாதியில், பகவத் தரிசனத்தில் வைக்கப்பட்ட நிஷ்ட்டை சாத்யநிஷ்ட்டை. இயல்பாக உள்ள பிரஹ்மத்தில் வைக்கப்பட்ட நிஷ்ட்டை பிரஹ் மநிஷ்ட்டை. நிஷ்ட்டை — மிகுந்த பற்று.

எவருக்கு விக்ஷேபம், சமாதி, சுவர்க்கம், நரகம், நேரம், தூரம், இடம், பொருள் தனக்கன்னியமாயில்லையோ, யாருக்கு செய்யவேண்டியவை, அறியவேண்டியவை, விட வேண்டியவை, யிவைகளில் ஒன்றுமில்லையோ, அவரே குரு. அவரை சரணாகதியாக அடையவேண்டும். ''மாமேகம் ஸரணம் வ்ரஜ'' கீதை. பொருள் வெளி. 12

தொடர்ச்சி

அறிவாளி (யதிகாரி) இகபர இன்பத்தில் சாரமில்லை யென்று தெரிந்துகொண்டு குருவையடைய வேண்டும். அவரிடஞ்சென்று என்ன செய்யவேண்டும் என்பதற்கு அடுத்த மந்திரம். (12 ம) (13) இன்றைக்குள்ள இளைஞர்கள் குருவைப் பரீக்ஷிக்கிறார்கள். இவருக்கு குருவிற்குரிய யோக்கியதையிருக்கிறதா இல்லையாவென்று எண்ணிப்பார்க் கிறார்கள். ஆனால் தன்னிடத்தில் சிஷ்யனாக ஆவதற்கு யோக்கியதை இருக்கிறதாவென்று பார்க்கிறதில்லை. குருவாக இருந்தால் தக்ஷிணாமூர்த்தி போலிருக்கவேண்டும் என்று சிலர் சொல்லுகிறார்கள். அது உண்மைதான். சிஷ்யர்கள் சனகாதிகளைப்போலிருக்கவேண்டும் என்று எண்ணுகிறதில்லை. இவையெல்லாம் சிரத்தையில்லாத மக்கள் பேசுகின்ற பேச்சு.

காசியில் சுவாமி விசுத்தானந்தஜீ என்னும் ஒரு மகாத்மா இருந்தார். அவர் வெகு ஆடம்பரமாக இருந்தார். அவரிடம் தரபங்கா மகாராஜா வந்து சந்நியாசிக்கு என்ன இலக்கணம் என்று கேட்டார். குளிர்காலம். நேரம் இரவு. சுவாமி தனது மாணாக்கனையழைத்தார். அவன் வந்தான். இந்த அரசனை வெளியே தள்ளு என்றார். இதற்குள் சுவாமியின் பல மாணாக் கர்கள் ஓடி வந்தனர். வந்து அரசனை வெளியேற்றினர். வேந்தன் வெளியே சென்றான். சிறிதளவேனும் கோபங் கொள்ளவில்லை. காரணம் யாது? சுவாமிகளிடத்திலிருந்த அன்புதான் காரணம். இரவு முழுவதும் வெளியே நின்றான் வேந்தன். பனி கொட்டுகிறது.

அரசன் ஆஸ்திகன். என்ன செய்வது என்று திகைத்து நின்றான். இதற்கிடையில் கதிரவன் உதயமானான். பொழுது மலர்ந்தது. அரசன் வாடிக்கொண்டு நிற்கும் நிலையைக்கண்டு சுவாமிகள் — மன்னவா! இதுதான் சந்நியாசத்திற்கு இலக் கணம் என்றார். மேலும், நிருப! நான் சந்நியாசியல்ல,

பின்னை? அஹம் பிரஹ்மம் என்றார். உனக்குப் புத்தியில்லை. அதனால் என்னை சந்நியாசியென்று நினைக்கின்றாய் என்றார்.

பிரஹ்ம நிஷ்ட மகான்களிடத்தில் இவனுக்கு உபதேசஞ் செய்யுங்கள், இவனுக்குச் செய்யாதீர்கள் என்று நம்மால் சொல்ல இயலாது ஏனெனின், அவர்கள் வேதங்களுக்கு அப்பாற்பட்டவர்கள். மறைகளும் அவர்களுக்கு நியமங்கள் விதிக்க முடியாது. ஞானிக்கு ஆதேசமில்லை. ஆதேசம்—உபதேசம். ஞானிக்கு உபதேசம் பண்ணுவது. இறைவனுக்கு உபதேசம் செய்வதோடொக்கும். யாருக்கு உபதேசஞ் செய்யவேண்டுமென்பது ஞானிக்குத் தெரியும். நல்ல மாணாக்கனுக்கு உபதேசம் பண்ணவேண்டுமென்று சொன்னது குருவுக்கு ஆணையிடுவதல்ல, பின்னை? அவர் இயல்பைக் கூறுவது. நல்லவர்களுக்கு ஞானிகள் உபதேசஞ் செய்வார்கள் என்று ஞானநூல் ஞானிகளின் தன்மையையெடுத்துரைக்கின்றது.

உணவுக்காக, உடைக்காக, உறைவிடத்திற்காக, பிணி நீக்கத்திற்காக, பொன் பொருளுக்காக, யார் ஆசான் சமீபம் செல்கின்றாரோ, அவருக்கு குருநாதன் தத்வஞானத்தைத்தரமாட்டார். அவரும் நமக்கு நல்ல மாணாக்கன் கிடைக்கவேண்டும் என்று எண்ணுவார். எங்ஙனம் நல்ல புதல்வன் கிடைக்கட்டும் என்று தந்தை நினைப்பரோ, அங்ஙனம்சத்குருவும் நினைப்பார். ஆகலின் மந்திரத்தில் நல்ல சீடனுக்கு இலக்கணம் இயம்பப் பெற்றிருக்கின்றது.

தெய்வமொழியில் இரு சொற்கள் வருகின்றன — 1 ப்ருயாத், 2 ப்ரோவாச்ச. முன்னே சொன்னது ஆதேசம், பின்னே சொன்னது பொது. பொது குருவிற்காக. ஆதேசம் கர்த்தாவிற்காக செய்யப்படும் உபதேசம். குரு கர்த்தா போக்தாவல்ல. ப்ரோவாச்ச என்றது சுருதி. வருகிற மந்திரம் ப்ரோவாச்ச என்று சொல்லி குருவின் இயல்பை யெடுத்துக் காட்டுகிறது.

13—வது மந்திரம்.

3
தஸ்மை ஸ வித்வாந் உபஸந்நாய ஸம்யக்
ப்ரசாந்தச்சித்தாய ஸமாந்விதாய.
3
யேநாக்ஷரம் புருஷம் வேதசத்யம்
3
ப்ரோவாச்ச தாம் தத்வதோ பிரஹ்ம வித்யாம். 13

இ—ள்

அந்த சத்குரு—அண்மைக்கு வந்த நல்ல சாந்த சித்த முடையவனும், பொன், பொருள், மண், முதலிய ஆசையற்ற வனும், பொறி புலன்களையடக்கியவனும் வைராக்கிய சீலனு மான மாணுக்கனுக்கு தத்வஞானத்தையுபதேசம் செய்வார். அதனுல் அவனுக்கு உண்மைவடிவ புருஷஞானம் உண்டா கிறது.

உபசந்நாய சம்யக்—சிஷயன் வஞ்சமில்லாமல் குருவை தஞ்சங்கொள்ளவேண்டும். சரணுகதியில் கள்ளமிருக்கக் கூடாது. தன்னுடைய பொன், பொருள், பலம், ரூபம், அழகு, கல்வி, புத்தியிவைகளில் கர்வமிருக்கக்கூடாது. குருவையடைக்கலம் நன்ருக புகவேண்டும். குருநாதனை அடைக்கலம் அடையும்போது குற்றம் ஒன்றும் இருக்கக் கூடாது.

உபசந்நம் — இவ்வாக்கியத்தில் உபஷத் ஒரு சொல். இச்சொல் உபநிஷத்திலும் வந்திருக்கிறது. நீ யென்னும் சொல் அதிகம் வந்திருக்கிறது. இதனுல் என்னே? உப சந்நம் ஆகாதுபோனுல் உபநிஷத்திற்கு அதிகாரியாக இயலாது. எங்ஙனமெனின்—உபநிஷத், உபசந்நம் இவ்விரு சொல்லும் ஒரு பகுதியிலிருந்து பிறந்திருக்கின்றது. உப நிஷத்து யாருக்குக் கிடைக்கும்? உபசந்நனுக்கு. உபசந்நம் —அண்மையில் இருப்பது. ஈண்டு உடம்பை குருநாதன் சமீபத்தில் வைப்பதல்ல, பின்னே? மதியையும், புத்தியையும்

கொண்டு வைப்பது. குருநாதன் என்னிலையில் இருக்கிறரோ, அந்நிலையில் தனது மதியைக் கொண்டுபோ.

நீ குருவை யென்னவடிவமாய்ப் பார்க்கிறாய்? அவர் தோல், நரம்பு, இரச்சியோடு கூடிய தேகவானுகை உனக்குத் தெரியுமானல் நீ பாவியென்று தெரிந்துகொள். அவர் இறைவனுகத் தோற்றினல் தன்னை புண்ணியன் என்று தெரிந்துகொள். உப என்னும் சொல்லுக்குப் பொருள்—சமீபம், நீ யென்னுஞ் சொல்லுக்குப் பொருள் நிச்சயம். இவையிரண்டும் விபக்தி. மிஞ்சியிருப்பது ஷத்து. அதற்குப் பொருள்—விசரணம் — எறிந்து விடுவது. மனதிலிருக்கும் அவகுணங்களை ஆடையில்பட்ட அழுக்குபோல் உதறித் தள்ளிவிடுவது. கதி—கமனம்—செல்வது. இறைவனும் குரு விடம் ஏகுவது. மற்றொரு பொருள் ஞானத்தையடைவது.

இறைவன் குருவாக உன் முந்நிற்கிறன். குரு — இறைவன். "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" யென்றார் அருணகிரி. கந்தரநுபூதி. பொருள் தெளிவு. மாணவனிடம் மூன்று பொருள்கள் இருக்கவேண்டும்— 1 தனது குற்றத்தை யகற்றவேண்டும் 2 குருபரன் நிலையைத் தெரியவேண்டும் 3 அறியாமையை யகற்ற முயலவேண்டும். இவை மூன்றும் இருக்குமானல், அவன் உபசந்நன்.

என்னிடம் ஒருவர் வந்து சுவாமின்! எனக்கு எப்போது சந்தேகம் வருமோ அப்போது நான் குருவை தியானம் பண்ணுவேன் என்றார். நல்லது என்றேன். அவர்—எனது இதயத்திலிருக்கும் குருதெய்வம் எனது மனதில் இருக்கும் ஐயத்தை யகற்றிவிடுவார் என்றார்.

குரு சமீபம் செல்வதற்கு நமக்கும் குருநாதனுக்கும் வெகுதூரமில்லை. ஈண்டு செல்வதற்குப் பொருள், தியானம் செய்வதென்பது. எந்நிலையில் குருவையடைய வேண்டுமோ அந்நிலையில் அடைய முயலுவாயாக. ரிஷிகேசத்தில்

நிர்வாணபிக்ஷு என்று ஒரு சித்த மகாத்மா இருந்தார். அவருக்கு உண்மையான ஒரு அன்பனிருந்தான். அவனுக்கு நல்ல தத்வஞானத்தையோதி வைத்தார். தெய்வ வசமாக வினையொழிந்தது. குருநாதன் உடல் மறைந்தது.

அன்பன், அவர்வியோகத்தில் இரவும் பகலும் உண்ணுமலும் உறங்காமலும் அழுதுகொண்டேயிருந்தான். எல்லோரும் சொல்லிப்பார்த்தார்கள். அவன் கேட்கவில்லை. இதையறிந்த குருநாதன்—கனவில் வந்து அடே மடையனே! உனக்கு நான் உபதேசம் பண்ணியது வீணாய்ப் போய்விட்டதே. நான் உனக்கு பதினைந்து ஆண்டுகளாக நான் தேகமல்லன், நீ தேகமில்லையென்று உபதேசஞ் செய்தேன். என்னிடம் நீ யுபதேசம் கேட்டாய். அத்தனையும் பாழாய்ப் போய்விட்டதே யென்று சொல்லி மறைந்தார்.

அவன் — கனவில் குருநாதன் வந்து தரிசனம் தந்து மறைந்ததை யெண்ணித் தெளிந்து தேறினன். இதனுல் என்ன தெரிகிறது? குருவை தேகவான் என்று எண்ணலாகாது என்பது புலனும். அவரிடஞ் செல்லும்போது ''பிர சாந்தச்சித்தாய—சாந்தம் என்பது என்னவென்று ஈண்டு ஊகித்துணரவேண்டும்.'' சாந்தோதாந்த உபரததிதிக்ஷு:

4

சமாஹித : சிரத்தா வித்தோ பூத்வா ஆத்மந்யேவ ஆத்மாநம் பஸ்யேத்'' பிரு—உ. மனம் இருக்குமிடம் எல்லாம் அசாந்தம். அது இன்றிய இடம் சாந்தம். நனவு, கனவு, உறக்கம் இம்மூன்றும் அசாந்தம். இம்மூன்று நிலையிலும் மனம் இருக்கும். சாந்தம் துரியம். அங்கு மனமில்லை. காற்று வீசுகிறது. கடலில் அலைகள் எழுகின்றன கடல் ஓரம் இருக்கும் மரம், பவனம், வீடுவாசல்களை அலைகள் நொறுக்கித்தள்ளுகின்றன. அதுபோல் சம்சாரத்தில் பல அலைகள் அதாவது பல துன்பங்கள் நேரும். காற்று

ஓய்ந்தால் அலைகள் நின்றுவிடும். அதுபோல் மனம் மாய்ந்தால் துன்பம் தொலையும். தனது துன்பத்திற்கு மனந்தான் காரணம்.

சாந்தம் — மனதை வெல்வது. தாந்த : — பொறிகளை யடக்குவது. பொறிகள் பெண்பால். இவ்வைந்து பொறி களும் இந்த ஜீவனுக்கு ஐந்து மனைவிகள். "இருதார்ம் ஒருநாளும் தேடவேண்டாம்", என்று ஔவையார் அருளி னார். பாட்டியின் புகழ் பாராட்டத்தக்கது. முதலாவது தாரம், இரண்டாவது அவதாரம், மூன்றாவது பாரம்; நான்காவது கோரம். இந்த ஜீவனுக்கு ஐந்து துணைவிமார்கள். ஐவர் ஐந்து வழியில் இவனை இழுக் கின்றார்கள். பாவம், ஒருவன் ஐவரோடு எங்ஙனஞ் செல்ல இயலும், இயலாதல்லவா.

ஒரு குடும்பி. மிகதனவான். அவருக்கு இருதாரம். இருவரோடும் நேசித்து வந்தார். இருவருக்கும் இடை யிடையே கலகம் எழும். அந்த அவர் பன்முறை சமாதானஞ் செய்து வந்தார். இவர்கள் நிலை மாறவில்லை. இதையறிந்த அவர் இவர்கள் இருவரையும் வேறு வேறு இடத்தில் வைக்க வேண்டும் என்று எண்ணினார். மேன் மாடியில் மூத்த தாரத் தையும், தாழ்வாரத்தில் இளைய தாரத்தையும் வைத்தார். அவ்வாறிருப்ப, மீண்டும் ஒருநாள் இருவருக்கும் பூசல் எழுந்தது. இளையவளைச் சொல்லிப்பார்த்தார் கேட்கவில்லை.. மேன் மாடியில் வசிக்கும் மூத்தவளைச் சமாதானப்படுத்து வோம் என்று ஏணி மேல் ஏறினார்.

இதற்குள் இளையதாரம் மேலே யேறவொட்டாமல் காலைப்பிடித்து கீழேயிழுத்தாள். இதைப்பார்த்த மூத்தவள் குடுமியைப் பிடித்து மேலே இழுத்தாள். நேரம் இரவு பதினொரு மணி. இவர் இருவருக்கும் நடுவில் ஐயா இழு புட்டுக் கொண்டிருக்கிறார். இதற்கிடையில் அந்த வீட்டுக் குள் திருடன் நுழைந்தான். திருடமுயன்றான். அதற்குள்.

ஏணியோரம் ஒரு இனிய காட்சியைக் கண்டான். இது எங்கும் காணுத காக்ஷி. வந்த காரியத்தை மறந்தான். வீட்டு எஜமான் மேலும் கீழும் இழுபடுவதைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். நேரம் போனது தெரியவில்லை. கதிரவன் மலர்ந்தான். காக்ஷி நின்றது. கள்ளன் வெளியே மெல்ல செல்லத் தொடங்கினுன்.

ஊரார் வந்து அவனைப்பிடித்து நீதிபதி முன்னிறுத்தினர். நீதிபதி—நீ திருடன்தானு என்ருர். அவன்—ஆம் என்ருன். நீதிபதி—அந்த வீட்டிற்குத் திருடப்போனது உண்மைதானு? ஆம் என்ருன். களவு செய்தாயா? அவன் இல்லையென்ருன். நீதிபதி — களவு செய்யாததற்குக் காரணம் வினவினுர். அவன் — அவர் இல்லத்தில் புதுமையான காட்சியைக் கண்டேன் என்ருன். நீதிபதி—உனக்கு என்ன தண்டனை இடுவது என்ருர்.

அவன்—ஐயா என்னைக் கழுவில் ஏற்றுங்கள். சிறையில் தள்ளுங்கள். வேல், சூல் கொண்டு குத்துங்கள். என்ன வேண்டுமானுலும் செய்யுங்கள். ஆனுல் ஒரே ஒரு வேண்டுகோள். நீதிபதி—அஃது என்னை? அவன் — இரு தாரத்தோடு கூடினவன் என்ன துன்பம் அடைவானோ அதை மட்டும் கொடுக்காதீர்கள் என்ருன். அதுபோல் இவ்வைம் பொறிகளும் ஜீவனை ஐந்து வழியில் இழுக்கின்றன. கண் உருவத்திற்கும், காது ஓசைக்கும், துவக்கு பர்சத்திற்கும், நாக்கு இரசத்திற்கும், மூக்கு மணத்திற்கும் இழுக்கின்றன. ''பாவி ஜீவன்படும் துன்பம் பார்க்கொண்ணுதே'' என்றபடி. இதையடக்குவது தமம்.

உபரத :— உபரதி. விரக்தி. இரதி — பிரியம். விரதி அப்பிரியம். அகில உலகத்தில் அப்பிரியமும், ஆன்மாவில் பிரியமும் வைப்பது உபரதியெனப்படும். திதிக்ஷா :— பொறுமை. ''திதிக்ஷஸ்வ பாரத'' கீதை. வையகத்தில் பல வன்மைகள் எழும். காற்றினுல் புயல் எழுவதுபோல, வெயில்,

குளிர், நிழல், இன்பம், துன்பம், எல்லாம் வரும், அத்தனை யும் பொறுத்துக்கொள்ள வேண்டும். பொறுப்பதும், விவே கத்தோடு பொறுக்கவேண்டும். அதன் நிலைமையைத் தெரிந்து பொறுத்துக்கொண்டால் துன்பம் வராது. தெரிந்து பொறுத்துக்கொள்வது என்னை?

வடமாநிலங்களில் ஓலி பண்டிகை நடக்கும். அது பங்குனி மாதம் நடக்கும். அன்று பலவிதமான நீராட்டங்கள் ஆடுவார்கள். அதில் வழியில் வருபவர் போரவர் மேலே, அவர்கள் அணிந்திருக்கும் துணிகளில் பீச்சாங்குழலில் மோசமான தண்ணீரையடிப்பார்கள். சொல்லப்போனல் யார் மேலும் எடுத்ததைக்கொண்டு வீசுவார்கள். அந்நாளில் யாரும் வெளியில் வருகிறதில்லை. கல்கத்தாவிலிருந்து யாத்திரிகள் காசிக்கு வந்தனர்.

புகைவண்டி நிலையத்திலிருந்து விசுவநாதரை தெரிசிப் பதற்காக வீதியில் வந்தனர். சில விடலைகள் அவர்களில் ஒருவர்மேல் ரப்பர் பாம்பொன்றை யெறிந்தனர். அவர் ஐயோ பாம்பு என்றலறி துணியை உதறினர். மீண்டும் பதறினர். அது ரப்பர் பாம்பென்று தெரிந்தது. பொறுத்துக் கொண்டார். ஆனல் இது விவேகமில்லாத பொறுமை. அதே யிளைஞன் அந்த ரப்பர் பாம்பை யின்னெருவர் மேலே யெறிந்தான். அவருக்குத் தெரியும் இது ரப்பர்பாம்பென்று. மேலே விழுந்ததும் குறைந்தது இரண்டு ரூபாய் சாமான் கிடைத்துவிட்டதென்று கையில் சுருட்டிக்கொண்டு நடக்கத் தொடங்கினர். எறிந்த இளைஞன் அவரைப் பின் தொடர்ந்து அழுதுகொண்டு ஐயா! என் பொருளை யெனக்குத் திருப்பித் தர வேண்டுமென்ருன். அவர் சிரித்துக்கொண்டு இனிமேல் இவ்வாறு செய்யலாகாது என்று சொல்லி அவன் முகத்தில் அதை யெறிந்தார்.

ஆகையால் இருவரும் பொறுத்தது உண்மைதான், ஆனல் ஒருவர் விவேகமில்லாமல் பொறுத்தார், மற்றெருவர்

விவேகத்தோடு பொறுத்தார். யார் விவேகமில்லாமல் பொறுத்தாரோ அவருக்குத் துன்பமும் மற்றவருக்கு இன்பமும் உண்டாயின. அதுபோல் பொறுமை விவேகத் தோடு இருக்கவேண்டும்.

சமாகித : — ஆஹிதம் — சித்தத்தைத் தன்வயமாக இழுப்பது. சமாகித: இறைவன்பால் வைப்பது. "சித்தத்தைச் சிவன்பால் வை" யென்பது நன்மொழிக் களஞ்சியம்.

சிரத்தை—விசுவாசம், நம்பிக்கை, உறுதியென்பன ஒரு பொருளைக் குறித்து வரும் சொற்கள். எண்ணியதைக் கண்ணியமாய்த் தரத்தக்கவை மூன்று பொருள்கள் — கற்பகமரம், காமதேனு, சிந்தாமணி. இவை மூன்றும் தெய்வத்தன்மை வாய்ந்தவை. இவைகளிடத்தில் சென்று யார் எதை எதைக் கேட்கிறார்களோ, அவைகள் அவர்களுக்கு அனைத்தையும் ஈயும். (அளிக்கும்)

"சிந்தாமணிர் லோகசுகம்" பாகவதம். அதுபோல் நம்பிக்கை காமதேனு. யாருக்கு நம்பிக்கையிருக்குமோ அவர்க்கு எல்லாம் உண்டாகும். நம்பிக்கையில்லாமல் உலக விவகாரமும் நடவாது. அங்ஙனம் இருப்ப பரமார்த்தம் எங்ஙனம் நடக்கும்? நடக்காதென்பது கருத்து.

ஆகவே ஆசானிடத்திலும், அறிவுநூல்கள் இடத்திலும் நம்பிக்கை வைப்பது சிரத்தையெனப்படும். "விசுவாசோ குருவாக்யேஷு" பாகவதம். ஈண்டு குரு—சாஸ்த்ரத்திற்கும் உபலக்ஷணம். நம்பினபேருக்கு நடராஜன் என்பது ஆன்றோர் அருள்வாக்கு. தனக்கு வழி தெரியாது, தெரிந்தவர் இடத்தில் கேட்பதற்கும் விசுவாசமில்லை. அங்ஙனம் ஆயின், எங்ஙனம் லக்ஷியத்தைப் பெறுவது. மேலே சொன்ன பொருள்கள் அனைத்தும் உண்மை நிலைக்கு சொத்தாகும்.

இனி மேற்கூறிய சாதனங்களைப்பெற்று என்ன செய்ய வேண்டும் என்பதற்குப் பதில் — ஆத்மந்யேவ ஆத்மானம்

ப்ஸ்யேத்—தன்னிடத்தில் தன்னைப்பார்க்கவேண்டும். தான்--ஆன்மா. தன்னிடத்தில்--மனதின்கண். பார்க்கவேண்டும்—அயம் அஹமஸ்மி என்று நினைக்கவேண்டுமென்பது பொருள். இவ்வுறுதிஞானம் நிரந்தர பழக்கவழக்கத்தால் வரும். நெடுநாள் கேட்ட பின்புதான் நிச்சய ஞானமுண்டாகும்.

சுவாமி கரபாத்திரிஜீமகாராஜீடம் உயர்நிலைப்பள்ளி பேராசிரியர் வேதாந்தம் படிக்க வந்தார். சுவாமிகள்—எங்கு வந்தீரென்றார். வேதாந்தம் படிப்பதற்கு முதன்முதல் என்ன புத்தகம் படிக்கவேண்டும் என்றார். சுவாமிகள் — பஞ்சதசிபடியென்றார். அவர் மறுநாள் வந்து பஞ்சதசி படித்து முடித்துவிட்டேன் வேறு என்ன படிக்கவேண்டும் என்றார். சுவாமிகள் நினைத்தது, நம்மிடம் வந்து பஞ்சதசி படிப்பான் என்று எண்ணினார். அவர் ஒரு நாளில் செய்தித் தாளைப் படிப்பதுபோல் பஞ்சதசியும் படிக்கிறதா? பஞ்சதசி குமுதமா, குண்டூசியா, கல்கண்டா. இப்படிப் படிப்பவர்கள் வேதாந்தம் எப்படிப் படிப்பார்கள். மனதை சமாதானஞ் செய்து சித்தத்தை யொருமைப்படுத்தி குரு சந்நிதியிலிருந்து நெடுநாள் நேயத்தோடு நிரந்தரம் சிரவணம் பண்ணும் போது தத்வஞானம் உதிக்கும்.

சமம், சமாதானம் இவையிரண்டிலும் என்ன வேற்றுமை யென்று எண்ணிப் பார்த்தாயா? தமம் உபரதியிரண்டிலும் பேதம் என்னையென்பது உனக்குத் தெரியுமா? நான் ஒன்றை யும் விரும்புகிறதில்லை, ஆனால் மனம் அசாந்தமாயிருக்கிற தென்கின்றான். தீர்த்த ஸ்தானத்தில் புரோகிதர்கள் யாத்திரி களைத் தன்வசமாக இழுப்பது வழக்கம். அதுபோல் மனதில் (துவந்துவம்) இரட்டைப்பொருள் இல்லாது போனால் அசாந்தி யெப்படியுண்டாகும்? இதனால் என்ன தெரிகிறது? உன்னுடைய மனம் இருதலைக்கொள்ளியாகிவிட்டது. உன் மனம் ஒரு பக்கம் உலகத்தையும், மறுபக்கம் ஈசுவரனையும் பார்க்கிறது. உனக்கு உணர்வு இருக்குமானால் உலகத்தின்

நிலைமைகளையுணர்ந்து அதை அசாரமென்று தள்ளி யிறைவன் பக்கமாகக் கவியவேண்டும். எந்தப் பெண்ணுக்கு நான்கு ஐந்து மாப்பிள்ளைகளைப் பேசுகிருர்களோ அந்தப் பெண்ணுக்கு அசாந்தியுண்டாகும் யாருக்காவது ஒருவருக்கு தேர்ந்து கல்யாணம் பண்ணிய பின்னர் (சாந்தி) அமைதி வந்துவிடும்.

விசாரஞ்செய்து ஒரு நல்ல வழியையும், நல்ல குருநாதனை யும் இறைவனையும் தெரிந்துகொண்டால் நமது அமைதியை யாரும், யாவராலுங் கெடுக்கமுடியாது. இறைவனை யார் காண இயலும் என்பதில் கௌடபாத சுவாமிகள்—

வீதராக[3] பயக்ரோதைர் முநிபிர்[3]வேத[3] பாரகை :
நிர்விகல்போ ஹி அயம் திருஷ்ட : ப்ரபஞ்சோபசமோ
அத்வய: | | என்கின்றனர்.
இ—ள்

முனி: = மனனசீலன்—மனனம் நினைப்பது. நீ, நினைக் கின்ருயா நினைக்கவில்லையா? நினைத்தால் எதை நினைக் கின்ருய்? உலகத்தை நினைக்கின்ருயா? இறைவனை நினைக் கின்ருயா? உலகத்தை நினைத்தால் முனி-பிசாசு. ஆன்மாவை நினைத்தால் முனி—ஞானி. முனி—பயம்—அச்சம், க்ரோதம் —கோபம். வீதம்=இவை இரண்டையும் விடவேண்டும். வேதபாரகை : = வேதத்தின் முடிவைத் தெரிந்தவர்கள். எவ்வித விகல்பமும் இன்றியதும், நனவு, கனவு, உறக்க மின்றியதும் அத்வைத வடிவமுமான சிவசொரூப ஆன்மாவை அறிகின்றனர் என்பது காரிகையின் பொருள்.

வேதாந்தத்திற்கு சமம், தமம், இன்றியமையாதவை. ''தேஷாம் அவஸ்ய அநுஷ்டேயத்வாத்'' பி. சூ. தேஷாம்= சமம், தமம், உபரதி முதலிய சாதனங்கள். அவஸ்ய — அவசியம். அநுஷ்டேயத்வாத் — கண்டிப்பாக அவைகளை யொழுக வேண்டும் என்பது சூத்திரத்தின் பொருள்.

பிரம்மச்சாரிக்கு மவுனம் வேண்டியதில்லை. ஏன்? அவன் வேதம் படிக்கவேண்டும், குரு பணிபுரியவேண்டும், அவருடன் பேசவேண்டும். ஆகையால் அவனுக்கு மவுனம் தேவையில்லை. நம்பிக்கை மனிதனுக்கு மேருமலை. இவர் தந்தை என்ற ஞானம் தாயிடத்திலிருந்துதான் வருகிறது. அவள் உன்தந்தையிவர்தாம் என்று சொல்லாதுபோனால் உனக்கு தந்தையின்னாரென்று எப்படித் தெரியும்.

இவையெல்லாம் சத்குணங்கள். சத்—குணம் = சத்குணம் — சத்தைப்பற்றியிருக்கும் குணம் என்பது பொருள். நல்ல குணங்களெல்லாம் இறைவனைப் பற்றித்தான் இருக்கும். குணம் நிராஸ்ரயமில்லை. கந்தகுணம் நிலத்தையும், ரசகுணம் நீரையும், உஷ்ணகுணம் நெருப்பையும், பர்ஸகுணம் காற்றையும், சப்தகுணம் ஆகாசத்தையும் பற்றியிருக்கின்றன. அதுபோல் சத்குணம் சத்தைப்பற்றியிருக்கின்றது. சத் ஒன்றுதான். ஆகையால் சத்குணமும் ஒன்றுதான். துர்குணம் அநேகம். சத்குணம் பிரம்மாஸ்த்ரம். துர்குணம் காமரூப பகைவன். பிரம்மசரியம் நண்பன். மனதில் பெண்ஆசை இருக்குமானால் காமம். இது இல்லையென்றால் பிரம்மசரியம். இவ்வாறு எண்ணிப்பார்த்தால் லோபம் பகைவன். சந்தோஷம் நண்பன்.

பொருள் வேண்டும் என்னும் எண்ணம் லோபம். அது இன்மை சந்தோஷம். வெகுளி—துர்குணம். அகிம்சை சத்குணம். மனதில் பகைவன் என்ற எண்ணமிருக்குமானால் அவன் சத்துரு. அது இல்லையென்றால் அகிம்சை. இதயத்தில் துர்குணங்கள் ஒன்றுமில்லாமல் சத்குணங்களிருக்குமானால் ஆத்மா துலக்கமாயிலங்கும். துணியில் அழுக்கு ஏறியிருப்பது போல் மனதில் குடும்பவாசனையிருக்குமானால் சம்சாரம் இருக்கிறதென்பது பொருள்.

எப்பொழுது நாம் சாந்தியாக இருக்கிறோமோ அப்பொழுது நமதுள்ளத்தில் சத்தியம் தோன்றுகிறது. எனவே

மனதின் சாந்தியின் பெயர்தான் சத்குணம். கெட்டகுணம் பல. ஏன்? விஷயங்கள் பல. விருத்தி வேற்றுமையால் குணங்கள் வேற்றுமையாகின்றன. மனம் ஒன்றுதான். மனதின் எண்ணத்தைவிட்டு தூயமனதை சொருபத்தில்வை. இவ்வாறு பிரசாந்த சித்தத்தையுடையவன் வேதாந்தத்திற்கு அதிகாரி. "சமோ மந்நிஷ்ட்டா புத்தே:" பாகவதம். புத்தி ஆன்மாவை நோக்கிச் செல்வது சமம்.

தருக்க வழியில் புத்தியைச் செலுத்துவது வாழ்நாளை நெருப்பில் தள்ளுவதாகும். "தர்க்கோ அப்ரதிஷ்ட்டானத்" பி.சூ. தருக்கத்தில் மரியாதையில்லை. இயல் நூல்களில் ஒரு நூல் வாக்யபதீயம். அதில் எழுதியிருக்கிறது—ஒரு வித்வான் நிரம்பிய தருக்கத்தினுல் ஒரு பொருளை உறுதிபண்ணி வைத்திருந்தார். அதையின்னெரு வித்வான் தனது யுக்தி பலத்தால் கண்டனஞ்செய்து விட்டார். இதனுல் "நைஷா தர்க்கேன மதிர்ரபநேயா" க.உ. என்கின்றது சுருதி. ப்ரமாத்மசம்பந்தி ஞானம் தருக்கத்தினுல் உண்டாகாது என்பது சுருதிப்பொருள். மனதில் தருக்கம் பண்ணுவது தெளிந்த நீரைக் கலக்குவதாகும்.

யாருடைய மனதில் பிரஹ்மாகார விருத்தி பிரகாசிக்கிறதோ. அசாந்த விருத்தி சாந்தமாய்விட்டதோ, அவருக்கு இறந்தகால ஞானமும் எதிர்கால ஞானமும் வர்த்தமானகால ஞானம் போல இருக்கும்.

பௌத்தமதம் யுக்தி பிரதானம், ஜைனம்தம் ஆகம பிரதானம், வேதாந்தமதம் சுருதிபிரதானம். ஈண்டு ஆகமம் என்பது வேதத்தைக் குறிக்கவில்லை. வேதாந்த பொருளை நிச்சயம் செய்வதற்குச் சுருதியின் அநுகூல மனனத்தைக் கொள்ளப்படுகிறது. பவுத்தமதமும் உலகத்தை அசாரமென்று சொல்லுகின்றது. அவர்கள் மதப்படி ஜெகத்தைத் தள்ளிவிட்டுப் பார்க்கும்போது கொள்வதற்கு ஒரு பொருளும்

எஞ்சியதில்லை. சூன்யந்தான் மிஞ்சுகிறது. வேதாந்த மதத்தில் ஜகத்தைத் தள்ளிய பின்னர் (ஆன்மா) சேதனம் மிஞ்சுகிறது.

சம்யக்ப்ரசாந்தச் சித்தாய—துறவறம் பூண்ட பிறகு ஒரு மகாத்மா என்னிடம் வந்தார். அவரை வாருங்களென்று ஆதரித்தேன். நான் அவரை எப்பொழுது சந்நியாசம் பெற்றீர்கள் என்று கேட்டேன். அவர் குறிப்பிட்ட நாளைச் சொன்னார். என்ன செய்கிறீர்கள் என்றேன். அவர் தியானம் பண்ணுகின்றேன் என்றார். எப்படித் தியானம் செய்கின்றீர்கள் என்றேன். அவர் — உடனே ஆசனம் போட்டு உட்கார்ந்தார், கண்ணை மூடினார். ஐந்து நிமிட மிருந்து மீண்டும் விழித்தார்.

இப்படிக்கண்ணை மூடிக்கொண்டிருப்பதால் தியானமாகி விடாது. இது தியானத்திற்குப் பழக்கமாகும். இது பல அபிநயங்களில் தியான அபிநயமாகும். பிரசாந்தச் சித்தத் திற்குப் பொருள் — வெளியுலகத்திலிருந்து மனதைத் திருப்புவது. வெளியுலகத்திலிருந்து மனதைத் துண்டிப்பது. மனதில் சத்சங்கத்திற்குப் போவோமென்று எண்ணம் உதித்தது. இதை சங்கற்பம் என்பார்கள். வீட்டிற்கு விருந்தினர் வந்திருக்கின்றனர். போனால் நேரமாகுமே, சிரவணத்திற்குப் போகவேண்டாம் என்று மற்றொரு எண்ணம் உதித்தது. இதை விகற்பம் என்பர். மூன்றாவது ஒரு எண்ணம் உதித்தது. விருந்தினர்கள் எப்போது தான் வரவில்லை, நித்தந்தான் வருகிறார்கள். ஆகையால் சத் சங்கத்திற்கு அவசியம் போகவேண்டும். இது மூன்றாவது எண்ணம். இது நிச்சயம். இதன்படியெண்ணுவது நல்லது.

இவ்வாறுஎண்ணி சத்சங்கத்திற்கு வந்தீர்கள். சிரவணத்தில் கவனத்தைச் செலுத்தினீர்கள். வீடு வாசலை மறந்து சிரவணத்தில் அமர்ந்திருப்பது தியானமாகும். தியானநிலைதான் சாந்தநிலை. சிரவணம் (கண்மூடி) தியானம்

பண்ணுவது. அது சாந்தநிலையென்றால் சத்சங்கத்தில் சிரவணஞ் செய்யவேண்டும், மனனம் பண்ணவேண்டும், ஒருவர்க்கொருவர் உரையாடவேண்டும். இவையெல்லாம் சத்சங்கத்தில்தான் செய்யவேண்டியிருக்கிறது, அங்ஙனம் இருப்ப எங்ஙனம் சாந்தியென்பாயாகில், அதற்குப் பதில்—

சத்சங்கத்தில், சாந்தமாயிருப்பதும், கண்மூடியிருப்பதும், அழுதுகொண்டும், தொழுதுகொண்டும், ஆடல் பாடல் செய்துகொண்டும் இருந்தால் அது சிறந்த முறையாகாது. சத்சங்கம் தியானநிலையமல்ல. ஆடலுக்குரிய அரங்கமு மன்று. ஒரு மனிதன் குருவின் சமீபஞ்சென்றான். குரு — உனக்கு ஒரு மந்திரஞ் சொல்லுகிறேன் கேள் என்றார். அப் பொழுது சிஷ்யன் சமாதிகூடி கண்ணை மூடிக்கொண்டான். குருநாதன் கூறிய மந்திரத்தை யவன் கேட்கவில்லை.

அங்ஙனமாயின் குருசமீபம் அவன் வந்ததனால் என்ன பயன்? ஒரு பயனும் இல. எனவே சிஷ்யன் சத்சங்க பவனத் தில் கண்ணைமூடித் தியானம் பண்ணுவது முறையல்ல. ஈண்டு பிரசாந்தச்சித்தத்திற்குப் பொருள்—சிரவணத்தில் திடமாக இருப்பது. பகவான் சங்கராசாரியார்—பிரசாந்தச்சித்தாய— "உபரத தர்பாதி தோஷாய" ச.பா. ஆணவம், தம்பம், அகங்கார முதலிய அவகுணங்கள் நீங்கிய சித்தத்தையுடை யவன் என்பது சங்கரபாஷ்யத்தின் கருத்து.

பகவான் சங்கரன் ஒருமுறை நாரதரிடங்கேட்டார்— தேவரிஷே ! நலந்தானா என்றார். நாரதர் — நான் காம மனைத்தையும் வென்றுவிட்டேனென்று கர்வமாய்ச் சொன்னார். பகவான் சங்கரன்—நாரதா! என்னிடஞ்சொன்ன மாதிரி திருமாலிடஞ்சொல்லாதேயென்றார். நாரதர் மனதில் ஆணவம் நிரம்ப இருந்தது. அதனால் அவர் காதில் அரனார் மொழிந்தது விழவில்லை.

அறிவு ரசவடிவம். நிர்மயம் என்பது பொருள்: தண்ணீரின் இயல்பு பள்ளத்தை நோக்கிச் செல்வது. ஆகையால் எவன்

பணிவுடையவனாக இருக்கிறானோ அவனுக்கு இந்தத் தத்துவ உணர்வு உண்டாகும். ஆணவத்தினால் எவன் நிமிர்ந்து நடக்கிறானோ அவனுக்கு இந்த உணர்வு உண்டாகாது. அது போல நாரதர் பகவான்சங்கரர் சொன்னதை கேட்காமல் வைகுண்டத்திற்குச் சென்றார். வைகுண்டநாதரைக் கண்டார். பணிவன்புடன் அவரை வணங்கினார். வந்ததை மால் கேட்டார். மால் — திருமால். நான் காமத்தை வென்றேன் என்று சொன்னார் நாரதர். இவர் ஆணவம் இறைவனுக்குத் தெரிந்தது. இதைத் தணிக்கவேண்டு மென்று தயாபரன் எண்ணினார். வரம்கேள் என்றார். ஹரிமுகம்போல் என்முகமும் இருக்கவேண்டுமென்று நாரதர் வேண்டினார். ஆகட்டும் என்று அச்சுதன் அருளினார். ஹரி— குரங்கு. அது முகம்போல் இவர் முகமும் ஆனது. தன் முகம் தனக்குத்தெரியவில்லை. நாம் அழகாக இருக்கிறோம் என்று எண்ணி தான் எண்ணிய இடத்திற்குத் திரும்பினார். வருகிற வழியில் நாரதர் ஒரு நகரத்தைக்கண்டார். அங்கு ஒரு பெரிய விழாக்கோலத்தைப் பார்த்தார். என்னவென்று எதிரில் வருபவரிடம் வினவினார். அங்கு ஒரு அரசகுமாரிக்கு சுயம்வரம் நடக்கின்றது, அதற்காக இந்தப்பெருவிழா என்றார்கள். அவனியிலுள்ள ஐம்பத்தாறு தேசத்து அரசர் களும் அங்கு குழுமியிருந்தனர். அதற்குள் இவரும் நுழைந் தார். அவர்களோடு ஒருவராய் இவரும் இருந்தார்.

அந்நங்கை தன் கரத்தில் வரமாலையையேந்தி நான்கு பக்கத்திலும் இருக்கும் அரசர்களைப் பார்த்துக்கொண்டே வந்தாள். நாரதரைக் கண்டாள். குலுக்கென்று சிரித்தாள். கூசி அடுத்தப்பக்கம் சென்றாள். நாரதர் நமது அழகைக் கண்டு சிரிக்கிறாள் என்று எண்ணி உள்ளம் மகிழ்ந்தார். நமக்கே மாலையைப்போடுவாள் என்று உணர்ந்தார். மறு முறையும் அவரிடம் மாது வந்தாள். முன்போல் சிரித்தாள். மெல்ல நடந்தாள். எல்லோரும் அவரவர் கழுத்தை நீட்டிக் கொண்டிருந்தனர். மூன்றாவது முறையும் சுற்றினாள். நம்

கழுத்தில் இம்முறை மாலையை அணிவிப்பாள் என்று கழுத்தை நாரதர் நீட்டினர். அம்முறையும் அவரைக் கண்டதும் முன் போல் சிரித்துவிட்டு மெல்ல நகர்ந்தாள். என்ன காரணம் என்று நாரதர் ஏங்கி இருந்தார். அவர் பக்கத்தில் ஒரு சிவகணம் இருந்தது. நாரதர் நிலையை உணர்ந்தது. தன் கரத்தில் இருந்த கண்ணுடியை அவர் முன் வைத்தது. தேவரிஷி தன் முகத்தை தர்பணத்தில் பார்த்தார். தயங்கி அழுதார். அந்த தயாபரன் செய்த சூழ்ச்சியை உணர்ந்தார். தான் செய்த தவறை நினைந்தார். இதனுல் என்ன தெரிகிறது? பெரியோர்களிடத்தில் ஆணவம் பேசக்கூடாது என்பது தெளிவு. ஆணவமுடையார்க்கு அறிவு உதியாது என்பது புலனும்.

அறிவுடையவர்கள் எங்ஙனம் சத்சங்கத்திற்குப் போவார்களோ அங்ஙனம் நீ செல்லவேண்டும். அதிகாரியாகி செல்லவேண்டும். ஆசான் அண்மைக்குச் செல்லும்போது ஆணவத்தைவிட்டுச் செல்லவேண்டும். ''சமான் விதாய'' இதற்குப் பொருள் சன்னியாசி. ஆனுல் சன்னியாசம் என்பதற்குப் பொருள் குடும்பத்தை விடுவதோ, காவியாடை அணிவதோ. மொட்டை அடிப்பதோ அல்ல, பின்னே? கருமம், கருமத்தின் பலன் அது கிடைக்கவேண்டுமென்ற விழைவு இல்லாமல் இருப்பது சன்னியாசத்திற்குப் பொருள். இவைகள் இல்லையென்றல் இறைவனை அடைய இயலாது. நூல்களில் விதித்த கருமங்களை விட்டுவிடுவதற்குப் பெயர் சமம். ஏனெனில் எதுவரை பரிச்சின்ன பொருள்களில் உனக்கு ஆசை இருக்குமோ அதுவரை அபரிச்சின்ன ஆன்மாவை எங்ஙனம் அடைய இயலும்? இயலாது என்பது முடிவு.

நமது நேத்திரம் ஒரே நேரத்தில் இருபொருளைப் பார்க்கமாட்டாது. இரு காதுகளும் இரு வார்த்தைகளை கேட்கமாட்டா. மனம் ஒரே நேரத்தில் இரு பொருள்களை

நினைக்கமாட்டாது. ஆகையால் உலகப்பொருளை கொள்வாயாகில் ஈஸ்வரன் உனது இதயத்தைவிட்டு ஏகிவிடுவான். நீ இறைவனைப் பிடிக்க விரும்பினால் இகத்தை விட்டுவிட வேண்டும். இகம்—சம்சாரம். ''உபசன்நாய ப்ரசான்ந்தச் சித்தாய சமான்விதாய'' — இதற்குப் பொருள் — நன்றாக விரக்தி அடைந்தவன் என்று பகவான் சங்கரர் பொருள் பகர்ந்திருக்கின்றார். நமது எண்ணத்திலிருந்து நழுவாமல் இருத்தல். நமது லக்ஷியத்தைத்தவிர வேறு எதையும் விரும்பாதிருப்பதே வைராக்கியம் எனப்படும். எதில் வெறுப்பு உண்டாகுமோ அதில் விருப்பும் வரும். எதில் விருப்பு வருமோ அதில் வெறுப்பும் வரும். இவையிரண்டும் சம்சாரத் தருமம். இவையிரண்டின் இன்மை ஆத்மத்தருமம். வள்ளுவனார் இறைவனுக்கு இலக்கணம் கூறுமிடத்து — ''வேண்டுதல் வேண்டாமை இலான்'' — என்றார், வேண்டுதல் விருப்பு. வேண்டாமை வெறுப்பு. இவையிரண்டையும் தெய்வமொழியில் இராகத்துவேசம் என்பர். இவையிரண்டிலிருந்தும் நீங்கியவன் இறைவன் என்பது திரண்டபொருள்.

மேற்கூறிய இவையிரண்டும் இரு தானவர்கள். ஒருவர் பெயர் மது. மற்றொருவர் பெயர் கைதபன். இவர்கள் இருவரையும் இறைவன் கொன்றான். அதனால் அவனுக்கு மதுசூதனன் என்று பெயர். 'ப்ராதான்யேன வ்பதேஷா பவன்தி'—உபதேசம் முக்கியமாக சொல்லப்படும். விருப்பு வெறுப்பில், விருப்பு முக்கியம். விருப்பை விடுவது மிகக் கடினம். வெறுப்பு வேப்பங்காயைப்போல் கசப்பு. அதை விடுவது எளிது. விருப்பு தேனைப்போல இனிப்பு. அதனால் அதை விடுவது கடினம். விருப்பை விட்டுவிட்டால் வெறுப்பு தானாக விலகும். விருப்பை விட்டவன் வெறுப்பையும் விட்டவனாக ஆகின்றான். தானாக வைராக்கியம் வந்தால் அது வைராக்கியமாகாது. விவேகம் பண்ணி இது நல்லது இது கெட்டது என்று தெரிந்து நல்லதைப் பற்றிக்கொண்டு

கெட்டதை விட்டுவிடுவது வைராக்கியமாகும். நல்லது பரமாத்மா. கெட்டது சம்சாரம்.

ஒரு மனிதன் கிராமத்தில் வசித்து வந்தான். அவனுக்கு அல்வா இன்னது என்று தெரியாது. ஆகையால் அதை அவன் உண்ண விரும்பவில்லை. இதை அவனது வைராக்கியம் என்று சொல்ல இயலாது. எவனுக்கு அல்வா இன்னதென்றும், அது இனிப்பென்றும் தெரிந்தும் அதை விடுகிறானோ அப்பொழுது அது அவனது வைராக்கியம் என்று சொல்லலாம். முண்டக உபநிஷத்தின் ஆரம்பத்தில் சௌனகர் கேட்ட கேள்வி "யஸ்மின் விக்ஞாதே சர்வம் விக்ஞாதம் பவதி" எதை ஒன்றை தெரிந்ததால் எல்லா ஞானமும் உண்டாகுமோ அப்பொருள் எது என்பதுதான். எதுவரை சித்தம் அன்னிய பொருளில் பற்றியிருக்குமோ அதுவரை அப்பொருளைத் தெரிந்துகொள்ள இயலாது. அதற்குரிய ஞானமும் உண்டாகாது. எனவே உலகத்தில் உள்ள விருப்பையும் வெறுப்பையும் விட்டுவிட்டு தூய மனத்தை உடையவன் ஞானத்திற்கு அதிகாரியாவான்.

வனத்தில் திரிகின்றபோது பீமசேனன் அங்கு வசிக்கின்ற ஒருவர் இல்லத்திற்குச் சென்றான். அவர், நீ யார் என்றார். பீமசேனன்—நான் பகாசூரனை வந்திருக்கிறேன் என்றான். அவர்—இதற்கு என்ன பொருள் என்றார். உங்கள் இல்லத்தில் நிரம்ப உண்ண வந்திருக்கிறேன் என்றான். அவர் மீண்டும் ஐயா நான் பகவான் கிருஷ்ண நாமத்தை சொல்லிக்கொண்டே இருக்கிறேன். அவனைப்போல அழகு உள்ளவன் அவனியில் ஒருவரும் இலர். ஆகையால் யாருடைய அழகும் என்னை அவர்கள் வயமாக இழுக்க இயலாது. பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் என்னிடத்தில், ஏ பீமசேன! சம்சாரத்தில் என்னைத் தவிர வேறு யாருமில்லை என்று சொன்னார். நான்தான் உனது ஆன்மாவாகயிருக்கிறேன் என்றார் என்றார். இவ்வுடம்பு வெறும் தோற்ற மாத்திரம். இதற்குள்ளே சத், சித், ஆனந்தவஸ்து இருக்

கிறதே யது எங்கும் ஒரே மாதிரிதான். ''துரீயம் திரிஷு சந்ததம்'' திருஷ்டா, திருஸ்யம் காரியம் காரணம், போக்தா, போக்யம் இவையெல்லாம் எங்கும் ஒரே மாதிரிதான். இதைத் தெரிந்ததும் எல்லா ஞானமும் இயல்பாக எய்து கின்றன. அதையறிந்த பின்னர் அத்யாசமும் இருக்கிற தில்லை. மகாத்மா முந்நிலையிலும், பரமாத்மா முந்நிலையிலும் மாயை செயல்படுகிறதில்லை.

உலகிலுள்ள ஜீவர்கள் ஆசையுற்றவர்களாக இருக் கின்றனர். குரங்கு தன்குட்டி யிறந்தபோதினும் விடாது அதைப் பற்றிக்கொள்வதுபோல இவ்வஞ்ஞானி ஜீவன் செத்துப்போன ஜெகத்தை யிறுகத்தழுவிக்கொள்கின்றான். ஜீவன் மாயையில் உருளுகிறான், இறைவன் மாயையை உருட்டுகிறான். ஜீவனை மாயை குரங்குபோல் ஆட்டுகிறது, ஈசன் குரங்காட்டிபோல் மாயையை ஆட்டுகிறான் என்பது குறிப்பு.

யேநாக்ஷரம் புருஷம் வேதசத்யம்—முறைப்படி தன்னை அடைக்கலம் புகுந்த அதிகாரிகளுக்குக் குருபரன் என்ன உபதேசிக்க வேண்டும்? நீ, அக்ஷரமாயும், சத்தியமாயும், புருஷவடிவமாயும் இருக்கின்றாயென்று சொல்லவேண்டும். அதைத்தான் குருநாதனும் அருளுகின்றார். ஆன்மாவிற்கு அழிவில்லை, ஆகையால் அக்ஷரம். எங்கும் நிறைந்திருக் கிறது எனவே அது புருஷம். என்றும் உள்ளதாயிருக் கிறது, ஆகலின் அது சத்தியம். அது—ஆன்மா.

இவ்வாறு உபதேசம் செய்ததும், மாணக்கன் மணமுள்ள மலரை வண்டு பற்றுவதுபோல் சத்யரூப பரம்பொருளைப் பற்றிக்கொள்கிறான். இதைப் பெறுவதற்காகத்தான் நாம் சன்மார்க்கத்தில் செல்கின்றோம். ''ஆத்மாஹி ஆகாசவத்'' காரிகை. ஆன்மா ஆகாசம்போல. ஆகாசத்திற்கு நான்கு குணங்களிருக்கின்றன— 1 நிறைவு 2 சூக்குமம் 3 தூய்மை 4 அசங்கம். இந்நான்கு உவமானமும் ஆன்மாவிற்குப்

பொருந்துகின்றன. ஆகையால் ஆகாசத்தை ஆன்மாவிற்கு உபமானமாகக் கூறப்பட்டது.

அக்ஷரம் — அவிநாசி. நாசி — நாசமுடையது. நாசமுடையது உலகம். நாசமுடைய உலகத்திலிருந்து நாசமில்லாத ஆன்மா தூரமில்லை. விஸ்வபுருஷன்தான் வேதாந்த புருஷன். விசுவனும் புருஷன், தைஜசனும் புருஷன், பிராஞ்ஞனும் புருஷன், துரியனும் புருஷன். எல்லாம் புருஷனாக இருந்தால் இந்த பேதம் எங்கிருந்து வந்ததென்றால், அவித்தையால் வந்ததென்பர். அவித்தையென்றாலும் உபாதியென்றாலும் ஒன்றுதான்.

அந்த ஆன்மாவை அக்ஷரம் என்று ஏன் மொழியப்படுகிறது? பதில்—அக்ஷரனாத். க்ஷரம் சலனம். எது தனது நிலையிலிருந்து நழுவுமோ அது க்ஷரம். எது தனது நிலையிலிருந்து நழுவாதோ அது அக்ஷரம். 'க்ஷீ—ஹிம்சாயாம்' என்னும் பகுதியிலிருந்து க்ஷித்வம் என்னும் சொல் பிறந்தது. ந க்ஷிப்தம் அக்ஷிப்தம். எதை யாரும் நாசம் பண்ண இயலாதோ அது அக்ஷரம். எதில் தேச, கால, வஸ்துவின் பிரபாவம் (வலிமை) படவில்லையோ அது அக்ஷரம்.

சிலர்—உலகத்திற்கு அடியில் ஜடமிருக்கிறதென்கின்றனர். அதை அகற்றுவதற்காக புருஷன் என்கின்றது சுருதி. புருஷன்—சேதனம். இன்றைக்குள்ள விக்ஞானிகள் எதில் ஞானேந்திரியம் இருக்குமோ அதைச் சேதனம் என்று கூறுகின்றனர். எதில் இந்திரியமில்லையோ அதை ஜடம் என்பர். இந்த இலக்கணம் வேதாந்தத்திற்கு இஷ்டமில்லை. வேதாந்தத்தில் ஜடச் சேதனத்திற்கு என்ன இலக்கணம்? எது தன்னையும் பிறரையும் அறிகிறதோ அது சேதனம். எது தன்னையும் பிறரையும் அறிகிறதில்லையோ அது ஜடம்.

வேதாந்தத்தில், எவன் அறிகிறானோ அவன் சேதனன். எது திருஸ்யமோ அது ஜடம். என்னுடைய சரீரமும், உன்னுடைய சரீரமும், எல்லோருடைய சரீரமும் ஜடம்.

நாம் சுவயம் சேதனம். சத்யம் — சத்ய விஷயத்தில் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு மதம். சிலர் — செய்தித்தாளில் வந்தால் சத்யம் என்பர். சிலர் குமுதம், குண்டூசி, கல்கண்டில் எழுதியிருந்தால் சத்யம் என்பர். சிலர் புராணத்திலுள்ளதை சத்யம் என்பர். சிலர் வேதத்தில் உள்ளதைச் சத்யம் என்பர். இவ்வாறு அவரவர் மதியனுசாரம் சத்யத்தை நிர்ணயம் பண்ணுவர்.

துளசிதாஸ்—வேதத்தில் எது வருகிறதோ அது சத்யம் என்கிறார். அவர்க்கு வேதத்தில் மிகுந்த நிஷ்டை இருக்கிறது. எவன் வேதத்தை நிந்திக்கிறானோ, அவனை அவர் நிந்திக்கிறார் — ''வேதநிந்தி நிந்தித பயோ பிரகட புத்த அவதார'' புத்தர் பகவத் அவதாரம். ஆனால் வேதத்தை நிந்தித்தார், அதனால் அவர் இகழப்பட்டார். விவகாரத்தில் அஸ்தியை சத்து என்பர். அணியிருக்கிறது, ஆடையிருக்கிறது. இவ்விருபொருளும் வெவ்வேறு. ஆனால் இரண்டிலும் உள்ள சத்து ஒன்றுதான்.

நாஸ்திகன்—கண்முன் இருப்பதை சத்யம் என்கிறான். ஆஸ்திகன் — கருத்து முன்னிருப்பதை சத்யம் என்கிறான். கருத்து—உணர்வு. பதார்த்தம் சத்யமில்லை, அதிலிருக்கும் இருப்புதான் சத்யம். காரியம் கண்ணுக்குத் தெரியும். காரணம் கருத்துக்குப் புலனாகும். மின்சாரக்கம்பி தெரியும், மின்சாரம் தெரியாது. அதனால் மின்சாரம் இல்லையென்னலாமா? என்னலாகாது. குடமும் பொய், நாமமும் பொய், குடம் என்னும் விருத்தியும் பொய். இவை மூன்றையும் எவன் அறிகிறானோ அவன் மெய். இதுதான் வேதாந்த மரியாதை. அறிபவன் மூன்று காலத்திலும் இருக்கிறான். அது முன்னும் பின்னும் இல்லை.

மனிதன் கண்ணைக்கொண்டு பார்க்கிறான். கருத்தைக் கொண்டு நோக்குகிறதில்லை. சோறு வெந்திருக்கிறதா, வேகவில்லையாவென்று கண்ணால் காண இயலாது, பின்னை?

கரத்தைக் கொண்டுதான் பார்க்கவேண்டும். கையைக் கொண்டு தொட்டால் வெந்ததும், வேகாததும் தெரியும். கரத்திற்கு உணருந்தன்மையில்லே, அங்ஙனம் இருப்ப கை யெங்ஙனம் இது வெந்தது, இது வேகாதது என்று உணர்ந் தது? கரத்தில் ஞானேந்திரியம் பரவியிருக்கிறது அதனுல் அது அறிகிறது. ஞானேந்திரியத்தில் எந்த இந்திரியம் பரவியிருக்கிறது? துவக்கிந்திரியம்.

பவுத்தர்கள் விவகார சத்தியத்தை உண்மையென் கின்றனர். பௌராணிகர்கள் பூதமனைத்தும் அதி தெய்வத் திலிருந்து உண்டாயின என்பார்கள். சிவனே சிவ உபாசகர் களும், விஷ்ணுவை வைஷ்ணவர்களும், தேவியை சாக்தர் களும் பிறரும் அவரவர்கள் விரும்பிய தெய்வத்தை சத்யம் என்பர்.

அபாதித தத்யம் சத்யம் என்று வேதாந்த தர்சனம் விளம்புகின்றது. அபாதிதம்—நீக்கப்படாதது. இது அதி தெய்வம், அத்யாத்மம், அதிபூதம் இம்மூன்றிற்கும் வேருனது. மூன்று காலத்திலும் உள்ளது. காலம் மாயையால் உண்டாக் கப் பெற்றது. மாயை காலத்தில் நுழைந்திருக்கிறது. காலம் மூன்று—சென்றகாலம், செல்கின்றகாலம், செல்லப்போகின்ற காலம். இந்தக் காலமும், இதற்கு நிமித்தமான மாயையும் வித்தையினுல் விலகுகின்றன. இவையெல்லாம் நீங்கிய பின்னர் ஆன்மா மட்டும் நீங்காமலிருக்கிறது. அதனுல் அது அபாத்யம் எனப்படுகின்றது.

3

''ப்ரோவாச்ச தாம் தத்வதோ பிரஹ்ம வித்யாம்'' தத்வத : — ஸச்ச—ஸச்ச—ஸச்ச தாநி. தேஷாம் பாவ : தத்வம். ஸ—ஈசுவரன். ஸ—ஜீவன். ஸ—ஜகத். இவை மூன்று தத்வங்களும் சேர்ந்து தத்வம். இந்த மூன்று பிளவு களும் உபாதியால் வந்தவை. இவை மூன்றிலும் சமான

மாயிருக்கும் பிரஹ்மம் தத்வம். எதிலிருந்து ஈசுவரனும், ஜீவனும், ஜகத்தும் தோன்றினவோ அது தத்வம்.

தத்வத : பிரஹ்ம வித்யாம் — அத்தகைய பிரஹ்மம் எதனால் அறியப்படுகிறதோ அது பிரஹ்மவித்தை யெனப் படும். பிரஹ்மவித்தை, ஆன்மவித்தை, அத்யாத்ம வித்தை, ஜீவ பிரஹ்ம ஐக்கிய வித்தையென்பன வெல்லாம் ஒரு பொருள் பல சொற்கள். தாய்,பெண், மகளிர், மடந்தை, அரிவையர் மகிலா, மாதர் என்பன போல.

இந்த தத்வ ஞானத்தை ரிஷிகள்—குருமார்கள் கூறிய மாணுக்கனுக்குச் சீரிய முறையில் உபதேசம் செய்கின்றனர்.

முதலாவது முண்டகத்தின் இரண்டாவது கண்டம் முற்றிற்று.

## முண்டகம் இரண்டு.

### கண்டம் ஒன்று.

#### தொடர்ச்சி

அக்ஷர பிரம்மத்திலிருந்து உத்பத்தியும், ஒடுக்கமும். முந்திய அதிகாரத்தில் பரிச்சின்ன — அளவுக்குள்பட்டது அபரவித்தைக்கு விஷயம் என்று சொல்லி யிருக்கிறது. பரவித்தைக்கு விஷயம் பரம் பொருள் — பிரஹ்மம்.

இந்திரிய மூலமாகவும், மனவாயிலாகவும் வருகிற ஞானம் இழிந்த ஞானம். அது விஷயத்தை மட்டும் விளக்கும். எது பிரஹ்மத்தை விளக்குமோ அது சிறந்த ஞானம். ஒருவருக்கு நகை வாங்கவேண்டியிருந்தது. அவர் ஆவணி மூலவீதிக்குச் சென்றார். அங்கு பளபளப்பான பல நகைகள் தொங்கின. அங்கொருகடைக்கு அவர் சென்றார். நகைகளைப் பார்த்தார். அவைகளில் ஒரு நகை கண்ணைக் கவர்ந்தது.

அவர் நகையின் வண்ணத்தைப் பார்த்தார். அதனால் அவர் ஈர்க்கப்பட்டார். உள்ளேயிருப்பது தங்கமா பித்தளையா வென்று கவனிக்கவில்லை. மிகுந்த விலையைக் கொடுத்து வாங்கினார். தங்கத்தைத் தெரிந்தவர் மூலம் பித்தளையென்று தெரிந்தார். தன் மதியையெண்ணி யிகழ்ந்தார். ஏமாற்றத்தை யடைந்தார். அதுபோல மதியிழந்தவன் உலகத்தின் பளபளப்பைக் கண்டு மயங்குகிறான். ஆடை நைந்திருக்கிறது மேலே பளபளப்பாயிருக்கிறது, அதனால் என்ன பயன்? ஒன்றுமில்லையென்பது குறிப்பு.

இம்மாதிரி விரிஞ்சி பிரபஞ்சித விசுவத்தில் பெண்டீர், பிள்ளைகள், உறவினர், பொன், பொருள், மண்மனை, நிலம் புலம் பளபளப்பானவை. விரிஞ்சி—அயன். ஞானிகள் இவைகளைக் கண்டு மயங்குகிறதில்லை. ஞானிகள் உலகத்திற்குக் காரணப்பொருளை நாடுவார்கள். நீ சம்சாரம் அசாரமென்று கேள்விப்படுகிறாய், ஆனால் அதற்குரிய ஞானம் உனக்கில்லை.

ஒரு மனிதன் ஒரு பூனையை வளர்த்தான். அது அவனோடு நேசமாக வளர்ந்து வந்தது. ஒருநாள் அவன் அறையில் இருக்கும்போது அது அவன் பின்புறமாக வந்து அமர்ந்தது. அதையவன் கவனிக்கவில்லை. வழக்கம்போல் அறையைப் பூட்டிவிட்டு வெளியே சென்றுவிட்டான். பூனையுள்ளேயிருந்து விட்டது. தன் தவறையுணர்ந்த பின்னர் பூனை மனங்கலங் கியது. இங்கும் அங்குமாகத் திரிந்தது. ஒன்றும் கிடைக்க வில்லை. மேலே நோக்கிப் பார்த்தது. வெண்மையான ஒரு பொருள் அதற்குக் காணப்பட்டது. அதைப் பிடிப்பதற்காகத் துள்ளித்துள்ளிப் பாய்ந்தது. ஏன் வாய்க்கு அது எட்ட வில்லை? பசியோ அதை வாட்டுகிறது. வெளியே போன தலைவன் வீடு திரும்பினான். வந்ததும் தன் அறையைத் திறந்தான். தன் தலைவனைப் பூனை பார்த்தது. மகிழ்ச்சி யடைந்தது. மீண்டும் மேலேயுள்ள பொருளைத் தாவிப் பிடித்தது. அந்தப்பொருள் வெறும் பஞ்சுதான். அது உணவுப்பொருள் அல்ல. அதையறிந்ததும் பூனைக்கு ஆசை பங்கமாகிவிட்டது மேலேயிருந்து பூனை கீழே விழுந்து இறந்துவிட்டது. அதுபோல எதுவரை நீ உலகமயக்கத் திலிருக்கிறாயோ, அதுவரை அசார உலகத்தில் சாரத்தைத் தேடுகிறாய், ஆனால் இதில் கடுகளவேனும் சாரமில்லை. சாரம்—கொள்ளத்தக்கது.

உலகில் சாரம் பரமாத்மா. பழரசம் பழத்தில் இருப்பது போல பரமாத்மரசம் ஜகத்திலிருக்கிறது. மடியில் பணம் இருப்பதுபோல் படியில் பிரம்மரசமிருக்கிறது. படி—பூமி. எதிலிருந்து இவ்வையகம் தோன்றுகிறதோ, எதில் நிலைத் திருக்கிறதோ, எதில் லயமாகிறதோ அது ரசம், அதுவே சத்யம் என்பது ஆசாரிய சங்கரரின் கருத்து. ''சச சம்சார : கதலிகர்பவத் அசார :'' என்று சுவாமிகள் சொன்னார்கள். இவ்வுலகம் வாழைத்தண்டுபோல் பொருளற்றதென்பது பொருள்.

உலகமென்னும் நாமமும், பொருள் என்னும் உருவமும் அசாரம், உள்ளிருக்கும் ஆன்மா சாரம் என்று ஊகித்து உணரவேண்டும். அவ்வக்ஷரவடிவபுருஷபரமாத்மா பர வித்தைக்கு விஷயம். அறிவில்லாத மக்கள் உலகத்தை சத்யம் என்பர். இறந்துபோன சரீரத்தையிடுகாடு கொண்டு போம்போது ராமநாம சத்யம் என்கின்றனர். அவர்களிடத் தில் கேளுங்கள் — நீ சத்யமா ராமநாமம் சத்யமாவென்று. இறந்தபின்பு இராமநாம சத்யம் என்கின்ருயே உயிரோடு இருக்கும்போது இந்த சத்யத்தைத் தெரிந்துகொள். அதன் பின்னர் ஆனந்தமே ஆனந்தம்.

ஒருமுறை காசியில் ப்ரேமபுரி சுவாமிகள் வந்தார்கள். வந்து ராமகிசோர் என்னும் பிரம்மச்சாரியிடம் கேட்டார் — ஏ பிரமச்சாரி! உனக்கு சபை நடத்துவதற்கு மிகுந்த ஆசை யிருக்கிறதென்ருர். மீண்டும் அவர் நீ பல கூட்டங்கள் நடத்துகிருயென்றுக் கேள்வியுற்றேன். நான் இறந்து போன பின்பு எனக்காக இரங்கல் நடத்துவாய். அதனுல் எனக்கு என்ன ஆனந்தம் வரப்போகிறது? ஒன்றுமில்லை.

ஆகையால் ஒன்று செய்; என்ன செய்யவேண்டுமென்ருல் நான் உயிரோடு இருக்கிறபோதே யிறந்து போனதாக இரங்கல் பத்திரிகையடித்து எல்லோருக்கும் வழங்கு என்ருர். நான் அதுவரை யெங்கேயாவது மறைந்திருக்கிறேன் என்று இயம்பினுர். பிரம்மச்சாரி—சுவாமின்! இவ்வாறு செய்ததால் தங்களுக்கு என்ன கிடைக்கப்போகிறது? என்ருன். சுவாமிகள்—ஊரார்கள் என்னைப்பற்றி என்ன சொல்கிருர்கள் என்று தெரிய ஆசைப்படுகிறேன் என்ருர்.

இதனுல் என்ன தெரிகிறது? இறந்துபோன பின்பு எதையடைய விரும்புகின்ருயோ, அந்த சத்யத்தை வாழ் நாளிலேயே அடைய முயற்சிசெய். இனிவரும் மந்திரத்தில் சொல்லப்போகிற விஷயம் அந்தரங்க சத்யம். அது இனி விசாரிக்கப்படும். ஆசையோடு கூடிய கருமத்தினுல்

உண்டாகும் ஞானம் சுவர்க்கத்தை யீயும். கருமத்தைச் செய்பவர்கள் அதைத்தான் விரும்புகிருர்கள். உபாசனு ஞானம், வைகுண்டம், அல்லது சிவலோகத்தைக் கொடுக்கும். வைகுண்டம் போனவர்களும், கைலாசம் போனவர்களும், இறைவன்எண்ணப்படி இகலோகத்திற்கு மீண்டும் வரக்கூடும். இதற்குப் பிரமாணம் முறைப்படி—ஜெயவிஜயனும், சுந்தரரும் ஆம். இவையெல்லாம் சாபேக்ஷிக சத்யம். சொல்லளவுக்குச் சத்யம் என்பது துணிபு. ஈங்கு நிரபேக்ஷ சத்யம் கூறப்படுகிறது. நிரபேக்ஷ சத்யம்—உண்மையான சத்யம்.

1—வது மந்திரம்.

3 2 3 2 3
தத்தே தத் சத்யம் யதா சு தீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா:
4 2 3 4
ஸஹஸ்ரஸ: ப்ரபவந்தே ஸரூபா : | ததா அக்ஷராத் விவிதா:
4 1
சோம்ய பாவா: ப்ரஜாயந்தே தத்ர ச ஏவ அபியந்தி. |

இ—ள்

ஹே சௌம்ய ! தத் — (அந்த அக்ஷர பிரஹ்மம்) அது சத்யம். எவ்வாறு கொழுந்துவிட்டு எரியும் நெருப்பிலிருந்து அதற்கு ஒப்பாக வடிவமுடைய பொறிகள் ஆயிரக்கணக்காக எழுகின்றனவோ அவ்வாறு இவ்வக்ஷரத்திலிருந்து பல பாவப் பொருள்கள் வெளிப்படுகின்றன. மீண்டும் அக்ஷரவடிவ (ஆன்மாவில்) வஸ்த்துவில் ஒடுங்கி விடுகின்றன.

எந்தப்பொருள் எப்படியிருக்குமோ, அந்தப் பொருளை யப்படியே வெளிப்படுத்துவது சத்யம். ''தத்ஏதத் சத்யம்— அதுதான் சத்யம். உள்ளதை யுள்ளவாறு உணர்த்தும் ஞானந்தான் சத்யம். மந்திரத்தில் நெருப்பின் திருஷ்டாந்தம் நிகழ்த்தப்பட்டிருக்கிறது. நெருப்புக்குப்பெயர் பாவகம். பாவயதீதி — பாவகம். பாவனம் பண்ணுவது என்பது பொருள் எரியில் விழுந்த மலமும் எரிந்து சாம்பலாகின்றது.

நெருப்பு பாவகம் ஞானம் பாவனம். இரண்டிற்கும் ஒரு பொருள்.

"யதா சுதீப்தாத் பாவகாத்—எங்ஙனம், ஈண்டு கொழுந்து விட்டு எரியும் நெருப்பு என்றது புறத்தில் உள்ளதைக் குறித்து. தத்வ ரீதியாக இது சிதக்னியைக் குறிக்கும். ஞானக்னியில் ஜீவனைத் தூக்கியெறிந்தால் ஜீவனுடைய அக்ஞானம் எரிந்து நீருகும். இதில் ஈசுவரனை யெறிந்தால், இறைவனது மாயை எரிந்து சாம்பலாகும்.

"ந கேவலம் ஜீவமவித்யா மலாத் புநாதி அபிது ஈசு வரமபி மாயா மலாத் புநாதி" இந்த ஞான நெருப்பு ஜீவனை மட்டும் தூய்மைப்படுத்துவதில்லை. பின்னே? இறைவனையும் தூய்மைப் படுத்துகின்றது. ஜீவனிடத்தில் அவித்தை யென்னும் மலமும், ஈசனிடத்தில் மாயை யென்னும் மலமும் உளவாம். நாம் புனிதமாக வேண்டுமானல் எல்லோருக்கும் நெருப்பு வேண்டும். நாம் முக்தி பெற வேண்டுமானல் எல்லோருக்கும் ஞானம் வேண்டும்.

அன்பர்கள் பக்தியென்னும் அனலை விரும்புகின்றனர்கள். தணல் காற்றின் உதவியால் பரவுகின்றது. அதிகாரி வேண்டுகிறன்—" நௌ ஆவயோரதீதம் தேஜஸ்வீ ரஸ்து" நமது ஞானம் (நெருப்பு போல்) நிரம்பி யிருக்கட்டும், அறியாமையை அகற்றட்டும் என்று இறைவனிடம் வேண்டுகிறன்.

விஸ்புலிங்கா : ஸஹஸ்ரஸ : ப்ரபவந்தே—கொழுந்து விட்டு எரியும் கனலிலிருந்து ஆயிரம் ஆயிரம் பொறிகள் உண்டாகின்றன. நெருப்பிலிருந்து பொறி கிளம்புவது இயல்பு, ஆனல் ஞானவடிவ அக்னியில் இருந்து பொறிகள் எங்ஙனம் உண்டாகக்கூடும், அவைகள்யெவை யென்பா யாகில் உபாதியினுல்உண்டாகின்றன. அது சிதாபாசம்.

பகவான் சங்கரர்-மாண்டுக்கிய உபநிஷத்தின் தலைப்பில் —''பிரக்ஞாநாம்ஸ்ப்ரதாநை :'' என்று அருளினர். ப்ரக் ஞானத்தின் கிரணம்—சிதாபாசன். கிராமங்களில் வெல்லம் செய்யும் போது கரும்புரசத்தை நெருப்பில் வேகவைக்கிறது வழக்கம். எதுவரை ரசம் வேகவில்லையோ அதுவரை அதிலிருந்து நுரைவருவது மரபு. வெந்த பிறகு நுரை வருகிறதில்லை. அதுபோல் காமம் வருவதும், கோபம் வருவதும், லோபம் வருவதும், இவை யெல்லாம் அந்தக் கரணம் பக்குவமாகாததையறிவிக்கின்றன. கரும்புரசம் நன்ருக வெந்த பின்பு நுரை வருகிறதில்லை. அதுபோல் மனம் பக்குவப்பட்டால் காமம், கோபம் முதலியவை வருகிறதில்லை

ஒரு முறை மகாராஷ்ட்ர மாநிலத்தில் அடியார்கள் திருக்கூட்டம் நடந்தது. அங்கு சமர்த்த ராம்தாஸ் சுவாமிகள் தமது பக்தர்களேயும், சிஷ்யர்களேயும், கூட்டிக் கொண்டு வந்திருந்தனர். சுவாமிகள் சீடர்களில் பெரும் பான்மையாக மகாத்மாக்களும் சிறு பான்மையாக பக்தர் களும் குழுமினர். கூட்டத்தில் சுவாமிகளின் பக்தர்களில் ஒரு அம்மாள் எழுந்து சுவாமின்! உங்கள் மாணுக்கர்களேப் பரீக்ஷிக்கப்போகிறேனென்ருள். சுவாமிகள் — வேதாந்த சம்பந்தமாக சில கேள்விகள் கேட்க விரும்புகிருள் என்றெண்ணிப் பரிக்ஷை செய் என்ருர்.

அம்மையார்கரத்தில் முழங்கை நீளம் ஒரு தடியை யெடுத்து வந்தார். அன்றுதான் அடியவர்கள் அனைவரும் முடியிறக்கி இருந்தார்கள். தலையில் ரோமமில்லை. அம்மை யார்—ஒவ்வொரு மகாத்மாவின் தலையிலும் ஒவ்வொரு அடி தடியால் அடித்தாள். அடி தாங்கமாட்டாமல் உம் என்று அவளை உருமிப் பார்த்தார்கள். அவள் எல்லோரையும் அடித்தபின்பு தம் குருநாதன் தலையிலும் ஒரு அடியடித்தாள். குருநாதன் ஒன்றுஞ்சொல்லாமல் நகைத்துக்கொண்டிருந் தார். அப்பொழுது அம்மாது—குருநாதா! நீங்கள் தான்

விளைந்த மகாத்மா. மற்றவர்கள் விளையாதவர்கள் என்றாள். குருநாதன் — அம்மா! நீ தேர்ந்து எடுத்தது சரி, ஆனால் தேர்தல்முறை சரியில்லையென்றார். அதனால் உன்னைப் பாவம் வந்து பற்றும் என்றார்.

அஹம்—இது சிதாபாசன். இதயத்துக்குள்ளிருக்கும் சேதனம் சிதாபாசன் எனப்படும். வான் எங்கும் நிறைந்திருக்கிறது. இருப்பினும் குடத்திலிருக்கும் (வானை) — ஆகாசத்தைக் குடாகாசம் என்றும். வயிற்றுக்குள்ளிருக்கும் ஆகாசத்தை உதராகாசம் என்றும் கூறுவதுபோல் நிறைந்தச் சேதனத்தைச் சிதாபாசன் என்று சொல்லுவார்கள்.

விஸ்புலிங்கா:!, — விறகு எப்படியிருக்குமோ அப்படி அனலும் இருக்கும். விறகு சிறியதாக இருந்தால் நெருப்பும் சிறியதாகத் தெரியும். அதுபோல் பசு, பக்ஷி, பூச்சி, புழு, நண்டு, வண்டு முதலிய சிறிய தேகத்திலிருக்கும் சேதனம் அந்தந்த உபாதிக்குத்தக்கவாறு அநேகமாகத் தோற்றுகிறது. பகவான் ரமணர் ஒரு சுலோகம் சொல்லுவார்—

அஹம ஹமிதி சாக்ஷாத் ப்ரஹ்மரூபேண பாதி
விஸதிதி மநஸா ஸ்வம் 'சிந்வதா மஜ்ஜதாவா.

இ—ள்

அதாவது மனத்தினால் தேடித்தேடி, மனனஞ்செய்து, சமாதிகூடி, இதயத்திற்குச்செல். அங்கு ஒருவன் நான் நானென்று சொல்லிக்கொண்டேயிருக்கிறான். அவன் யாரென்று கவனி. கவனிக்கும்போது அவன் பிரஹ்மமென்று உனக்குத் தெரியும்.

சௌம்ய!—இது அதிகாரியின் பெயர். அதிகாரி கனலு மல்லன், கதிரவனும் அல்லன். பின்னை? சோமன். குருநாதன் மார்க்கத்தில் செல்கின்றார். வழியிலேயே மாணாக்கன் சில கேள்விகளைக் கேட்கின்றான். இது அதிகாரிக்கு இலக்கணமன்று. வணங்குவதற்கும் கேட்பதற்கும் சில நெறிமுறைகள் இருக்கின்றன. குருநாதன் வழியில் செல்கின்றபோது

குறுக்கே விழுந்து வணங்கலாகாது. ஒரு ஓரமாக நின்று வணங்கவேண்டும்.

உண்ணும்போதும், உறங்கும்போதும், பல்துலக்கும் போதும், மலஜலங்கழிக்கப்போகும்போதும், முடியிறக்கும் போதும், எண்ணெய் தேய்க்கும்போதும், பாதத்தைத் தொட்டு வணங்கலாகாது. குருநாதன் சென்று கொண்டிருக்கிருர். நீ ஆன்மாவா, ஜீவஞ, பிரஹ்மமா என்று கேட்க ஆரம்பித்தாய். இது முறையல்ல. இதனுல்தான் 'சமித் பாணி' என்றது சுருதி. முதலாவது குருநாதன்கூறிய பதிலை வாங்கி வைக்க இயலுமா இயலாதாவென்று தன்னை நினைக்கவேண்டும்.

சௌம்ய — சந்திரனுக்கு சோமன் என்று பெயர். சௌம்யன் என்பதற்குப் பொருள் — சாந்தமாகவும், குண சீலனுகவும், வெள்ளை நெஞ்சினனுகவும், உண்மையுரைப் பவனுகவும் அதிகாரியிருக்கவேண்டும். முன்னிருக்கும் குருநாதன் உனக்கு இறைவனுகத் தெரியவேண்டும். அவருக்கு உவகை வரும்படி நடந்துகொள். அவரைப்பற்றி வேதத்தில்—''சிரத்தஸ்வ சௌம்ய'' என்று வந்திருக்கிறது.

''ததா அக்ஷராத் விவிதா : பாவா : ப்ரஜாயந்தே''— எங்ஙனம் சுடர்விட்டு எரியும் நெருப்பிலிருந்து பலவிதப் பொறிகள் எழுகின்றனவோ அங்ஙனம் சிருஷ்டியின் மூலத்தில் பேதம் இருந்தால் இரசத்திலும், பழத்திலும், மரத்திலும், சுவையிலும், குணத்திலும், வடிவத்திலும் பேதம் உண்டாகும். இம்மாதிரி உள்ளத்திலும் வாசனைகள் பல வாருக இருக்கின்றன. காயம் எல்லோருக்கும் சமானம். ஐம்பூதத்தின் காரியமானதால் பஞ்சபூதம் ஒரேமாதிரிதான். சைதன்யம் ஒன்றுதான். இந்த ஆண், பெண், பசு, பறவை, மரம், செடி முதலியன உள்ளிருக்கும் வாசனையின் வேற்றுமையால் வந்தன.

தொடர்ச்சி

நிர்குண பிரஹ்மம் இன்னதென்பது—

அக்னியிலிருந்து பொறி வந்ததுபோல அகில உலகமும் உபாதியினால் உதித்து ஒடுங்கின் என்றறிக. இது அத்யா ரோப கிரமமாகும். வருவித்து சொல்லப்பட்டதென்பது பொருள். காரணத்தோடு கூடிய பரமாத்மாவைச் சொன்ன தென்பது துணிபு. இனி எதிலிருந்து இவ்வுலகம் உதித்து ஒடுங்கியிருக்கின்றதோ அந்த வஸ்து எத்தகையது என் பதைக் கூறுகின்றார். ஈண்டு காரணரஹித ஆன்மா கூறப் படுகிறது. பரமாத்மா (ரூபம்) உருவமா அரூவமா என்று கேள்வியை எழுப்பினார் பகவத்பாதாள். மீண்டும் பரோக்ஷமா அல்லது அ ப ரோ க்ஷ மா வெ ன் று ம் வினாவை உண்டு பண்ணினார்.

பதில் — யார் ஆத்மாவையறியவில்லையோ அவருக்கு அது முற்றிலும் பரோக்ஷமாகும், எவன் அதை நன்றாக அறிந்திருக்கிறானோ அவனுக்கு அது முற்றிலும் அபரோக்ஷ மாகும். பரோக்ஷம்—தூரம். அபரோக்ஷம்—சமீபம்.

இந்த தூரமும் சமீபமும் அதை தெரிவதும் தெரியாததே யாம். யார் எப்படியோ அவர் அப்படியறிவார். ''பாபீ சர்வத்ர பாபம் ஆசங்க்தே'' எவன் ஆசையுடையவனோ அவன் நெடுகிலும் ஆசையைப்பார்ப்பான். வெகுளியுடை யவன் எல்லாரையும் வெகுளியாகவும், வெறுப்புடையவன் எதையும் வெறுப்புடையதாகவும் பார்ப்பான். எனவே உன்னுடைய மனதைச் சுத்தம் பண்ணு. ஹிந்தியில் ஒரு சிலேடை ''அப்நீ காங்ட்டு மஜ்பூத் ரக்கோ, பர் சோரி மத் லகாவோ'' நீ உன்னுடைய பொருளைக் கவனமாக வைத்துக் கொள். திருடன் இடத்தில் குற்றம் சொல்லாதே என்பது மேலே சொன்ன வாக்யத்தின் பொருள். நீ தன்னை தேகவான் என்றும், மனவான் என்றும், எண்ணுவாயாகில் உனக்குப்

பரமாத்மாவும் அங்ஙனம் தோற்றும். ஆகையால் நீ தன்னைச் சோதித்துப்பார் என்று வேதாந்தம் விளம்புகிறது. எனவே நான் யாரென்று சிந்தனை செய்.

உன்னிடத்தில் கோபமில்லையெனில் பிறரிடத்தில் கோபம் எங்ஙனந் தெரியும்? அங்ஙனமாயின் அனைவரும் நமக்கு இதம் செய்வதுபோல் தெரியும். சிறு குழந்தையை அன்னை கன்னத்தில் அறைகிருள், அப்பொழுது அக்குழந்தை தனது அன்னையின் ஆடையைத் தூக்கித் தன் முகத்தை மறைத்துக் கொள்கிறது. கருணை நற்ருய் தன் குழந்தையை தன் தடக்கையால் எடுத்து மார்போடு அணைத்து முகத்தோடு முகம் வைத்து முத்தமிடுகின்ருள். அதுபோல் உமாகாந்தனை யுள்ளன்போடு உள்ளினுல் உன்னையும் அவன் தனது சொரூபமாக்குவான்.

ஹரித்வாரத்தில் ஒருமுறை ராசலீலை நடந்தது. அங்கு ஸ்ரீதரானந்த சுவாமிகளும் அவர் அன்பர்களும் வந்திருந்தனர். இரவுநேரம். எல்லோரும் லீலையில் ஆனந்தம் அநுபவித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது அக்கூட்டத்திலிருந்து ஒரு மாது எழுந்து உங்கள் பக்தரிலிருந்து ஒருவர் என்னைப் பார்க்கிருர் என்ருள். உடனே சுவாமிகள் நகைத்துக் கொண்டே அவர் பார்த்தது உனக்கு எப்படித் தெரியும் என்ருர். அவரை நான் பார்க்கும்போது அவர் என்னைப் பார்த்தது தெரிந்ததென்ருள். சுவாமிகள் — நீ அவரைப் பார்க்காதேயென்ருர்.

வேதாந்த மார்க்கத்தில் வெளியே பார்க்கிறதில்லை. பின்னை? தன்னைப்பார்ப்பது. அத்யாத்ம வழியில் தன்னைத் தான் சோதிக்கவேண்டும். நீ யிறைவனை யடைய விரும்பினுல் உலக எண்ணத்தை விட்டு உலகநாதனை நினை. சுருதி — காரண சகித பிரஹ்மத்தைக் கூறிவிட்டுக் காரணரஹித பிரஹ்மத்தைக் கூறுகின்றது. தத்தேத் சத்யம்—இதுதான் உண்மை. இம்மாதிரி சாக்ஷாத் அபரோக்ஷ பிரஹ்மத்தை ஆரணம் அறிவிக்கின்றது.

நாம் பூவைப் பார்க்கவேண்டுமானுல் பூவின் பிரகாசம், நேத்திரப்பிரகாசம், நிஜபிரகாசம் இம்மூன்று பிரகாசமும் வேண்டும். அப்பொழுதுதான் இது பூ என்று தோற்றும். இவைகளில் யாதானும் ஒன்று ஊனம் உறுமானுல் மலர் தோன்ருது. இதில் புஷ்பம் அதிபூதம் ஒளி அதிதெய்வம், கண் அத்யாத்மம். அதிதெய்வத்தின் உதவியைக்கொண்டு அத்யாத்மம் அதிபூதத்தைப் பார்க்கிறது. எல்லா ஐந்திரியக ஞானத்திலும் இதுதான் முறை.

எந்த விஷயத்தில் இந்திரியத்திற்கு நேரடியாகத் தொடர்பு இல்லையோ, அங்கு அநுமானஞ் செய்யப்படுகிறது. மானம்—பிரத்யக்ஷம், அநு—பின்னுல். எது பிரத்யக்ஷத்திற்கு பின்னுல் செல்லுமோ அது அநுமானம். அநுமானம் காக்ஷிக்கு அடிமையாக இருக்கிறது. இதை பிரத்யக்ஷமூலகம் என்றும் மொழியலாம். அநுமானத்திற்கு பயனும் பிரத்யக்ஷமே.

சார்வாகன் (காக்ஷியை) பிரத்யக்ஷத்தை மட்டும் பிரமாணமாகக் கொள்கிருன். அவனுக்கு வயிறு தெரிகிறது முதுகு தெரிகிறதில்லை. பௌத்தன் பிரத்யக்ஷத்தையும் அநுமானத்தையும் ஒப்புக்கொள்கின்ருன். சிலர் உபமான பிரமாணத்தையும் சேர்த்து மூன்று என்றும், நையாயிகர் சப்தபிரமாணத்தையுஞ் சேர்த்து நான்கு என்றும் இன்னும் சிலர் அர்த்தாபத்தியைச் சேர்த்து ஐந்தென்றும் அருளுவர். அர்த்தாபத்தி — ஒருவன் மற்ருெருவனிடம் — ஐயா! இந்தப் பெருத்த மனிதன் பகலில் சோறு உண்கிற தில்லையென்ருன். இதனுல் என்ன பொருள் உண்டாகிறது? அவர் சொன்னுர்—ஐயா! இவர் பகலில் உண்ணுது போனுல் இரவில் உண்டிருப்பார் என்ருர். பகல் உணவின் இன்மையே இரவு உணவையுணர்த்துகின்றது. இவ்வாறு உணர்த்துதல் அர்த்தாபத்திப் பிரமாணமாகும்.

மீமாம்சகர் அநுபலப்தியையும் பிரமாணமாகக் கொள்கின்றனர். ஈண்டு கடமில்லை, படமிருக்கிறது. இதில் கடத்தின் இன்மை, கடம் இன்மைக்குப் பிரமாணம்.

பௌராணிகர்கள் — இதிகாசத்தைப் பிரமாணம் என்கின்றனர். இதிகாசத்தில் என்ன வந்திருக்கின்றதோ, அது மீண்டும் வரக்கூடும் என்கின்றனர். நாடக நூல்களில் இவையெல்லாவற்றிற்கும் வேறாக அபிநயத்தைப் பிரமாணம் என்பர். இங்ஙனம் பிரமாணம் பல. இவைகளில் எந்தப் பிரமாணத்தினால் ஆத்மாவையறிய இயலும் என்று நீங்கள் உங்கள் நண்பரிடத்தில் கேளுங்கள்.

இந்தப் பிரமாணங்களெல்லாம் — தனக்கு வேறான வஸ்துவை அறிவிக்கின்றன. தன்னையறிவதற்குப் பிரமாணந் தேவையில்லை. ஜீவனும், பொறிகளும், விஷயங்களும் எதன் கிருபையால் சித்திக்கின்றனவோ ''தத்சித்தௌ கிம் அபேக்ஷதே'' அதையறிவதற்கு என்னவேண்டும்? ஒன்றும் வேண்டாம் என்பது உறுதி. நான் என்பவன் இருந்தால் தான் எல்லாப் பிரமாணங்களும் உண்டு. நான் என்பவன் இல்லையேல் ஒரு பிரமாணமும் இல. இராமதீர்த்த சுவாமிகளிடம் ஒருவர் கேட்டார்—சுவாமிகளே! ஆத்மா பிரஹ்மம் என்பதில் என்ன பிரமாணம் என்றார். சுவாமி—நான்தான் பிரமாணம் என்றார். கண்ணைக்கொண்டு மலரைப் பார்த்தாலும் கண்ணுக்கு சூரியஒளி தேவை. சூரியனைப் பார்ப்பதற்கு அதிபூதமாகிய புஷ்பந் தேவையில்லை.

இம்மாதிரி அத்யாத்ம நேத்திரத்தை நோக்குவற்கு அதிபூதத்திற்கோ, அதிதெய்வத்திற்கோ தேவையில்லை. நேத்திரம் நம்மிடம் இருக்கிறது. அது சாட்சி பாஸ்யம். ''ந கஸ்சித் ப்ரதீயாத் நாஹமஸ்மி'' நான் இல்லையென்னும் எண்ணம் யாருக்கும் உண்டாகமாட்டாது. ஒரு பைத்தியக்காரன் வழியில் தூங்கி விட்டான். அவன் காலில் பாதரக்ஷையிருந்தது. இரவில் யாரோ அதைக் கழற்றிக் கொண்டு போய்விட்டார். வழியில் மாட்டுவண்டி வந்தது. வண்டிக்காரன் அடே! அவன் யார் எழுந்திரு என்று இரைந்தான். அதாவது தூங்குபவன் யாரென்று ஓங்கி சப்தமிட்டான்.

பைத்தியக்காரன் எழுந்தான். எழுந்ததும் தனது பாதத்தை நோக்கினான். காலணியைக் காணோம். அவன் என்னைக்காணுமேயென்று இறைய ஆரம்பித்தான். வழியில் வந்தவர்கள் நீ தான் இருக்கிறாயே யென்றனர். அவன்— நானிருந்தால் எனது மிதியடி எங்கேயென்றான். இது கிறுக்கனுடைய சொல். தோலால் செய்த காலணியிருக் கட்டும் இல்லாது போகட்டும், மனிதன் அவன்தானே.

ஆத்மா எல்லா பிரமாணங்களுக்கும் பிரமாணமாகும். பிரமேயம் பிரமாதாவிற்கு பாஸ்யமாகும். பிரமாதாவிற்கு விஷயம் என்பது பொருள். பிரமாணவிருத்தி அவச்சின்ன சேதனம் பிரமாதா எனப்படும். அந்தக்கரணவிருத்தியில் இருக்கும் சேதனம் பிரமா — குடத்திலிருக்கும் சைதன்யம் (விஷய்) பிரமேய சைதன்யம். விருத்திச்சேதனமும் விஷயச் சேதனமும் ஒன்றுபடுகிறபோது குடம் தோன்றும். இரண்டும் ஒன்றாகாமல் ஞானமுண்டாகாது. ஞானத்தில் காலம், தேசம். வஸ்துவைப் பார்ப்பது மயக்கத்தினாலாகும். பழுதை யில் பாம்பைப்பார்க்கிறோம் அது பழுதையில் இல்லை. அது நமது மனதில் தோன்றுகிறது. பழுதை—கயிறு. அதுபோல அனந்தகோடி பிரமாண்டங்கள் நமது முன்னே தோன்று கின்றன. அவையனைத்தும் வெளியில் இல்லை. பின்னை? உள்ளேதான் தோன்றுகின்றன. ஏனெனின், அனந்தகோடி பிரமாண்ட அவச்சின்ன சேதனமும் நமது அந்தக்கரண அவச்சின்ன சேதனமும் ஒன்றுகூடுகின்றபோதுதான் பிரமாண்டம் கண்ணுக்குத் தெரிகிறது. எனவே அவை யனைத்தும் மனதிற்கு வேறன்று.

இந்த ஞானத்தையடையும் பொருட்டு குருவையடை வது அவசியம். ஒருவரிடத்தில் ஒன்றைக் கற்றுக்கொள்ளாது போனால் உலகஞானமும் உண்டாகாது. ஒருவர் இல்லத்தில் புதுமருமகள் வந்தாள். விவாகம் நடந்து இரண்டு மாதந் தான் ஆகியிருக்கிறது. மருமகளை நோக்கி மாமியார் — மருமகளே! உனக்கு சமைக்கத் தெரியுமா என்றாள். மருமகள்

நான் பாகசாஸ்த்ரத்தில் எம்.ஏ, படித்திருக்கிறேன் என்ருள். மாமியார்—மிகுந்த சந்தோஷம்.

இன்று நமது வீட்டிற்கு மூத்தமருமகன் வந்திருக்கிருர், ஆகையால் உப்புமா கிண்டு என்ருள். மருமகள் உடனே யெழுந்து அடுப்பைமூட்டி சுறுசுறுப்பாய் இரும்புச் சட்டியை யெடுத்து அடுப்புமேல் வைத்தாள். அது கணகணவென்று சூடுபிடித்தது. உடனே கொதிக்கின்ற சட்டியில் நெய்யை விட்டாள், அதன் பிறகு என்ன போடவேண்டும் என்று தெரியவில்லே. பாகசாஸ்த்ரத்தைத் தேடியெடுத்தாள். தாளேத் தள்ளினுள். சற்று உற்று நோக்கினுள். ரவை போட வேண்டும் என்று தெரிந்தது. உடனே ரவையைக் கொணர்ந்து கொட்டினுள்.

முன்பே நெய் கொதித்திருந்ததால் ரவையைப் போட்டதும் எரியத் துவங்கிவிட்டது. மீண்டும் என்ன போடவேண்டுமென்று புத்தகத்தைத் திருப்பினுள். அதற்குள் எல்லாம் எரிந்து கருகி சாம்பலாய்ப்போயின. மாமியார் ஓடி வந்து மருமகள் மதியை நினேந்து வருந்தினுள். மறுநாள் காலே வந்தது. முன்போல் மருமகளேயழைத்தாள். மருமகளே! வீடுபெறுக்கத்தெரியுமா என்ருள். மருமகள் அழத்துவங் கினுள். ஏன் அழுகிருய் என்ருள் மாமியார். மருமகள் — என்னே அவமானப்படுத்தாதீர்கள், எனக்குப் பெறுக்கவுமா தெரியாது என்ருள். நல்லது அறையைப் பெறுக்கு என்ருள் மாமியார்.

மருமகள்வெகு சுறுசுறுப்புடன் அறையைப் பெறுக்கி அங்குள்ள குப்பையை அள்ளி ஜன்னல் வழியாக வெளியே கொட்டினுள். அந்நேரம் அவ்வழியாக ஒரு பெரிய மனிதன் வர, அவன் மேலே இவள் கொட்டிய குப்பைவிழ, அவன் சண்டைக்கு வர நேர்ந்தது. மாமியார் — மருமகளே! பார்த்தாயா ஒருவரிடத்தில் கேட்காமல் பெறுக்குமாறு பிடித்து பெறுக்கக்கூடத் தெரியாதென்பதைத் தெரிந்து கொண்டாயா என்ருள்.

ஆகையால் ஆத்மதத்வத்தை யறிவதற்கு எப்பொழுது குருபரரின் சரணுகதியை யடைகிருேனே, அப்பொழுது தேசிகர் தத்வஞானத்தை உபதேசிக்கிருர். ஈண்டு அவர் உபதேசிக்கும் பொருள் பரமாத்மா. அதன் சொரூபம் என்னை யென்பதற்குப் பதில் மந்திரம் கூறுகின்றது.

திவ்யோ ஹி அமூர்த : புருஷ :
4
ச பாஹ்ய ஆப் யந்தரோ ஹி அஜ : |
4
அப்ராணோஹி அமநா : சுப்ரோ ஹி
அக்ஷராத் பரத : பர : 2

இ—ள்

(அது) திவ்ய :, அமூர்த :, புருஷன், உள்ளும் புறமும் இலங்குபவன், உறுதியாக (அஜன்மா) பிறப்பற்றவன். (நிஷ்கிரியன்) அமநா—எண்ணமற்றவன். தூய்மையான வன், சிறந்தவன், நாசத்திற்கு அப்பாற்பட்டவன்.

திவ்யம்—அந்த பரமாத்மா திவ்யவடிவினன். லௌகிகன் அல்லன். எல்லாப்பொருளையும் விளக்குகின்றவன், இதனுலும் திவ்யம். நாம் ஒரு துவாரத்தின் வழியாய் ஆகாசத்தைப் பார்த்தோமானுல் ஆகாசமுழுவதும் தெரிய மாட்டாது. அதுபோல பொறிகள் துவாரமாக நாம் பரமாத் மாவைப் பார்த்தோமானுல் அனந்த ஈசுவரன் நமக்குத் தெரியமாட்டான். இந்திரிய துவாரங்கள் இறைவனையறியும் வலிமையில்லாதவை. இவைகளுக்கு இறைவனைப் பார்க்கும் வலிமையில்லை. இவைகளைக்கொண்டு உலகத்தையுணரலாம். கண்ணைக்கொண்டு கெடியாரத்தைப் பார்க்கலாம், கையைக் கொண்டு கெடியாரத்தின் பரிசத்தைத் தொட்டுப்பார்க்கலாம். ஆனுல் யாருக்கு கெடியாரம் பார்க்கத்தெரியுமோ அவருக் குத்தான் இப்பொழுது இவ்வளவு நேரம் ஆகிறதென்று பார்க்கத்தெரியும். மனதிலுள்ள வாசனையினுல் கெடியார வாயிலாக நேரம் அறியப்படுகிறது.

இது பிரத்யக்ஷ ஞானமாகும். சுவர்க்கம் அநுமானத்தைக்கொண்டு அறியப்படுகிறது. எனவே இது பரோக்ஷ ஞானம் எனப்படும். தனது உள்ளத்தில் காமம், வெகுளி, லோபம் இருக்கின்றன என்பது அநுபவத்திற்கு வருகின்றன. இவைகளைப் பொறிகளைக் கொண்டும் பார்க்கமுடியாது. அநுமானத்திற்கும் இவைகள் விஷயமல்ல. அனுபவத்திற்கு விஷயமாகின்றன. இதை அபரோக்ஷஞானம் என்று சொல்லுவார்கள். மேலே சொன்னவை இதம் விருத்திக்கு விஷயமன்று. ஆகவே இது காமம், இது வெகுளியென்று சொல்லாமல், நான் காமி, நான் குரோதி என்று கூறுகின்றனர். இதனுல் இவை சாக்ஷிபாஸ்யம். காமம் கெடியாரம் போல கண்ணுக்குத் தோன்ருது. கருத்துக்குத் தோன்றுகிறது. கருத்து சாட்சி.

இனி சாட்சி யார் என்று பார். கெடியாரத்தை எவன் பார்க்கிருனே அவன்தான் சாட்சி. மனதில் விருத்தி உண்டாவது எதற்காக? ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிப்பதற்காக. நான் மனிதன் என்னும் விருத்தியுண்டாகிறது எதற்காக? பசு பறவைகளிலிருந்து மனித இனத்தைப் பிரிப்பதற்காக. ஆனுல் நான் தேகம் என்று யாருக்கும் ஞானமுண்டாகிறதில்லை. தேகம் எல்லார்க்கும் பொது. நான் கெடியாரத்தையறிகிறேன். இதில் நான் என்பது ஆபாசன். நான் என்பதை யெது அறிகிறதோ அது சாட்சி.

தடி, கொடி, படி, இவை பிரத்யக்ஷம். சுவர்க்கம், நரகம் பரோக்ஷம். காமம் வெகுளி அபரோக்ஷம், சாட்சி—திவ்யம். திவ்யம்—தியோதநாத்திவ்யம், சுயம் ஜோதி. அது பிரமாணங்களுக்கும் பிரகாசங்கொடுப்பது. அது (நேத்திரம்) கண், காது, நாக்கு, மூக்கு, துவக்கு என்னும் ஜன்னல் வழியாக திருஷ்டா, ஸ்ரோத்தா, ரசயிதா, கிராதா, ஸ்ப்ரஷ்டாவாக ஆகின்றது அது எல்லாவற்றையும் பார்க்கும், ஆனுல் யாருக்கும் காணப்படாதது. எல்லாவற்றையுங்

கேட்கும், ஆனால் பிறரால் கேட்கப்படாதது. எல்லாவற்றை யும் அறியும், ஆனால் யாவற்றாலும் அறியப்படாதது. அனைத்தையும் சுவைக்கும், ஆனால், எதனாலும் சுவைக்கப் படாதது.

''திவிவா ஸ்வமஹிம்நி ப்ரதிஷ்ட்டித :'' இதை திவ்யம் என்றதற்கு இன்னொரு காரணமும் உண்டு. அது என்னே? இது தனது மஹிமையில் இருக்கின்றது. இது, அது என்ற தெல்லாம் பிரஹ்மத்தை. சூக்ஷ்மமான பொருளைப் பார்க்க வேண்டுமானால் கண்ணிருந்தால்தானே பார்க்கமுடியும்? எவ்வளவு கூர்மையான கருவிகளை வைத்தாலும் கண் இல்லாதுபோனால் காணஇயலாது. நான் அஞ்ஞானியென்று சொன்னயே அந்த அஞ்ஞானத்தை யார் பார்க்கிறார்? மனிதன் படிக்காமலும், கேட்காமலும், ஒன்றும் அறியாமலும் தன்னை ஜீவனாக நினைக்கிறான்.

இது ''அந்தேனைவ நீயமாநாயதா அந்தா :'' இது குருட்டு பரம்பரை. உண்மையில் தன்னுடைய பரிசின்னத் தையும், மனிதத்தன்மையையும் நீ பார்த்தாயா? எவன் தனது தவறையுணர்கிறானோ அவன்தான் ஞானி. புருஷ:— புருஷனிடத்தில் ஒன்பது வார்த்தைகள் கூறப்படு கின்றன. 1 திவ்யம், 2 அமூர்த்தம், 3 புருஷம், 4 சபாஹ்ய ஆப்யந்தரம், 5 அஜம், 6 அப்ராணம், 7 அமநம் 8 சுப்ரம் 9 அக்ஷராத்பர : என்று எண்ணப்பட்டிருக்கிறது. அபரோ க்ஷத்வாத், பூர்ணத்வாத், புரிஸயத்வாத் புருஷ : என்பது சங்கரபாஷ்யம்.

இவ்வான்மாவை புருஷனென்று ஏன் சுருதிகள் சொல்லு கின்றன? முதற்காரணம் அபரோக்ஷம். இரண்டாவது காரணம் பூரணம் மூன்றாவது காரணம் இவ்வாக்கையில் வசிக்கிறது. இதனால் இது புருஷன் : இந்த சரீரவடிவ நகரத்தில் ஒன்பது ஓட்டைகள் இருக்கின்றன. ''மலஞ் சோரும் ஒன்பதுவாயிற்குடிலை'' என்று திருவாசகத்தில்

மணிவாசகப்பெருமான் அணிவாசகமாக அருளுகின்றார். ''நவத்வாரே புரே தேஹி'' என்று சொல்வீரன் சொன்னான் வில்வீரனுக்கு. இவ்வுடம்பில் இருந்துகொண்டு நனவு, கனவு, உறக்கம் இவைகளை அநுபவிக்கின்றது.

நீ தன்னை புருஷனென்று எண்ணுகின்றாய், அது சரி. நாம்பு, எலும்பு, உதிரம் முதலிய ஏழு தாதுக்களால் செய்யப் பட்டவையென்று நினைக்கின்றாயே அது தவறு. இந்த நாற்றச் சரீரத்தை நம்மோடு கலக்காதே. காசிக்குச்சென்று கங்கை நீராடப்போனவன் சேற்றில் விழுந்தது போலாகாதே. ஸ்ரீமத் பாகவதத்தில் இல்லறத்தவர்க்கு இவ்வாறு கூறியிருக்

2

கிறது—''கிரஹேஷு அதிதிவத் வசன்'' நமது இல்லத்திற்கு அதிதிகள், உறவினர்கள், விருந்தினர்கள் வருகின்றனர். நமது வீட்டை அவர்கள் தங்கள் வீடென்று எண்ணமாட்டார் கள். அதுபோல் நீயும் இரு.

வந்த விருந்தினர் நம்மோடு பேசுகிறார்கள், சிரிக்கிறார் கள், உண்டு படுக்கையில் உறங்குகின்றனர். ஆனால் மறந்துங்கூட தங்கள் வீடென்று நினைப்பதில்லை. ''நிரு லோகே ந்யஸேத்நரதாம்'' பாகவதம். நான்மனிதன் என்னுந் தன்மையை மனித உலகத்தில் வைத்துவிடு. ஆன்மாவோடு அதை இணைக்காதே. இக்காயம் அதிவ்யம், நஸ்வரம். நாசமுடையது. ஆன்மா திவ்யம் அவிநாசி. நீ தன்னை ரோகி, போகி, தியாகி, யோகியென்று நினைக்கின்றாயே, அது சரீரம். தூலசரீரமில்லாது போனாலும் சூக்கும சரீரம் அவசியம்.

காயத்தை திவ்யமாக வைப்பதற்கு விதிநூல்களில் சொல்லியிருக்கிறது. ''குருதீக்ஷா அக்ஷததமா :'' குரு தீக்ஷையினால் யாருடைய (இருள்) அதாவது அஞ்ஞான இருள் நஷ்டமாகிவிட்டதோ அவன் சில சிறந்த பழக்கவழக் கத்தால் காயத்தைப் புனிதமாக வைத்திருக்கிறான். அல்லது யக்ஞ யாகாதிகளைச் செய்து சுவர்க்கத்திற்குப்போய் அங்கு

திவ்ய உடலைப்பெறுகிருன். இருந்த போதினும் காயம் எப்போதும் ஜனன மரணமுடையது. ஆத்மா அவிநாசி. நாசமின்றியது. தேவதைகளுக்கும் யோகிகளுக்கும் உரிய உடம்பும் அழிவையுடையது. ஞானிகளுடைய பார்வையில் எல்லா சரீரமும் சமானந்தான். இதை காரிகை நமக்கு ஞாபக மூட்டுகிறது—

''ஆதிக்யே சர்வசாம்யே வா நோப பத்திர்ஹி வித்யதே''

மும்மூர்த்திகளுடைய சரீரமும் உயர்வாகவோ சமான மாகவோ சொல்வதற்கில்லையென்பது பொருள். அரவிந்த் ஆஸ்ரமத்தில் வசிக்கும் ஒரு பக்தர் — அரவிந்தர் சரீரமும் திவ்யமாகலாம் என்று சொல்கிருர் என்ருர். அவ்வமையம் அரவிந்தருக்கு கால் வீங்கியிருந்தது. இவர் இப்படி மொழி கிருர் இவர் கால் ஏன் வீங்கியிருக்கிறது என்ருர். அதற்கு அவர்—சரீரம் திவ்யம் இல்லை திருஷ்டி திவ்யம் என்ருர்.

உடலிலிருந்து மலம் மூத்திரம் வரத்தான் செய்யும். அங்ஙனம் இருப்ப, உடல் திவ்யம் எங்ஙனம்? திருஷ்டி திவ்ய மாளுல் எல்லாந் திவ்யந்தான். அமூர்த்த :— இன்னுஞ் சிலர்—திருஷ்டி திவ்யமானாலும் தனக்கு வடிவம் அல்லது விகாரம் அல்லது ஆகாரம் இருக்கக்கூடும் என்கின்றனர். பக்தர்கள் திவ்யதேகம், பார்ஷததேகம் என்று பகர்கின்றனர் பகவானுடைய அவதாரதேகமும் திவ்யம். இந்த அக்ஷர வடிவ ஆன்மாவிற்கு பௌதிக தேகம் இல்லாதிருப்பினும் திவ்யதேகம் இருக்கலாம் என்று ஐயங்கொள்கின்றனர். இதையகற்றும் பொருட்டு அமூர்த்த : என்கின்றது சுருதி.

ஆன்மாவிற்கு எவ்வித ஆகாரமும் கிடையாது. ஆன்மா மாயை அவித்தை யிவை யிரண்டிற்கும் வேருனது. ஆகை யால் அது திவ்யம். எதில் மூர்த்தியிருக்குமோ அது மூர்த்தம் எனப்படும். எது எப்பொழுதும் மூர்த்தமில்லையோ அது அமூர்த்தம் என்று சொல்லப்படும். மூர்த்தம் — மூர்ச்சிதம். எது கல் மண் கட்டையைப்போல செயலற்று இருக்குமோ அது மூர்த்தம். ஜடத்தில் அல்லது திருஸ்யத்தில் மூர்த்தி

யிருக்கும். அமூர்த்தம் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் மூர்த்தி மூர்த்தம் இரண்டையும் கடந்தது.

புருஷ:— அமூர்த்தம் காலம், தேசம், ஆகாச முதலியவை அமூர்த்தப் பொருளாகின்றன. பாரதம், பாகிஸ்த்தான், பர்மா இவையெல்லாம் பூக்கண்டம். ஞானதிருஷ்டியில் இவையெல்லாம் ஆகமாட்டா. இவை எல்லையில் கற்பிதம். கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, மேலே, கீழே, வெளியில் உள்ளே யிவையெல்லா இடத்திலும் உள்ள சம்வித்திற்கு எது காரணமோ அது தேசம். ''பிராச்சியாதி வியவஹாரஹேது: திக்'' நியாய சூத்திரம். இம்மாதிரி காலமும் அமூர்த்தம். அங்ஙனமாயின் தேசத்தைப்போல ஆன்மா வியாபகமா? காலத்தைப்போல அமூர்த்தமா? காலத்தைப்போல நித்யமா? இல்லையில்லை. இவையெல்லாம் ஜடமும் அநித்யமுமாம். ஆன்மா சேதனம் புருஷவடிவம். எது இன்னென்றைப்பற்றி விளங்குமோ அது ஜடம். எது சுயம் விளங்குமோ அது சேதனம். ஈசுவரன் அல்லது ஆன்மா நித்யச்சேதனம். அது தான் எங்கும் நிறைந்திருப்பதால் புருஷன்.

ச பாஹ்ய ஆப்யந்தரோஹி அஜ :— வியாபகம். சாங்கி யர்கள் புருஷனை அநேகம் என்று அறைகின்றனர். இவர்கள் மதத்தைக் கண்டித்து புருஷனை ஏகம் என்றும், வியாபகம் என்றும் வேதாந்தம் விளம்புகின்றது. ஒருமுறை நான் கனவு கண்டேன். என்ன கனவு? பிரயாகையில் கும்பமேளா நடக் கிறது. அகலமாகவும், நீளமாகவும் இடத்தைக் கண்டேன். ஆயிரக்கணக்கான மக்கள் நீராடுகின்றனர். ஒருவர் தானஞ் செய்கிறார், ஒருவர் யக்ஞம் பண்ணுகிறார், ஒருவர் பூஜை செய்கிறார். இதற்கிடையில் ஒரு தனவந்தர் வந்தார். அவர் நிரம்ப தானஞ்செய்தார். நான் அவரை நோக்கி—தன வந்தரே ! நீர் பெரிய தருமாத்மா என்றேன்,

தனி—சுவாமின்! இது நான் செய்த புண்ணியமில்லை, எங்கள் மூதாதியர் செய்த பாக்கியத்தால் இந்த நல்ல

காரியம் எனக்குக் கிடைத்திருக்கிறது என்றார். இதற்கு இடையில் எனது உறக்கங்கலைந்தது. இக்கனவு முழுவதும் எண்ணிப்பார்க்கும்போது பொய்தானே. தனவந்தருடைய தானம், தனம், வாங்குபவர் எல்லாம் பொய்யே. நான் மெய்யே. மேளா, கங்கை, மக்கள் கூட்டம் இவையெல்லாம் என்னுடைய மனதில் ஏறியிருந்த வாசனைதான் இத்தனை வடிவத்தையெடுத்தது. இத்தனைவடிவமாக விரிந்ததும், விழித்தபின்பு சுருங்கியதும் வெறும் பொய்யே. "வியாப்ய வியாபகதா மித்யா" வேதாந்தம். விஸ்வாகாரமாக விரிந்ததும், கடுகாகாரமாகச் சுருங்கியதும் பொய்யென்பது பொருள்.

நனவில் பிரம்மாண்டம் காணப்படுகிறது. அதில் விரிவும் இல்லை, சுருக்கமுமில்லை. சைதன்யம் எல்லாவற்றிற்கும் சாட்சி. புருஷன் உள்ளேயிருக்கிறான், படைப்பு வெளியே நடக்கிறதென்பதில்லை. புருஷன்தான் உள்ளே ஆன்மாவாகவும் வெளியில் விரிந்த உலகமாகவும் இருக்கிறான். அங்ஙனமாயின் புருஷனுக்கும் புவனத்திற்கும் என்ன சம்பந்தம்? தேகத்தை விசாரஞ்செய்தால் என்ன சம்பந்தம் என்று தெரியும். ஆகையால் உடம்பைச் சற்று உற்று நோக்கிப் பார். அன்னமயகோசமுமில்லை, பிராணமயகோசமுமில்லை, மநோமயகோசமுமில்லை, விக்ஞானமயகோசமுமில்லை, ஆனந்தமயகோசமுமில்லை.

இவ்வாறு எண்ணிப்பார்க்கும்போது தேகசம்பந்தம் நீங்குகின்றது. உண்மையில் இரண்டு தத்வமில்லை. தத்வம் ஒன்றுதான். எங்கும் ஞானந்தான். "ஞானமெய் மகனே" கைவல்யம். "எங்கும் பிரகாசமாய்" தாயுமானார். இவ்வாக்கியமெல்லாம் ஞேயமில்லை ஞானந்தான் என்கின்றன. வேதாந்தத்தில் திருஷ்டாந்தத்திற்குக் குறைவில்லை. "திருஷ்

4

டாந்தஸ்து பாவாத்" வியாச சூத்திரம். எடுத்துக்காட்டிற்கு இன்மையில்லையென்பது சூத்திரத்தின் பொருள். பூமியில்

இருந்து செடி, கொடி, மரம் உண்டாகின்றன. பின்னர் அதன் கண் மடிந்துவிடுகின்றன. முன்னும் செடி கொடிகள் மண்ணேதான், பின்னும் மண்ணேதான். நடுவில் மட்டும் செடிகொடிகளாகக் காணப்படுகின்றன. அப்பொழுதும் அவை மண்ணைவிட்டு வேறல்ல. அதுபோல இவ்வுலகமும் ஆன்மாவிலிருந்து தோன்றி முடிவில் அதில் மடிந்து விடுகின்றது. ஆகலின் அகில உலகமும் ஆன்மாவிற்கு அன்னியமில்லை. பிரஹ்மசூத்திரத்தின் பிரகிருதிஅதிகரணத்தில் பேசியிருக்கிறது —

''பிரகிருதிஸ்ச பிரதிக்ஞா திருஷ்டாந்த அநுபரோதாத்'' பிரகிருதியும் பிரஹ்மந்தான். இதனால் மாயை, அவித்தை அவைகளின் காரியமாகிய உலகமும் உடல்களும் பிரஹ்மமென்பது புலனும். அஃது எங்ஙனம் என்பாயாகில், சுருதியில் பிரதிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது. ஒன்றின் ஞானத்தால் எல்லாவற்றின் ஞானமும் உண்டாகும். எதுபோல? பிரதிவ்யாம் ஓஷதய: சம்பவந்தி [4] |

பஞ்சபூதத்தை விசாரம் பண்ணிப்பார். குடம் மண்ணிற்கு வேறல்ல. மண்ணை சிவலிங்கமாகப் பிடித்து நீ பூஜைசெய், அல்லது அதைக்கொண்டு பறவையை யெறி. மண்ணு மண்ணுதான். தண்ணீரை லிங்கத்தில் விடு அல்லது சாக்கடையில்விடு தண்ணீர் தண்ணீர்தான். நெருப்பு உபாதிக்குத்தக்கவாறு சிறிதாகவும் பெரிதாகவும் தெரியும். நெருப்பு ஒரே மாதிரிதான். உபாதி—விறகு. அதில் குப்பையைக் கொட்டினாலும் சரி, ஓமம் செய்தாலுஞ் சரி. இம்மாதிரி காற்றும் ஒன்றுதான். நாய், கழுதை, பன்றி, மனிதன், குதிரை இவையெல்லாம் ஒரேமாதிரி மூச்சு வாங்குகின்றன. பவனத்தில் நறுமணம், துர்மணம் உபாதியால் வருகின்றன. பவனம் — வாயு. ஆகாசத்தில் குடாகாசம், மடாகாசம், உதராகாசம் என்பன எல்லாம் மகாகாசத்தின் பேதமேயாம். பேதம் கற்பிதம்.

மனம் ஒன்றுதான். அதில் பெண்ணென்றும், ஆண்ணென்றும், பசு பறவையென்றும் எண்ணம் வருகின்றது. இவன் பகைவன், இவன் உறவன் என்று எண்ணந்தோன்றுகிறது. ஆனாலும் மனம் எப்போதும் மனமாகத்தானிருக்கிறது. எது போல கடாகாசம், மடாகாசம் என்றதால் ஆகாசத்திற்கும், சுவாசம், நிஸ்வாசம், மூச்சு இவைகளால் வாயுவிற்கும், பொறி கனல் இவைகளால் நெருப்பிற்கும், அலை நுரை குமிழி இவைகளால் நீருக்கும், குடம் சட்டி கலசம் இவைகளால் மண்ணிற்கும் குற்றமில்லையோ, அதுபோல் உலகம் தோன்றினதாலும் தோன்றாமையாலும் ஆன்மாவிற்கு அன்னியமோ குற்றமோ இல்லையென்பது தெளிவு.

ஞானேந்திரியம் எதனோடும் பொருந்துவதில்லை. கண் முன் எது வருகிறதோ அதைக் கண் காட்டுகிறது. ஞானம் விருப்பு வெறுப்புக்காக இல்லை. பின்னை? எது எப்படியோ அதையப்படி அறிவிப்பதற்காக. நாக்கு அல்வா, தீம்பண்டம், காரம் இன்னதென்று அறிவிக்கிறது. தனக்கென ஒன்றையும் வைக்கிறதில்லை. ஞானத்திற்கு ஆசை வடிவமல்ல. ஆசை ஒருவித மயக்கம். கானலை நீரென்றோடும் கானக மான்போல. மனம் புதிது புதிதாக புதுமை நினைக்கின்றது. ஐந்து ரூபாய் கிடைத்தபின்பு பத்து ரூபாயை நாடுகின்றது. பத்துரூபாய் கிடைத்ததும் நூறை விரும்புகின்றது. அது எதிலும் நிற்கிறதில்லை.

ஒரு நண்பர் இன்னொரு நண்பர் இல்லத்திற்குச் சென்றார். அவர் இவரை உபசரித்தார். உண்டு களித்து உறங்கும் நேரத்தில் போய்வருகிறேன் என்றார். அவர் இவரை நண்பனே! இங்கேயே ஓய்வு எடுக்கலாமென்றார். இவர் ஆகட்டும் என்றார். உறங்குவதற்கு உரிய முறையைச் செய்து கொடுத்தார். மழை வர ஆரம்பித்தது. நனைந்து விடுவேனா என்று எண்ணினார். ஓய்வெடுக்க உள்ளே

போனார். சிறிது நேரம் தூங்கினார். உறக்கங் கலைந்தது. வெளியே வந்தார். வீட்டின் நண்பர் பார்த்தார். அறையிலிருந்து வந்த தோழன் மேனி நனைந்திருப்பதைக் கண்டார். நண்பனிடத்தில் வினவினார் நனைவதற்குக் காரணத்தை. நண்பன் — தோழனே தூங்கும்போது மூடிக்கொள்வதற்கு ஆடையெடுக்க என்வீடு சென்றேன். வரும் வழியில் மழையால் நனைந்துவிட்டேன் என்றான்.

இதை நீங்களே யென்ன என்று சிந்தித்துப்பாருங்கள். அவன் படுக்கையில்தான் இருந்தான். அங்கு போனது யார்? மனந்தானே. நாம் நுகராத துன்பமில்லை. அன்னையின் கற்பத்திலிருக்கும்போது துன்பத்தைத் துய்த்தோம். படிமிசை வந்தோம் தரையில் தவழ்ந்தோம். இப்பவும் எண்ணிறந்த துயரங்களை நுகருகிறோம். இவையெல்லாம் கனவுபோல் மாரிமாரி வாரிபோல் வருகின்றன. "திதிக்ஷஸ்வ பாரத" என்று திருமால் செப்பினான் சிலைவானுக்கு. சிலைவான்—வில்வீரன். பொறு மனமே பொறு என்பது பொன்மொழி.

சிருஷ்டிப்பொருள்கள் சொப்பனம்போல் வந்து போய்க் கொண்டேயிருக்கின்றன. கங்கையில் நாற்றமுள்ள பிணமும் வருகின்றது. மணமுள்ள மாலையும் வருகின்றது. நீ யெதையும் பிடிக்கத் துணியாதே. கரையிலிருந்து பார்த்துக் கொண்டேயிரு. கணவன் இல்லாமல் நான் எப்படி வாழ்வேன் மனைவியில்லாமல் எப்படி வாழ்வேன் என்கின்றனர். இவையெல்லாம் பொய்யான தாரணை. ஒருவர் இல்லாமல் ஒருவர் வாழமாட்டாரென்பது மதிஹீனம். குழந்தையாயிருக்கும் போது மனைவியுமில்லை, கணவனுமில்லை. வாழ்ந்தோமா வாழவில்லையா? எண்ணிப்பார். விளையாடுகின்ற குழந்தை கரத்தில் பொம்மையைக் கொடுத்தால் உவகை கொள்ளுகின்றது. அதன் கரத்திலிருந்து பொம்மையைப் பிடுங்கி விட்டால் அழத்தொடங்குகிறது. அது இப்பொம்மையில்லாது

போனால் நான் எப்படி வாழ்வது என்று நினைக்கிறது. அக் குழந்தைக்கு அது அவ்வாறு நினைப்பது சரி. நாம் அறிவு வடிவமாக இருக்கிறோம், நாம் அவ்வாறு எண்ணுவது முறை யல்ல. அருள்ஞானவடிவமென்றறையப்பா முரசு அகிலமும் பிரமமென்றறையப்பா முரசு. என்பது சமயோசிதமாலை.

மனதில் வருவதை யுண்மையென்று நினையாதே. மோகத்தைப்பார். மகன் இல்லாதுபோனால் நான் இறந்து போவேன் என்கின்றான் ஆனால் ஒருவரும் இல்லாமல் வாழத்தான் செய்கிறான். மனதில் வருகிற பாவங்களனைத்தும் மனதின் விவர்த்தமாகும். எங்ஙனம் கயிறு பாம்பாக விவர்த் தமாச்சோ அதுபோல் மனதில் வரும் எண்ணமெல்லாம் மனதின் கற்பனைதான். மனதில் வந்ததை யுண்மையென்று உணரலாகாது. மனம் பல வடிவத்தையெடுக்கும். அதில் எந்த வடிவத்தை நம்பினாலும் பொய்தான்.

ஒரு மனிதன் இறந்துபோனான். அவன் அவ்வூருக்குத் தலைவன். அவனுடைய சவயாத்திரையில் நிரம்பப்பேர்கள் கூடினர். அப்பொழுது நானும் அவர்களோடு குழுமியிருந் தேன். சிலர் அவனுடைய வியோகத்தால் வழியில் வருத்தத் தோடு வந்தனர். சிலர் அழுதார்கள். இறந்தவனை யிடு காட்டில் எரிக்கத்துவங்கினர். எரிவதற்கு குறைந்தது இரண்டு அல்லது மூன்று மணி நேரமாகலாம். அதுவரை அங்கு வந்தவர்களில் சிலர் சீட்டாடிக்கொண்டிருந்தனர். வியாபாரத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். சிலர் குடும்பத்தைப்பற்றி விசாரித்துக்கொண்டிருந்தனர்.

யாருக்கும் எவ்வளவு துக்கம் வந்தாலும் நெடுநேரம் துக் கப்பட்டுக்கொண்டிருக்க முடியாது. துன்பம் வரும் போகும். இந்நீள் நிலத்தில் எதுவும் நிலைத்து இரா. முதற்கணம் இருந்த வேகம் மறுகணம் இராது. சங்கல்பம் விகல்பந்தான் மனதிற்கு வடிவம். எப்பொழுது எது தோற்றுகிறதோ அப்போது அது மெய்யாகத்தோற்றும். அது பொய்யாய்

போனபின் பொய்யாய்த்தோற்றும் நான்கு பேர்கள் சூதாடச் சென்றனர். அவர்களில் ஒருவனிடம் ஒன்றுமில்லாமல் வெறுங்கையோடேகினன். நால்வரில் மூவர் பணம்வைத்து ஆடினர். ஒருவன் வாயைக்கொண்டே ஆடினன். அவனுக்கு நூறு ரூபாய் கிடைத்துவிட்டது. மறுமுறை அந்நூறு ரூபாயை வைத்து ஆடினன். அது கையைவிட்டுப் போய் விட்டது ஐயோ பணம் போய்விட்டதேயென்று அலறினன். வெறுங்கையோடே வந்தான், வெறுங்கையோடே போகிறன். இடையில் வந்தது இடையில் போய்விட்டது. இதற்காகக் கவலைகொள்வது அழகல்ல.

இம்மாதிரி நாம் அன்னையின் கர்ப்பத்திலிருந்து வெறுங் கையோடு சம்சாரத்திற்கு வந்தோம். வெறுங்கையோடு போகிறோம். இச்சம்சாரத்தில் இடையில் கண்ட வெற்றியும் தோல்வியும் சூதாட்டத்தில் கண்ட வெற்றியும் தோல்வியும் போலத்தான். இவையெல்லாம் மனதின் திருவிளையாடல் தான். உறக்கத்தில் இவ்வெண்ணங்கள், கவலைகள், துயரங்கள் எங்கே போயின? ஆகவே இவையெல்லாம் மனதின் விவர்த்தம். நனவில் உள்ள பொருள்களும் மனதின் விவர்த்தந்தான். விவர்த்தம் — இல்லாமல் தோற்றுவதென்பது பொருள்.

இப்பொழுது புத்தியைப்பற்றிச் சிந்திப்போம். புத்தியில் பயம் உண்டாகிறது. அது கயிற்றைப் பாம்பு என்று பயந்ததும் வெறும் மயக்கமே. சிலநேரம் அச்சமோ துன்பமோ தெரிகிறதில்லை. புத்தியின் நிலை புதுமையானது. இன்றைக்கு எதை நல்லதாக நினைக்கிறதோ நாளை அதைக் கெட்டதாக நினைக்கும் இன்று எதை உண்மையென்று நினைக்கிறதோ நாளை அதைப் பொய்யென்று நினைக்கும். ''யம்பாவம் தர்ஸயேத்யஸ்ய தப்பாவம்ஸது பஸ்யதி'' காரிகை. நமது தலையில் யார் யார் எதை எதை யேத்துகிறர்களோ அது அது ஏறிவிடும். புத்தியொவ்வொரு கணமும் ஒவ்வொரு வழியில்

திரும்பும். வழக்கறிஞர்கள் யார் பணங்கொடுக்கிறரோ அவர் பக்ஷமாக வாதாடுவார்கள். அவர்களுக்கு நியாயம் அநியாயம் இன்னதென்று தெரியாது. பணம் ஒன்றுதான் தெரியும். வண்டிக்காரன் மாட்டையெப்படித் திருப்புகிருனே அதுபோல் புத்தியும் பலவாறு திரும்பும். சிப்பியில் வெள்ளியும், பழுதையில் பாம்பும் எவ்வாறு மயக்கமோ அதுபோல புத்தியில் உண்டாகும் தோற்றமெல்லாம் வெளி மயக்கமே.

பிறப்பு, இறப்பு, சம்யோகம் வியோகம் சுகம் துக்கம் இவைகளில், இவைகளுக்கு வேருக ஒரு தத்துவம் இருக்கிறது. எப்பொழுது நான் பாவஞ்செய்கிறேன் என்று நீ நினைக்கின்ருயோ அப்பொழுது இறைவன் உன்னிடத்தில் இருந்து விலகி விடுகிருனு? இல்லை. உனது உள்ளத்தில் தான் உறைந்திருக்கிருன். நீ உன்னுடைய வடிவத்தை யெப்படி வைத்திருக்கின்ருயோ அந்த வடிவமாக இறைவன் இருக்கிருன்.

உலகத்தில் பெயர் மட்டும் வெவ்வேறு. பொருள் ஒன்றுதான். அஜ:—பொருள்—வஸ்து இருவிதம். ஒருபொருள் இயல்பாகவே மாறுதலையடைகிறது. மற்ருென்று உபாதியால் மாறுதலையடைகிறது. ச பாஹ்யாப்யந்தர : — ஒரு பொருள் உள்ளும் புறமும் எங்கும் இருக்கிறது. அங்ஙனம் இருக்கும்போது வேறு நிமித்தத்திற்கு இடமில்லை. ஆன்மா தானுக மாறுதலையடைகிறதில்லை. அது இயல்பாக மாறுதலை அடையுமானுல், அதற்கு சாட்சி யார்? உபாதியால் மாறுதல் அடைவதுபோல் காணப்படுகிறது. மாறுதல் — விகாரம். மனதில் காமரூப விகாரம் வருகிறது என்று தெரிகிறது. காரணம் அதையறியும் சாக்ஷியிருக்கிறது. ஆத்மா விகாரியென்று அறிவதற்கு சாட்சியில்லை.

செய்தித்தாளைப் படித்துக்கொண்டிருந்தேன். அதில் எனது நண்பன் நோய்வாய்ப்பட்டு இருப்பதாகத் தெரிய

வந்தது. என் மனம் வருந்தியது. மறுநாள் படிக்கிறபோது அவர் குணமடைந்துவிட்டதாகத் தெரிந்து மனம் மகிழ்ச்சியடைந்தது. இந்த சமாச்சாரத்தால் வாட்டமும் மகிழ்ச்சியும் வந்ததே யிதற்கு சாட்சி யார்? நான்தானே. இந்த இன்பதுன்பங்களுக்கு நான் வேரு இல்லையாயென்று யெண்ணிப் பார். சாட்சியில் விகாரம் வருகிறதில்லை.

மகரிஷி விஸ்வாமித்ரருக்கும் மேனகைக்கும் கங்கைக் கரையில் ஒரு பெண் மகவு பிறந்தது. அவர்கள் வேட்கை தனிந்ததும் அக்குழந்தையை நதிக்கரையில் போட்டுவிட்டு இருவரும் சென்றுவிட்டனர். இதற்கிடையில் சகுந்த பறவைகள் குழுமி தங்கள் இறக்கையால் அச்சிசுவைக் காத்து வந்தன. மகரிஷி கண்வர் தனது ஆஸ்ரமத்திலிருந்து காலைக்கடன் முடிப்பதற்காக நதிக்கரைக்கு வந்தார். வரும் வழியில் அக்குழந்தையைக் கண்டார். காதல் கொண்டார். பறவைகள் அகன்றன. கடமையை முடித்துவிட்டு குழந்தையைக் கையில் ஏந்தி தனது ஆஸ்ரமத்திற்குக் கொணர்ந்தார். தனது தங்கை கௌமியிடங்கொடுத்தார். அவள் அதைக் கண்போல் காத்து வந்தாள். சகுந்த பறவையால் காப்பாற்றப் பெற்றதால் அக்குழந்தைக்கு சகுந்தலையென்னும் திருநாமம் சூட்டினர்.

குழந்தையின் அழகு குவலயமுழுவதும் பரவியது. ஆஸ்ரமத்தில் வளர்ந்ததால் அறிவு மிக வளர்ந்தது. பருவம் வந்தது. பக்குவம் எய்தினள். பல தோழிகளோடு பூங்காவில் விளையாடினள். பூந் தோட்டத்திற்குப் புனிதநீர் சொரிந்தாள். கண்வர் மகளுக்குரிய காலம் வந்துவிட்டதே யொரு நல்ல கணவன் கிடைக்கவேண்டுமேயென்று ஏங்கியிருந்தார்.

சந்த்ரகுல வேந்தன் துஷ்யந்தன் தனது தோழன் விதூஷகன் உடன் வேட்டையாட வனத்திற்கு வந்தான். வலதுதோள் துடிப்பதைக் கண்டான். தோழனிடம் வினவினன். தோழன் — அரசே! இவ்வனத்தில் உமக்கு ஒரு

நங்கை கிடைக்கப்போகிருளென்ருன். மன்னன் மருவினன். தேர் வனத்தை நோக்கி விரைந்தது. அருகாமையில் ஓர் ஆஸ்ரமத்தைக் கண்டான். கண்வர் ஆஸ்ரமம் என்று தெளிந் தான். தேரைவிட்டு கீழேயிறங்கினன். தோழனை அங்கு நிறுத்தினன். தனியாக ஆஸ்ரமத்திற்குள் புகுந்தான். பகவான் கண்வர் இல்லையென்று தெரிந்தான். மறுபக்கம் திரும்பிப் பார்த்தான். மங்கையைக் கண்டான். மனம் உருகினன்.

மடந்தையும் மன்னனை மேவினள். இருவரும் ஒருவர்க் கொருவர் நோக்கினர். காந்தர்வ விவாகத்தைக் கைக் கொண்டனர். கனவை நனவாக்கினர். துஷ்யந்தன் — சகுந்தலா ! சிறிது காலத்துக்குள் வந்து உன்னை அழைத்துக் கொண்டு போகிறேன் என்று சொல்லி தன் அரண்மனைக்கு ஏகினன். அங்கு சென்றதும் இவளை மறந்தான். பல நாட்கள் கழிந்தன. போன கணவன் இன்னும் வரவில்லையே யென்று பூமகள் வருந்தினள். கண்வர் தெரிந்தார். கண் கலங்கினர். தங்கையை அழைத்தார். மன்னனிடம் மகளைக் கொண்டு சேர்த்துவாவென்று மாணுக்கரையும் அனுப்பினர். எல்லோரும் அரண்மனைக்கு ஏகினர். அரசனைக் கண்டனர். அவரிடம் ஆரியர் அருளியதனைத்தையும் அறைந்தனர். அரசன்—இவளை அறிந்திலோம் என்ருன். இச்சொல்லைக் கேட்ட மாது மலங்கினள். அரசே! இவ்வாறு அருளலாகாது என்ருள். மன்னன்—நாம் இருவரும் கூடியதற்குச் சாட்சி யார் என்ருன். மாது — மன்னவா நம் இருவரான்மாவும் சாட்சியென்ருள். அரசன் — ஆன்மாவிற்கு சாட்சி யார் என்ருன். மாது—ஆன்மா சுவயம் சாட்சியென்ருள். உள்ளதை யுணர்ந்தான். மனைவியைத்தழுவி மாசற்று வாழ்ந்தான்.

இந்த இதிகாசத்தால் என்ன தெரிகிறது? ஆன்மா சுவயஞ் சாட்சியென்று தெரிகிறது. ஒரு மகாத்மா நான் ஆயிரம் விகாரங்களுக்கு சாட்சியாக இருக்கிறேன் என்கின் ருர். பரமாத்மா—பாவி, புண்ணியாத்மா, ஞானி யக்ஞானி,

ஆகிறதில்லை. ஆன்மா அத்தனைக்கும் சாட்சியாகவும், வேருக வும் இருக்கிறது.

அஜ:— பரமாத்மா ஒரு வடிவத்தைவிட்டு இன்னொரு வடிவத்தையெடுக்கிறதில்லை. காசியில் சுவாமி கரபாத்திரிஜீ மகாராஜ் தசாஸ்வமேத கட்டத்தில் உபந்நியாசஞ் செய்து கொண்டிருந்தார். அக்கூட்டத்தில் நானும் இருந்தேன். சுவாமிகள்—ஜீவனுக்குப் பிறப்பிறப்பு உண்டு என்றனர். அக் கூட்டத்திலிருந்து ஒருவர் எழுந்து, சுவாமிகளே! ஜீவனுக்குப் பிறப்பிறப்பு இல்லையென்று இனிய வேதாந்தம் இயம்பு கின்றதே, இது எங்ஙனம் பொருந்தும் என்ருர். சுவாமிகள் மேலேயிருந்து கீழேயிறங்குவதற்கும், தாய் வயிற்றிலிருந்து புவியில் தோன்றுவதற்கும் பிறப்பென்று பெயரல்ல. பின்னை? பாவாத் பாவாந்தரம் ஜன்ம என்ருர். ஒரு எண்ணத்தை விட்டு மற்ருெரு எண்ணத்தைக் கொள்வது பிறப்பு என்ருர். பிறப்பிற்கு மூலகாரணம் பாவம்தான். ‘‘பாவோஹி பவ காரணம்’’ ச. பா. பாவம் எண்ணம்.

எண்ணம் எழுவது மனதில். மனம் லிங்கசரீரம். லிங்க சரீரந்தான் போய் வந்துகொண்டு இருக்கிறது. இலிங்க சரீரம் பாவாத்மகம். ஒரு மகாத்மா காசி கங்கைக்கரையில் அசிகட்டத்தில் இருந்தார். அவரைப்பற்றிச் செய்தித் தாளில் ஒருநாள் அவர்க்கு எழுபத்தைந்து வயது ஆகிறது என்று வந்தது. இரண்டு ஆண்டுகளுக்குப் பின்பு எண்பத் தைந்து என்று வந்தது. மூன்று ஆண்டு கழிந்த பின்னர் நூற்றியைந்து என்று வந்தது. இதில் எது மெய்யென்று நீங்களே யெண்ணிப்பாருங்கள்

நான் பதினைன்கு ஆண்டுவரை இல்லத்திலிருந்தேன். பிறகு வேதாரண்யத்தில் குருவாயிலாக முறைப்படி சந்நி யாசம் எடுத்துக்கொண்டேன். இது இரண்டாவது ஜென்ம மாகும். ‘‘மரணம் அத்யந்த விஸ்மிருதி :’’ இறப்பு என்பது

இறைவனை முற்றிலும் மறப்பதுதான். ஒருவன் தன்னைப் பாவியென்று எண்ணிக்கொண்டிருந்தான். ஆடிமாச அமாவாசை வந்தது. கங்கையில் நீராடினான். பஞ்ச கவ்யத்தைப் பருகினான். தன்னைப் பாவனமாக எண்ணினான். கோதானஞ் செய்தான். இப்பொழுது நான் புண்ணியனாக ஆகிவிட்டேனென்றான். இது இவனுக்கு இரண்டாவது பிறப்பாகிவிட்டது.

ஸ்ரீமத் பாகவதத்தில் —

ஜன்மது ஆத்மதயாபும்ஸ : ஸர்வ பாவேந பூரித : [4] [4]

விஷயஸ்விகிதம் ப்ராஹு : யதா ஸ்வப்ந மநோரதௌ [3] [2] [2]

ஜென்மம் என்னது? எதையும், எந்த எண்ணங்களையும், அல்லது எந்த விஷயத்தையும் உறுதியுடன் நான் என்று எண்ணுவதுதான் பிறப்பு. பூரண பிரஹ்மத்தை மறந்ததனால் நமக்கு ஜனனமும் மரணமும் வருகின்றன. மூர்ச்சித காலத்தில் உடலில் ஞாபகசக்தி இருக்கிறதில்லை. அதையும் மரணம் என்பார்கள். நான் அந்தணன், நான் அரசன். நான் ஹிந்து, நான் மாணவன் என்று நினைப்பது பிறப்பு. இறைவனுக்கு ஜென்மம் உண்டாகிறதில்லை. எண்ணம் மாறிக்கொண்டு வரும். ஆனால் நான் மாறாது. நினைப்பும் மறப்பும் அலைபோல் மாறிக்கொண்டு வந்தாலும் ஆத்மா ஒரு வடிவமாக இருக்கும் இதை யினிய வேதாந்தத்தில் ஏகரசம் என்பர். எண்ணம் வரும் போகும். ஆன்மா வராது போகாது.

அஜ: — பரமாத்மா அஜன்மா. விராட்டு, சம்ராட்டு, பரிவிராட்டு ஆனபோதிலும் அது ஒன்றுமாகிறதில்லை. நம் விஷயத்தைப் பாருங்கள். உண்மையாக உனக்கு துன்பம் இருக்குமானால் உறக்கம் எப்படி வருகிறது? இவ்வுலக மனைத்தும் உண்டாகாமலே தோற்றுகிறது. ஆகாசம் உண்டாகிறதில்லை. குடம் வந்ததும் ஆகாசம் குடத்துக்குள் வருகிறது. உபாதி பிறந்ததினால் ஆன்மா பிறக்கிறதில்லை.

பொய்மழையால் பூமி நனையாது. அஜ : கல்பித சம்விருத்யா பரமார்த்தேந நாப்யஜ : | காரிகை.

இ—ள்

பரமாத்மாவில் ஜன்மமும் இல்லை, அஜன்மமுமில்லை. பிறப்பும் இறப்பும் எங்கேயோ இருக்கின்றன. நாம் எங்கேயோ பார்க்கிறோம். ''பிறப்பும் இறப்பும் ஆக்கையின் கூறே'' என்பது ஆன்றோர் வாக்கு. ''ஜன்மமிருத்யூ சரீரஸ்ய'' என்றபடி, முள்ளைக்கொண்டு முள்ளையெடுப்பது போல நான் பிறந்தேன் இறந்தேன் என்ற எண்ணத்தை அவ்வழியாகவே அகற்ற வேண்டியிருக்கிறது. அதனால் பிறவாத ஆன்மாவைப் பிறந்ததாகவும், இறவாத ஆன்மாவை இறந்ததாகவும், சுருதி கூறுகின்றது.

தண்ணீர் கலங்கியிருந்தால் அதைத் தெளியப்படுத்துவதற்கு ஒருவித பொடியைத் தூவுவார்கள். அப்பொடி நீரின் இயல்பல்ல. அதுபோல் அஜன்மசப்தம் மயக்கத்தைத் தெளிய வைப்பதற்காக. உடலுக்குரிய தருமம் உணர்விற்கில்லை. தண்ணீரை தூரத்திலிருந்து பார்த்தால் கருப்பாகத் தெரிகிறது. அண்மைக்குச் சென்று பார்த்தால் வெண்மையாக இருக்கிறது. அதுபோல் தூரத்திலிருந்து பார்க்கும் போது ஆன்மாவிற்குப் பிறப்பும் இறப்பும் இருப்பதாகத் தோன்றுகிறது. சமீபம் சென்று பார்த்தால் சாவும் இல்லை பிறப்புமில்லை.

பரமாத்மாவைத் திவ்யம் என்று சொல்லி தேகத்தையும், அமூர்த்தம் என்று சொல்லி தேவாதிகளுக்கு ஒப்பானதையும், பாஹ்ய ஆப்யந்தரம் என்று சொல்லி தேக பரிச்சின்னத்தையும், அஜ: என்று சொல்லி கால பரிச்சின்னத்தையும் விலக்குகின்றது. சுருதியென்பது தெளிவு. இறைவனுக்கு வேறு ஒரு பொருள் இருக்குமானால் அவனை யுண்டுபண்ணுவதற்கு நிமித்தம் இருக்கலாம். ஈண்டு பிறப்பு இல்லையென்றதால்

இறப்புதானுக நீங்கிவிட்டது. ''பிறந்ததுண்டானுலன்ருே பிறகு சாவது தானுண்டாம்.'' கைவல்யம்.

ஆன்மா பிறந்தால் அதையறிபவர் யார்? அதையறிய வேண்டுமானுல் யார்க்கு உத்பத்தியில்லையோ அவர் தானறியமுடியும். மலர்ஞானம் உண்டாகிறது, பிறகு அழிகிறதென்று தோன்றுகிறது. ஆனுல் ஞானம் உண்டாகவுமில்லை, அழியவுமில்லை. மலர்உண்டாகிறது. மலர் அழிகிறது. ஞானத்தில் புஷ்பம்வந்தது. ஞானத்தில் புஷ்பம் மறைந்தது. படத்தில் படம் வருகிறது. படத்தில் படம் மறைகிறது. மனிதன் என்ன சொல்லுகிருன் படந் தெரிகிறது. திரை மறைகிறதென்கின்ருன். உண்மையென்ன? திரையிருந்தவண்ணம் இருக்கிறது. அதுபோல ஆன்மாவில் அகில உலகம் வருகிறது போகிறது. ஆன்மா இருந்த வண்ணம் இருக்கிறது. ஞானம் தோன்ருது மறையாது.

வேதம் இறைவனிடத்திலிருந்து உண்டாயிருக்கிறது. ஆனுல் வித்தை அல்லது ஞானவடிவத்தில் வேதம் நித்யம். வேதத்தின் வெளிவடிவந்தான் இறைவனிடத்திலிருந்து உண்டாயிருக்கிறது. வேதத்திலும், உபநிஷத்திலும், இறைவனிடத்திலிருந்து வேதம் தோன்றியது என்று மொழிந்திருக்கிறது. இறைவன் வேதத்தைச் செய்தான் என்று நையாயிகர் கூறுகின்றனர். இதை நாம் ஒப்புக் கொண்டோமானுல் பல பிரச்சனைகள் எழும். பகவான் வேதத்தைச் செய்தாரென்ருல் ஞானத்திஞல் செய்தாரா? அக்ஞானத்திஞல் செய்தாரா? ஈசுவரன் ஞானத்தைப் படைத்தானென்ருல், ஞானத்தைப் படைக்குமுன் அவன் அக்ஞானியாயிருந்தானு?

ஞானம் இறைவனுக்கு வடிவம். ஆன்மா ஞான சொரூபம். ஆகையால் ஞானம் செயப்படுபொருளல்ல. அது என்றும் உள்ளது. அது தோன்றுவதுமில்லை,

மறைவதுமில்லை, விஷயங்களைப்போல மாறுவதுமில்லை. அது குறைவதுமில்லை. நிறைவதுமில்லை. அது—ஞானம். இறைவன் எல்லாப் படைப்பையும் படைத்தான். ஆனால் ஞானத்தை யவன் படைக்கவில்லை. அங்ஙனமாயின்—

1
தஸ்மாத் சர்வஹுத ரிச : சாமாநி ஜக்ஞிரே :
4
''ஜாயதே அஸ்தி வர்ததே விபரிணமதே க்ஷீயதே விநஸ்யதி''

இ—ள்

உண்டாகிறது, இருக்கிறது. பெருகுகிறது, குறைகிறது, மாறுகிறது, மெலிகிறது, அழிகிறது. இவையெல்லாம் காக்ஷியாகிய ஜடப்பொருள்களில் உண்டாகின்றன. பிறப் பிறபபெல்லாம் அநாத்மாவில்தான் நிகழும். ஆத்மாவில் உண்டாகமாட்டா. இவை திருஸ்யத்தில் உண்டாகும். சாட்சியில் உண்டாகிறதில்லை. யார் ஜென்மத்தையும் மரணத்தையும், மற்றுமுள்ள விகாரத்தையும் அறிகிறாரோ அவருக்கு அவைகள் இல்லை. பணத்திற்குக் கஷ்டம் வந்ததும் தனக்குக் கஷ்டம் வந்ததாக மனிதன் நினைக் கிறான். அன்னிய தருமத்தைத் தன் மேலேற்றியுரைக் கின்றான் மனிதன். ஆன்மாவிற்குச் சொந்தவடிவம் அக்ஷரம், துருவம், அபயம்.

அப்ராண :— இந்த ஆன்மா—(பிராணன்) — மாயை, (பிரக்ஞா) அவித்தை யிந்த உபாதிகளிலிருந்து அன்னியமாக இருக்கிறது. அப்ராணன் என்றதால் கிரியாசக்தி ஆன்மா வில் இல்லையென்பது தெளிவு. நிஷ்கிரியம் பிரஹ்ம என் கின்றது சுருதி. கிரியை இருவகைத்து—நல்வினை தீவினை. இவையிரண்டும் ஆன்மாவில் இல்லையென்பது பொருள். பிராணனும் மயக்கத்தினால் செய்யப்பட்டது. ஏனெனின், சுவாசமென்னும் காற்று இருக்ஷணங்கூட உடலில் நிற்கிற தில்லை.

அமநா :— ஆன்மா அந்தக்கரணத்திற்கு வேருனது. பிரக்ஞை, விசாரசக்தி, சங்கற்பசக்தி யிவையெல்லாம் பிரஹ்மத்தில் இல்லையென்பது கருத்து. ஜீவனிடத்தில் பிராணனும், மனமும் இருக்கின்றன. சுவாசத்திற்குப் பிராணனென்று பெயரல்ல. கிரியாசக்திதான் பிராணன் என்று சொல்லப்படுகிறது. குருநாதர் தமது மாணவர்களில் ஒருவரிடத்தில்—பிராணனென்று எதைச்சொல்வது என்று கேட்டார். அவன் எனக்குத் தெரியாதென்ருன். குரு — இதயத்தில் ஒரு கமலம் இருக்கிறது. அங்கு ஒரு அன்னப் பறவை யிருக்கிறது. எப்பொழுது அது அந்தக்கமலத்தில் திரிகிறதோ அப்பொழுது அதனுடைய கால்கள்பட்டு மேலும் கீழும் அது அசைகின்றது. அதனுல் சுவாசம் வருகிறது. இதனுல் சோஹம் ஹம்ச: என்று உடலுக்குள்ளே அஜபாஜெபம் நடந்துகொண்டேயிருக்கிறது என்ருர். மாணுக்கன் சிறியவனுக இருந்தான்.

அம்மாணுக்கன் சிறியவனுக இருந்தாலும், குருவினிடத்தில் நம்பிக்கை யுள்ளவனுதலாலும் அவர் வாக்கியத்தை யேற்றுக்கொண்டான். சுவாசம் எதுவாகவும் இருக்கட்டும், அவனுக்கு நம்பிக்கை யூட்டுவதுதான் குருநாதருடைய கடமை. நம்பிக்கையில்லாத ஞானம் நாட்டியக்குதிரைக்குச் சமானம். குதிரை தரையில் நாட்டியம் ஆடுகிறது. அது போல் கல்வி நாக்கில் நாட்டியமாடுகிறது. நான் பெரிய படிப்பாளியென்று எண்ணிக்கொண்டு இருப்பதால் ஒரு பயனும் இல. கையை உயர்த்தும் தன்மைக்குப் பிராணன் என்று பெயர். கரத்தில் வலிமை யிருந்தால்தான் கையை உயர்த்த முடியும். அவ்வலிமைக்குப் பிராணனென்று பெயர். இப்பிராணசக்தியால்தான் கண்இமை அசைந்துகொண்டிருக்கிறது. மேனியில் இரக்தசஞ்சாரம் உண்டாகிறது. உடலில் செயல்படும் வலிமைக்குப் பிராணனென்று பெயர். எண்ணும் வலிமைக்கு மனமென்று சொல்லுவார்கள்.

மனிதன் மேன்மையாகவோ தாழ்மையாகவோ தன்னை நினைத்தால் மன அனுசாரம் நினைக்கவேண்டும். மனிதன் தன்னை மேன்மையாகவோ, தாழ்மையாகவோ நினைக்க வேண்டுமானால் கருமத்தினாலும், பொருளினாலும், பதவியினாலும், பெண்டீர் பிள்ளையினாலும் நினைக்கவேண்டும். ஒருநாள் இரயில் பெட்டியில் இரு நண்பர்கள் யாத்திரை சென்றனர். அந்தப்பெட்டி முதல் வகுப்புப்பெட்டி. திடீரென ஒருவருக்கொருவர் மனஸ்தாபஞ் செய்துகொண்டனர். ஒருவர் மற்றொருவரை நோக்கி என்னை யாரென்று உனக்குத் தெரியுமா என்றார், மீண்டும் நான் நீதிபதியென்றார். கேட்டவர் சினந்து என்னை யாரென்று உனக்குத்தெரியுமா? நான் நீதிபதிக்குத் தந்தையென்றார்.

இருவரும் சிறிது நேரம் மௌனமாயிருந்தனர். சென்னை புகைவண்டி நிலையம் வந்தது. இருவரும்இறங்கினர். இருவரையும் அழைத்துச் செல்வதற்கு அவரவர் நண்பர்கள் வந்தனர். வந்தவர்களில் ஒருவர் நீதிபதி. அவர் புகைவண்டியில்இருந்து இறங்கினவர்ஒருவரை வணங்கி தந்தையே என்றார். அவர் அப்படிச் சொன்னதும் வண்டியில் முதலில் தன்னை நீதிபதியென்று சொன்னாரே அவர் தெரிந்து கொண்டார் நம் கூட வந்தவர் நீதிபதிக்குத்தந்தை தானென்று.

இம்மாதிரி பலத்தினாலும், கல்வியினாலும், புத்தியாலும், பொருளாலும், பதவியாலும், பரிவாரத்தாலும், மக்கள் தங்களை மேன்மையாகவோ, தாழ்மையாகவோ நினைக்கிறார்கள். அவ்வாறு நினைப்பது தவறு. இறைவன் எல்லா வினைகளுக்கும் நியாமகன். அகில புத்தி விருத்திக்கும் பிரகாசகன். சர்வக்ஞன், சர்வசக்திமான், ஜீவன் அற்பக்ஞன். அற்பசக்திமான். ஆனால் இருவரிடத்திலும் உள்ள சேதனம் ஒன்றுதான். மாண்டூக்யஉபநிஷத்தில் பரமாத்மாவைப் பற்றி வர்ணனை வருகின்றது. ''நாந்த:பிரக்ஞம் ந பஹி :

4
பிரக்ஞம் நோபயத : பிரக்ஞம் நாப்ரக்ஞம் ந பிரக்ஞம்
4
நாபிரக்ஞாநகனம்''

இ—ள்

நாந்த:பிரக்ஞம்—கனவைப்பார்ப்பவன் தைஜசனல்லன். நபஹி : பிரக்ஞன் = நனவை அறிபவன் விஸ்வனல்லன். நோபயத:பிரக்ஞம் = நனவு கனவுகளின் இடையிலும் இல்லை. நாபிரக்ஞம் = உறக்கத்தைஅபிமானிக்கின்றவன் பிராக்ஞனுமல்லன். நபிரக்ஞம்=அறிஞனுமல்லன். அக்ஞனு மல்லன். ந பிரக்ஞானகனம் = நிறைந்தஅறிவிற்கும் வேருனவன்.

எவன் ஒருவன் இறைவனையறியவில்லையோ எவனுடைய பார்வை தேகத்தில் இருக்கிறதோ, அவனுக்கு உடல் வேறு வேருக இருப்பது போல ஆன்மாவும் வேறு வேருகக் காணப்படும். பொறிகளில் மதியைச் செலுத்துகிறபோது ஆன்மா ஐந்தாகக் காணப்படும். மனதில் புத்தியைச் செலுத்துகிற போது ஆன்மா நான்காகக் காணப்படும். ஆன்மாவில் திருஷ்டியை வைக்கும்போது ஒன்ருகக் காணப் படும். கண்ணில் எந்தக்கண்ணுடியை மாட்டியிருக்கிருேமோ அவ்வாறு காட்சி காணப்படும்.

''சப்ராண : சமநா : சேந்திரியா : ச விஷய இவ
4
பிரத்யவபாசதே'' ஆன்மா அக்ஞானிகளுக்கு பிராண ணுகவும், மனமாகவும், இந்திரியமாகவும் விஷயமாகவும் தோற்றுகிறது. நீ தன்னைப் பிராணனுக்கு வேருக எண்ணிஞல் பாவ புண்ணியத்தில் இருந்து நீங்குகின்ருய். மனத்திலிருந்து தன்னை வேருக நினைக்கும் போது வாசனை யிலிருந்து விடுபடுகின்ருய். மனதை நானென்று எண்ணும் போது சுவர்க்க, நரகத்தில் அலைகின்ருய்.

உடலில் எப்போதும் கிரியை யுண்டாகிறதில்லை. சில நேரமுண்டாகும். சிலநேரம் உண்டாகாது. ஒரு மகாத்மா யோக பழக்கம் நன்ருகப் பழகியிருந்தார். தனது யோகப்

பழக்கத்தால் நினைத்தால் பிராணனையும் இதயத்தையும் அசையாமல் நிறுத்திவிடுவார். இதைக்கண்டு எல்லோரும் அவரைச் சித்தர் என்று புகழ்ந்தார்கள். இவ்வாறு சில சித்தர்கள் தங்கள் புதுமையைக் காட்டிப்புகழை அடைய விரும்புகிறார்கள். பரமாத்மாவையடைகிறபோது புகழும் இகழும் மறைந்துவிடுகின்றன. புகழும் இகழும் பரமார்த்தத்திற்குப் பெருந்தடை. ''லோக லாஜ் மை லாத் மாரூங்கி'' மீராபாய். இவ்வுலக மரியாதையை நான் காலால் உதைக்கிறேன் என்கின்றாள். சிலர் எல்லோரைப் பார்க்கிலும் மேலாக வாழவேண்டுமென்று நினைக்கிறார்கள். எல்லாருக்கும் மேலாகவோ அல்லது கீழாகவோ வாழக்கூடாது. பின்னை? எல்லோரைப்போல வாழவேண்டும். எல்லோருக்கும் சமமாக இறைவன் வாழ்கிறான். நாம் எல்லாருக்கும் மேலாக வாழ விருப்புகிறோம். இது நியாயமா? பொதுவாக வாழ விரும்பவேண்டும்.

ஒருமுறை எனது நண்பன்—சுவாமின்! ஐந்து ஆண்டு சளாக ஜெபம் பண்ணினேன், திருக்கூட்டத்தில் கலந்து கொண்டேன், வேதாந்தம் படித்தேன், ஆனால் ஒரு விசேஷத்தையும் கண்டிலேன் என்றான். நான்—இவையெல்லாம் விசேஷத்தைக் கொடுக்கமாட்டா, ஆனால் விசேஷத்தைக் கெடுக்கும் என்றேன். பரமார்த்தம் விசேஷத்தையுண்டு பண்ணுவதற்கல்ல. பின்னை, விசேஷத்தையழிப்பதற்காகத் தான்.

நான் பத்தொன்பது வயதில் அரித்வாரத்திலிருந்தேன். அங்கு ஒரு மகாத்மாவை யணுகினேன். அவர் சிறந்த மகாத்மாவாகத் திகழ்ந்தார். அவர் உண்ட உணவின் மிச்சத்தை நாங்கள் உண்போம். இங்ஙனம் இருப்ப, சில மகாத்மாக்கள் வந்து அவரை நோக்கி சுவாமிகளே! எங்கள் அடியார்களுக்கு எச்சியன்னத்தைக் கொடுக்கிறீர்களே இது முறைதானா, நீங்கள் யார்? உங்கள் குலமென்ன என்று

வினவினர். மகாத்மா=ஈ, எறும்பு, பசு பக்ஷி, மரஞ்செடி, கொடி, நீ, யெல்லாம் நான் தான் என்றார்.

தனக்கு வேறாக பிறவற்றை நினைப்பதுதான் பந்தனம். நீங்கள் அனைவரும் சம்சார பந்தத்தில் கட்டுண்டிருக்கிறீர்கள். நான் அனைவரையும் எனது வடிவமாகப் பார்க்கிறேன் அதனால் நான் முக்தன். நீங்கள் நரகத்திற்குப் போவீர்கள், நான் வைகுண்டத்திற்குப் போவேன் என்றார். பரமார்த்த ஞானம், எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்ப்பது. ஒரு பணக்காரர் தனது பணத்தை எல்லோருக்குங் கொடுத்தார். அதுபோல் ஞானி தனது வடிவத்தை யெல்லாருக்கும் ஈந்து விடுவான். அவனிடத்தில் நான் என்பது இராது. நான் என்பதை யிறைவனிடத்தில் கொடுத்துவிட்டு இறைவனைத் தான் வாங்கிக்கொள்வான். அங்ஙனமாயின் நான் என்னும் அகங்காரமும் எனது என்னும் மமதையும் அவனிடத்தில் எங்ஙனம் இருக்கும்? இராதென்பது பொருள்.

அக்ஞானிக்கு ஆகாசம் கருப்பாகத் தெரியும். அதுபோல அறிவிலிக்கு ஆன்மா கர்த்தாவாகவும், ஞாதாவாகவும், போக்தாவாகவும் தெரியும் கர்தாவாகத் தெரிவதால் கருமேந்திரியத்தோடு கூடினதாகவும், ஞாதாவென்றதால் ஞானேந்திரியத்தோடு கூடினதாகவும் போக்தாவென்றதால் மனதோடுகூடினதாகவும் ஆன்மா தெரியும். உண்மையில் இத்தனைக்கும் வேறு. ''தியாயதீவ லேலாயதீவ'' என்று சுருதியுரைக்கின்றது. நடப்பதுபோலும் திரிவதுபோலும் செயல்படுவதுபோலும் காணப்படுகிறது. ஆன்மா என்பது கருத்து. தலைசுற்றுகிறது. ஆனால் தரை சுற்றுவது போலத் தெரியும்.

சுப்ர:– ஆன்மாவில் அவித்யாமலம் இல்லை. அவித்தையும் மலந்தான், மாயையும் மலந்தான். இவையிரண்டும் ஆன்மாவில் இல்லையென்பதைக் குறிப்பதற்காக சுப்ர:

என்றது சுருதி. இவையிரண்டும் நீங்கிய பின்னர் எது இருக்கிறதோ அது ஆன்மா. மாயை பெரியது, அவித்தை சிறியது. தமக்கையும் தங்கையும் போல.. தேகத்தை நான் என்று எண்ணியிருப்பது அவித்தை, ஜெகத்தைத் தனித்தனியாக எண்ணியிருப்பது மாயை. நம் வீட்டு வாசல்போல் அவித்தை. நகரவாசல்போல் மாயை. இவையிரண்டிற்கும் வேருனதால் ஆன்மா சுப்ரம், நிர்மலம்.

மலம் மூன்று விதமாக இருக்கிறது — 1 கருமமலம், 2 மாயாமலம் 3 பிரபோதமலம். சௌராஷ்டர தேசத்தில் ஜுனுகடு என்னும் ஒரு நகரி. அங்கு கிரிநார் என்னும் ஒரு பருவதம் இருக்கிறது. அப்பருவதத்தின் மூவாயிரம் அடி உயரத்தில் பகவான் தத்தாத்ரேயர்பாதம் இருக்கிறது. அங்கு நான் யாத்திரையாகச் சென்றிருந்தேன். மலையைச் சுற்றி வனங்கள். என் கையில் ஒரு தடியிருந்தது. நான் நடந்துகொண்டு போகும்போது என்னெதிரேயொரு பெரிய தேள் வந்தது. அதற்கும் எனக்கும் பகையில்லை. ஆனாலும் தேள் பொல்லாதது என்ற எண்ணம் என்னிடம் இருந்ததால் ஊன்றுகோல் நுனிப்பாகத்தால் அதன் கொடுக்கில் வைத்து நசுக்கினேன். அது வாலறுப்பட்டு வந்த வழியை நோக்கிச் சென்றது. நான் அதிலிருந்து மேலேயேறினேன். ஏறிப் போகும்போது எல்லாவற்றையும் மறந்து அந்தத் தேள் கொடுக்கை யேன் ஒடித்தேன் என்ற எண்ணம் என் உள்ளத்தை வாட்டியது. இது கருமமலம். உலகத்தில் யார் எப்படியும் இருக்கட்டும். தீயவினையைச் செய்யும்போது பாவம் பற்றப்படாது என்றால் அது தவறு. விதை விளைவை அவசியம் தரும்.

மலம் என்னது? இருதயத்திலிருக்கும் இறைவனை மறந்து புறத்தில் தேடுவது மலம். மலம்—பாவம். அந்நேரத்தில் இறைவனை மறந்து தேளை நினைந்துகொண்டிருந்தேன். இதுதான் மலம். ஒருநாள் முற்றிலும் அழுக்காடையை அணிந்து

கொண்டு ஒரு இழுப்பு நோய் உடையவன் காசியில் என் பக்கமாக வந்தான். அங்கனே வாந்தியெடுத்தான். அவனைப் பார்த்ததும் எனக்கு இரக்கம் வந்தது. அவனைக் கூப்பிட்டு உன் பெயரென்ன என்று கேட்டேன். அவன் பெயர் ஜெகன் நாராயணன். இருவரும் நிரம்ப நாளைக்கு முன் ரிஷிகேசத்தில் ஒன்ருகப் படித்திருக்கிறோம்.

பிறகு அவனைக் கூட்டிக்கொண்டு போய் மார்வாடி மருத்துவமனையில் சேர்த்த பின் குணமடைந்துவிட்டான். நம்மால் குணமடைந்துவிட்டானென்று எனக்கு அபிமானம் வந்தது. இதுவும் கருமமலந்தான் வேதாந்தம் இவ் விஷயத்தில் என்ன சொல்லுகிறது என்பதை நாம் சிந்திக்க வேண்டும். நீ தேளின் கொடுக்கை ஒடிக்கவுமில்லை, நோயாளியைக் குணப்படுத்தவுமில்லை, நீ சாக்ஷி மாத்திரமாயிருக்கிருய் என்பதை யுணர்த்துகின்றது. இவ்வேதாந்த உணர்வினுல் என்னை அகர்தா, அபோக்தாவென்று எண்ணினேன். இது மாயாமலம். முந்தியது அவித்தை, பிந்தியது வித்தை. இவை இரண்டும் மாயையின் குழந்தைகள். வித்தையும் மாயையின் மகள்தான்.

கர்தா என்பது அழுக்கு. அதைக் கழுவுவதற்கு அகர்தா என்பது சோப்பு. ஆனுல் இரண்டும் அழுக்குத்தான். ஒருவன் ஆடையில் அழுக்கேறியது. அதில் அவன் சோப்புப் போட்டான். அதற்காக நாள் முழுவதும் போடுவதா? அதையும் விடவேண்டியதுதானே, நான் அகர்தா என்ற விருத்தியையும் விடவேண்டியதுதான். ஒன்று சாதகவிருத்தி, மற்றொன்று பாதக விருவிருத்தி. இவ்இருவிருத்தியும் கடலில் இரு அலையெழுவதுபோல் மாயையில் எழுகின்றன. கர்தா என்பது அத்யாசவிருத்தி. அதையகற்றும்பொருட்டு அகர்தா வென்று அத்யாரோபஞ் செய்யப்படுகிறது. தத்வஞானத்தால் அழுக்கும் சோப்பும் நீங்குகின்றன.

பிரயாகையில் கும்பமேளா நடந்தது. அங்கு எல்லா மகான்களும் கூடினர். அங்கு உடியாபாபா, ஜயேந்திரபுரி மகாராஜ் இருவரும் முக்கியமாக இருந்தனர். திருக்கூட்டம் துவங்கியது. பிராரப்தத்தைப்பற்றிச் சர்ச்சை நடந்தது. உடியாபாபா—ஞானிக்குப் பிராரப்தம் உண்டா இல்லையா? என்றார். ஜயேந்திரபுரிஜீ மகாராஜ்—ஞானிக்குப் பிராரப்தம் உண்டு. உடியா — ஞானிக்கு லேசாவித்தையில்லாததால் பிராரப்தமில்லை. தன்னிடத்தில் லேசாவித்தையிருக்கிறது ஆகையால் எனக்குப் பிராரப்தம் உண்டு என்று சொன்னால் உங்கள் ஞானத்தில் குற்றம் இருக்கிறதென்று ஒப்புக்கொள்ள வேண்டும் என்றார். தங்களுக்கு இல்லாது இருந்தும் சீடர்களுக்காகச் சொன்னால் அது சரி. "அக்ஞஜன பிரபோதார்த்தம் 'பிராரப்தம் பரிகல்பிதம்" அக்ஞானிகளுக்கு அறிவிக்கும் பொருட்டு நூல்களில் பிராரப்தம் மொழியப்பட்டிருக்கிறது என்று நீங்கள் ஒப்புக்கொண்டால் அது ஏற்கத்தக்கது.

ஞானிக்கு முன்னும் பின்னும் இப்பொழுதும் ஜென்மமில்லை. ஆகலின் பிராரப்தம் எங்கிருந்து வரும்? என்றார். வாதம் வளர்ந்துகொண்டு வந்தது இதற்கிடையில் மற்றொரு மகாத்மா — உடியாபாபாவிடம் சுவாமின்! இதைப்பற்றி விரிவாக இன்னும் விளக்கவேண்டுமென்றார். உடியாபாபா —எனக்கு முன்னும் ஜென்மமில்லை, பின்னும் ஜென்மமில்லை, இப்பொழுதும் ஜென்மமில்லை. கருமத்திற்கு இருப்பேயில்லாமல்இருக்குப்போது பிராரப்தம் எங்கிருந்து வரும் என்றார். மண்டலேஸ்வர்—அவதூர்தர்களுக்குப் பிராரப்தம் இல்லை. அவர்கள் பார்வையில் பிரப்பில்லை. ஆதலால் ப்ராரப்தகருமம் இல்லையென்றார்.

நமக்குப பிரார்ரப்தம் இருக்கிறது என்று எண்ணுவதும் மலந்தான். வேதாந்தத்தில் லேசாவித்தையென்று ஒன்று சொல்லப்படுகிறது. அதனால் பிராரப்தம் தோற்றமாத்திரம்

என்று கூறப்படுகிறது. லேசாவித்தையை யொப்புக் கொள்ளும் பக்ஷத்தில் சுவாதந்தரம் நஷ்டமாகிவிடும். சிலர் தங்கள் ஜாதியைப் பிழைக்கவைப்பதற்காக லேசாவித்தையை யேற்றுக்கொள்கின்றனர். அறிவில்லாதசுதந்திரம் ஜடம். சுதந்திரமில்லாத அறிவு மலம். எனவே இது மூன்ருவது போதமலம். அறிவு இருக்கிறது ஆனுல் சுதந்திரமில்லே. இம்மூன்று மலங்களும் இன்றியது எதுவோ அது சுப்ரம்.

பரத: அக்ஷராத்பர:— அந்த பரமாத்மா (எல்லார்க்கும்) காரணவடிவ பிரகிருதியிலிருந்து வேருக இருக்கிருர். முன்னர் எதை அக்ஷரமென்று சொல்லியிருந்ததோ அது எல்லாக் காரணத்திற்கும் காரணமானது, ஆனுல் பரமாத்மா முற்றிலும் உபாதியற்றவர். அவர் வாசனேகளோடுகூடிய சூட்சும பூதங்களுக்கு வேருனவர். ஒரு மகாத்மா ஒரு கிராமத்தில் பஞ்சதசி படித்துக்கொண்டிருந்தார், அவ்வழி யாக ஒரு அன்பன் வந்தான். சுவாமியை நோக்கி சுவாமின்! என்ன படிக்கிறீர்கள் என்ருன். மகாத்மா—இந்தப் புத்தகத் தில் என்னேப்பற்றி என்ன பேசியிருக்கிறது என்று பார்க் கிறேன் என்ருர்.

எந்தப்பொருள் இறைவனுக்கு வேருக இருக்குமோ அந்தப்பொருள் ஜடமாகத்தான் இருக்கமுடியும். நாம் அறிபவர், அது திருஷ்யம். எது நம்முன் வருகிறதில்லேயோ, அனுபவத்திற்கும் வருகிறதில்லேயோ அது வெறும் கல்பனே யாகும். நாம் இறைவனுக்கு வேருக இருப்போமானுல் பரிச் சின்னமாவோம். பரிச்சின்னம் — அளவு, நிறைந்த இறைவனில் நாம் பொய்யாய்ப்போவோம். ஆகையால் நாம் ஒருபோதும் இறைவனுக்கு வேறன்று. நாம் இறைவனுக்கு வேறல்ல. இறைவன் நமக்கு வேறல்ல.

4 4

''தஸ்மிந் தஜ்ஜநே பேதாபாவாத்''—ப.சூ. இறைவனுக் கும் இனிய பக்தனுக்கும் என்றும் வேற்றுமையில்லே,

என்பது சூத்திரத்தின் பொருள். மண்போல இறைவன், குடம்போல ஜீவன். ஜீவனுக்கும் ஈசனுக்கும் உள்ள பேதம் வெறும் மயக்கமே. இம்மயக்கத்தையகற்றும் பொருட்டு மறைகள் இறைவன் வடிவத்தை இயம்புகின்றன.

பரத : அக்ஷராத் பர :— அது, இது என்னும் பேதமும் நான், நீ என்னும் வேற்றுமையும் அளவு பொருள்களில் உண்டாகின்றன, அளப்பரிய ஆன்மாவில் இவை இல்லை. உலகத்தில் உள்ள பொருள்கள் புத்தியில் இருந்துகொண்டு விளங்குகின்றன. ஆகையால் பொருள்கள் உண்மையில்லை. க்ஷரம், அக்ஷரம் இவை இரண்டிற்கும் ஆத்மா வேருனது. இதைப்பற்றி கடவல்லி சுருதியில் வந்திருக்கின்றன—புலன் களிலிருந்து பொறிகளையும், பொறிகளிலிருந்து மனதையும், மனதிலிருந்து புத்தியையும், புத்தியிலிருந்து ஜீவனையும், ஜீவனிலிருந்து பரமாத்மாவையும் வேருகவும் சூட்சுமமாக வும் கூறியிருக்கிறது. பரமாத்மாவிற்கு வேருக ஒன்றுமில்லை யென்றும் விளம்பி இருக்கிறது. அதுவே சம்சாரத்திற்கு எல்லையென்றும், பரமகதியென்றும் பகரப்பெற்றிருக்கிறது.

இ—ள்

வேதத்தில் நாசதீய சூக்தம். அதில் ''நாசதாஸீத் நோசதாஸீத் ததா நீம்'' அப்பொழுது சத்துமில்லை, அசத்து மில்லை. உண்மையுமில்லை, இன்மையுமில்லை. ''உண்மையு மாய், இன்மையுமாய்'' என்றும், எல்லாமாய் அல்லதுமாய் என்றும் இனிய தமிழ்மறைகளும் இயம்புகின்றன. இன் நிலைக்கு அக்ஷரமென்று பெயர். அவ்யாக்ருத தத்துவம். இது பீஜாவஸ்தை. பாவத்திற்கும் அபாவத்திற்கும் இது தான் காரணநிலை. கிளையைக்காட்டி சந்திரனை அறிவிப்பது போல், காரண அவஸ்த்தையை கொண்டு காரணாதீத பிரம்மம் அறிவிக்கப்படுகின்றது. இந்த அவ்யாக்கிருதம் ஈஸ்வரனல்ல, சேதனமுமல்ல இருப்பினும் இதைக்கொண்டு ஆன்மா அறிவிக்கப்படுகிறது.

நிலத்திலிருந்து நீர் மேலானது, நீரிலிருந்து நெருப்பு மேலானது, நெருப்பிலிருந்து காற்று மேலானது, காற்றிலிருந்து ஆகாசமும், ஆகாசத்திலிருந்து மகத்தத்துவம் மேலானவை, மகத்தத்துவத்திலிருந்து பிரகிருதித்தத்துவம் மேலானது, பிரகிருதியிலிருந்து பரமாத்மா மேலானனர். இதுவே முடிந்தநிலே. ஆத்மாவிற்கும் சம்சாரத்திற்கும் இடையில் உள்ள எல்லேக்கல் இப்பிரதானம். பிரதானத்திற்கும் சம்சாரத்திற்கும் காரியக்காரண சம்பந்தம் உண்டு, பரமாத்மாவிற்கும் சம்சாரத்திற்கும் காரியக்காரண சம்பந்தமில்லே. அங்ஙனம் இருக்குமாயின் அது பொய். புருஷத்தத்வம் நிருபாதிகம்.

ஆக்கல், காத்தல், அழித்தல் இம்மூன்றும் உபாதியில் உண்டாகின்றன. உபாதி—பிரகிருதி. உபாதியில் உண்டாகின்ற இம்முத்தொழிலும் அதற்கு அதிஷ்டானமான பிரம்மத்தில் உபசாரமாக உரைக்கப்படுகின்றன. சேனேகள் வெற்றி பெறுகின்றன, ஆனல் அது தானேத் தலேவனேச் சாருகின்றது, அங்ஙனம் ஐந்து தொழில்களும் பிரதானத்தில் நிகழ்ந்தாலும், பிரம்மத்தில் கற்பிக்கப்படுகின்றன. துப்பாக்கியைக்கொண்டு சேனேகள் சுடுகின்றன, ஆணேயிடுவது சேனேத்தலேவன். நீதி, நெறிகள் இவைகளே வகுக்கிறவன் மந்திரி. கையெழுத்திடுபவர் ராஸ்ட்ரபதி. ஆனல் வெற்றியும் தோல்வியும் நாட்டுக்கு உண்டாகின்றன. அதுபோல் நாடோ, பூமியோ, நாட்டிலுள்ள நீரோ யுத்தம் பண்ணுவதில்லே யென்பது கருத்து.

எவ்வாறு கிருஷ்ணனுடைய வடிவம், சிவனுடைய வடிவம், ராமனுடைய வடிவம் செய்யப்படுகின்றனவோ அவ்வாறு மக்கள் தேசத்தின் வடிவத்தைச் செய்கிருர்கள். இது பாரதமாதவின் வடிவம், இது தமிழ்த்தாயின் உருவம் என்றெல்லாம் செய்கின்றனர். இவையெல்லாம் குறிகள்.

கணவனைப் பதியென்பர் அவனிடத்தில் இருக்கும் பதித்வம் கற்பிதம். அதுபோல பிரபஞ்சத்தினிடத்தில் இருக்கும் ஜெகத்காரணத்வம் கற்பிதம். ஆகாசத்தில் பெரிய ஒளியாக இருப்பது சந்திரன். இது சொரூ லட்சணம். பிரகிருதிக்கு ஆதாரம் பரமாத்மா. குடத்திற்கும் குடத்திற்கு ஆதாரமான மண்ணிற்கும் ஆதாரமாக இருக்கும் ஞானம் பரமாத்ம ஞானம். இந்தப் பரமாத்மாவும் அவரது ஞானமும் அஹம் பிரம்மம் என்னும் ஞானத்தில் அடங்கியிருக்கின்றன. அஹம் சாக்ஷிரூபம். காக்ஷிகள் அனைத்தும் சாக்ஷியாகிய நம்மிடத்தில் கற்பிதமாகக் காணப்படுகின்றன. படத்தில் படம் காணப்படுவதுபோல.

தேகத்தில் கற்பிக்கப்பட்ட இந்திரியம், இந்திரியத்தில் கர்பிக்கப்பட்ட மனம், மனதில் கற்பிக்கப்பட்ட புத்தி, புத்தியில் கற்பிக்கப்பட்ட அவ்யாக்கிருதம், அவ்யாக்கிருதத்தில் கற்பிக்கப்பட்ட ஜெகத் இவையனைத்தும் ஆத்மாவாகிய உன்னை முதன்மையாகக் கொண்டிருக்கின்றன. உன்னிடத்தில் பொய்யாகத் தோன்றுகின்றன. ''ஆதி பகவன் முதற்றே உலகு'' என்று தமிழ்ப்பாவலர் சாற்றியுள்ளார். ஆதி-எதற்கு முன்னே ஒரு பொருள் இல்லையோ அதற்கு ஆதியென்று பெயர். எல்லார்க்கும் முன்னேயெல்லாமிருந்தாலும் இறைவனுக்கு முன்னே யாதொன்றுமில்லை. ஆதலின் இறைவன் ஆதியெனப்பட்டார். பகவன்—ஆறு ஐஸ்வரியம் உடையவன் என்பதைக் குறிப்பதற்காகப் பகவன் என்றார். பகவான் என்பது பகவன் என்று எடை குறைந்து வந்திருக்கிறது. ஆறு ஐஸ்வரியம்—எண்டு பஞ்ச கிருத்தியமும், அவைகளுக்குத் தலைமையுமாம். உலகு என்பது மூன்றெழுத்து. ஒரு எழுத்து ஒரு புவனத்தைக்குறிக்கும். ஆக மூன்றெழுத்தும் மூன்று புவனங்களைக்குறிக்கின்றன, மூன்று புவனங்களும் பதிநான்கு உலகத்திற்கு உபலட்சணம். இவ் உலகமனைத்தும் இறைவனைக் காரணமாகக் கொண்டிருக்கின்றன என்பது குறளின் குறிப்பு. குறைந்த பொருளாகவும் நிறைந்த பொருளாகவும் ஜடச்சேதன

வடிவமாகவும் எவை தோற்றுகின்றனவோ அவையனைத்தும் பரிபூரண பிரஹ்மமேயாம். 2

தொடர்ச்சி

அவ்வான்மாவில் பிராணன், மனம் முதலியவை ஏன் இல்லை? என்ற கேள்வி அப்ராண : அமநா : என்றதால் எழுந்தது. இதற்குப் பதில் சுருதி கூறுகின்றது —மனதிற்கும் பிராணனுக்கும் ஆன்மா காரணம்.

ஏதஸ்மாத் ஜாயதே பிராணோ மந : சர்வேந்திரியாணி ச
4
| கம்வாயு ஜ்யோதி: ஆப: பிருதிவீ விஸ்வஸ்ய
தாரணீ. 3

இ—ள்

இவ்வக்ஷர புருஷனிடத்திலிருந்து பிராணன், மனம், எல்லாப் பொறிகளும், ஆகாசம், வாயு, கனல், நீர், உலகத்தைத் தாங்கும் நிலம் எல்லாம் உண்டாகின்றன.

இந்தப் பிராணன், மனம், இந்திரியங்கள், ஐந்து மகா பூதங்கள் இவையனைத்தும் அதிலிருந்து உண்டாயின. அது — ஆன்மா. தோன்றுவதற்கு முன்னம் இவைகள் இல்லை. அழிவிற்குப் பின்னும் இருக்கப்போகிறதில்லை. இடையில் இருக்கிறது போல தோன்றுகின்றன. ''வர்த்த மாநேபி தத் ததா'' காரிகை. இருந்தாலும் இல்லாதது போலேயாகும். உபாதி யிருந்தாலும் இல்லாதுபோனாலும் நிலையொன்றுதான். உபாதியிருந்தால் பிரஹ்மம் சகுணம், உபாதியில்லாது போனால் நிற்குணம். உபாதி இருந்தாலும் இல்லாது போனாலும் பிரஹ்மத்தின்நிலை யொரேமாதிரி தான். சகுண நிற்குணம், உருவம் அருவம், சாகாரம் நிராகாரம் எல்லாம் அதில் கற்பிதமே. அது—பிரஹ்மம்.

ஏதஸ்மாத் — ஆன்மாவிற்கு இருவடிவம். ஒன்று பரோக்ஷம். பொறிகளுக்குப் புலனாகாத தன்மை. ஒலியிருந்

தால் காதுக்குப் புலனாகும். பரஸம் இருந்தால் துவக்கிற்குப் புலனாகும். உருவம் இருந்தால் கண்ணுக்குப் புலனாகும். இரசம் இருந்தால் நாக்கிற்குப் புலனாகும். மணம் இருந்தால் மூக்கிற்குப் புலனாகும். இவையில்லாததால் பரோக்ஷம் என்று ஆன்மா பகரப்பெற்றது. பரோக்ஷம் அக்ஞானிகளுக்காக. ஞானிகளுக்கு ஆன்மா ஏதஸ்மாத் — அபரோக்ஷவடிவம். ஞானிகள் எதையும் கண்ணைக்கொண்டு பார்ப்பதில்லை. கருத்தைக்கொண்டே நோக்குவார்கள். கருத்து — அறிவு. ஆகையால் அறிஞர்களுக்கு ஆன்மா அபரோக்ஷமாக இருக்கிறது. எனவே யேதஸ்மாத் என்று இயம்பப்பெற்றது. ''தத்தூரே ததவந்திகே'' என்று யஜுர் வேதத்திலும் இயம்பியிருக்கிறது. தூரம்—சேய்மை. அந்திகம்—அண்மை. எது கிட்டேயிருக்கிறதோ அது தூரத்திலில்லை. எது தூரத்தில் இருக்கிறதோ அது கிட்டத்தில் இல்லை. இங்ஙனம் இருக்க, தூரத்திலும் சமீபத்திலும் எங்ஙனம் இருக்கும் என்பாயாகில், பதில்—தெரிந்தவனுக்குச் சமீபமும் தெரியாதவனுக்குத் தூரமும் என்று பொருள் கொள்ளவும்.

''சேயாய் நணியானே'' என்று திருவாசகத்தில் மணிவாசகப்பெருமான் அருள்வாசகமாக அருளியிருப்பதுவும் காண்க. தண்ணீருக்குள் தனது நிழல் சமீபத்தில் தெரிந்தாலும், அதை நாம் பிடிக்க இயலாது. அதுபோல் தூரம் சமீபம் என்பது தூரத்திற்கும் சமீபத்திற்கும் பொருளல்ல. பின்னை? தெரிவதும் தெரியாததுமாம். பிராண:—ப்ரீணனாத் பிராண: என்பது இலக்கணம். கிரியாசக்தியுடையதென்பது கருத்து. செயல்படுந்தன்மை இதற்குத்தான் உண்டு. ''ஜ்யேஷ்ட்டஸ்ச ஸ்ரேஷ்ட்டஸ்ச'' பிர—சூ. பொறிபுலன்களுக்கெல்லாம் முந்தியதும், அவைகளைப்பார்க்கிலும் மேலானதும் என்பது பொருள். அமங்கலமான சரீரத்தை மங்கலமாக வைப்பதற்கு இதுதான் நிமித்தமாக இருக்கிறது. இந்தப்பிராணன் இல்லாதுபோனால் இவ்வுடம்பை ''வளை

வாலி ஞாளி கொளுமே" ஞாளி—நாய். கொளும்—தனக்கென கொள்ளும் என்பது வாக்கியத்தின் பொருள்.

மன:— மனம் மனம் என்று எதைச் சொல்வது? கடலில் காற்று அடிக்கிறது. அதனால் அலைகள் எழுகின்றன. ஒரு அலைக்குப்பின்னால் மறு அலை எழும். அதுபோல் நமது அந்தக்கரணத்தில் ஆசையென்னும் காற்று வீசும்பொழுது எண்ணம் என்னும் அலைகள் எழும். ஒரு அலை வரும், மற்றொரு அலை போகும். ஆற்றில் அழகர் இறங்குகிறார். அவரைத் தெரிசித்து வருவோம் என்று ஒரு எண்ணம் உதிக்கும். இதற்குச் சங்கல்பம் என்று பெயர். அழகரைச் சேவிக்கப்போனால் நேரமாகுமே, திடீரென வீட்டிற்கு விருந்தினர் யாரும் வந்தால் என் செய்வது என்று மற்றொரு எண்ணம் உண்டாகும். இதற்கு விகற்பமென்று பெயர். இவையிரண்டுஞ் சேர்ந்து மனம் என்று சொல்லப்படும். சங்கல்ப விகல்பாத்மகம் மன" பஞ்சதசீ. சங்கல்பம் — நினைப்பது. விகல்பம்—வேறு ஒன்றை நினைப்பது. இவ்விரு விருத்திகளும் மனம் என்று சொல்லப்படும்.

நீ நினைக்கின்றாயா நினைக்கவில்லையா? நினைத்தால் எதை நினைக்கின்றாய்? ஜெகத்தை நினைக்கின்றாயா? ஜெகதீசனை நினைக்கின்றாயா? நீ யெதை நினைக்கின்றாயோ அதுவாகின்றாய். உனது எண்ணமே உனது பிறப்பிற்கும் பிறவாமைக்கும் காரணம். நல்லதை நினை. நல்லதையடை. யஜுர் வேதத்தில் ஒரு மந்திரம்—"தன்மேமந! சிவசங்கல்பமஸ்து" எனது பிரிய மனமே! நல்லதை நினையென்பது சுருதிப் பொருள். நல்லது இறைவன். தீயது உலகம். எனவே "சித்தத்தைச் சிவன்பால் வை" என்பது நன்மொழிக் களஞ்சியம்.

இறைவனைப் பெறுவதற்கு இனிய சாதனம் மனந்தான். மனதை பிரஹ்மத்தில் வை, அல்லது பிரபஞ்சத்தில் வை.

இங்கேயிரு அல்லது அங்கேயிரு. நடுநாடனாக இருக்காதே. உடம்பு எங்கிருக்கிறதோ அங்கு மனிதன் இல்லை. பின்னை? மனம் எங்கிருக்கிறதோ மனிதன் அங்கிருக்கிறான். மனமென்னும் சொல்லிலிருந்துதான் மனிதன் என்னும் சொல் பிறந்திருக்கிறது. 3 "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:" பஞ்சதசி. மக்களின் இன்பதுன்பத்திற்கு மனந்தான் காரணமென்று வித்யாரண்ய சுவாமிகள் விளம்பியிருக்கிறார்கள்.

நிலமிருந்தால்தான் உழமுடியும், உழுதால்தான் நடமுடியும். நட்டால்தான் நெல் விளையும். நெல் விளைந்தால் தான் மனிதன் வாழமுடியும். மனித வாழ்விற்கு நிலம் இன்றியமையாதது. அதுபோல் முக்தியென்னும் வாழ்வைப் பெறுவதற்கு மனந்தான் நிலம். நிலமிருந்தால் நெல் விளையவைக்கலாம். நெல் விளையாது போனால் கரும்புபோடலாம். அது இல்லாது போனால் வாழை நடலாம். எதற்கும் நிலம் அவசியம். அம்மாதிரி மனம் இருந்தால் பக்தி செய்யலாம். அது இயலாது போனால் யோகம் பழகலாம், அது முடியாது போனால் தபசு பண்ணலாம். அதுவும் இல்லாது போனால் சிரவணம் மனனஞ்செய்து ஞான வாயிலாக முக்தியை அடைந்து இன்புறலாம். ஆனால் மனம் அவசியம் வேண்டும். பகவான் நம்மிடத்தில் விரும்புவது ஒன்றேயொன்றுதான். 4 அது மனம். "மைய்யேவமந ஆதத்ஸ்வ" கீதை. அர்ஜுன! மனதையென்னிடத்தில்வை யென்பது கீதையின் பொருள். நம்முடைய பொருளைக் கேட்பதற்கு இறைவனுக்கு என்ன உரிமையிருக்கிறது என்பதைச் சிறிது எண்ணிப்பாருங்கள். இந்த மனதைத் தந்தவன் யார்? யாரிடம் இருந்து நமக்கு இது கிடைத்தது? எதற்காகக் கிடைத்தது என்றெல்லாம் சிந்தனை செய்து பார்.

எல்லாவற்றையும் எவன் தந்தானோ அவன்தானே இந்த மனதையும் தந்திருப்பான். அவன் யார்? இறைவன்

தானே. ''சிவன் தந்ததென்று'' பட்டினத்து சுவாமிகள். சிவன்—சிவபெருமான். தந்தது—கொடுத்தது. கொடுத்தவன் திருப்பிக்கேட்டால் கொடுக்க வேண்டுவதுதானே நியாயம். அதுதானே முறை. ஒரு எளியவனில்லத்தில் திருமணம் நடந்தது. அதற்குச் சமுக்காளம் வேண்டியிருந்தது. அடுத்த தெருவில் ஒரு தனவந்தர் இருந்தார். அவரிடம் இந்த ஏழை சென்று ஐயா! எனது புதல்வனுக்கு விவாகம் நடக்க இருக்கிறது, ஒரு சமுக்காளம் தயவுசெய்து கொடுங்கள் மறுநாள் திருப்பித் தந்துவிடுகிறேனென்றுன். அவர் ஆகட்டும் என்று கொடுத்தார்.

அதை வாங்கிக்கொண்டு வந்தான். திருமணம் நிறைவேறியது. மறுநாள் காலையில் சமுக்காளத்தைச் சுருட்டினுன். அருகாமையில் உள்ள கிராமத்திற்குக் கொண்டுபோய் விலை பேசி விற்ருன். இவனை யோக்கியன் என்பதா? அயோக்கியன் என்பதா? இதை நீங்களே சிந்தித்துப்பாருமின். ஒரு கிராமத்தில் ஒரு உழவன் இருந்தான். அவனிடம் இரண்டு காளைகள் மட்டும் இருந்தன. இரு காளைகளையும் பூட்டி உழச்சென்ருன். அதில் ஒரு மாடு கால் தாங்க ஆரம்பித்து விட்டது. பக்கத்து வீட்டுக்காரர் நிலச்சுவாந்தார். அவரிடம் பல மாடுகள் இருந்தன. இவன் அவரிடஞ்சென்று ஐயா! ஒரு மாடு கொடுங்கள், நாளைக்கு உழுதுவிட்டு மாலையில் கொணர்ந்து தருகிறேன் என்ருன். ஆகட்டுமென்று அவர் கொடுத்தார். அவன் உழுதுவிட்டு சமீபத்திலுள்ள பட்டிக்குக் கொண்டுபோய் விற்கத்தொடங்கினுன். இவனை என்ன சொல்வது? யோக்கியன் என்று சொல்வதா, அயோக்கியன் என்று சொல்வதா, என்று நீங்களே எண்ணிப் பாருங்கள்.

இந்த மனமும் சமுக்காளத்தைப் போலவும், காளையைப் போலவுமாம். இதையிறைவனிடத்தில் வாங்கிக்கொண்டு வந்தோம். அவன் நம்மிடம் திருப்பிக்கேட்டால் கொடுக்கத்

தான் வேண்டும். நாம் கொடுக்காதுபோனால் நம்மையும் அயோக்கியன் என்றுதானே சொல்வார்கள்.

ஆகையால் இறைவன் கொடுத்த மனதை இறைவனுக்குத் திருப்பிக்கொடுக்க வேண்டுவதுதான் நல்லதாகும். ஆன்மாவிலிருந்துதான் மனம் உண்டாயிருக்கிறது. 3

தொடர்ச்சி —

இந்த மந்திரத்தில் உலகத்தின் காரணத்தைத் தெரிவித்துக்கொண்டு நாசதீய சூக்தம் ஈண்டு அறிவிக்கப்படுகிறது. பிரஹ்மம் உலகத்திற்கு மட்டும் காரணமில்லை. பின்னை? உலகவடிவமாகவும் இருக்கிறது. இஃது மாண்டூக்கிய உபநிடதத்தின் சாரமுமாம்.

யஸ்ய அக்நிர் மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ர ஸூர்யௌ
திஸ ஸ்ரோத்ரே வாக் விவ்ருதாஸ்ச வேதா : !
வாயு : பிராணோ ஹிருதயம் விஸ்வமஸ்ய
பத்ப்யாம் பிருதிவீ ஹி ஏஷ சர்வ பூதாந்தராத்மா. 4

இ—ள்

(விராட்டு பரமாத்மாவிற்கு) அக்னி (துவிலோகம்) சிரசு. சோமனும் சூரியனும் நேத்ரங்கள். திசைகள் காதுகள். வெளிப்படையான வாக்கு வேதங்கள். காற்று பிராணன். விராட்டு பகவானுக்கு விஸ்வம் இருதயம். பூமி பாதங்கள். இவர் எல்லா உயிர்களுக்கும் அந்தராத்மா. விராட்டு— விசுவம்.

பகவான் வியாசர் மகாபாரதத்தை விரிவாகச் செய்தார். பிரஹ்மசூத்திரத்தைச் சுருக்கமாகச் செய்தார். இம்மாதிரி மாண்டூக்கிய உபநிஷத்தில் விரிவாகச் சொன்னதை ஈண்டு சுருக்கமாகக் கூறப்படுகிறது. ஈரிடத்திலும் விரிவாகவும் சுருக்கமாகவும் சுருதி சொல்லியிருக்கிறது.

மாண்டூக்கிய உபநிஷத்தில் பிரஹ்மத்தை நான்கு பாதங்களாக உரைக்கப் பெற்றிருக்கிறது. அதில் அதை ஏழு

அங்கங்களாகவும் மொழிந்திருக்கிறது. அதுதான் இங்கும் சொல்லப்படுகிறது. உறுப்புக்கள் அங்கும் இங்கும் பொது. ஆனால் இதில் ஒரு விசேஷமிருக்கிறது. அது என்னவோ வெனின், எல்லா உலகமும் இவ்விராட்டிற்கு இதயம் என்று ஈண்டு இயம்பியிருக்கிறது. இதுதான் இங்கு விசேடம். மற்றவையிரண்டும் ஒன்றுபோலத்தான். ஒரு மனிதன் கனவில் பூமண்டலத்திற்கு யாத்திரை செய்தான் அவன் சுற்றின பூமண்டலம் அவன் மனதில் இருக்கிறது. இறைவன் பெரியவன். அவனுடைய உள்ளத்தில் அகில உலகமும் இருக்கின்றன. அவ்வுலகம் சிறியது. அவனது உள்ளம் பெரியது.

ஒருமுறை காசியில் நாங்கள் இராமச்சந்திர ஸாஸ்த்திரி யிடம் வேதாந்தம் படித்துக்கொண்டிருந்தோம். அவ்வமயம் அவர் எங்களுக்கு ஏகஜீவவாதத்தைப்பற்றியுரையாற்றினார். ஒரு மனிதனுடைய உடலில் மூன்று நிலைகள் உண்டாகின்றன. அவை—நாம் நனவையறிகிறோம், கனவு காண்கிறோம், உறங்குகிறோம். இவை மூன்றையும் தனித்தனியாகக் காணக்கூடாது. உண்மையென்று உரைக்கக்கூடாது. எங்ஙனம் கனவில் காண்கின்ற கதிரவன், சந்திரன், பூமி, உடுக்கள் எல்லாம் நமது பார்வையின் விசாலமோ, (விசாலம்தோற்றம்.) அங்ஙனம் நனவில் உள்ள சூரியன், சந்திரன், உடுக்கள். பூமி, மூன்று புவனங்களும் நமது பார்வையின் விலாசந்தான். எனவே இந்த நனவும் கனவு போல் திருஷ்டியின் பரிணாமமே என்றார். இந்த ஒரு ஜீவனுக்குத்தான் ஏழு அங்கங்கள். இவன்தான் சர்வபூதாந்தராத்மா. 4

தொடர்ச்சி

புருஷவடிவ ஆன்மாதான் சர்வபூதாந்தராத்மா. இது எவ்வாறெனின், உலகத்தில் தந்தையும் தாயும் சேர்ந்து சந்தான உத்பத்தி பண்ணுகின்றார்கள். இங்கு பிரஹ்மம்

மட்டும் உலகத்தையெவ்வாறு உண்டாக்க முடியும் என்பதற்குப் பதில்—விசுவத்தில் ஆக்கல், காத்தல், அழித்தல் தெரிகிறதே அது விசுவத்திற்கு வேறல்ல. அந்த அவிநாசி ஆன்மாவிலிருந்து பிராணன், மனம். பொறிகள் எங்ஙனம் உண்டாயினவோ, அங்ஙனம் இச்சிருஷ்டியும் உண்டாயிருக்கிறது. இதையினிவரும் ஐந்து மந்திரங்களால் சொல்லப்படுகிறது.

3 4
தஸ்மாத் அக்நி : சமிதோ யஸ்ய சூரிய :
4
சோமாத்பர்ஜந்யோ ஓஷதய : பிருதிவ்யாம். |
புமாந் ரேத : சிஞ்சதி யோஷிதாயாம்
3
பஹ்வீ : பிரஜா : பிருதிவ்யாம் சம்பவந்தி. 5

இ—ள்

அந்த (புருஷவடிவ) ஆன்மாவிலிருந்து சூரியனை விறகுகளாகக் கொண்ட அக்னியுண்டாயிருக்கிறது. அந்த திவிலோக அக்னியிலிருந்து சோமனும், சோமத்திலிருந்து மேகமும். மேகத்திலிருந்து மழையும், அதனுல் பூமியிலிருந்து ஓஷதிகளும் உண்டாயின. ஓஷதியிலிருந்து வீரியமும் வீரியத்திலிருந்து புருஷனும், புருஷனிலிருந்து அநேக பிரஜைகளும் உண்டாயின.

சாந்தோக்கிய உபநிஷத்தில் பஞ்சாக்னிவித்தையென்னும் நாமத்தால் இதைப்பற்றிக் கூறியிருக்கிறது. வடமாநிலத்தில் பங்குனிமாதம் ஓலிப்பண்டிகை கொண்டாடுவார்கள். கிராமத்தில் ஒருவருக்கொருவர் இழிவாக மொழிவார்கள். நாகரிகமான மக்கள் வந்து இவ்வாறு மொழிவது சமுதாயத்திற்குக் கேடு உண்டாகும் என்று சொல்லி தடுப்பார்கள். கெட்ட பழக்கம் கேடு விளைவிக்கும் என்பது பொன்மொழி. அக்கிராமத்தில் ஒரு முதியவர் இருந்தார்.

அவர் சொன்னார் — ஐயா! ஓலிப்பண்டிகையில் வைதால் குற்றம் ஒன்றுமில்லையென்றார். ஓலியில் வசவு வைவது தருமம் என்றும் சொன்னார்.

இந்த நிலைநிறுத்தும் பொருட்டு அவர் வேதப்பிரமாணத்தையும் வழங்கினார். அப்பொழுது சிலர் —ஐயா! திட்டுவதும் ஒரு தருமமாவென்றனர். அவர் அதற்கு ஒரு இதிகாசம் சொன்னார்—ஜகன்நாதபுரியில் யாத்திரிகள் யார் போனாலும் அங்குள்ள பகவான் ஜகந்நாதனுடைய எச்சிச்சோறு உண்ண வேண்டுமென்று உரைத்திருக்கிறது. ஆகையால் அங்குள்ள எச்சிச்சோறு இறைவனுடைய பிரசாதம். எனவே அதை யுண்டால் யாதொரு தோஷமும் இல்லை. அதனால் அதை யுண்பது தருமம் என்றார்

வேதத்தில் ''பசுநா யஜேத'' யாகத்தில் பசுவைப் பலி கொடுக்கவேண்டும் என்பது மந்திரத்தின் பொருள். இம் மந்திரத்தையொருநாள் நானும் படித்தேன். என் மனதில் ஒரு எண்ணந்தோன்றியது — நல்ல காரியத்தில் பலியை யேன் செய்யச் சொல்லியிருக்கிறது? எல்லாம் இறைவன் வடிவம், என்ற ஞானம் வந்தது. அந்த நிலையில் அஹிம்சை தருமம், ஹிம்சை தருமமில்லையென்று சொல்வதற்கு இட மில்லை. இனிப்பான மொழி தருமம் என்றால் கசப்பான மொழியும் ஒரு சமயம் தருமமாகும். இனிப்பும் கெடுதியை விளைவிக்கலாம், கசப்பும் நன்மையைத் தரலாம்.

நல்லது, கெட்டது, அடக்கம் அடங்காமை, இம்சை அகிம்சை, பாவம் புண்ணியம் இவைகளில் ஒவ்வொன்றிலும் தருமமும் உண்டு அதர்மமும் உண்டு. நேரம், காலம், இடம் இவைகளை யநுசரித்து தருமமாகவும் அதர்மமாகவும் மாற லாம். தருமம் வஸ்துவைப் பற்றியிருக்கவில்லை. அது ''சாஸ்த்ரைக கம்யம்'' ச. பா. நூலைக்கொண்டு அறிய வேண்டிய விஷயம். சாஸ்த்ரம் என்ன சொல்லுதோ அது தான் சத்யம்.

''சூர்யேண ஹி திவிலோக : சமித்யதே''

திவிலோகம் ஆதவன் மூலமாக அக்னிமயமாக விளங்குகின்றது. ஆகலின் சூரியன் அக்னிக்குச் சமித்து என்று உரைக்கப்படுகிறார். சமித்து — வன்னிக்குச்சிகள். இந்த அனல் அவிநாசிபரமாத்மாவிலிருந்து உண்டாயிருக்கிறது. திவிலோக அக்னியிலிருந்து சந்திரன் தோன்றினான். அம்புலி மற்றொன்றால் விளங்குகிறது. அம்புலி — நிலா. தானாக இலங்குந்தன்மை அதற்கில்லை. இச்சந்திரன் சோமாக்னியாயிற்று. சோமனிலிருந்து மேகமுண்டாயிற்று. மேகத்தில் உள்ள சக்தி பூமியில் விழுகிறது. அதிலிருந்து ஓஷதிகள் உண்டாகின்றன.

மரம், செடி, கொடி, புல் பூண்டு இவைகளுக்குப் பாலன போஷணம் காப்பு சந்திரனின் சக்தியினால் உண்டாகின்றன. ஓஷதிகளையுண்ணும்போது மனித தேகத்தில் வீரியம் உண்டாகிறது. அதனால் பெண்களிடத்தில் கர்ப்பம் உண்டாகிறது. அதனால் சந்தானம் உத்பத்தியாகிறது. திவிலோகம், பர்ஜன்யம், பிருதிவீ, புருஷன், பெண் இவைகள் நெருப்புக்குச் சமானம். இவைகளை அக்னியென்று உபநிடதங்கள் ஓதுகின்றன.

இவைகளில் வேள்வி வளர்ப்பார்கள். ஓமம் செய்வார்கள். இதற்குப்பெயர் பஞ்சாக்கினிவித்தை. சில மக்கள் இவ்வித்தையைப் பிரசாரம் பண்ணுகிறதில்லை. இதை விரிவுபடுத்த விரும்புவதும் இல்லை. ஆனால் சாஸ்த்ரம் எல்லார்க்கும், எல்லாவர்ணத்தாருக்கும் பொது. எனவே அதில் நான்கு ஆஸ்ரமத்தார்க்கும் உரிமையுண்டு. அனைவருக்கும் விதிவிலக்கு அருளியிருக்கின்றது. ஆண் பெண் முறை சாஸ்த்ரமுறைப்படி இருக்கவேண்டும். இவ்வாறு சொல்வது அதர்மம் அல்ல. நல்ல வினைகளைச் செய்யும்போது முஹூர்த்தம் பார்த்து செய்யவேண்டும். இது அறநூலின் ஆணை. ''வசந்தே அக்நிம் ஆதீத'' வசந்தகாலத்தில்

அக்னியை யாகத்திற்கு கொண்டுவரவேண்டும். ஆண் பெண் உறவு, கர்பாதானம். இதுவும் நல்லநாள் பார்த்து தான் செய்யவேண்டும். இவ்வேள்வி, அவனம், யாகம், பூஜை இவையெல்லாம் பசு தருமமல்ல. இதில் காலத்திற்கும் இடத்திற்கும் நியமம் உண்டு.

ஏகாதசி, பௌர்ணமி, அமாவாசை இவையெல்லாம் தள்ளத்தக்கது. இது காலத்தின் விலக்கு. ஆலயம், நதிக்கரை, தீர்த்தம், இவைகளை விட்டுவிடவேண்டும். வேத மந்திரத்தால் விதிப்படி யுண்டுபண்ணிய நெருப்பில் அவனம் செய்யவேண்டும். இம்மாதிரி விவாஹித மனையாளிடத்தில் குழந்தையைப் பெறவேண்டும் இது போகத்திற்காக அல்ல. குழந்தையைப் பெறுவது இல்லறதருமமாகும். 5

தொடர்ச்சி

பிரஹ்மத்திலிருந்து உயிர்கள் மட்டும் உண்டாகவில்லை, பின்னை? அவைகளுக்கு வேண்டிய கருமம், அதற்கு வேண்டிய கருமம், அதற்கு வேண்டிய சாதனம், பலன் முதலியவை உண்டாயின என்பதற்கு மந்திரம் —

தஸ்மாத் ரிச : சாமயஜூம்ஷி தீக்ஷா
யக்ஞாஸ்ச சர்வே க்ரதவோ தக்ஷிணாஸ்ச |
சம்வத்ஸரஸ்ச யஜமாநஸ்ச லோகா :
சோமோ யத்ர பவதே யத்ரசூரிய : 6

இ—ள்

அந்த புருஷ வடிவ ஆன்மாவிலிருந்து ரிசாக்கள்—அதாவது ரிக்வேத மந்திரங்களும், சாம—சாமவேதங்களும், யஜு :— யஜுர் வேதங்களும், தீக்ஷா — வலிமைகளும், யாகங்களும், எண்ணங்களும் தக்ஷிணைகளும் ஆண்டுகளும், யஜமானும், எதுவரை சோமனும், சூரியனும் புனிதப்படுத்துகின்றனரோ இவர் இருவருடைய பிரகாசம் எதுவரை விளங்குகின்றதோ அதுவரை அங்குள்ள உலகங்களும் உண்டாகின்றன என்பது பொருள்.

"தஸ்ய யஜுரேவ சிர :" தைத்திரீய உபநிஷத்து. மந்திரம் எல்லாம் மநோமய கோசத்தில் உண்டாகின்றன. அவ்யாகிருதத்திலிருந்துதான் எல்லா வேதங்களும். "வேத நான்கினும் மெய்ப்பொருளாவது" என்கின்றது தேவாரம். இது வேதத்தை நான்கு என்றும், இறைவன் நாமம் மெய்ப் பொருள் என்றும் தேவாரம் கூறுகின்றது. நான்கு வேதம்— — ரிக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வவேதம். ஈசுவரசிருஷ்டி ஜீவபோகாய" பஞ்சதசி. இறைவன் எதை யெதைப் படைக்கிறுனே அவையெல்லாம் ஜீவனுக்காகத் தான் ஜீவனுக்காக இறைவன் தனு, கரணம் புவனம் மூன்றையும் படைத்தான். இம்மூன்றுக்குள் ஜீவனுக்கு எவை வேண்டுமோ அவையனைத்துமிருக்கின்றன. ஆகை யால் ஜீவபோகாய என்ருர். வித்யாரண்ய சுவாமிகள் என்பது தெளிவு. 6

தொடர்ச்சி

கர்மம், யக்ஞமுதலியவை தேவர்களுக்காக. தேவர்கள் மகிழ்ச்சியடைந்து அதற்குரிய பயனைத்தருகின்றனர். ஆகலின் பின்வரும் மந்திரத்தின் மூலமாக எல்லாவுயிர்களும், அவைகளுக்குரிய உணவுகளும், அவைகளுக்குரிய கருமங் களும் இறைவனிடத்தில் உண்டாகின்றன என்று சொல்லப் படுகின்றன.

3 3 4
தஸ்மாத் ச தேவா பஹுதா சம்ப்ர சூதா :
4
சாத்யா மநுஷ்யா : பசவோ வயாம்சி !
பிராணபாநௌ வ்ரீஹியவௌ தபஸ்ச
4 4
சிரத்தா சத்யம் பிரஹ்மச்சர்யம் விதிஸ்ச. 7

இ—ள்

அந்த அக்ஷரவடிவ பரமனிலிருந்து பல தேவர்களும், சாத்யகணங்களும், மனித இனங்களும், விலங்கினங்களும்.

பறவைகளும் தோன்றின. இவர்களுக்கு ஜீவனம் சுவாசமும் நிஸ்வாசமும். இவைகளுக்கு உணவு நெல், தவசம் கோதுமை. இவர்களுக்கு தருமம் — தபசு, சிரத்தை, சத்யம், பிரஹ்மச்சரியம். இவைகளுக்குரிய விதிகள் எல்லாம் தோன்றின.

கருமத்திற்கு எத்தனை அங்கமோ, அவையனைத்தும் தேவதை, சாத்யர்கள், மனுடர்கள், பசுக்கள், பறவைகள், யவம், அரிசி, நெல் முதலியவை. நாசதீய சூக்தத்தில் கூறிய அவைகளுக்குரிய நியமங்கள்எல்லாம் இறைவனிடத்திலிருந்து உண்டாயின.

தவம் இருவகைத்து — (1) கருமாங்க வடிவ தவம் (2) சுதந்திர வடிவ அங்கரூபதவம். எங்ஙனம் நீ அவனம் செய்வதற்கு உட்கார்ந்திருக்கிறாயோ அங்ஙனம் தபசுபண்ண இருக்க வேண்டியதில்லை. ஆனால் அவனஞ் செய்யும் போது உணவு, உறக்கம், நினைத்த நேரம் நீர்பருகுதல் முதலியவை இயல்பாக நின்று விடுகின்றன. நெருப்பு முந்நிலையில் இருக்கும்படி நேருகிறது. பிரமச்சரியம் காப்பாற்றப்படுகிறது. இவையெல்லாம் கருமஅங்கவடிவதவம் ஆகின்றன.

வானப்பிரஸ்த்த ஆஸ்ரமி சுவதந்திரமாக தபசுபண்ணுகின்றான். இது கருமாங்கமில்லை. மழைக்காலத்தில் ஆடையணியாலும், வெயில் காலத்தில் அனல் முன்னிலையிலும் இருக்கிறான். குளிர்காலத்தில் ஜலத்தில் நிற்கிறான். முக்கியமான விரதங்களைச் செய்கிறான் (அபக்குவம்) வேக வைக்காத அன்னத்தை யருந்துகிறான். இவையெல்லாம் சுதந்திரதவம் எனப்படும். இந்த இரண்டு விதமான தவங்களும் இறைவனிடத்திலிருந்து உண்டாயின. இவைகளும் முன்னும் இல்லை, பின்னும் இருக்கப்போகிறதுமில்லை.

சிரத்தை—இதைப்பற்றி பகவான் ஸ்ரீசங்கராசாரியர் தானாகவே பொருள் பண்ணியிருக்கிறார் —

''சர்வ புருஷார்த்த சாதன பிரயோக சித்த பிரசாத: ஆஸ்திக புத்தி :'' ச. பா.

புருஷார்த்தம் நான்கு — தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம். இவை அறம், பொருள், இன்பம், வீடு எனினும் அமையும்.

''அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே'' நன்னூல். என்பதனுலும் உணர்க. சகல புருஷார்த்தங்களுக்கும் சாதனவடிவச்சித்தத்தின் ஆஸ்திக்யபுத்திக்கு சிரத்தையென்று பெயர். நம்பிக்கையில்லாமல் கருமம் உண்டாகிறதில்லை. நம்பிக்கையில்லாமல் பொருள்கூட தேடமுடியாது. விவகாரத்தில் (பரஸ்பரம்) ஒருவருக்கொருவர் விசுவாசம் வேண்டும். சிரத்தையில்லாமல் இன்பமும் உண்டாகாது.

சமையற்காரனிடத்தில் நம்பிக்கை இல்லாவிடில் அவன் நமது உணவில் நஞ்சு கலக்கவில்லை யென்ற எண்ணம் எங்ஙனம் உண்டாகும்? நம்பிக்கையில்லை யெனில் உணவு எவ்வாறு அருந்துவாய்? விசுவாசமில்லாமல் அவனம், யாகம், தானம், தவம் இவையும் உண்டாகமாட்டா. குருபரனிடத்தில் விசுவாசம் இல்லாமல் ஞானம் உண்டாகுமா? ஆகையால் நான்கு புருஷார்த்தங்களும் நம்பிக்கையினுல் உண்டாகின்றன. விசுவாசத்தால் மனம் தூய்மையடைகிறது. சிரத்தையினுல் மனிதன் புண்ணிய பாவத்தையும், வேத சாஸ்த்ரத்தையும், சுவர்க்க நரகத்தையும் நம்புகிருன். இத்தகைய சிரத்தையும் ஆன்மாவிலிருந்து உண்டாயிற்று. அதனிடத்தில் இது ஆரோபம். நம்பிக்கை நம்மை யிறைவனிடம்சேர்ப்பிக்கின்றது. ஆனுலும் மாயை.

சத்ய :- எந்த சத்தியத்தில் ஞானமும் ஆனந்தமும் இருக்குமோ அதுவே யுண்மையான சத்யம். சிலர் உண்மை

யுரைக்கின்றனர். ஆனல் கசப்பாக உரைக்கின்றனர். கசப்பான சத்யம் சத்யமல்ல. சித்து ஆனந்தத்திலிருந்து வேருக இருந்தால் அது சித்தாக இருக்க இயலாது. சத்யமுமாகாது. சத் ஞானத்திற்கு வேருக இருக்கமாஞல் அது ஜடமாகும். ஆனந்தத்திற்கு அன்னியமாஞல் துக்கமாகும்.

அறிவிற்குத்தக்கவாறு பேசினல் அது சத்யமாகும். சத்யம் எப்பொழுதும் ஞானத்தோடிணைந்திருக்கும். உணர்வு வேறு, சொல்வது வேருக இருந்தால் உண்மையெங்ஙனம் ஆகும்? எவ்வாறு ஞானத்திற்கு வேருக சத்யம் இருந்தால் உண்மையாகாதோ அவ்வாறு இன்பத்திற்கு விபரீத மாஞலும் உண்மை உண்மையல்ல. ஆனல் பொதுவாக மக்கள் இதையுணர்கிறதில்லே. இதைப் பற்றி மநுபகவான் சொன்னதாவது—

சத்யம் புரூயாத் பிரியம் புரூயாத்
ந புரூயாத் சத்யம் அப்பிரியம்
பிரியஞ்ச ந அநுருதம் புரூயாத்
ஏஷ தர்ம : சநாதந :'' மநு.

இ — ள்.

எல்லோரும் உண்மையுரைக்க வேண்டும். ஆனல் கனிவாக உரைக்கவேண்டும். கசப்பான உண்மையுரைக்கலாகாது. நாவில் வேப்பங்காயைத் தடவிப் பேசுவார்கள். அது கூடாது. பேசும்போது நாவில் தேனேத்தடவி உரையாடவேண்டும். கனிவாக இருக்கவேண்டும்என்பதற்காகப் பொய்யும் பேசலாகாது. இதுதான் பழைமையான தருமம்.

நமது நாவில் இனிப்பு இருந்தால் போதாது, பின்னே? வாய்மை அவசியம் இருக்க வேண்டும். ஒருவன் பூமியை இறைவன் ஆக்கினுன் என்ருன். மற்ருெருவன் பூமியை

பிரதானம் படைத்தது என்ருன். இவ்விஷயத்தில் இருவரும் வழக்காடினர். மீண்டும் மீண்டும் போராடினர். இருவரில் யாராவது ஒருவர் இறைவன் பூமியைப் படைத்ததைப் பார்த்தார்களா ? இல்லை. இல்லை. பார்த்ததேயில்லை யென்ருல் சண்டை யெதற்காக? சிலர் விநாயகரைஜகத்திற்கு நிமித்தம் என்கின்றனர். சிலர் சக்தியைக் காரணம் என்றனர். இதனுல் இவர் சொல்வதுதான் உண்மையென்று உரைக்க இயலவில்லை.

பார்க்கும் பொழுது எல்லா மதமும் கற்பனையென்று தான் தெரிகிறது. அங்ஙனம் இருக்க என்மதம் உண்மை, உன்மதம் உண்மையென்று எவ்வாறு சொல்வது? எதிலும் பிடிவாதம் கூடாது. ஆரிய சமாஜ், சநாதனதருமி இவர் இருவரும் விவாதம் செய்கின்றனர். வாதம் என்னை? சுவர்க்கம் இருக்கிறதா இல்லையா என்று வாதம் பண்ணினர். இருவரில் ஒருவரும் சுவர்க்கத்தைப் பார்த்ததில்லை. இதனுல் அறிவிற்கு எது எது மாறுபடுமோ அது உண்மையில்லை. உண்மை உணர்விற்குமாறுபடாமல் இருக்கவேண்டும்.

சத்யம் எல்லாருக்கும் ஆனந்தமளிக்கவேண்டும். படைப் புக்கு முன் வாக்கில்லை. அப்பொழுது சொல்லுமில்லை. சிருஷ்டி இல்லாதபோது வாக்கு எங்கிருந்து வரமுடியும்? முடியாதல்லவா. ஆகையால் சத்யமும் ஆன்மாவில் கற்பிதம். இறைவனிடத்தில் பரமார்த்தசத்யம் சொரூபமாக இருக் கிறது. விவகாரசத்யம் கற்பிதமாக இருக்கிறது. அசத்யம் சத்யம் இரண்டுமே பொய்.

4

''சத்யம் அநுருத வர்ஜநம் யதார்த்த பூதவசநம் அபீடாகரம்'' ச. பா. பொய்யில்லாமலும், உண்மையாகவும், பிறருக்குத் தொல்லையில்லாததாகவும் எது இருக்குமோ அது சத்தியம் என்பது சங்கரபாஷ்யம்.

''வாய்மை யெனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமையிலாத சொலல்'' திருக்குறள்.

தீமையாதொன்றும் இலாத சொலல். தீங்கு சிறிதும் உண்டாகாத சொற்களைச் சொல்லுதல். மெய்மை என்று சொல்லப்படுவது யாது எனின், பிறிதோருயிர்க்கு யாதொரு தீமையும் பயவாத சொற்களைச்சொல்லுதலேயாம், உள்ளதை யுள்ளதாகவும் இல்லதை இல்லதாகவும் சொல்வது வாய்மை யன்று. பிறவுயிர்க்குத் தீமை சிறிதும் இல்லாத சொற்களைச் சொல்லுதலே வாய்மையாம் என்றபடி.

வாய்மைக்குச் சிறந்த இலக்கணம் மகாபாரதத்தில் வந்திருக்கிறது—

ந தத்வ வசநம் சத்யம் நாதத்வ வசநம் மிருஷா.
யத்பூத ஹிதமத்யந்தம் ஏதத்சத்யம் மதம்மம ||
இது பீஷ்மர் சொன்னது.

இ—ள்

உண்மையானது சத்யமில்லை, மித்யாவசனம் பொய் யல்ல. எதனால் உயிர்களுக்கு முற்றிலும்நன்மையுண்டா குமோ அந்த சொல் சத்யம். இதுவே எனக்குச் சம்மதம் என்று பீஷ்மர் சொன்னார்.

இச்சிருஷ்டியெல்லாம் சேதனத்தைப் பற்றியிருக்கும் மாயையிலிருந்து உண்டாயிருக்கின்றன. புத்திக்கும், புத்தி யிலிருக்கும் அவ்யாகிருதத்திற்கும் ஆத்மா அதிஷ்ட்டான மாகும். புத்தியிலிருக்கும் சேதனமும் புத்தியவச்சின்ன சைதன்யமும் அவ்யாகிருத அவச்சின்னச்சைதன்யமும் வேறல்ல. ஒன்றுதான். மகாபிரளயத்தில் இவ்விரண்டிற் கும் வேற்றுமையில்லை. ம. 7.

தொடர்ச்சி

இதுவரை பரமாத்மா உள்ளும் புறமும் ஒரே படித்தாக இருக்கிறார் என்றும், அஜன் என்றும். பிராணன், மனம்,

அவித்தை, மாயை உபாதிகளால் ஆன்மாவிற்குச் சம்பந்தம் இல்லையென்றும் சொல்லியிருக்கிறது. இதுவும் உபலக்ஷணந் தான். இனி வேறுவிதமாக ஆன்மாவைச் சுருதி அருளு கின்றது—வீட்டில் குடம் இருந்தால் எங்கு குடமில்லையோ அங்கு பூமியிருக்கிறது என்று குழந்தைகளுக்குச் சொல்ல லாம். அதுபோல் எவருடைய மதியில் உலக உற்பத்தி வாசனையிருக்கிறதோ, அவருக்கு அறிவிப்பதற்காக எங்கு சிருஷ்டியில்லையோ அங்கு பிரஹ்மம் சொல்லியிருக்கிறது.

நிலமிது என்று தெரிந்த பின்பு குடம் இருந்தாலும் இல்லாது இருப்பினும் இது மண்ணென்று தெரிந்து கொள்ள லாம். இம்மாதிரி முன்னர் ஆக்கல், காத்தல், அழித்தல், முதலியவைகளையருளி அவைகளுக்கு சாக்ஷி ஆன்மாவென்று கூறியிருக்கிறது. பிரஹ்மம் இயல்பாக பிரகாசமுடையது. சுயம் ஜோதியை சுயம் ஜோதியென்று சொல்வதும் உப சாரமாகும். நின்றுகொண்டிருக்கிற மலையை நிற்கிறதென் பது போல.

குடத்தில் நாமமும் உருவமும் இருப்பதால் குடம் மண்ணுக்கு வேருகக் காணப்படுகிறது. கடத்தின் அபாவத் தில் நாமரூபம் இல்லாததால் மண்ணுக்கு வேருகத் தோன்று வதில்லை. எனவே பிரஹ்மத்தையறிவிக்கும்பொருட்டு பிரளயத்தைக் கற்பனை செய்யப்படுகிறது. அதன் பிறகு நமது உடலில் பிராணன், மனம், புத்தி, பொறிகள், ஐம் பூதங்கள் அனைத்தும் அந்த அக்ஷரவடிவ ஆன்மாவிலிருந்து உண்டாயின என்று சொல்லப்படுகிறது. இவையனைத்தும் தோன்றுவதற்கு முன்னம் இல்லை, இவைகள் இல்லாத நிலையில் இறைநிலைதான் இருந்தது. உலகமில்லையென்ருல் பிரஹ்மம்தான் இருந்தது. உலகப்பொருள் சிருஷ்டிக்குப் பின்னர் உண்டாயின. பிரளயத்திற்கு பின் அழிந்துபோகும். இதனுல் இதன் நிலை கனவுபோலவாம்.

ஒரு மந்திரவாதி ஒரு மாங்கனியை உண்டுபண்ணினன். சிறிது நேரத்தில் அது மறைந்துவிட்டது. இக்கனி தோன்றியது, மறைந்தது. மேகமண்டலத்தில் யானை, குதிரை, ஒட்டகை வருகின்றன போகின்றன. அதுபோல் அனாதி அநந்த பிரஹ்மத்தில் கோடிகோடி அண்டங்கள் காணப்படுகின்றன. இவை மந்திரவாதியின் மாங்கனிக்குச் சமானமாகும். படைப்பு முன்னும் இல்லை, பின்னும் இல்லை.

"ஏதஸ்மாத் ஜாயதே பிராண: மந: சர்வேந்திரியாணிச" தேகத்திற்கு வெளியிலும் உள்ளிலும் உள்ள பிண்டமும், கம் வாயு, ஜோதி பூமி முதலிய பிரம்மாண்டமும் உண்மையில் உணர்வு மயமான ஆன்மாவில் இல்லை. எது முன்னே யில்லையோ அது பின்னேயும் இல்லை. எது முன்னும் பின்னும் இல்லையோ அது இடையிலும் இல்லையென்றே கொள்ள வேண்டும். ஸ்ரீமத் பாகவதத்தில் இதைப்பற்றிக் கூறியிருக்கிறது—

''ந யத் புரஸ்தாத் உதயந் ந பஸ்சாத்.
மத்யேபி தந் ந வ்யபதேசமாத்ரம்'' பா.

எது முன்னம் இல்லையோ, எது பின்னர் இருக்கப் போகிறதில்லையோ, அது உண்மையில் நடுவிலும் இல்லவே இல்லை என்பது பாகவதத்தின் பொருள். சொல்லளவு என்று கொள்ளவேண்டும்.

''ந யதிதம் அக்ரஆச ந பவிஷ்யத் அதோ
நிதாநாத் அநுமிதம் அந்தரா த்வயி விபாதிமிருஷைகரசே''

இச்சிருஷ்டி உத்பத்திக்கு முன் இல்லாதிருந்தது. பிரளயத்திற்குப் பின் இருக்கப்போகிறதில்லை. ஆகையால் நிகழ்காலத்திலும் இதற்கு இன்மையென்று எண்ணுதி. இந்த ஆன்மா ஏகரசம். ஒருபடித்தானது. பராபரம். மகான் ஆன்மாவில் இச்சிருஷ்டி முழுவதும் கானல் ஜலம்போலத் தோற்றுமாத்திரமே.

இவ்வாறு இதை இயம்பி, விராட்டுப்புருஷனுக்கு ஏழு அங்கங்கள் கற்பனை செய்ததும் பொய்யென்று சுருதி புகலு கின்றது. தோற்றமனைத்தும் சொப்பனம்போல. அதன்பிறகு பஞ்சாக்னிவித்தையின் வாயிலாகச் சொன்னவிதம்—ஐந்து நெருப்பிலும் ஆகுதி விழுந்ததும் உயிர்கள் உத்பத்தியாகின் றன. அவைகளும் அந்த ஆன்மாவிலிருந்துதான் உண்டா கின்றன. அதுவும் இந்திரஜாலம்போல பொய்யென்று உணரவேண்டும்.

இம்மாதிரி ஆருவது மந்திரத்தில்—கருமம், கர்தா, பலன் முதலியவையும், நான்குவேதங்களும், இவைகளால் தூய்மை யடைவது, யாகஞ்செய்வது, தானம் பண்ணுவது, இவை களால் உண்டாகும் பலவடிவமான உத்தராயணம் தக்ஷிணுயனம் என்னும் மார்க்கமும் பரமாத்மாவிலிருந்து உண்டாயின. அதனுல் அதுவும் அதில் கற்பிதம்.

ஏழாவது மந்திரத்தில் பலஉறுப்புக்களோடு தேவதை. சாத்யர், பசு, பறவை, யாகத்திற்குரிய அன்னம். நம்பிக்கை, தப முதலியவையும் அந்த ஆன்மாவிலிருந்து தோன்றின தால் அவையும் கற்பிதமே என்று ஆரணம் அருளுகின்றன. இனி பொறிபுலன்களும் அந்த பரமாத்மாவிலிருந்து உண்டாகின்றன என்று சொல்லப்படுகிறது.

சப்தப்ராணு : பிரபவந்தி தஸ்மாத்
சப்தார்ச்சிஷ : சமித : சப்தஹோமா :
சப்த இமேலோகா : யேஷுசரந்தி பிராணு
குஹாஸயா : நிஹிதா : சப்த சப்த. 8

அந்த அக்ஷரவடிவ ஆன்மாவிலிருந்து ஏழு இந்திரியங் கள் உண்டாயின, ஏழு அர்ச்சிகள் உண்டாயின, ஏழு (சமிதா)—விஷயங்கள் உண்டாயின, ஏழு அவனம் (விஷய ஞானம்) உண்டாயின; எதில் இந்த பிராணனும், இந்திரி

யங்களும் திரிகின்றனவோ, அதில் ஏழு இடங்கள் உண்டா யின. இம்மாதிரி ஒவ்வொரு தேகத்திலும் ஏழு ஏழு உண் டாயின.

இரு கண்கள், இரு செவிகள், நாக்கு, மூக்கு, துவக்கு, இவையேழு இந்திரியங்கள். இவ்வேழு இந்திரியங்கள் வாயிலாக எந்தப்பொருள் அறியப்படுகிறதோ அது இந்திரிய விக்ஞானம். இன்றைக்குள்ள இளைஞர்கள் இதைத்தான் (சயன்ஸ்) விக்ஞானம் என்று சொல்லுகிறார்கள். ஒரு கண். அது சூக்கும சரீரத்தில் இருக்கிறது. லிங்கசரீரம் மத்யம பரிமாணம். ஆகையால் தாளிலிருந்து தலைவரை இருக் கிறது. எனவே நேத்திரரூப இந்திரியம் உடல் முழுவதிலும் இருக்கிறது. கண்ணிருக்கும் இடம் கோளகம். இது முகத் திற்கு மேலேயிருக்கிறது. கண்ணாடியும் அங்குதான் அணியப் படுகிறது.

இதுபோல காது, நாசி, நாக்கு இவைகளும் இருப்பது லிங்கதேகத்தில். தூலதேகத்தில் பரவியிருக்கின்றது. தூல சரீரத்தில் இவைகளுக்குத் தனித்தனியாக இடம் இருக்கின் றது.. துவக்குஇந்திரியம் மட்டும் உடம்புமுழுவதும் பரவி யிருக்கிறது. இடம் தோல்.

இந்நிலையில் கையைக்கொண்டோ, காலைக்கொண்டோ மூக்கைக்கொண்டோ, நாக்கைக்கொண்டோ விஷயங்களை அறிய இயலும். பொறிகள் காயமுழுவதிலும் இருக்கிற தென்பது தெளிவு.

ஏழு பிராணங்கள்—இவ்விந்திரியங்கள் பிராணவடிவம். கிரியாசீலம். சப்தஅர்ச்சிஷ :— இவைகள்—தங்கள் விஷயங் களை விளக்குகின்றன. விஷயங்களை விளக்கும் ஒளி யிவை களிலிருக்கின்றது. சப்த சமித :— இப்பொறிகளுக்கு ஏழு சமித்துக்கள். ஏழு விஷயங்கள். சப்தஹோமா :— அந்த விஷயங்களை இந்திரியங்களில் ஆகுதி கொடுக்கின்றனர்.

ஈண்டு ஆகுதியென்பது நுகருவது. சப்தஇமேலோகா யே ஷ"சாந்நிபிராணு:— இந்த பொறிகள் எந்த விஷயத்தில் அலேகின்றனவோ அவைகளுக்கு ஏழு உலகங்கள். அதாவது ஏழுஸ்தானம். இம்மாதிரி ஏழும் எழும் ஒவ்வொரு தேகத் திலும் காணப்படுகின்றன. இவையனைத்தும் முன்னும் இல்லே, பின்னும் இல்லே. . இனியிருக்கப்போகிறதுமில்லே. இவையும் ஆன்மாவில் கற்பிதமாகத் தோற்றுகின்றன.

எவ்வாறு கேமராவினுல் போட்டோ எடுக்கிருர்களோ அதுபோல் பரமாத்மாவின் போட்டோவில் ஜெகச்சித்திரம் விழுகிறது. போட்டோவில் ஒருவனேச் சிறியவனுகவும், பெரியவனுகவும், மெலிந்தவனுகவும், வலிந்தவனுகவும், பிடிக்கிருர்கள். இதற்கு நிமித்தம் கேமராதான். இம்மாதிரி நாம் அகம்மண்டலத்தில் அமர்ந்துகொண்டு இதம்மண்டலத் தைப் படம் பிடிக்கிரேம். இதை வேதத்தில் அக்னி சோமம் என்றும், பிராணரயீ என்றும் சொல்லுவார்கள். ''அக்னி சோமாத்மகம் ஜகத்''.

அக்னி மண்டலம் வஸ்துக்கள். சோமமண்டலம் மனம், அக்னியிலிருந்தும் சோமனிலிருந்தும் ஒளி கிளம்பும்போது உலகம் காணப்படுகிறது. எப்பொழுது நாம் நம்மைப் பரிச் சின்னமாகக் கருதுகிரேமோ அப்பொழுது உலகம் தெரி கிறது. ஜீவன் என்னும் நாமம் முன்னும் இல்லே, பின்னு மில்லே, இனிமேலிருக்கப்போகிறதுமில்லே. கனவில் காணும் வித்வான். முட்டாள், வேதியன் உண்மையில் இல்லே. இவர்கள் ஜீவாபாசர்கள். போலிஜீவன் என்பது பொருள்.

நான் ஜீவன் என்பது மயக்கம். இம்மயக்கம் இதயத்தில் உண்டாகிறது. நாம் நம்மை குறைந்தவனுகஎண்ணி எப் பொழுது உலகத்தைப் படம்பிடிக்க ஆரம்பிக்கிரேமோ, அப் பொழுது தேசம், காலம். பொருள்வடிவ உலகம் பெரிதாகக் காணப்படுகிறது. எப்பொழுது நாம் நம்மை ஜீவன் என்பதை

விட்டுவிடுகிறோமோ அப்பொழுது சிருஷ்டி இல்லவேயில்லே. இந்த எண்ணத்தால் தன்னைப் பிரஹ்மம் என்று எண்ணு. நான் சிதாகாசம் என்று நினை. இவ்வாறு நினைந்த பின்னர் உலகத்தைப் படம்பிடிப்பாயானல் அப்படத்தில் வஸ்து, தேசம், காலம் வரமாட்டா. 8.

தொடர்ச்சி —

அந்த அவிநாசிஆன்மாவிலிருந்து யாகம், யாகத்திற்குரிய சாதனம், கிரியை, பலம் இவைகள் மட்டும் உண்டாகவில்லே, பின்னே, கடல், நதி, மலே, வனம் முதலியவைகளும் உண்டாகின்றன என்று இம்மந்திரத்தில் கூறப்படுகிறது—

3 3
அத : சமுத்ரா : கிரயஸ்ச சர்வே
4
அஸ்மாத் ஸ்யந்தந்தே சிந்தவ : சர்வரூபா : |
4
அதஸ்ச சர்வா ஓஷதயோ ரஸஸ்ச
யேனைஷ பூதைஸ்திஷ்டதே ஹி அந்தராத்மா || 9

இவ்வான்மாவிலிருந்து எழுகடலும், மலேகளும் உண்டாயின. இதிலிருந்து அநேக வடிவ நதிகளும் தோன்றின. இதிலிருந்து சகல மருந்துகளும், ரசவர்க்கங்களும் தோன்றின. இதனல் எல்லாவுயிர்களிடத்திலும் ஆன்மா வசிக்கிறது.

சமுத்ரா :— சம்யக் உத்ரிச்சியந்தேதி சமுத்ரா: என்பது இலக்கணம். எதில் அலேகளும், திரைகளும், நுரைகளும் கிளம்புகின்றனவோ அது சமுத்திரம் எனப்படும். முத்ரயா சஹித : சமுத்ர : என்பது மற்ருெரு இலக்கணம். எதற்கு இரண்டு முத்திரையோ அது சமுத்திரம். ஒன்று சாந்தம், மற்ருென்று சஞ்சலம். ஈண்டு மண்ணின் வடிவ உப்புக்கடலேயும், திவ்ய வடிவ பாற்கடலேயும் கொள்ளவேண்டும். இவ்வெழு கடலும் இறைவனிடத்திலிருந்து தோன்றின.

கிரயஸ்ச சர்வே—இமயமலை, மேருமலை, விந்தியமலை, மருதமலை. பொதிகைமலை முதலிய மலைகளும் ஆன்மாவி லிருந்து வந்தன. அஸ்மாத் ஸ்யந்தந்தே சிந்தவ : சர்வ ரூபா :— இந்த பரமாத்மாவிலிருந்து எல்லா நதிகளும்— கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி. நருமதை, காவிரி முதலிய ஆறுகளும் அதைச்சார்ந்த அருவிகளும் உண்டாயின.

அதஸ்ச சர்வா ஓஷதயோ ரஸஸ்ச — சம்சாரத்தில் திரணத்திலிருந்து (பெரியமரங்கள்) எத்தனைத் தருக்கள் இருக்கின்றனவோ அத்தனையும் மருந்துதான். மருந்து இல்லாத விருக்ஷமே கிடையாது. இம்மரங்களும், இரசவர்க் கங்களும், தாதுக்களும் அந்த இறைவனிடத்திலிருந்துதான் வந்திருக்கின்றன. ஓஷதி—குற்றத்தைப்போக்கி குணத்தை யளிப்பதால் தருக்களுக்கு ஓஷதியென்று பெயர்.

ந மந்ரம் அக்ஷரம் கிஞ்சித் நாநோஷதி வநஸ்பதி : |
3 4
அயோக்ய: புருஷோ நாஸ்தி பிரயோக்தா தத்ரதுர்லப : | |

மந்த்ரம் இல்லாத எழுத்தும், மருந்துக்கு உதவாத இலையும், ஒன்றுக்கும் உதவாத மனிதனும் இல்லை. ஆனல் இவைகளை ஒழுங்காகக் கொண்டுவருபவன் கிடைப்பது அரிது. யேநைஷ பூதைஸ் திஷ்ட்டதே ஹி அந்தராத்மா. அந்தராத்மா (ஜீவ) பிராணிகளில் வசிக்கிறன். இது தூல தேகத்தை முன்னிட்டு சொல்லப்படுகிறது. ஓஷதி, மருந்து, ரசம், உணவு, நீர் இவைகள் கிடைக்கும்போதுதான் தூல உடலில் ஜீவனம் உண்டாகிறது. 9

தொடர்ச்சி

சகல பொருள்களும், சகல சிருஷ்டிகளும் இறைவனிடத் திலிருந்து உண்டாயின என்று கூறுவதால் என்ன பயன்? இதையறிந்ததனல் என்ன பரிணமம் உண்டாகிறது? என் பதற்குப் பதில்—

3
புருஷ ஏவேதம் விஸ்வம் கர்ம
தபோ பிரஹ்ம பராமிர்தம் |
3
ஏதத்யோ வேதநிஹிதம் குஹாயாம்
சோ அவித்யா கிரந்திம் விகிரதீஹ சோம்ய || 10

இந்த சகல உலகமும், கருமமும், தபசும், இறைவன் வடிவமே. அது மேலான அமிருதவடிவ பிரஹ்மம். ஏசோம்ய! இதை தனது இதயத்தில் இருப்பதாக யார் அறிகிருரோ, அவர் இவ்வுலகத்தில் அறியாமையென்னும் முடிச்சை யறுத்துவிடுகிருர்.

விவிதம் ஸ்வயதே கச்சதீதி விஸ்வம். எது பலவிதமாகத் திரிகிறதோ அது விசுவம். இவ்வுலகம், புருஷ ஏவேதம்—இது புருஷ வடிவம். பரமாத்ம சொரூபம். நமது ஆன்மா தான் உலகம். உலகம் இறைவனுக்கு அந்நியமில்லை. எல்லா உலகத்திற்கும் இறைவனே காரணம். அவன் நம் வடிவம் இதில் காரணத்வம் உபாதியால் வந்தது. உபாதியை யெடுத்து எறிந்துவிட்டால் ஜீவாத்மா பரமாத்மாவேதான்.

கர்மம், தபம், ஞானம் இவையனைத்தும் பரமாத்மாதான். இவ்வான்மா மேலானது. அழியாத தன்மையது. நம்பிக்கை, கர்மம், தபசு, உபாசனை, யோகம் இவையெல்லாம் அமிருதம். பரமாத்மா மேலான அமிர்தம். உலகத்திலுள்ள அமிருதங் களனைத்தும் இறைவன் என்னும் அமுதக்கடலின் திவிலை யாகும். எரியோடு கலந்த இரும்பு எரியாவதுபோல இறைவனோடு கலந்த இகமும் அமுதமாகின்றது. எரி—நெருப்பு. இகம்—உலகம்.

சௌம்ய! சந்த்ரன் இனிமையானவன். எவ்வளவு இன்னல்கள் இருப்பினும் அவைகளைப் பொருள்படுத்தாது இனிமையாக வாழ்பவன் அதிகாரியாவான். நாங்கள் பல நண்பர்கள்கூடி யொரு இடத்தில் இருந்தோம் அங்கு ஒரு

மகாத்மா வந்தார். அவர் வந்ததும் நாங்கள் எழுந்து நின்றோம். அவர் எங்களையிருங்கள் என்றார், மனிதன்தான் வருகிறான் பூகம்பம் வரவில்லை இருங்கள் என்று மீண்டுஞ் சொன்னார். ஆனாலும் அடியவரைக் கண்டால் எழுந்து நிற்பது நம் கடமைதானே.

மகான்களைக் கண்டதும் அவர்களை வரவேற்பதற்காக சூக்கும சரீரம் மேலே எழுகின்றது என்று உபநிடதங் கூறுகின்றது. சூக்கும சரீரத்தோடு தூலதேகமும் எழுந்தால் பிராணன் நிலைகுலையாமல் இருக்கும். இரு தேகங்களும் ஒன்றுபோல் எழுந்தால் பிராண சஞ்சாரம் ஒழுங்காக நடக்கும். இல்லையேல் தடுமாற்றம் உண்டாகும். மநுபகவான்—

3

ஊர்த்வம் பிராணு உத்க்ராமந்தி யூநஸ்த்தவிர ஆகதே
பிரத்யுத்தாநாபிவாதாப்யாம் புநஸ்தாந் பிரத்யுபபத்யதே !!

யாரிடமாவது வயதிலேயோ, கல்வியிலேயோ அதிகமானவர் வருவாரானால் அவருக்கு வணக்கம் தெரிவிப்பதற்காக இளையவர்பிராணன் மேல்நோக்கி வருகின்றது. வந்து வணக்கத்தை தெரிவித்துவிட்டு தனது ஸ்தானத்தில் அமர்ந்துவிடுகிறது என்று மநு கூறுகின்றார்.

ஏதத் யோ வேத நிஹிதம் குகாயாம்—சிங்கம் குகையில் வசிக்கிறது. சீரிய ஆன்மா இதயகுகையில் வசிக்கின்றது. குகை—மறைவான இடம். ஒரு ஞானம் இந்திரிய வாயிலாக வருகிறது. சிலபொருள்கள் மனதினால் அறியப்படுகின்றன. ஆயிரம் ஆயிரம் தொனி மண்டலத்தில் ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். அவன் பரமாத்மா. ச அவித்யா கிரந்தி விகிரதீஹ — அந்த பரமாத்மாவை எவன் அறிகிறானோ, அவனது அஞ்ஞானம் அழிந்துவிடுகின்றது. ஒருமுறை நாங்கள் நான்குபேர்கள் ஒரு தோணியில் ஏறி அக்கரை சென்றோம். செல்லும் வழியில் நண்பன் ஒருவன் தன் மேலே கிடந்த துண்டை முடுச்சப் போட்டுக்கொண்டே வந்தான். நான் அதைப் படக்கென்று இழுத்தேன். முடுச்சுக்கள்

அனைத்தும் அவிழ்ந்தன. உண்மையில் முடுச்சு விழவே யில்லை.

அவித்யா கிரந்தி — அறியாமையால் எந்தப்பொருள் தோற்றுகிறதோ அது உண்மையில் இல்லவேயில்லை. அறிவால் எது அழியுமோ அது உண்டாகவேயில்லை. இது நியமம். எப்பொழுது அகண்ட அத்வைத வஸ்து மட்டும் இருக்கிறதோ அதில் (கிரந்தி) முடுச்சு எங்ஙனம் பொருந்தும்? பொருந்தாதல்லவா. கருமம், யோகம், உபாசனை யிவைகளால் அவித்தையழிகிறதில்லை. எப்பொழுது சொரூபஞானம் உதிக்கிறதோ அப்பொழுது அக்ஞான முடுச்சு தானுக விலகுகின்றது. தனது அறியாமையால் வருகின்ற அவித்யாமுடுச்சு தனது அறிவால் நீங்குகிறது.

ஏதத் யோ வேத — இவ்வார்த்தையை ஞானிகள் ஏன் மொழிகிறுர்கள்? அவர்களுக்காக அவர்கள் சொல்லவில்லை. பின்னை, அதிகாரிக்காக அருளுகின்றனர். எங்ஙனம் வேதியருக்கு யாகத்தில் சோமபானஞ் செய்த பின்னர் ஆனந்தம் வருகிறதோ அங்ஙனம் ஞானிக்கு அதிகாரிக்குத்தத்வ ஞானம் சொல்வதால் ஆனந்தம் உண்டாகிறது. புருஷ சூக்தத்தில் சுருதி சொல்கிறது—புருஷ ஏவேதம் சர்வம் யத்பூதம் யச்சபாவ்யம் உத அமிர்தத்வேஷாந்நோ யதந்நே நாதி ரோஹதி !!

புருஷன் யார்? மேலான அமிர்தம். இதை எவன் தனது இதயகுகையில் துவம்பதார்த்தவடிவமாக அறிகிறுனே அவன் பிரஹ்மரூபமாக ஆகின்றுன். "பரம் அமிர்தம் அஹமேவ யோ வேத" ச. பா. மேலான அமிர்தம் நான் என்று எவன் அறிகிறுனே அவனது அறியாமை நீங்குகின்றது என்பது சங்கரபாஷ்யம். துவம் பதார்த்த ஞானத்தினுல் அறியாமை அகல்கின்றது. அக்ஞானமுடிச்சு நாசமாகின்றது. முடிச்சு உண்மையாக இருந்தால் வெளிச்சத்தில்

அவிழ்க்கவேண்டும். வெளிச்சமில்லாமலும் அவிழ்க்காமலும் நீங்காது. அதையவிழ்ப்பதற்காக ஞானமும் கருமமும் வேண்டும். இதை கருமசமுச்சயம் என்பர். முடிச்சு பொய்யாக இருக்குமானால் வெளிச்சமும் தேவையில்லை, அவிழ்ப்பது என்னும் வினையும் தேவையில்லை. கிரந்தி பொய்யென்று உணர்ந்தால் போதும்.

ஜடச்சேதனத்திற்குள்ள முடிச்சுகாணப்படினும் உண்மை யில்லை. அவித்யாகிரந்தி வாசனாபூர்த்தி. வாசனையை நிறைவேற்றுவதற்கு அல்லது அழிப்பதற்கு முயற்சி வேண் டும். முயற்சியால் மனிதன் உயற்சியைப் பெறுகிறான். இவ் வுலகில் கருமம், யோகம், உபாசனை, மெய்யான முடிச்சை யகற்றும், ஆனால் ஈண்டு முடிச்சு பொய், ஆகையால் மேற் கூறியவைகளுக்கு அவசியமில்லை. அக்ஞானத்திற்கு அந் நியமாக முடிச்சு இல்லாததால் மெய்ஞ்ஞானத்தால் நீங்கும். கருமம், யோகம், முதலியவை வாசனையை நிறைவேற்றாது, வாசனையைப் போக்கவுஞ்செய்யாது. இவை கர்த்தாவின் எண்ணப்படி பலனையளிக்கின்றன. தத்வஞானம் வாசனையை நிறைவேற்றுகிறதுமில்லை, அழிக்கிறதுமில்லை. பின்னை, உண்மையையுரைக்கின்றது. பிரஹ்மத்தைப் பிரகாசிக்கச் செய்கின்றது. மெய்ப்பொருளை விளக்குவதால் பொய்யான முடிச்சு இயல்பாக நீங்குகின்றது. கிரந்தியென்னும் மயக்கம் தொலைகிறது, ம. 10.

இரண்டாவது முண்டகத்தின் முதலாவது கண்டம் முற்றிற்று.

# இரண்டாவது முண்டகத்தின் இரண்டாவது கண்டம்

தொடர்ச்சி

தத்வஞானத்தால் பிறப்பும், இறப்பும், இன்பமும், துன்பமும் நீங்குகின்றன என்று நிரம்பப்பேர்கள் கேள்வியுறுகின்றனர். இரண்டற்ற ஒரு பிரஹ்மம் இருக்கிறது. அது நமது வடிவம் என்றும் சொல்லுகிறார்கள். இந்நிலையவர்கள் உள்ளத்தில் நிலைத்திருக்கிறதில்லை. காரணம் என்னை? தடை. பிரதிபந்தம் எது? தெரியாமலே நாம் நமதுள்ளத்தில் வேண்டாத வாசனைகளை நிரப்பி வைத்திருக்கிறோம் அதை விடவிரும்புகிறதில்லை. விடவும் முடிகிறதில்லை. ''ஒரு நாமம் ஒருருபம் ஒன்றுமில்லாருக்கு'' திருவாசகம். உண்மையில் இறைவனுக்கு எவ்வுருவமும், எந்நாமமும் இல்லை. இறைவனுக்கும் இனிய ஞானிக்கும் நாமமும் உருவமுமில்லை. ''ஊர் வேண்டேன் பேர்வேண்டேன்'' திருவாசகம். ஊரையும் விரும்பவில்லை, பேரையும் விரும்பவில்லையென்பது மணிவாசகத்தின் பொருள்.

சைவர்கள் சிவம் என்கின்றனர். வைணவர்கள் விஷ்ணு என்றும், காணுபத்தியர் கணபதியென்றும், கௌமாரர்கள் குமரனென்றும், சாக்தர்கள் சக்தியென்றும், சௌரர்கள் சூரியனென்றும், பல்வேறு மக்கள் பல்வேறு விதமான நாமங்களைக் கற்பனை செய்கின்றனர். ஆரியசமாஜீகள் அதையடைவதற்கு ஓமம் செய்கின்றனர். இஸ்லாமிகள் தொழுகை நடத்துகின்றனர்.

இவர்கள் அனைவரும் அவர்அவர்கள் வாசனுநுசாரம் நாங்கள் சொல்வதுதான் மெய் நீங்கள் சொல்வது பொய் என்கின்றனர். இந்த வாசனைதான் தடை. இதையகற்ற வேண்டும். இதற்காகப் பரமாத்ம தியானஞ் செய்யவேண்டும். தியானம் ஞானத்திற்குச் சாதனம் அன்று. பின்னை? அது வாசனையைப் போக்குவதற்குச் சாதனம். தடையை

யகற்றுவதற்கு இறைவனையெப்படி தியானம் பண்ணவேண்டும் என்பதற்குப் பதில்—

3
ஆவி : சந்நிஹிதம் குஹாசரம் நாம
3
மஹத்பதம் அத்ர ஏதத்சமர்பிதம்
1 3 2
ஏஜத் ப்ராணந் நிமிஷத் ச யதேதத் ஜாநத சதசத்
வரேண்யம் பரம் விக்ஞானத் யத் வரிஷ்டம் பிரஜாநாம்!! (1)

இந்தப் பிரஹ்மம் பிரகாசவடிவம். எல்லோருடைய இதயத்திலும் வசிக்கின்றது. மகத்பதம் என்று இதற்குப் பெயர். இதில் அலைகின்ற பிராணனும், பிராணனை தாரணை செய்யும் பொருளும், உன்னிமிஷம், நிமிஷம் செய்யும் வஸ்துவும், ஆன்மாவில் பற்றியிருக்கின்றன. இதை சத்தென்றும், அசத்தென்றும், விரும்பத்தக்கதென்றும், விக்ஞானத்திற்கு வேறென்றும் தெரிந்துகொள்.

ஆவி : சந்நிஹிதம் — வெளிப்படுவது. பரோக்ஷமில்லை. இதையடைவதற்கு வெகுதூரஞ் செல்லவேண்டுவதில்லை. ஆன்மாவையடைய முடியுமா என்று ஐயங்கொள்ளாதே. உடனே பெறுவதற்கு உறுதியாக இருக்கிறது.

ஆவி :— ஒளிவடிவம். ஞானக்களஞ்சியம். உன்னுடைய இதயத்தின் உள்ளும் புறமும் ஒளிமயமான ஆன்மா மிளிர்கின்றது. அதனால் உனது காதில் ஒலியாகவும், கண்ணில் உருவமாகவும், மூக்கில் மணமாகவும், நாக்கில் இரசமாகவும், தோலில் ஸ்பர்சமாகவும் ஆகிவிடுகிறது.

சந்நிஹிதம்— முற்றிலும் சமீபமாக இருக்கிறது. அது நாக்குக்குப் பின்னிருந்து பேசுகின்றது. கண்ணுக்குப் பின்னிருந்து உருவத்தைக் காண்கிறது. எல்லா பொறிகளுக்கும் பின்னிருந்துகொண்டு அதனதன் தொழில்களை யிதுவே செய்கின்றது. அது இது என்பது ஆன்மாவை. ''சப்தாதி

உபலபமாநவத்பாசத" விஷயங்களை யநுபவிப்பது போலக் காணப்படுகிறது. சிலருக்கு உடல் கனமாகவும், சிலருக்கு ஒல்லியாகவும், சிலருக்கு உயரமாகவும், சிலருக்குக் குட்டையாகவும் இருக்கிறது. இவ்வுடம்புக்குள் இருக்கும் இறைவன் ஐந்து பொறிகள் வடிவமாயிருந்துகொண்டு விஷயங்களையும், கருமேந்திரிய வாயிலாகக் கருமங்களையும், மனதினுல் எண்ணங்களையும், புத்தியினுல் விசாரத்தையும் கொள்கின்ருன். பொறிகள் சுஷுப்த்தியில் தனது துணைவனேடு துயில்கின்றன. அப்போது இவ்விஸ்வம் முழுவதும் அவ்வாத்மாவில் அடங்கியிருக்கின்றது. இதற்குச் சமர்ப்பணம் என்று பெயர்.

ஒரு மனிதன் நிரம்ப பஜனை பண்ணினுன். இறைவன் அவனுக்குத் தெரிசனங் கொடுக்கவந்தார். ஆனுல் அவனைக் காணவில்லை. அவனைக் காணுததால் இறைவனது தெரிசனமும் கிட்டவில்லை. ஒருவன் நிராகார பரமாத்மாவைத் தியானஞ் செய்கிருன். அவனது தியானத்தில் ஈசுவரன் வந்தான். தியானத்தில் வந்த ஈசுவரன் உண்மையல்ல. எவன் தியானஞ்செய்கின்ருனே அவன் ஈசுவரன். தியான விருத்தியில் எந்த ஈசுவரன் வருகிருனே, அவனையறிபவன் நான்.

இந்நிலையில் சிருஷ்டியை விசாரம் பண்ணு. ஆக்கல், காத்தல், அழித்தல் இவைகளையறிபவன் யார்? எவன் அறிகிருனே அவனிடத்தில் அகிலமும் அடங்கியிருக்கின்றன. இதனுல் ஏதத் பிராணன் நிமிஷச்ச — என்று சொல்லப்படுகிறது. இதில் பறவை பறக்கின்றது, பிராணனும் அபானனும் சஞ்சரிக்கின்றன, இமையின் நிமேஷம் உன்மேஷம் அசைகின்றன. கண்ணின் இமைகள் அசைவது நிமேஷம் உன்மேஷம் எனப்படும். யஸ்ச அநேஜத் அப்ராணுன் நிமிஷச்ச — எது இயங்கவில்லையோ, இமைகள் அசையாமல் இருக்கின்றனவோ அவையனைத்தும் உள்ளத்தில் இருக்கும்

ஒள்ளிய ஆன்மாவில் ஒளித்திருக்கின்றன. ''யதாஸ்பதம் சர்வம்'' எந்த அதிஷ்டானத்தில் எல்லாம் இருக்கின் றனவோ அதையறி. அதுதான் உனது வடிவம். ஏன் எனின் ஆன்மா இல்லாமல் எதையும் அறிய இயலாது.

சதசத்வரேண்யம்—எத்தனை ஸ்தூலம், சூக்குமம், மூர்த் தம். அமூர்த்தமாக உள்ள பொருள்கள் இருக்கின்றனவோ, அவையனைத்தும் உனது வடிவமே. ஏனெனின், நீயில்லாது போனால் உலகம் இருக்கிறதே தெரியாது. எவனுக்கு உலகம் தெரியுமோ அவனுக்கு அறிவு நிரம்பியிருக்கிறது. அவன் அறிவு சொரூபன். அவன் வரேண்யன். அவனை நாம் வாழ்க்கைத்துணைவனாகக் கொள்ளவேண்டும். வரேண்யன்— விரும்பத்தக்கவன். அவன்—ஆன்மா. ஒரு காதலி தான் விரும்பிய காதலனையடைய இரவும் பகலும் முயற்சிக்கின் றாள். அம்முயற்சி அவளுக்கு அவனையளிக்கின்றது. அது போல் நீயும் அவ்வரேண்ய ஆன்மாவையடைய அயராது முயற்சிசெய். முயற்சி உனக்கு உயற்சியைத் தரும்.

பிரஜா—இந்திரியங்களுக்கு எத்தனை ஞானம், விக்ஞானம் உண்டாகின்றனவோ, அதிலிருந்து அது வேறு அது— ஆன்மா. பிரஜானாம் விக்ஞானாத் யத்வரிஷ்டம்—இந்திரி யங்களுக்கு எது விளங்குகின்றதோ அது உண்மையில் இல்லை. பொறிகள் தங்களுடைய வாசனையை நிறைவேற்று கின்றன. வாசனாபூர்த்தி இருவகைத்து. சம்சாரிகள் பொறி கள் வாயிலாக புலன்களை நுகர்ந்து வாசனையை நிறைவேற்று கிறார்கள், சாதகன் மனதில் எண்ணியெண்ணி நிறைவேற்று கிறான். ஒரு மகான் அடிக்கடி சொல்லுவார் ஏழு விஷயங் களை விட்டுவிடு என்று. அவை—சுவை, ஒளி, ஊர், ஓசை, நாற்றம், சுகம், துக்கம். இவ்வேழும் விட்டபின்பு எது மிச்சமிருக்கிறதோ அது நீயாயிருக்கிறாய்.

இதனால் என்ன தெரிகிறது? பொறிகளையும் அந்தக் கரணத்தையும் விட்டுவிடவேண்டுமென்பது புலனாகின்றது.

தூலசரீரம் தோலால் ஆக்கப்பட்ட ஒரு சட்டை. பொறிகள் நீங்கிவிட்டால், புலன்களும் தானுக நீங்கிவிடும். இன்ப துன்பம் விலகிவிட்டால் மனமும், புத்தியும் விலகிவிடும். எஞ்சியிருப்பது சாட்சி. அதை காலம் கட்டாது, தேசம் வளையாது.

பிரஜாநாம்—பிரஜாயந்தே இதி பிரஜா: பிரஜையென்பது இந்திரியம். இந்திரியம் வேறு, பரமாத்மஞானம் வேறு. பரமபதம் விக்ஞானமில்லே, தத்வஞானம். விஷய வாசனையை உண்டுபண்ணுவது பொறிகள். அனுபவிப்பது மனம். ஞானம் அதைக் கெடுக்கும். வளர்பிறையில் அமுதம் நிறைகிறது, தேய்பிறையில் குறைகிறது. கேள்வியால் அறிவு வளரும், கேள்வியின்மையால் அது குறையும். அது — அறிவு. அதனல் ''கேள்வி முயல்'' என்ருர் பாட்டி. ''கற்றணைத் தூறும் அறிவு'' என்பது பொய்யாமொழி. பொருள்வெளி.

சம்சாரபந்தம் என்பது என்னே? நமக்குத் தெரியாத மனிதனுக்கு நோய் வந்தால் நமக்கு துன்பம் உண்டாகிற தில்லே. தெரிந்த மனிதனுக்கு நோய் வந்தால் நமக்கு நோவு உண்டாகிறது. இத்துயரம் தெரிந்ததனல் உண்டாகிறது. இதுதான் சம்சாரபந்தம். உலகத்தை யெவ்வளவு தெரிய விரும்புகிருேமோ அவ்வளவு தொல்லேயுண்டாகும். உலகத்தோடு மிக உறவாடாதே. காசியில் பல குளிக்கின்ற துறையிருக்கின்றன. அவைகளில் மணிகர்ணிகாக்கட்டம் என்று ஒன்றிருக்கிறது. அங்கு இரவும் பகலும் பிணங்கள் வெந்துகொண்டேயிருக்கும்.

கச்சௌடிகல்லி என்பது ஒரு அங்காடி. சிலநாள் நாங்கள் பல நண்பர்களோடு அங்கு வந்து பூரிகச்சௌடி வாங்கிக் கொண்டு மணிகர்ணிகாகட்டமென்னும் துறைக்கு வருவோம். அந்தத்தெருவும் நேராக அங்குதான் வருகிறது. நாங்கள் பூரியைத் தின்றுகொண்டேயிருப்போம். பிணங்கள்

அங்கிங்குமாக வந்துகொண்டேயிருக்கும். எங்களுக்குக் கவலை வருவதில்லை. ஆனால் எனக்குத் தெரிந்தவர்கள் சவம் வந்தால் துயரம் உண்டாகும். இதனால் இந்திரிய ஞானம் அல்லது மனோ விக்ஞானந்தான் துன்பத்திற்குக் காரணம். இவைகளை விட்டுவிட்டு சிறந்த ஆன்மாவாக இரு.

எது நமக்கு முற்றிலும் விருப்பமாக இருக்கிறதோ அதை யறிய விரும்பு. விவாகம் நிச்சயமாகிவிட்டது. ஆனால் விவாகம் நடக்கவில்லை. பையன் இறந்துவிட்டான். பெண் வீட்டுக்காரர்கள் பேசினார்கள் — நல்லவேளை பகவான் காப்பாற்றினாரென்று. கல்யாணஞ் செய்த பின்னர் இறந் திருந்தால் நமது புதல்விக்கு என்ன நேர்ந்திருக்கும் என்ற னர். நான்குநாள்தான் இடைவெளி. நான்குநாளைக்குப் பின்னால் இறந்தால் துன்பம், நான்கு நாளைக்கு முன்னிறந்த தால் துன்பமில்லை. இத்துன்பம் இறைவன் தரவில்லை. பின்னை? சம்பந்தத்தினால் வந்தது. சம்பந்தம் மனதில் இருக்கிறது. ஞானிகள் இத்துன்பத்தை நீக்குகின்றனர்.

வரிஷ்ட்ட:— இதற்குப் பொருள் பதி—தலைவன். சகுண பிரஹ்மம். வரதமம் — தனது சொந்தவடிவம். இது பரப்பிரமமும் பரமாத்மாவும் ஆம். பொறிபுலன்களுக்கு அப்பால் உள்ளது. தத்ஜாநத—அதையறி. இதுவே ஆத் மானு சந்தானம். ஆத்மானுசந்தானம் இறைவனைப் பெறு வதற்கு இனிய மார்க்கம். (1)

## தொடர்ச்சி

முந்திய மந்திரத்தில் துவம்பதத்தை முன்வைத்து பிரஹ்மவிசாரம் பண்ணப்பட்டது. இந்த மந்திரத்தில் தத் பதத்தை முன்னைவைத்து பரமாத்மவிசாரஞ் செய்யப்படு கிறது. இறைவனை யிவ்வாறு நினைக்கவேண்டும் இவ்வாறு அவனையடையவேண்டும் என்று சுருதி சொல்லுகின்றது—

A. No. 23587



2—வது மந்திரம்.

4
யத்அர்ச்சிமத் யதஅணுப்யோ அணுச
யஸ்மிந்லோகா நிஹிதா லோகிநஸ்ச !
தத் ஏதத் அக்ஷரம் பிரஹ்ம ஸ பிராண : ததுவாங்மந :
தத் ஏதத் சத்யம் தத் அமிருதம்
4 4
தத் வேத்தவ்யம் சோம்யவித்தி !! ம. 2.

எது ஒளிமயமோ, அணுவிலும் அணுவோ எதில் சகல உலகங்களும், உலகவாசிகளும் வசிக்கின்றார்களோ, அது தான் அக்ஷரபிரஹ்மம். அது பிராணன். அது வாக்கு, மனம், அதுவே சத்யம், அமுதமும் அதுதான். ஹே சோம்ய! அதையறிவாயாக, அதுதான் அடையத்தக்கது.

சோம்ய ! நீதான் ஆகாசத்தில் உள்ள சந்திரனைப்போல இனிமையாக இருக்கின்றாய். குழந்தாய் ! உலகத்தில் உனக்கு எப்பொருள் பிரியமாக இருக்கிறதோ அதை விலை கொடுத்து வாங்குகிறாய். அதில் யான் எனது என்னும் அகந்தை மமதையைச் செலுத்துகின்றாய். ஆடைகளைக் கண்டாலும், அணிகலங்களைக் கண்டாலும், சில்வர் பாத்திரங்களைக் கண்டாலும் ஆவல்கொண்டு விலைகொடுத்து வாங்கி வீட்டில் நிரப்புகின்றாய். சோமன் பிரியமாயிருக்கிறான், ஆனால் அவனை நாம் நமது என்று யாரும் அபிமானிக்கிற தில்லை. சோமன்—சந்திரன். ஞானி தன்னுடைய சிஷ்யனை சோமன் என்கின்றான். அன்பனேயென்கின்றான். ஆனால் யான் எனது என்று அகந்தை மமதை கயிற்றால் கட்டுகிற தில்லை.

பலத்தை விரும்பி செய்கின்ற வினைக்குப்பலன் சுவர்க்கம். பயனைக்கருதாது செய்யும் வினைக்குப்பலன் பிரஹ்மலோக முதலிய உலகங்கள் பல. இத்தனையுலகமும் எதில் அடங்கியிருக்கின்றனவோ (யஸ்மின்) உலகமும் உலகத்தில் வாழும் உயிரினங்களும் எந்த ஆன்மாவின்கண் மறைந்திருக்கின்

றனவோ அந்த ஆன்மாவில் அனைத்தும் மறைந்திருக்கின்றன. எவ்வாறு ஆகாசத்தில் நக்ஷத்ரம், கிரஹம், உபகிரஹம், ராக்கெட்டு முதலியவை அடங்கியிருக்கின்றனவோ அவ்வாறு ஆன்மாவின்கண் அனைத்துலகமும் விலீனமாயிருக்கின்றன.

தத் எதத் அக்ஷரம் பிரஹ்ம — ஆன்மாவே யக்ஷரம் பிரஹ்மம். 'சப்ராணவாங்மன:' அதுவே பிராணன். அது சைதன்யம். தத்ஏதத் சத்யம் அமிருதம்—அதுவே சத்யம். அதுவே அமுதம். ஆன்மா அவிநாசியென்பது பொருள். தத்வேத்தவ்யம். அதனிடத்தில் குறியை வைக்கவேண்டும். அதைத்தான் தமக்கு லக்ஷியம் என்று எண்ணவேண்டும். மகாபாரதத்தில் ஒரு இதிகாசம்—ஆசாரியர்துரோணரிடம் கௌரவர்களும், பாண்டவர்களும் வில்வித்தையைக் கற்று முடிந்தாகிவிட்டது. அவர்களைப் பரீக்ஷிக்கும்பொருட்டு ஒரு நாள் ஆசான் மரத்தின் நுனியில் ஒரு பறவையை காஷ்டத்தால் செய்துவைத்து துரியோதனனையழைத்து—அருமை மாணிக்கமே யிக்குறியை அடிப்பாயாக என்றார் ஆசாரியர். அவன் வில்லில் நாணைப்பூட்டி அடிக்கும் நேரம் ஆசான்—துரியோதனா! மரத்தில் உனக்கு என்ன தெரிகிறதென்றார். அவன்—தாங்களும், மரமும், பறவையும் தெரிகிறதென்றான். ஆசான்—கழுதை வில்லைக் கீழேவையென்றார். தருமர் வில்லையெடுத்தார். அப்போதும் அதே கேள்வியைக் கேட்டார். தருமர் — பறவை தெரிகிறதென்றார். அவரையும் வில்லைக் கீழேவை யென்றார். முடிவில் விஜயன் வில்லையெடுத்தான். ஆசான்—அருஜுனா! என்ன தெரிகிறது? பார்த்தன்—ஐயா! பறவையின் கண்மட்டும் தெரிகிறதென்றான். ஆசான்—லக்ஷியத்தையடிக்க அநுமதி வழங்கினார். உடனே பால்குனன் பறவையை அடித்தான்.

எதுவரை உனக்கு ஸ்தூலம், சூக்குமம், காரணம் இம் மூன்று தேகமும் தெரியுமோ அதுவரை குறியில் பார்வை

யிராது. எப்பொழுது லக்ஷியத்தில் உனது பார்வை (குறியில்) இருக்குமோ அப்பொழுது லக்ஷியத்தையடிக்க முடியும். கண்ணுடியைப் பார்த்து நீ என்ன சொல்கின்ருய்? என் முகம் கண்ணுடிக்குள் இருக்கிறதென்கின்ருய். இது மதிஹீனம். நீ கண்ணுடிக்குள் இல்லை, பின்னே? நீ கண்ணுடிக்குப் புறம்பாக இருந்து கண்ணுடியைப் பார்க்கின்ருய். தேச, கால, வஸ்து ஆபாச சகிதம் தர்ப்பணத்தைப் பார்க்கின்ருய்.

வாக்கும், மனமும், பிராணனும், ஆன்மாவே. கோடி கோடி பிரமாண்டங்களுக்கும் அதுதான் இருப்பிடம். அது பரமாத்மா. அதையறி. அது நாம் பெறவேண்டிய பேறு. ம.2

தொடர்ச்சி

அந்த லக்ஷியத்தை யடிக்கவேண்டும் என்று முந்திய மந்திரத்தில் சொல்லப்பட்டது. இனிவரும் மந்திரங்கள் எப்படி யடிக்கவேண்டும் என்பதை மொழிகின்றன.

4 3
தநுர் கிருஹீத்வா ஔப நிஷதம் மகாஸ்த்ரம்
4
ஸரம் ஹி உபாசா நிசிதம் சந்தயீத !
4 3 1
ஆயம்ய தத் பாவகதேந சேதசா
3 4
லக்ஷ்யம் ததேவ அக்ஷரம் சோம்ய வித்தி. 3

ஹே சோம்ய ! உபநிஷத்ரூப பெரிய வில்லைக்கொண்டு யுபாசனை வாயிலாகக் கணைகளை கூர்மைசெய்து தொடுத்து தன்வயமாக இழுத்து அதை நினைந்து அக்ஷர வடிவ ஆன்மாவைக் குறிவைத்து அடிக்கவேண்டும். சோம்ய! சோமன் மனதிற்குத் தேவதை வடிவ சந்தரன். நீயும் சோம வடிவ மனதோடு இணைந்திருக்கின்ருய். உனது மனம் உன் வயமாக இருக்கிறது, அதை இங்கும் அங்குமாகத் திரிய விடாதே. இவ்வுலகம் நஸ்வரம். இதில் மனதை வைக்காதே. நமது லக்ஷியத்தில் மனதை வை.

ஔபநிஷதம் தநுர் கிரஹீத்வா — ஔபநிஷதம் — ஓங்காரம். உபநிஷத்தில் பரமாத்மாவை தியானம் பண்ணுவதற்காக என்ன கூறப்பட்டிருக்கிறதோ அது ''ஓம் இத்யாத்மானம் யுஞ்ஜீத'' ஓம்காரத்தில் மனதை வையென்பது பொருள்.

தேகத்தில் ஓம்காரம் மூன்று வடிவமாக இருக்கிறது. நமது கால் ஓங்காரத்தில் உள்ள கால். நமது உடம்பு ஓங்காரத்திற்குள்ள உடம்பு. நமது தலை ஓங்காரத்தில் உள்ள கொம்பு. இதுதான் மூன்று வடிவம். ஓங்காரத்தில் உள்ள அகாரத்திற்கு மூன்று கோணம். உகாரத்தின் மாத்திரை. மகாரத்தின் அநுநாசிகை. சந்த்ர பிந்து தனுஷ்.

மகாஸ்த்ரம் — பாசமாம் பற்றறுக்கும் பாவனவாள். வாள், சூலம், ஈட்டி முதலியவை கையிலிருந்து பகைவரைக் கொல்லும் படைகள் ஸஸ்த்ரம் என்றும் அமர்வீரர் அருளுவர். பாணம், குண்டு, ஏவுகணை முதலியவை அஸ்த்திரம் என்று சமர் அறிஞர் சாற்றுவர். அஸ்த்ரம் — அஸ் — க்ஷேபே என்றும் தாதுவிலிருந்து வந்த சொல் அஸ்த்ரம். பிரணவம் அஸ்த்ரம். பிரணவம் — ஓங்காரம். உபாசாநிஹிதம் — ஜீவன் பாணம். எங்ஙனம் பாணம் கூர்மை செய்யப்படுகிறதோ அங்ஙனம் ஜீவன் தனது அந்தக்கரணத்தை முதற்கண் தூய்மைப் படுத்தவேண்டும். தூய்மை செய்வதற்கு நெறி உபாசனை. ''உபாசீத'' உபாசனை பண்ணு. விசுவன், தைஜசன், இவர் இருவரும் வில். இது கையிலிருக்கும் பிரக்ஞன் ஜீவன். ஜீவனென்னும் பாணத்தைத் துரியவடிவ பரமாத்மாவில் படும்படி செய்யவேண்டும்.

ஆயம்ய தத் — பாணவடிவ ஜீவனை விஷயத்திலிருந்து இழுத்து—ஏன் இழுக்கவேண்டும்? ஜீவரூபீ பாணம் விஷயத்தில் பற்றியிருக்கின்றது. அதனால் அங்கிருந்து இழுக்க வேண்டும் என்பது பொருள். பொருமையோடு பொறிகளிலிருந்தும், புலன்களிலிருந்தும் ஆத்மாவின்கண் இழுப்பது

தான் வில்லில் நாணை இழுப்பது. பரமபதத்தில் சித்தத்தை வைப்பதே ஜீவனை பிரஹ்மபதத்தில் வைப்பது. பரமாத்வை யாரென்று உணர். ''ஆத்மானம் ஜானத'' ம. 3

தொடர்ச்சி

மேலே மொழிந்த விஷயத்தைச் சுருதி தெளிவாக இம் மந்திரத்தில் மொழிகின்றது. பிரமாதம் என்னது? நாம் ஞானியென்னும் அபிமானந்தான் பிரமாதம். ஒரு அடியவர் ஒருவனை என்னிடம் மூன்று ஆண்டு இரு என்றார். நான் உனக்குப் பிரமாணபத்ரம் தருகிறேன் என்றார். அவன் — ஐயா! எனக்கு அதிகார்ரி என்பதற்குப் பட்டந்தருகிறீரா, அல்லது சித்தன் என்பதற்கு தருகிறீரா என்றான் மகாத்மா—நீ சாதகன் என்பதற்குப் பட்டம் தருகிறேன் என்றார். அவன்— ஐயா ! நான் அதிகாரியாகத்தான் இருக்கிறேன் என்றான். என்னை சித்தனாக ஆக்கினால் உம்மிடம் மூன்று வருடமில்லை முழு ஆயுளும் இருக்கிறேன் என்றான். மகாத்மா, சித்தனுக்குப் பிரமாணபத்திரம் தேவையில்லையென்றார். ஞானம் வந்த பின்பு உலகத்தவர்கள் நம்மை ஞானியென்று சொல்ல வேண்டும் என்று எண்ணுவதே பிரமாதம். இதை இம் மந்திரம் கூறுகின்றது.

4

பிரணவோ தநு : ஸரோஹி யாத்மா
பிரஹ்ம தத் லக்ஷ்யம் உச்யதே.
4
அப்ரமத்தேந வேத்தவ்யம்
4
சரவத்தந்மயோ பவேத் 4.

பிரணவம் வில். ஆத்மாபாணம். லக்ஷ்யம் பிரஹ்மம் என்று சொல்லப்படுகிறது. சாவதானமாகக் குறியை அடிக்க வேண்டும். அதனுல் கணையில் கண் வைத்திருக்கவேண்டும்.

ஓங்காரம் வில், ஆன்மாகணை, பரப்பிரஹ்மம் லக்ஷயம். இதில் ஆன்மாவை வேறு எங்கேயும் எறியவேண்டாம். சிறிது

சிந்தித்து செயல்படவேண்டும். சிந்திப்பது என்னை? ஆன்மா தான் பரமாத்மா. எதை ஆன்மாவென்று அறிந்தோமோ அதை பரமாத்மா என்று அறியவேண்டும்

அப்ரமத்தேந — பிரமத்தம் — விஷய விருப்பு. இனிய விஷயங்களை யினிது துய்க்கவேண்டும் என்னும் மிகுந்த வேட்கை. இவையினின்று விரக்தியை அடைவது அப்ரமத்தம். பொறிபுலன்களை ஒருமைப் படுத்திய உணர்வால் விரும்பிய ஆன்மாவையடைய வேண்டும் என்பது கருத்து. சரவத்தன்மயோ பவேத் — குடத்துநீர்குளத்துநீரோடு கலந்து கொள்வதுபோல் ஜீவான்மா பரமான்மாவோடு கலந்து கொள்வது. இரண்டும் ஒன்று என்ற உணர்வுவுதிப்பதுதான். தேகான்ம உணர்வு நீங்கி நான் பிரஹ்மம் என்று எண்ணம் உதிப்பதே பல வடிவ முக்தியாகும்.

பிரணவோதனு : — இந்த வில் அந்தக்கரண அவச்சின்ன ஆத்மாவை பிரஹ்மத்தோடு சேர்ப்பிப்பதற்கு துணை புரிகின்றது. சரோஹியாத்மா — இந்த அம்பு வெளியில் இல்லை. தனது உள்ளேயிருக்கிறது. எவன் விருத்திவாயிலாக ஆன்மாவையறிய ஆசைப்படுகிறானோ அவனுக்கு அதிக கிலேசம் உண்டாகும். விருத்தி இரு கூறு. ஒன்று பிரவிருத்தி மற்றொன்று ஆலயம். பெண்டு, பிள்ளை, கணவன், பசு, பறவை, கடம், படம் முதலியவை இதம் விருத்திவிக்ஞானம். நான்துக்கி, நான் சுகி என்னும் அகம் விருத்தி, ஆலயவிக்ஞானம். அகம் இல்லாமல் இதமில்லை. எல்லாப் பொருள்களுக்கும் அறம்—நான் என்பது ஆலயமாகும்.

நான் கர்த்தா. போக்தா, சுகி, துக்கி, பாவி, புண்ணியாத்மா என்னும் வடிவத்தில் பரிச்சின்னம் காணப்படுகிறதே அது கற்பிதம். பொய். பரிச்சின்னத்திற்கு அதிஷ்டானம் எதுவோ அது பிரஹ்மச்சேதன்ம். நான் என்பது இரு வகைத்து. ஒன்று உபாதியோடு கூடியது, அசுத்தம். மற்

றென்று நிருபாதிகம். சுத்தம். சோபாதிகம் பாணம். நிருபாதிகம் லக்ஷ்யம். அப்ரமத்தேந வேத்தவ்யம்—நாம் துயில்கின்றபோது விருத்திகள் இல்லே. உறக்கத்தில் ஒன்றுமில்லேயென்று எவன் அறிகிறனே அவனுக்கு அறிவில்லே. ஒன்றுமில்லேயென்றல் உறக்கத்தை எங்ஙனம் அறிய இயலும்? இயலாது. விருத்தி இல்லாமல் ஞானம் இருக்கிறதென்பதற்கு உதாரணம் உறக்கந்தான். அங்கு பிரத்யக்ஷம், அநுமானம் முதலிய பிரமாணம் உண்டாகிறதில்லே. அதுபோல் பிரமாணமில்லாமலே நனவையும், கனவையும் அறிபவன் திருஷ்டா. அதுதான் சாக்ஷி. சுருதியிதைஆத்மவடிவமாக அறிவிக்கின்றது.

அப்ரமத்தேந—பிரமாதம் என்னது? இந்திரிய வாயிலாக அல்லது இந்திரிய விருத்தியால் நாம் வெளிவிஷயங்களேயறிகிறோம். அதுபோல் அகண்டாகார விருத்தியைக் கொண்டு பிரஹ்மத்தையறியவேண்டும் என்ற எண்ணம் பிரமாதம். நீ அதுவாக இருக்கும்போது எதையடைய விரும்புகின்றாய்? பிரஹ்மத்தையடைவது என்றல் என்னே? அடையவேண்டும் என்னும் எண்ணத்தை விடுவதுதான். பிரஹ்மஞானமென்றல் என்னே? ஞானத்தைத் தியாகஞ்செய்வது. பிரஹ்மத்தியானம் என்றலென்னே? தியானத்தை விட்டுவிடுவது. இவ்வாறு விவகாரத்தில் நாம் ஜிதேந்திரியனுக இருக்கவேண்டும். தியானத்தில் சித்தம் திறம்பட ஒடுங்கவேண்டும். ஆனல் பிரஹ்மத்தை அனுபவிக்கவேண்டுமென எண்ணலாகாது. தேகாத்மஞானம் பரிச்சின்னம். தேகத்தில் நான் என்னும் ஞானத்தை விட்டு பிரஹ்ம சொரூபத்தில் நிலேத்திரு. இதுவே குறியை அடிப்பதாகும். இதுவே நீ செய்யும் உபாயமாமே. ம. 4

தொடர்ச்சி

ஆத்மதத்வம் மிக வருத்தத்தினல் அடையப்படுகிறது. அடைவதற்கு ஒரேயுபாயம் பிரணவஉபாசனேமட்டுமல்ல.

சிரவணம், மனனம், நிதித்யாசனம் ஆகிய இவைகளும் முக்கிய சாதனமாகும். முக்யசாதனம் என்ருலும், சாக்ஷாத் சாதனமென்ருலும் ஒன்றேயாம். எனவே அந்த ஆன்மாவை அறிவிக்கும் பொருட்டு மந்திரம்—

3

யஸ்மிந் த்யௌ : பிருதிவீ ச அந்தரிக்ஷம்
ஓதம் மந : சஹ பிராணைஸ்ச சர்வை : |
2
தமேவஏகம் ஜாநதஆத்மாநம் அந்யா
2
வாசோ விமுஞ்சத அமிருதஸ்ய ஏஷசேது : 5

எதில் திவிலோகம், பிருதிவீ, அந்தரிக்ஷலோகமும், எல்லாப் பிராணனேடு மனமும் குறுக்கு நெடுக்குமாக இருக்கின்றனவோ, அந்த ஒரு ஆன்மாவைத் தெரிந்துகொள். மற்றைய வார்த்தைகளைப் பேசாதே. இதுவே அமிருதவடிவ ஆன்மாவையடைவதற்கு சேது. சாதனம்.

த்யௌ :— எதில் சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், கிரகம் உபகிரகம் இருக்கின்றனவோ அது திவிலோகம். பிருதிவீ—எதில் மனுடன், பசு, பறவை, நதி, பர்வதம், வனம், உபவனம் முதலியவையிருக்கின்றனவோ அது பூமி. அந்தரிக்ஷம்—இவ்வுலகத்திற்கும் திவிலோகத்திற் தம் இடையில் உள்ள ஆன்மா அந்தரிக்ஷம் எனப்படும். இவையனைத்தும், மனம், பிராணன், பொறிகள், மற்றவைகளும் எதில் அடங்கியிருக்கின்றனவோ அது ஆன்மா. ஓதப் ப்ரோதம்— எங்ஙனம் ஆடையில் நூல் எங்கும் பரவி இருக்கிறதோ அது போல் ஆன்மா அகில உலகத்தில் எங்கும் பிரகாசமாயிருக்கிறது. ஆடையில் நூலைத்தவிர சேலையில்லையோ அதுபோல் ஆன்மாவைத்தவிர அகில உலகமில்லவேயில்லை.

சேலைதனில் நூலதுபோல் செறிந்திருக்கு மான்மாவை மூலைதனில் நான்தேடி முக்திழந்தேன் குருபரனே. குருபரக் கண்ணி. பொருள்வெளி. ஒரு வேந்தன் முந்நிலையில் கியாதி

என்னும் பொருள்பற்றி பல பண்டிதர்கள் விவாதம் பண்ணினர். எந்த வஸ்து எதில் இல்லையோ அந்த வஸ்து அதில் எவ்வாறு தோற்றும். எங்ஙனம் சிப்பியில் வெள்ளிதோற்ற மாட்டாது என்பதுபோல. மற்றொரு வாதி — வேறு இடத்தில் பார்க்கப்பட்ட வெள்ளியின் சம்ஸ்காரம் இதயத்தில் படிந்திருக்கிறது. ஆகையால் சிப்பியில் வெள்ளி தோற்றக்கூடும் என்றனர். இம்மாதிரி சத்கியாதி, அசத்கியாதி, சதசத்கியாதி, அந்நியதாகியாதி, அநிர்வசநீய கியாதியை யேற்று விவாதம் நடந்தது. சத்கியாதிவாதி— சிப்பியில் வெள்ளியுண்டாகிறது என்றான். இவன் வாதம் வெற்றி பெற்றது. மற்றையவாதம் தோல்வியுற்றது.

இப்பிரச்சனை வேந்தன் முந்நிலையில் வைக்கப்பட்டது. அரசன்—பரிசு அவசியம் அளிக்கவேண்டுமென்றான். மன்னன் மந்திரிகளை அழைத்தான். யார் பக்ஷம் வென்றது என்று வினவினன். அமைச்சர்கள் சிப்பியில் வெள்ளியுண்மையாக இருக்கிறதென்றவர் பக்ஷம் வென்றது என்றனர். நிருபன்— அமைச்சரே ! நமது ராஜ்யத்தில் எங்கெங்கே சிப்பியில் வெள்ளியிருக்கிறதோ அவையனைத்தையும் அவர்க்குப் பரிசாக வழங்குங்கள் என்றான். அவையில் சிரிப்பொலி யெழுந்தது.

எண்ணிப்பாருங்கள் அந்த வாதிக்கு என்ன கிடைத்தது. விசாரத்தின் பலன் யாது? பரமாத்மாவில் உலகம் எவ்வாறு தோற்றுகிறது? இறைவன் ஒப்பு உவமையில்லவன். எங்கும் நிறைந்தவன். தூய்மையானவன். என்றும் ஒரு படித்தானவன். அவ்வாறன் ஆன்மாவில் ககனத்தில் கருநிறம்போல கற்பிதமாகத் தோற்றுகின்றது. ககனம்—ஆகாசம். கற்பிதமாகத் தோற்றினும் இறைவனுக்கு வேறன்று.

புவன மூன்றும் பொய்யென்பதற்கு இலக்கணம். ''ஸ்வபாவாதிகரணே பாசமானத்வம் மித்யாத்வம்'' தனது

இன்மை வடிவ அதிகரணத்தில் தனது தோற்றம் பொய் யென்னும் தன்மை. அளவு, சகுணம், சவிசேஷம், சாகாரம், இவையனைத்தும் உருவத்தில் தோன்றுகின்றனவா? அருவத் தில் தோன்றுகின்றனவா? சாகாரத்தில் சாகாரந் தோன்றி ஞல் இரண்டும் உருவமானதால் வேறல்ல. அருவத்தில் உருவம் தோற்றிஞல் வியாகாதம். வியாகாதம் ஒருவித மான குற்றம். எனக்கு நாக்கில்லையென்பதுபோல. ஆகை யால் ஆன்மாவிற்கு அந்நியமாக மேலுலகமோ, பூமியோ, அந்தரிக்ஷமோ, பிராணனோ, மனமோ ஒன்றுமில்லை. இவை யெல்லாம் தனது அதிகரணத்தில் இல்லாமலே தோற்று கின்றன.

தம் ஏகம் ஏவ ஜானத—அந்த ஒன்றையறி. நீ யெல்லா வற்றையும் அறிகின்ருய். ஆனல் ஒன்றையறியவில்லை. பெண், தன்னையலங்காரஞ் செய்யும்போது சேலை என்ன வண்ணத்தில் இருக்குமோ அதே வண்ணத்தில் சட்டை, காதணி, கழுத்தணி, கையணி, முதலிய எல்லா நகைகளும் ஒரேமாதிரியணிகின்ருள். இது நாமத்திலும் வடிவத்திலும் உள்ள நட்பு. மூன்று நண்பர்கள் யாத்திரை சென்றனர். மூன்றுபேர்களும் பால், அரிசி, சர்க்கரைகளைக் கொணர்ந்து பாயாசஞ்செய்தனர். மூவருமருந்தினர். எல்லோர் வயிறும் நிறைந்தது என்றனர்.

பாயாசம் குறைவாகத்தான் இருந்தது. எப்படியெல் லோர்க்கும் வயிறு நிறைந்ததென்று சந்தேகம் வந்தது. மூவரில் ஒருவர் யார் நல்ல சொப்பனம் காண்பாரோ அவர் தான் வயிறு நிரம்பப்பாயாசம் உண்டவரென்று சொன்ஞர். மூவரும் உறங்கினர். காலை வந்தது, கதிரவன் உதித்தான். கண்விழித்தனர் மூவரும். ஒருவர் சொன்ஞர்—நான் ராஜா வாகக் கனவுகண்டேன் என்று. மற்ருெருவர் நான் வைகுண் டத்திற்குப் போயிருந்தேன் பகவான் பத்மநாபன் என்னை வரவேற்ருன் என்ருர். மூன்ருமவன் அழ ஆரம்பித்தான்.

இருவரும் அவன் அழுகைக்குக் காரணம் வினவினர், அவன் —ஐயா நான் துயிலும்போது பிசாசைக்கண்டேன் என்றான். அது என்ன கூறியது என்று இருவரும் கேட்டனர். அவன் — வயிறுநிறைய பாயாசம் சாப்பிடு இல்லையேல் அடித்துவிடுவேன் என்றது. நான் பயந்து பயந்து சகல பாயாசத்தையும் அருந்தினேன். அதனால் வயிறு நிரம்பி விட்டது. அதை நினைந்து அழுகிறேன் என்றான்.

இந்த உலகம் கனவில் உள்ள பாயாசம்போல. தன்னை அரசனாகக் கண்டவனும், தன்னை வைகுண்டத்திற்குச் சென்றவனாகக் கண்டவனும் பலபொருளைக் கண்டவர்கள். மூன்றாமவன் ஒரு பூதத்தைக்கண்டான் பூதம் பூதநாதன். பரமேஸ்வரன். "பூதாநாம்பதயே நமோ நம:" யஜுர் வேதம். அவன் ஒன்றைக்கண்டான். நாமும் ஒன்றைக் காணவேண்டும். "ஏகம் ஜானத — பலபொருளை மிருகங்களும் காணமுடியும். பல்பொருள்ஞானம் பசுவிற்கும் உண்டு. பலவற்றில் ஒன்றைப்பார். இல்லையேல் கனவு கனவாகவே இருக்கும். பாயாசம் கிடைக்காது.

ஒருமையில் பயமில்லை. ஒன்று என்று எதைச் சொல்வது? எது இல்லாமல் இரண்டு மூன்று என்னும் தொகையுண்டாகிறதில்லையோ அது ஒன்று. ஆத்மாநம் ஜாநத— அந்த ஒன்றை தனது வடிவமாக அறி. ஆத்மாவில் குணமில்லை. தொகையுமில்லை. தொகையில்லை — அத்விதீயம், குணமில்லை—நிற்குணம். அதையறியாவிடத்து யாருக்கும் நலம் உண்டாகமாட்டாது.

அந்யாவாசோ விமுஞ்சத — அவ்வான்மாவையறி. மற்றைய வார்த்தையை விட்டுவிடு. வேதத்திலும் ஆன்மாவைத்தவிர மற்றைய வார்த்தைகள் வருமானால் அதையும் விட்டுவிடவேண்டும் எனினும் அமையும். இதனால் என்ன தெரிகிறது? வேதத்தைத் தியாகம் பண்ணவேண்டும் என்பது

புலனும். அபரவித்தையை விட்டுவிடவேண்டும். ஆத்மாவைக் கர்த்தாவென்றும், போக்தாவென்றும், சம்சாரியென்றும், சுவர்க்கம் நரகம் உண்டென்றும் சொல்லி, மேலும் கீழும் அழைத்துக்கொண்டு போகும் வித்தையை விடவேண்டும். கதி, ஆகதி. கிரியை, காரகம் பலம் இவைகளைக்கூறும் வித்தையை விடவேண்டும் என்பது கருத்து.

எப்பொழுது அபரவித்தை விலகுமோ அப்பொழுது குடும்பி, பூநூல், அவனம், சந்தியாவந்தனம் இவைகளுக்கு அவசியமில்லை. எனவே பரவித்தை தியாகத்தையுணர்த்துகின்றது. தியாகம்—சந்யாசம். சேதுர்விதரணம் — அமிருதத்வஸ்ய சேது : — சேது — பாலம், மார்க்கம், சாதனம் என்னும் மூன்று பொருளைத்தரும். ஈண்டு மார்க்கத்தைக் கொள்ளவேண்டும். அந்யாவாசோ விமுஞ்சத—அபரவித்தையென்னும் ஏனைய வாக்குகளை விட்டுவிடுவது நலம். அது சொல்லுகின்ற கர்மம், அதற்கு வேண்டிய சாதனம் எல்லாவற்றையும் விட்டுவிடு. ஆத்மஞானத்தை நம்பு. ஏனெனின், ஆத்மஞானம் அமுதரூப முத்திக்கு வழி.

சேதுர்விதரணம்—ஈண்டு சேது என்னும் சொல்லுக்குப் பொருள் மரியாதை. ஆனல் இது வேதாந்தப்பிரகரணம். எனவே இங்கு சம்சாரநதிக்குப் பாலம் என்று கொள்ளினும் அமையும்.

''தமேவவிதித்வா அமிருதத்வமேதி நாந்யப் பந்தா வித்யதே அயநாய'' சுவேதா சுவதர சுருதி. அந்த பரமாத்மாவை அறிந்தபின்பு நமனை வெல்கின்றனர். இஃதன்றி வேறுவழி பவத்தைக் கடக்க இல்லையென்று இனிய சுருதி சொல்லுகின்றது. ம. 5

தொடர்ச்சி

ஓங்காரத்தைச்சிந்திக்கும் நெறி நிகழ்த்தப்பட்டது. இப்பொழுது அதையெவ்வாறு தியானம் பண்ணுவது

என்பதைப்பற்றிப் பேசப்படுகிறது. சரீரம் இருக்கட்டும், எதனுலோவெனின்? உடலைவெறுத்து இறைவனை நினைப்பது தேகாபிமானிகளுக்கு மிகக்கடினம். ஆகலின் காயத்தில் இருந்துகொண்டே தியானம் பண்ணு.

அராஇவ ரதநாபௌ சம்யதா யத்ரநாட்ய :
ச ஏஷோ அந்தஸ்சரதே பஹுதா ஜாயமாந :!
ஓம் இத்யேவ தியாயத ஆத்மாநம்
ஸ்வஸ்தி வ : பாராய தமஸ : பரஸ்தாத். 6

எவ்வாறு தேர்ச் சக்கரத்தின்நாபியில் அராக்கள் பற்றியிருக்கின்றனவோ அவ்வாறு எதில் எல்லா நாடிகளும் ஒன்றுபட்டு இருக்கின்றனவோ அந்த இதயத்தில் பலவடிவமாய் ஆத்மா திரிகின்றது. அந்த ஆன்மாவை யோங்கார வடிவமாகத் தியானஞ்செய். அக்ஞானத்திலிருந்து விடுதலையடைந்து முக்தியைப்பெற இது உதவும்.

வ: ஸ்வஸ்தி—உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். அரா இவ ரதநாபௌ யத்ரநாட்ய : சம்யதா : எங்ஙனம் வண்டிக் குடத்தில் அராக்கள் பற்றியிருக்கின்றனவோ அங்ஙனம் உடல், உறுப்புக்கள், நாடி, நரம்புகள் எல்லாம் ஆன்மாவை யணுகியிருக்கின்றன. பண்டைய காலத்தில் ஆயிரம் இதழ் உள்ள சக்கரமும் இருந்ததாக யோகிகள் கூறுகின்றனர். இந்திரன் கையில் உள்ள வஜ்ராயுதம் சதாரம் — நூறு நாக்குகள் உள்ளது. பகவான் பத்மநாபனிடம் உள்ள சக்கரத்திற்கும் சதாரம். இம்மாதிரி ஹிதயம், ரதநாபிக்குச் சமானம். அதில் ஆயிரம் நாடிகள் இணைந்திருக்கின்றன. அந்தஸ்சரதே பஹுதா ஜாயமாந :— அந்த இதயத்தின்கண் ஆத்மா பலவிதமான அவதாரத்தையெடுக்கிறது. புறத்தில் பகவான் மத்ஸ்யம், கூர்மம், வராகம், நரசிங்க முதலிய

அவதாரம்எடுப்பதுபோல அகத்திலும் ஆன்மா அநேக வடிவத்தையெடுக்கிறது. ''அநந்த மூர்த்தியுமாய் நிற்கும் கைவல்யம். பொருள்வெளி. பஸ்யன் சிருண்வன் மன்வா நோ விஜாநந்'' என்கின்றது சுருதி. கண்ணைக்கொண்டு பார்க்கிறது, காதைக்கொண்டு கேட்கிறது, மனதைக் கொண்டு மனனம் பண்ணுகிறது. புத்தியைக்கொண்டு நிச்சயிக்கிறது. அல்லது விசாரஞ் செய்கிறது.

காசியில் பகவான்கிரி என்பவர் எனது நண்பர். அவரும் நானும் ஒரேஅறையில் படித்துக்கொண்டிருப்போம். ஒரு நாள் நான் வெளியே போயிருந்தேன். போனகாரியம் முடிந்ததும் மீண்டும் அறைக்குவந்தேன். அங்கு வெளிச்சம் தெரிந்தது. கதவைத் தட்டினேன். நண்பர் கதவைத் திறந்தார். என்ன செய்கிறீர் என்றேன். என்னோடு நான் விளையாடுகிறேன் என்றார். சிறுகுழந்தை விளையாட்டு பண்டங்களோடு விளையாடுகின்றது. சம்சாரிமனிதன் பெண்டு பிள்ளையோடு விளையாடுகிறான். பக்தன் பகவானோடும், ஞானி தன்னோடும் விளையாடுகின்றனர். யாருக்குத்தன்னோடு விளையாடத் தெரிந்துவிட்டதோ அவருக்குத்துன்பம் வருகிற தில்லை. ''ஆத்மக்ரீட ஆத்மரதி :'' ஞானி தன்னோடு விளையாடுகிறான், தன்னிடத்தில் இன்பத்தை நுகருகிறான் என்பது சுருதிப்பொருள்.

இந்த ஆத்மதேவன் மூன்று அறைக்குள் வசிக்கிறான். தூலசரீரம், சூக்குமசரீரம், காரணசரீரம். இதிலிருந்து கொண்டு நான் காமி, நான் கோபி, நான் லோபி, நான் பொறுமைசீலன் என்று தன்னோடு விளையாடுகிறான். ஜாய மாந இவ ஜாயமாந:— கண்ணாடியில் தனது முகத்தைத் தானே நோக்குகிறான். பக்தர்கள் பலர். சிலர் பத்தினி பக்தர்கள். மனைவிஅழுதால் கணவனும் அழுவார். துணைவி சிரித்தால் தானும் சிரிபபார். தாரம் உறங்கினால் தானும் உறங்குவார். அவள் விழித்தால் இவரும் விழிப்பார்.

அதுபோல் ஆன்மாவும் அந்தக்கரணஅநுசாரியாக இருக்கிறது. மனம் அழுதால் ஆன்மாவும் அழும். அது சிரித்தால் ஆன்மாவும் சிரிக்கும். சம்சாரி ஜீவன் விரும்புவ தென்னே? நம் முன் அன்னை வரட்டும், பிதா வரட்டும், உறவன் பகைவன் மனைவி மக்கள் இவர்கள் வந்து இன்பந் தரட்டும் என்று எண்ணுகின்றான். இவர்கள் மூலமாக இன்பம் வரப்போகிறதில்லை. எனவே பொருத்தமில்லாத விருப்பம் துன்பத்தைத்தரும்.

பக்தன், பகவான்எப்போதும் நம்முன்னே வரட்டும் என்று நினைக்கிறான். அதுவும் இயலாத விஷயம். எத்தனை வடிவம் உன்முன் அநுதினம் வருகின்றனவோ அத்தனை வடிவத்தையும் நீதான் எடுக்கின்றாய். அநேகரூபரூபாய விஷ்ணவே பிரபவிஷ்ணவே" விஷ்ணு சஹஸ்ரநாமம். பல வடிவத்தையெடுக்கும் பரந்தாமா! உனக்குப் பன்முறை வணக்கம் என்றபடி. விருத்தி பலஉருவத்தைத் தரிக்கின் றது. விருத்திபல, நீ யொன்றே. உலகத்தில் உள்ள நட்பு என்றும் இராது. உலகம் கறங்குபோல் சுழன்றுகொண்டே யிருக்கிறது. இதில் வைக்கின்ற காதலும் மாறிக்கொண்டே வரும். காதல் சாதலுக்கு நிமித்தம். உலகத்தில் வைக்கும் காதல் உயிரைப்பறிக்கும். "உயிரைப்பறிப்பார் உறவாமே" அருணகிரியார் பொருள்வெளி.

எனவே நமது காதல் ஆன்மாவில் மலரவேண்டும். ஆனந்தக்கனியை யளிக்கவேண்டும். அதில் வைக்கப்பெற்ற உறவு நிலைத்திருக்கும். அதுவே நிலையுள்ளது. அது ஆன்மா. ஒன்றுகிய உன்னை நாள்தோறும் நினை. ஆத்ம தியானம் என்னது? அனாத்மாவைமறந்துவிடுவதுதான். தன்னை நினைப்பது தரணியை மறப்பது என்றபடி. மாறுபடுகின்ற பொருளை நினையாதே. ஒருவன் உன்னிடம் நான் பகைவன் என்றால் நீ ஓம் என்று சொல்லிவிடு. யார் எது சொன்னாலும் நீ ஓம் என்று சொல்லிக்கொண்டேயிரு. உன்னுடைய

ஒவ்வொரு மூச்சிலேயும் ஓங்காரம் ஒலித்துக்கொண்டேயிருக்க வேண்டும்.

ஒரு பக்தன்—மகாத்மாவிடம் நீ யாரென்று கேட்டான். மகாத்மா — உனக்கு யாரைப்போலத்தெரிகிறதென்றார். பக்தன் — எங்கள்சித்தப்பாமாதிரிதெரிகிறதுஎன்றான். மகாத்மா—ஆம் என்றார். இரண்டாமவன்—எங்கள் தந்தை போல் காணப்படுகிறீரென்றான். மகாத்மா—ஆம் என்றார். மூன்றாமவன்—எனக்கு நீர் பொல்லாதவன்போல் தெரிகிறீ ரென்றான். அதற்கும் அவர் ஆம் என்றார். ஆத்மா இவ்வாறு அனந்தமூர்த்தியுமாய்நிற்கும். அநேகம் உபாதி. ஆன்மா ஒன்று. உபாதிநீயல்ல. உணர்வுமயஆன்மா நீ.

பாராயதமஸப்பரஸ்தாத் — இருளிலிருந்து அருளைப் பெறுவதற்கு இதுவே ஞானதீபம். இந்தமெய்ஞ்ஞானத்தை யேற்காது போனால் உனக்குத் துன்பமுண்டாகும். எனவே ஓங்காரதியானம்பண்ணு. அகார உகாரமகாரத்தை விசாரம் பண்ணு. அந்தஓங்காரத்தை ஆன்மாவென்று நினை. இருள்நிறைந்த எவ்வுலகத்தையும் எளிதில் வெல்லலாம். ம 6

தொடர்ச்சி

அக்ஞானவடிவ அந்தகாரத்திற்கு வேருக தமஸ: பரஸ் தாத் பாராய என்னும் விஷயம் முந்திய மந்திரத்தில் மொழி யப்பட்டது. இப்பொழுது பரவித்தைக்கு விஷய ஆன்மாவை இதயத்தில் எங்ஙனம் அடைவது என்றும், உள்ளத்தில் அதை யெவ்வாறு நினைப்பது என்றும், இப்போது பேசப் படுகிறது—

3 4
ய: சர்வக்ஞ: சர்வவித் யஸ்ய ஏஷ மஹிமா புவி |
3
திவ்யே பிரஹ்மபுரே ஹி ஏஷவ்யோம்நி ஆத்மா
பிரதிஷ்டித: !! மநோமய: பிராண சரீரநேத்தா
3 4
பிரதிஷ்ட்டிதோ அந்நே ஹிருதயம் சந்நிதாய !
4
தத்விக்ஞாநேந பரிபஸ்யந்தி தீரா ஆநந்தரூபம்
3 4
அமிருதம் யத்விபாதி. ம. 7

எது நிறைந்த அறிவாயும், சகலத்தையறியும் தன்மையதா இருக்கிறதோ, எதனது பெருமை இப்புவியில் இலங்குகிறதோ, அத்தகைய இந்த ஆன்மா பிரகாசமாய் இருக்கிறது. இதயாகாசத்தில் விளங்குவதாயும், அது மநோமயம், சூக்கும அந்நிய தேகத்திற்குக் கொண்டுசெல்வதாயும், புருஷவடிவாயும், இதயத்தைப்பற்றியிருக்கும் தூலதேகத்தில் இருப்பதாயும் உள்ளது அதையறிந்தபின்னர் அறிவாளிபுருஷன் ஆனந்தவடிவ அமிருத சொரூப பிகாசவடிவ பிரஹ்மத்தை அநுபவிக்கிருன்.

திவ்யபிரஹ்மபுரேவியோமநி—உடலுக்குள்சிறிய உள்ளம் இருக்கிறது. அதற்குள் அணு அளவு ஆகாசமிருக்கிறது. அதில் ஒரு பொருள் உளது. அது அதிலிருந்துகொண்டு எல்லாவற்றையும்அறிகிறது. இந்த இதயந்தான் பிரஹ்மபுரி. புரம் நகரம் என்பன ஒருபொருள்.

ய: சர்வக்ஞ : சர்வவித் — ஈண்டு சர்வக்ஞ : சர்வவித் என்னுஞ்சொல் ஒருபொருள்மாதிரிதெரிகிறது. ஆனல் இவ்விரு சொல்லும் முதலாவது முண்டகத்தின் முதலாவது கண்டத்தின் இறுதியில் வந்திருக்கின்றன. ஆண்டு இதற்குப் பொருள் பண்ணியிருக்கிறது.

குடும்பிஜீவன்—தனது போகம், தனது பொருள் இவைகளைப் பெருக்குவதற்குஎவ்வளவுபிரயாசப்படுகிருன். இதில் அவனுக்கு சோம்பேரித்தனம்இருக்கிறதில்லை. தபசு பண்ணுபவன், சாதகன், அதிகாரியிவர்களுக்கு ஆலஸ்யம் கூடாது. சுறுசுறுப்பு மனிதனுக்குச்சுகத்தைநல்கும். "சோம்பித்திரியேல்" என்ருர் ஒளவைபிராட்டியார். பாட்டியின் புகழும் பாராட்டத்தக்கது. பொருள்வெளி.

முதலாவது நீ தூரத்தில் உள்ள பொருளைப் பார்க்கும்போது சிறிய வடிவமாகத்தெரிகிறது. இன்னதென்றுகூடத் தெரிகிறதில்லை. சமீபம் சென்றபோது விசேடமாகக் காணப்

படுகிறது. உறங்கி விழித்தவுடன் பொதுவானஅறிவுதான் உண்டாகிறது. நான் இருக்கிறேன் என்று. நான் எங்கே யிருக்கிறேன், என்ன ஜாதிக்காரன் என்ற ஞானம் பின்பு உண்டாகின்றது.

ஞானம் இருநிலையில் இருக்கிறது. ஒருஞானம் இதந்தயா. இது என்னும் ஞானம். இது சாமான்யஞானம். மற்றொன்று இதந்தயாவிசேஷஞானம். இது குடம், இது படம் என்பது விசேஷஞானம். படம்—துணி. கயிறு தெரிந்தது, ஆனால் அதனது ஞானம் இருட்டில் தெரியவில்லை. அதனால் என்னவோ ஒருபொருள் என்று தோற்றியது. அதனால் அது கயிறு, மாலை, பாம்பு, பூமியின் பிளவு இவைகளில் எதுவும் ஆகலாம். இம்மாதிரி உலகத்தைச் சாமான்யமாகவும் விசேஷமாகவும் அறிவது ஆம்.

உறக்கம், சமாதி, மூர்ச்சை யிவைகளிலும் மேற்கூறிய ஞானம் இருக்கின்றது. இந்த ஞானம் பொதுவாக உண்டாகிறது. நான் உறங்கினேன், விழித்தேன், சமாதிகூடினேன் என்று உண்டாகிறது. நனவிலும் கனவிலும் விசேஷஞானமுண்டாகிறது. அது விசேஷப்பொருளைப்பற்றி உண்டாகும் ஞானம். இம்மாதிரிசாமான்யவிசேஷரூபமாகமனித வாழ்க்கையில் இருவகை ஞானம் இருப்பதுபோல் ஈசுவர ஞானமும் இருவிதமாக இருக்கிறது. இறைவன் சாமான்யரூபமாக சகலபொருள்களையறிகிறான், விசேஷரூபமாகவும் அறிகிறான். ஈண்டு இருதரப்பட்ட ஞானம் சாமான்யச்சேதனமும், விசேஷச்சேதனமும் ஆம்.

எங்ஙனம் முதலாவது காதில்ஒலிவிழுகிறது. அப்பொழுது சிவனை அழைக்கின்றானா? இராமனை அழைக்கின்றானா என்று ஐயமுண்டாகிறது. அதுபோல் முதலாவது நாசியில் நறுமணம் வீசுகிறது. இது மல்லிகைப்பூ கந்தமா அல்லது ரோஜாப்பூ கந்தமாஎன்றுசந்தேகம்உண்டாகிறது. விசாரம்

விசாரம் பண்ணிய பின்னர் ''நிச்சயஞானம் உண்டாகிறது. இவ்வாறு சாமான்யவடிவமாகவும், விசேஷவடிவமாகவும் இறைவன் பொருள்களையறிவதால் அவன் சர்வக்ஞன் எனப்படுவான் சர்வக்ஞனே சகலத்தையும் விசேஷவடிவமாக அறிவதால் சர்வவித்தும் ஆவன்.

யஸ்யஏஷ மஹிமா புவி—இறைவன் புகழ் இப்புவியில் காணலாம். புகழ் — விபூதி; பகவத்கீதையின்பத்தாவது அத்யாயத்தில் பகவான் பார்த்தனுக்குத்தனதுவிபூதியை விரிவாக விளம்பியுள்ளார். இறைவனதுவிபூதியென்னை? எல்லாவுலகமும் யாருடையஆணையில் இயங்குகின்றனவோ, யாருடைய ஆணையில் சோமனும், சூரியனும், காற்றுடி போல்சுற்றிக்கொண்டுவருகின்றனரோ, எவருடைய சங்கற்பத்தால் நதி, நாலம், சமுத்திரம், தனது மரியாதையைத் தாண்டாமல் இருக்கின்றனவோ, ஸ்த்தாவர ஜங்கம ஜகத்து யாருடைய ஆக்ஞையில் நிலைத்திருக்கின்றதோ. மாசம், ரிது, அயனம், வருஷம், மன்வந்தரம், கற்பம் இவையெல்லாம் யாருடைய பயத்தால் தனது நிலையில் ஆகாமல் மாறிமாறி வந்துகொண்டு இருக்கின்றனவோ, கர்த்தா. கர்மம், பலவடிவ எல்லாம் யாருடைய கட்டளையில் தவறுமல் முறையாக செயல்படுகின்றனவோ, இவையெல்லாம் பூமியில் அவருடைய மஹிமை. பெருமை. அவர்—இறைவன். இவைகளைநாம்அனைவரும் அநுதினம் அறிவோம் என்று பகவான்சங்கரர்பகர்கின்றுர்.

ஒரு பக்தன்—மகாத்மா இடத்திற்குச் சென்றுன். அவரை அவன் வணங்கி சுவாமின்! ஒரு சித்தியைக்காட்டும் என்றுன். மகாத்மா—கரையில்லாமல் கடல் நிற்கிறது. தூண் இல்லாமல் ஆகாசம் நிற்கிறது, ஒரு சிறுதுளிநீரிலிருந்து இவ்வுடம்பு உண்டாகி, பிறந்து, கிடந்து, இருந்து, தவழ்ந்து நடந்து ஓடியாடி, சிரித்து விளையாடி சினந்து திரிகின்றது. இவை உனக்குச் சித்தியாகத்தெரியவில்லை. பின்னர் உலகில்

என்ன சித்தியைப் பார்க்க விரும்புகின்றாய்? என்றார் அந்த மகாத்மா.

இறைவன் நன்றாக விசாரித்து மனிதனைப்படைத்தான். நன்றாக என்பது என்னை? கண் எந்த இடத்தில் வைக்கப் பட்டிருக்கிறது. மூக்கு எந்த இடத்தில் நிறுத்தப்பட்டிருக் கிறது. கண்ணையும் கருத்தையும் கவருகின்ற காசினியில் உள்ளகாக்ஷியைநோக்குங்கள். காசினி—உலகம். பறவை யின் முட்டைகள் எல்லாம் வெண்ணிறம். உள்ளிருக்கின்ற நிறம் வெண்ணிறம். கரு மஞ்சள்நிறம். இங்ஙனம் இருப்ப மயில் முட்டையிலிருந்து வந்த குஞ்சு உங்கள் கண்ணையும் கருத்தையும் கவரவில்லையா? இவையெல்லாம் சமத்கார மில்லையா?ம னி த னே!எ ண் ணி ப் பா ர்.ஆ ண வ த் தி ல் அழுந்தாதே.

உங்கள் முப்பாட்டனார் எங்கே? உங்கள் பாட்டனார் எங்கே? உங்களையேங்கவிட்டு உங்கள் தந்தையெங்கே சென்றார்? மண்ணில் வாழ்ந்த கோடானகோடி மன்னர்கள் மடிந்து போனார்களே. நாம் போம் வழியும்அதுதானே, நரனே! அரனை நாடிவாழ். ''அரனை மறவேல்'' என்று அன்னையருளினரே. அதையூகித்துணர். தலைதெறிக்கும் படியாகத் திரியாதே. ''செத்தாரைப்போல திரி'' என்றபடி. பொருள்காக்ஷியில் அருள்காக்ஷியை மறந்துவிடாதே. இது காண் உனக்கு இனிய உபதேசம்.

ச ஏஷ ஆத்மா—இதுதான் இந்த ஆத்மா. அது எங்கே யிருக்கிறது? ''திவ்யே பிரஹ்மபுரே பிரதிஷ்ட்டித :'' அது ஒளிமயமான இதயாகாசத்தில் வசிக்கிறது. ''அஷ்டவக்ரா நவதுவாரா தேவாநாம் பூரயோத்யா:'' எட்டு சக்ரம், ஒன்பது வாசல், தேகம் அயோத்யாபுரிதேவநகரி. இதில் 1 மூலா தாரம், 2 ஸ்வாதிஷ்ட்டானம், 3 மணிபூரகம், 4 அநாஹதம், 5 விசுத்தி, 6 ஆக்ஞா. இவைஆறு சக்ரம். 7 சகஸ்ராரம்,

8 சதாரம் ஆகமொத்தம் எட்டு சக்ரம். அதுபோல இரு கண்கள், இருசெவிகள், நாசிகை இரண்டு, ஒருமுகம், மலத் துவாரம் ஒன்று, ஒரு மூத்ரதுவாரம் ஆக நவதுவாரம். நவ ஒன்பது.

ஹிருத்புண்டரீகம் வேஸ்ம—இந்த புரம் என்னும் நகரத்தில் இதயகமலந்தான் நிவாசபவனம் இவ் இதயகமலத்தில் இதழ், பராகம், மகரந்தம் இவையெல்லாம் பரமாத்மாவல்ல. உள்ளத்தை வேறுபிரித்துப்பார்த்தால் அங்கு சிதாகாசம் தென்படும். அதுபுரத்தாலும், உள்ளக்கமலத்தாலும் பரிச்சின்னம் அல்ல. பரிச்சின்னம்—அளவு. அது தானுக எங்கும் நிறைந்திருக்கிறது. அது — சிதாகாசம். பகவான்பாஷ்யகாரர் இவ்வாறு கூறுகிருர்.

ஈண்டு இதயகமலத்தில் சைதன்யவடிவமாக பிரஹ்மம் எப்பொழுதும் இலங்கிக்கொண்டே இருக்கிறது. எனவே இதயகமலம்பிரஹ்மபுரம் அதில் எந்த ஆகாசமுண்டோ, அவ்வாகாசம்ஆத்மரூபமாகமிளிர்கின்றது. சுடர் ஞான வடிவானவன். (சசிவன்னபோதம்) உடம்பு முக்கிய நகரம். இதில் பெண்டு, பிள்ளை, பேரன், பேத்தி யிவர்களிடத்தில் அகம் பிரத்யயம் உண்டாகிறது. நான் என்னும் புத்தி அகம் பிரத்யயம். காரணம்? மிகுதியானபற்று.

சித்தாகாசம் பூதாகாசமல்ல. பூதாகாசம் சித்தாகாசத்தில் கற்பிதம். சித்தாகாசமும் பூதாகாசமும் சிதாகாசத்தின் பிரதிபிம்பம். இதில் காரிய காரணபாவம் முக்கியமல்ல. ஜனவில் உள்ள ஆகாசத்திலிருந்து சாக்ர ஆகாசமா? அல்லது சாக்ராகாசத்திலிருந்துசொப்பனஆகாசமாஎன்று சிந்திக்க வேண்டியதில்லை. வீணனச்சிந்தனையில் ஆயுளை விரயம் பண்ணலாகாது. இரண்டையும் விட்டுவிடு. அங்ஙனமாயின் சிதாகாசமட்டும் எஞ்சிநிற்கும். அதுதான் அகண்டபிரஹ்மம்.

அவ்வாருயின் நாமரூபம் என்னது? பதில்—மநோமய:—ஆத்மா மநோமய :— மனதிற்கும் மனம். அதனுல் மனதைக் கொண்டு ஆன்மாவையறிய இயலாது. ஆத்மா மனதை யறியும், ஆன்மாவை மனம் அறியாது. இவ்விஷயத்தில் சுருதி—

யந் மநசா நமநுதே யேநாஹுர் மநோமதம் !
3 4 3 3
ததேவபிரஹ்மத்வம்வித்தி நேதம் யதிதம் உபாசதே !!

எதை மனதைக்கொண்டு நினைக்கமுடியாதோ, எதனுல் மனம் நினைக்கப்படுகிறதோ. அஹம் சட்சுர்ப்யாம் புஸ்தகம் பஸ்யாமி. நான் கண்ணைக்கொண்டு புத்தகத்தைப் பார்க்கிறேன் என்ற மாதிரி மனம் கருமம் ஆகாது. அஹம்மநசா மித்ரம் பஸ்யாமி என்பதுபோல. நான் மனதைக்கொண்டு நண்பனைப் பார்க்கிறேன் என்றபடி. அந்த மனம் யாருக்கு விஷயமோ அது நானுக இருக்கிறேன். ச வேத்திவேத்யம் நசதஸ்யாஸ்தி வேத்தா" சுவேத சு—உ. அது அகிலத்தையும் அறிகிறது, அதை யாரும் அறிவாரில்லை என்பது சுருதிப்பொருள். ஆத்மா சுவயம் ஞாதாவும் இல்லை, ஞேயமுமில்லை. ஞாதா ஞேயவர்ஜிதம்.

விஷயமில்லாமலும், மனதின் கருமமில்லாமலும் உள்ளது எது? "ததேவ பிரஹ்மத்வம் வித்தி" அதை பிரஹ்மம் என்று அறி. உபாசனைக்கு எது விஷயமோ அது பிரஹ்மமில்லை. உபாசகனுடைய திருஷ்டா ஆத்மா அல்ல. உபாசகன், உபாசனை, உபாஸ்யம் இவை மூன்றையும் கடந்து எது நிற்குமோ அதுவே நினது சொரூபமென்று உணர். "அறிபடும்பொருள்நீயல்ல அறிபடாபொருள்நீயல்ல அறிபொருள்ஆகும்உன்னை யனுபவித்தறிவாய்நீயே" கைவல்யம். அறிபடும்பொருள் நீயல்ல = திருஸ்யப்பொருள் நீயல்ல. அறிபடாபொருள் மாயை. அதுவும் நீயல்ல. அறிபொருள் — ஞானம். அதுவே நீயென்று ஆசான் அருளினுர்.

மநோமய : பிராணசரீரநேதா, பிராணசரீர, பிராணாத்மக சரீரம். பதினேழு தத்வத்தோடு கூடிய லிங்கதேகம். யெதனுடைய முந்நிலேயில் இந்த லிங்கதேகம் செயல்பட்டு கொண்டு இருக்கிறதோ அது இந்த சூக்கும சரீரத்திற்கு நேதா—தலேவர். தூலதேகம் பஞ்சபூதத்தின் காரியம். இவைகளில் ஆகாசம் வியாபகம். வாசனேயில் சாமான்ய ரூபமாக வேற்றுமையில்லே. பேதங்கள விசேஷரூபத்தில் தான் இருக்கின்றன. ஞானி யக்ஞானி ஆகிய இருவருக்கும் உணவு, நீர் அவசியம். ஆனுல் ஞானி எந்த உணவினுலும் எந்த நீரைக்கொண்டும் காலத்தைக் கழிக்க முடியும். ஆனுல் அக்ஞானிகளுக்கு விசேஷ உணவும் விசேஷ நீரும் தேவைப் படுகின்றன. இருவருக்கும் உடல் ஒரேமாதிரிதான். ஆகாசம் ஒன்றுதான். சூக்குமதேகம் தூலதேகத்தைவிடப் பெரியது. சூக்குமதேகம் சிறியது என்பது மயக்கம். சூக்குமஉடல் தனக்குள்ளே சுவர்க்கம் நரகம், பிரஹ்மலோகம், கோலோகம், சாகேதம், மற்றும் உலகங்களேப் படைக்கின்றது. கனவில் மேளாவைப்பார்த்தோமானுல் பிருதிவி அங்குள்ளவர் அனேவரும் நமது மனதிலிருக்கின்றனர். அதுபோல் நனவிலும் எல்லா ஜீவராசிகளும் தோற்றமாத்திரமே. இத் தோற்றத்திற்குத் தலேவன் ஆத்மா. ஆன்மா சுவர்க்க நரகத்திற்குப் போவதில்லே. தனது எண்ணத்திஞல் மனதில் சுவர்க்க நரகத்தையுண்டுபண்ணி நுகருகின்றது.

ஒரு வியாபாரிக்குத் தொலேபேசி வந்தது. தொலேபேசியில் பேசினவன் அவர் வேலேக்காரன். என்ன என்று வினவினுர். வியாபாரத்தில் பெரும் நஷ்டம் வந்துவிட்டது என்ருன். தொலேபேசியில் கேட்டவுடன் முதலாளிக்கு வேதனே வந்தது. மனங்கலங்கினுர். தன்னே ஏழ்மையனுக எண்ணினுர். அதற்குள் மறுபடியும் இரண்டாவது தொலேபேசி வந்தது. கணக்குப்பார்த்ததில் தவறுதலாகிவிட்டது. நஷ்டமில்லே. மேற்கொண்டு இரண்டு லக்ஷம் லாபம்தான்

வந்திருக்கிறது என்று தொலைபேசியில் கணக்கப்பிள்ளை மொழிந்தான். கவலை கொண்ட மனம் இறந்தது. மகிழ்ச்சியான மனம் பிறந்தது. இதுபோல சுவர்க்கநரகங்களை யுண்டு பண்ணுவதும் மனந்தான். கற்பனைதான். நான் துன்பப்படுகிறேன் என்பதும் கற்பனைதான், நான் முக்தியடைந்து விட்டேன் என்பதும் கற்பனைதான்.

உங்கள் வயிற்றுக்குள் இருக்கும் ஆகாசம் வாயிக்குள் இருக்கும் வான் இவைகளை நீங்கள் வியாபகம் என்று எண்ணுகிறீர்களா? இது தன் மாத்திரையின் தாமசவடிவம். தன் மாத்திரையின் சாத்விக அம்சத்திலிருந்து உண்டான அந்தக்கரணம். அதைப்பற்றிச் சிறிது விசாரம் பண்ணும் போது அதில் நீ பல உலகங்களையுண்டுபண்ணுகின்றாய்.

பத்தா[4]பி[4]மானி பத்தோஹி முக்தோ முக்தாபி[4]மாந்யபி
கிம்வதந்தீஹ சத்யேயம் யாமதி : சா கதிர்ப[4]வேத் !!

நான் பத்தன் என்று எண்ணுபவன் பத்தனாகிறான். இது சொல்லளவு சத்யம். உண்மையென்னை? மதியெவ்வாறு அவ்வாறு கதியென்பதுதான். ஓர்ந்து பார்க்கும்போது பரமார்த்த நிலையென்னை? பந்தமும் இல்லை. முக்தியுமில்லை. நான் சுகி நான் துக்கி என்ற அபிமானத்தை விட்டுவிட்டால் அவன் பரமாத்மா. "ந நிரோ[4]தோ நசோத்பத்தி :" மா-கா. ஆத்மாவில் பிறப்பிறப்பில்லை. பந்தமும் முக்தியும் இல்லை. ஆன்மா இந்தஅந்நமயஉடலில் உள்ள இதயத்தின்கண் உட்கார்ந்திருக்கிறது. அது இல்லாத இடமேயில்லை. இருப்பினும், அடைவுஉள்ளத்தில்தான்உண்டாகிறது. "அவஸ்த்திதேரிதி காசகிருத்ஸந:" பி—சூ. காஸகிருஸ்த்னர் என்பவர் ஒரு ரிஷி. அவர் மதத்தில் பரமாத்மா ஜீவாத்மா வடிவமாக இதயகமலத்தில் வசிக்கின்றார் என்று அவர் அருளுகின்றார். "அநேந ஜீவேந ஆத்மநா அநு

பிரவிஸ்ய என்ற சுருதியும் அநுமதி வழங்குகின்றது. இதனுலும் உள்ளத்தாமரையில் ஆன்மா ஒளிவீசுகின்றதென்பது தெளிவு.

நான் பரிச்சின்னன் என்று யாருக்கும் அநுபவம் உண்டா? அதை நீ யறியாயாகில், அதற்கு நீ வேருக இருக்கவேண்டும். பரிச்சின்னமும் அதனது இன்மையும் ஆன்மாவில் கற்பிக்கப்படுகின்றன. அந்த ஆன்மா நீயாயிருக்கிருய் என்று குருநாதன் சொன்னுர்—''தத்துவமசி' நீயதுவாயிருக்கிருயென்பது வாக்கியத்தின் பொருள். ''நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்பது மகான்களின் ஆவல். வையகம்—அதில் வாழும் மக்கள். ''சேரவாரும் ஜெகத்தீரே'' என்று கூவியழைக்கின்ருர் தாயுமானுர்.

தத் விக்ஞானேந பரிபஸ்யந்தி தீரா:—தீரன் அறிவாளி. ''ஆசான் நூலால்'' சத்சாத்திரத்தாலும், சத்குரு உபதேசத்தாலும், பொறிபுலன்கள் அடங்கப்பெற்று, வைராக்கியத்தையடைந்து, தெளிந்த அறிவால் ஆன்மாவை ஐயமற அகில உலகத்திலும் பார்க்கிருன். ஞாலமுழுவதும் நாமென்று உந்தீபர என்றபடி. பார்ப்பது அனுபவிப்பது ஆனந்த ரூபம்—சகல துயரங்களிலிருந்தும் நீங்கப்பெற்றது. அமிருத வடிவ ஆன்மா எப்போதும் நமது உள்ளத்தில் மிளிர்கின்றது.

போகாத்துயரம்போம் — போகாத்துயரம் என்னது? பாவம்தான் துயரம். அநர்த்தமும் அதுதான். எவன் ஒருவன் அந்நியாயமாகப் பிறர்பொருளை விரும்புகிருனே அவன் திருடன். இன்று நீ பிறர்பொருளை விரும்புகின்ருய், நாளை இன்னெருவன் உன்னுடைய பொருளை விரும்புவான். இதுஅனர்த்தம். இதற்குப்பலன் துன்பம். துன்பத்திலிருந்து விடுதலையடைவது மிகக்கடினம். இவ்வான்மா இயல்பாக அமுதவடிவம். ஈண்டு ''அமிருதம் யத்விபாதி'' இதில் அமிருதசப்தம் தருமத்தைப் போதிப்பதற்காக.

எங்ஙனம் குழந்தையைத் தாய் — மகனே! பள்ளிக்குச் செல். உனக்குப் பழச்சார் கிடைக்கும் என்றாள். அங்ஙனம் அன்னையின் இதயம் பழச்சாற்றில் இல்லை, பின்னை? மகன் பள்ளிக்குச் செல்லவேண்டும் என்பதில்தான். அங்ஙனம் நூல்களிலும் துறக்கஞ்சென்றால் அமுதங்கிடைக்கும் என்று மொழிவதற்குப்பொருள் உடம்புவேறு உயிர் வேறு என்பதுதான். நீ தேகமல்ல, தேகத்திற்குவேறு என்பதுதான், இதயத்தின் உள்ளே மிளிர்கின்ற ஆன்மா நினது வடிவமே. மரணம் சம்சாரதருமம், அமுதம் உனது வடிவம்.

இனிய மகனே நான் இறக்கவில்லையென்று விசாரஞ் செய். யாராவது தன்னுடைய மரணத்தைப் பார்த்திருக்கிறார்களா? பொருள் அழிந்ததும் செல்வந்தர்கள் நான் இறந்துபோனேன் என்கின்றனர். மனைவி கணவனையிழந்ததும் நான் இறந்துவிட்டேன் என்கிறாள். பிறருடைய சரீரம் இறந்ததைத் நோக்கினையேயொழிய தனது மரணத்தை நோக்கினதன்று.

"நீயும்நானும்புவிமேல் நிருபர்களும் மெய்யுணர்வால் ஆயுங்கால்பிறந்திறப்ப தாருக்குமிலையென்றவரோ!" கீதாசார தாலாட்டு. நீயும்—ஜீவனாகிய அருஜுனனும், நானும்—ஈசுவரனாகிய ஸ்ரீகிருஷ்ணனும், புவிமேல் — புவியின்கண் நிருபர்களும்—அரசர்களும், ஆயுங்கால் — ஆராயுமிடத்து, பிறந்திறப்பது — ஜென்மமும் மரணமும், யாருக்கும் — எவ்வகைப்பட்டவர்க்கும், இல்லையென்று இசைத்தான்யது நந்தனன். நான் இறந்துவிட்டேன் என்ற அனுபவம் யாருக்கும் உண்டாகாது. நான் மரணம் அடைந்தேன் என்பதற்குப் பிரமாணம் என்னை? நான் இறந்துபோனேன் என்ற அனுபவம் இருக்குமானால் செத்தது எவ்வாறு?

ஆனந்தரூபம் அமிருதம் யத்விபாதி. யண்டு விபாதி = சித்து, அமிருதம் = சத்து, ஆனந்தரூபம் = பிரியம். நீ அஸ்தி பாதி பிரியரூபமாயிருக்கிறாய் என்பது குறிப்பு. உனது வடி

வத்தில் நாமரூபப்பிரபஞ்சம் இல்லை இவ்வுலகம் ஞானத்தின் நிழல் மாத்திரம். பிரபஞ்சம் எல்லாம் பொய்யே. ம. 7

தொடர்ச்சி

தத்விக்ஞாநேந பரிபஸ்யந்திதீரா : அறிவாளிமக்கள் அதை விசேஷவடிவமாக எங்கும் அறிகிறார்கள். அனுபவிக்கிறார்கள். இவ்வனுபவத்திற்குப் பலன் என்னையென்பதற்கு வருகிற மந்திரம் பதில் கூறுகிறது—

4 3 4
பித்யதே ஹிருதய கிரந்திச் சித்யந்தே சர்வசம்சயா:
3
க்ஷீயந்தே ச அஸ்யகர்மாணி தஸ்மிந் திருஷ்டே
பராவரே !! ம. 8

அந்த காரியகாரணவடிவ பிரஹ்மத்தை நன்கு அறிந்த பின்னர் ஜீவனுடைய இதயமுடுச்சு அறுந்துவிடுகின்றது. எல்லா ஐயமும் அகன்றுவிடுகின்றன, கருமம் எல்லாம் அழிந்துவிடுகின்றன. தஸ்மின் பராவரேதிருஷ்டே — வீர புருஷன் யார்? ஞானி. பரிபஸ்யந்தி—ஆன்மாவை பரமான்மா ரூபமாகப் பார்க்கிறான். தஸ்மிந்திருஷ்டே ஜீவனும் ஈசனும் ஒன்று என்னும் அனுபவம் உண்டாகின்றது. தத்வத்தின் வடிவம் என்ன? அது எவ்வாறு இலங்குகிறது? அதனது தர்சனம் என்றால் என்னை?

பரஞ்ச அபரஞ்ச—இதுதான் பரம், இதுதான் அவரம். தூலமாகவும் இருக்கிறது, அதுதான் காரியவடிவமாகவும் இருக்கிறது. காரியம் சூக்குமம். சகலத்திற்கும் காரணமும் அதுதான். தேசத்தை நோக்கும்பொழுது சரீரம் என்னும் சிம்ஹாசனத்தில் அமர்ந்திருக்கிறது. இதயமென்னும் சிறிய இடத்தில் நான் குடியிருக்கிறேன். கோடிக்கணக்கான அண்டங்கள் எதில் வசிக்கின்றனவோ அந்த அவ்யாகிருதத்திலும் நான் வசிக்கிறேன். அவ்வஹம் யார் என்று விசாரம் பண்ணு. அது ஈசுவரவடிவம். ''ஆன்மசொரூபமே

மருவவேண்டி" = தனது வடிவத்தையடைய விரும்பி "உபதேசம் ஓதுவாரே" "அஹம் பிரஹ்மாஸ்மி" என்று குருபரன் உபதேசம் செய்தார். அஹம் ஈசுவர வடிவம். தேகத்துக்குள் இருக்கும்போது நான் எளியவனாக இருக்கிறேன், பிரகிருதியில் இருக்கும்போது மகானாக இருக்கிறேன். பிண்டத்திலிருக்கும்போது சிறியவனாக இருக்கிறேன். அண்டத்தில் இருக்கும்போது பெரியவனாக இருக்கிறேன். ஒன்று பரம் மற்றொன்று அவரம். ஆனால் ஆயுங்கால் இரண்டும் ஒன்றுதான்.

பரஞ்ச அவரஞ்ச — சமஷ்டி யவச்சின்னச் சேதனம். வியஷ்டி யவச்சின்னச்சேதனம். இவையிரண்டும் கூர்ந்து நோக்கும் இடத்து ஒன்றேயாம். மரத்தின் பழம் காரியம். மரம் காரணம். மரம் காரியம் விதை காரணம். விதை காரியம் ஐம்பூதம் காரணம். இவ்வாறு காரிய காரணபாவம் உண்டாகிறது. காரியத்திலுஞ்சேதனம் இருக்கிறது, காரணத்திலும் சேதனம் இருக்கிறது. இவ்விரு சேதனமும் ஒன்றுதானே. இந்த விஷயத்தை நோக்கியொன்று என்றது.

எந்தச் சேதனம் நிமேஷத்திலிருக்கிறதோ அதே சேதனம் கற்பத்திலும் இருக்கிறது. இவையிரண்டும் ஒன்று. இது காலத்தினால் ஒன்று. தஸ்மின் பராவரே திருஷ்டே சதி — இந்த வியஷ்டி, சமஷ்டி, அற்பகாலம், மகத்காலம், ஏகதேசம் சம்பூர்ணதேசம், இவையெல்லாவற்றிலும்உள்ளச்சேதனம் நானே. இம்மாதிரி தர்சனம்—ஞானம் உண்டாகவேண்டும். தத்வஞானம் வந்தபின்பு என்னபலன் உண்டாகுமென்பது வினா. பித்யதே ஹிருதய கிரந்தி—ஓர்ந்து பார்த்தால் ஞானத்திற்குப் பலனில்லை. ஞானத்தினால் விதையும் மரமும் அழிந்துபோனால் பலன் எங்ஙனம் கூடும்? அந்நிலையில் சாதனம், பலன், பொருந்தாது.

கர்மத்திற்குப் பலன் அடைவு. கருமத்தைச் செய்து நாம் பலத்தைப் பெறுகிறோம், வினையின் இறுதியில்

ஞானத்தையடைகிறோம். கருமம் முழுவதும் ஞானத்தில் முடிவடைகின்றது என்று கார்முகில் வண்ணன் கழறுகின்றான். பார்த்த! ''அகிலங்கர்ம ஞானேபரிசமாப்யதே'' கீதை. வினையின் விளைவு ஞானத்தில் அடங்குகின்றது என்பது கீதையின் பொருள். கருமத்தின் முடிவில் ஞானம் இல்லாது போனால் கருமம் நிஷ்பலமாகிவிடும். இந்த உபநிஷத்தின் முற்பகுதியில் அவித்யாகிரந்தி வந்திருக்கிறது. ''அவித்யா கிரந்திம் விகிர்தீஹ'' அவித்தையென்னது? பிரஹ்மத்திற்கு வேறாகத் தன்னை க்ஷணிகம் என்றும், பிறப்பு இறப்பு உற்றவனென்றும், கிலேசமுற்றவன், ஜடன் என்றும், தேகாபிமானி பரிச்சின்னன் என்றும் எண்ணுவது அவித்தை. இவ்வவித்தைதான் கிரந்தி—முடுச்சு.

ஆன்மாவையும் பரமான்மாவையும் ஒன்றுசேர்த்தால் அபிமானம் என்னும் கரையுடைந்துவிடும். பிறகு நான் ஜடன், நான் பிறக்கிறேன் இறக்கிறேன் என்ற பயமும் நீங்கிவிடும். அவித்தை யாது? தெரியாத்தனம். அறியாமை. ஒன்றை மற்றொன்று உணர்வது. புத்திக்குப் பல்ஹீன்தா. அந்யஸ்மிந் அந்ய அவபாசம் அவித்தை. பலூனை ஆரஞ்சிப் பழம் என்று எண்ணுவது. நார்த்தங்காயை எலுமிச்சம்பழம் என்று எண்ணுவது. அதுபோல் உடலை ஆன்மாவென்றும் உயிரை யுடல் என்றும் எண்ணுவதும் அவித்தை. தன்னை பிரஹ்மம் என்று எண்ணாதது மயக்கம். தன்னை ஜீவன் என்று எண்ணுவதே அவித்தையாகிரந்தி.

ஹிருத்ய கிரந்தி—அறியாமையின் நிமித்தமான வாசனையின் கூட்டம், அதனோடு தன்னைக் கலந்துகொள்வது இதய கிரந்தி. சர்க்கரையை மிளகாய்ப்பொடியில் கலந்தாற்போல தன்து இருப்பையும் விளக்கத்தையும், பிரியத்தையும் விஷயத்தில் ஒப்புக்கொள்வது. இந்துமத்தில் பல சடங்குகள் வருகின்றன. அதில் சூடாகருமம் ஒன்று. சூடா—சிகை. அதில் தலையில் முடுச்சுபோடுவார்கள். உபநயனச்சடங்கில்

பூநூல் முடுச்சுவிழும். திருமணத்தில் கழுத்தில் முடுச்சுவிழும் இப்படிப் பல இடங்களில் பலமுடுச்சு இருப்பினும் முக்கிய மான முடுச்சு இதயத்தில்தான் இருக்கின்றது.

இன்பம் நமதிடத்திலில்லை, பிறர்பால் இருக்கிறது என்று எண்ணுவது முடுச்சு. அது துயரத்திற்குக்காரணம். துயரம் தூய்மை உள்ளத்தில் உதிக்காது. தன்னை ஞானவடிவமாகப் பார்க்காமல் ஞேயரூபமாகப் பார்ப்பது. தன்னை அமுதவடிவ மாக நினையாமல் மிருதவடிவமாக எண்ணுவது. இவை யெல்லாம் முடுச்சு. இவை நம்மை நாம் பிரஹ்மம் என்று எண்ணும்போது அறுந்துவிடுகின்றன.

எப்பொழுதெல்லாம் உங்களுக்குத் துன்பம் உண்டா குமோ அப்பொழுதெல்லாம் யாதோ ஒரு மறதி உண்டா கிறது. நீ உன்னை பாவியென்று நினைக்கின்றாய். க்ஷீயந்தே சர்வ சம்சயா : — ஞானத்தைப் பிறர்பால் எண்ணுவதால் சம்சயகிரந்தியுண்டாகின்றது. நமக்கு நிறைந்த ஞான மில்லை. நாம் எப்போதும் பிறரையே நோக்குவோம் நம்மை நோக்குவதில்லை. நம்மிடத்தில் பிறர் ஞானம் இருக்கிறது. நமது ஞானமிருக்கிறதில்லை. ஈதனைத்தும் ஞேயவிஷயக சம்சயம். ஆத்மஞானத்தால் இதழியும்.

குஜராத்து மாநிலத்தில் உள்ள சாபரமதி ஆஸ்ரமத்தில் மகாத்மாகாந்தி வாசம் செய்துவரும் நாளில் ஒரு கிராமவாசி அங்கு வசிப்பதற்கு வந்தான். அவனுக்குச்சில சித்திகள் தெரியும். யாராவது நேருஜீ இப்பொழுது எங்கிருக்கிறார் என்று கேட்டால் உடனே சொல்லிவிடுவான். இந்த வந்த வாசிக்குச் சித்திகள் விளையாடுகின்றன என்று பலர் காந்தி யிடஞ்சொன்னார்கள். அதற்கு அவர் சிரித்துக்கொண்டு இருந்துவிட்டார். அவர்க்கு இது பெரிதாகத்தெரியவில்லை. ஆனால் அவர் அவனிடம் ஒன்றுங்கேட்கவில்லை. அவன் ஒருநாள் மகாத்மன்! என்னிடஞ் சித்தியிருப்பதாக எல்லோ ரும் மொழிகிறார்கள். நீங்கள் என்னிடம் ஒன்றுங்கேட்க

வில்லேயேயென்ருன். அதற்கு அவர் அதில் என்ன மகத்வம் இருக்கிறதென்று முன்போல சிரித்துவிட்டார். அதிலிருந்து அவன் அதை மறந்துவிட்டான்.

சித்தி புத்தியை மயக்கும் ஒரு ஜாலம். இதைக்கண்டு ஞானிகள் மயங்கார். ''எல்லாம் வெளிமயக்கே இறைவா கச்சியேகம்பனே யென்ருர் அடிகளார்''. ''மாயாயாம் சர்வ சம்பவா:'' என்று வித்யாரண்ய சுவாமிகள் எள்ளி நகைத்தார். பிரஹ்மத்தினடைவிலும் மகத்வமில்லே. மகத்வம் சித்தசுத்தியில் இருக்கிறது.

அதிஷ்ட்டான ஞானத்தால் அத்யஸ்த—கற்பிதஞானம் நீங்கினதும் சம்சயம் இருக்க இயலாது. சம்சேரதே அஸ்மிந் ஜநா : இதி சம்சய : என்பது இலக்கணம். சம்—ஆன்மா. அதைத் தெரியாமல் இருப்பது சேரதே—உறங்குவது. ஆன்மாவையறியாமல் இருப்பதே ஐயம் எனப்படும். ''நித்ரா தத்வமஜாநத :'' மா.கா. தத்வத்தை அறியாமலிருப்பது உறக்கம் என்று காரிகை கூறுகின்றது.

நமது வடிவத்தை நாம் அறியவில்லேயென்ருல் கண் விழித்திருந்தாலும் கருத்து உறங்கத்தான் செய்கிறது. நண்பனிடத்தில் சந்தேகம் எழுமாளுல் அவன் வம்பனுகக் காணப்படுவான். சந்தேகம் விலகவேண்டும். அங்ஙனமாயின் பல நூல்கள் படிக்கவேண்டும். நூல்பல கல் என்ருள் தமிழ்த்தாய். மதி மந்தமாவதற்குக் காரணம் கேள்வியின் குறைவு. ''பரந்த நூல் பார்க்கமாட்டா மந்தரும்'' கைவல்யம். உபநிஷத்து முதலிய சிறந்த நூல்களேப் படிக்காதகுற்றத்திளுல் மதி மழுங்கிப்போகும்.

நீ எவனே யெவ்வாறு எண்ணுகின்ருயோ அவன் அவ்வாறு ஆகிவிடுகிருன். ஒருவனே நீ யெப்போதும் பகைவன் என்று எண்ணிளுல் அவன் பகைவஞகி விடுகிருன். ஒருவனே எப்போதும் நண்பன் என்று நினேத்தால் அவன் நண்பஞகி

விடுகிறான். நீ சுவயம் கற்பகமரம் உனது உள்ளத்தில் கற்பகமரம் உண்டுபண்ணும் வலிமையிருக்கிறது.

க்ஷீயந்தேச அஸ்ய கர்மாணி — ஆனந்தத்தில் வரும் குற்றத்தையகற்றுவதற்கு ஹிருதயக்கிரந்தி நீங்கவேண்டும். மதியில் உள்ள குற்றத்தை நீக்கவேண்டுமானால் சம்சயம் நீங்கவேண்டும். இனியஞானம் எளிதில் வந்தால் எல்லாக் கருமமும் எரிந்து சாம்பலாய்ப்போகும். "ஞானத்தனால் சுட்டு வெண்ணீருக்கும்" என்பது கைவல்யம். பொருள் வெளி.

இச்சை நமது அதீனமல்ல. நாளையென்ன வரும் என்று எண்ணலாகாது. என்ன செய்யப்போகிறோமென்றும் எண்ண முடியாது. "நாளை நடப்பதை யாரறிவார் என்றபடி. உனக்கு நாளையென்ன எண்ணம் உதிக்கும் என்று எண்ண இயலுமா? ஆசை வாசனுவசமானது. ஆகையால் கர்ம தந்த்ரத்தை நீக்கவேண்டும் என்றால் நீங்காது. தத்வ ஞானத்தால் நீங்கும். நதியின் வெள்ளத்தில் மாலையும் போகிறது, சவமும் போகிறது. நீ கரையில் இரு. தடஸ்த்த: — ஆன்மா பொதுவாக இருக்கிறது. ம. 8

தொடர்ச்சி

பராவர பிரஹ்மத்தையறிந்ததனால் எல்லா முடிச்சுகளும் அற்றுவிடும் என்று முந்திய மந்திரத்தில் மொழியப்பட்டது. அந்த பராவரபிரஹ்மம் ஒளிமயமானது என்று இனிவரும் இரு மந்திரங்களால் மொழியப்படுகின்றது—

ஹிரண்மயே பரே கோசே விரஜம் பிரஹ்ம நிஷ்கலம்
4
தச்சுப்ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதி : த்த்யதாத்ம விதோவிது : !!

இ—ள்

அது புண்ணிய வடிவம், உருவமற்றது, பிரஹ்மம், ஒளி வடிவம், மேலான கோசத்தில் இருக்கிறது. அதுவே தூய்மையானது, எங்கும் நிறைந்தது, ஒளிகளுக்கெல்லாம் ஒளியானது அதை தத்வஞானிகள் அறிகின்றனர்.

இந்த இதயம் ஹிதமானது. தங்கவடிவம். இயல்பாக உள்ளது. அதைச் சற்று உற்று நோக்கிப்பார். அங்கு நோக்கினுல் ஒளி காணப்படும். அவ்வொளியைக் கெடுத்து விடாதே. உணவு ஆசையால் எவன் நிரம்ப உண்டு. வயிற்றைக் கெடுக்கிருனே அவன் மூர்க்கன். வெளியில் காணப்படும் தங்கத்தைக்கண்டு தனது உள்ளத்தை மாசுபடியும்படிச் செய்பவன் மேலான அக்ஞானி. வெளியிலுள்ள தங்கம், வெள்ளி, செம்பு ஒன்றுக்கும் உதவாது. இவைகளின் இச்சையால் மனதைக் கெடுக்காதே.

பரேகோசே—இந்த இதயம் ஞானக்களஞ்சியம். பிரஹ்ம திருஷ்டியால் இது வாள் வைக்கும் உறை. எவ்வாறு தங்கம், வெள்ளி, பொன் பொருள் இவையெல்லாம் பெட்டியில் வைக்கப்படுகின்றனவோ அவ்வாறு இந்த இதயம் என்னும் பெட்டியில் ''விரஜம் பிரஹ்மநிஷ்கலம்'' புனிதமானதும், அவயவம் இன்றியதும், ஆன பிரஹ்மம் இருக்கிறது. விரஜம் என்பதற்குப் பொருள் அதில் மாயையில்லை. நிஷ்கலம் அதில் அம்சமில்லை. அதில்—ஆன்மாவில்.

உன்னுடைய இதயத்தில், ஒளி நிலையமாகிய பிரகாசம் இருக்கிறது. எல்லா ஒளிகளுக்கும் மூலகாரணம் ஆன்மா. ஆத்மா விஷயங்களையும் பொறிகளையும் விளக்கும் கருவியென்று தெரிந்துகொள். ஆத்மப்பிரகாசத்தில் அகில பிரகாசமும் மிளிர்கின்றன. மனதில் கடம், செம்பு, துணிமணியெல்லாம் தோற்றுகின்றன, அதையும், அவைகளுக்குரிய விருத்திகளையும் சாட்சிரூபமாக விளக்குவது ஆன்மாதான்.
ம. 9

தொடர்ச்சி

இது ஜோதிஷாம் ஜோதி :— சுவயம் பிரகாசம். அதை எதுவும் விளக்கஇயலாது. அது அனைத்தையும் விளக்கும் என்பதை இனிவரும் மந்திரம் விளக்குகின்றது—

4
ந தத்ர சூர்யோபர்தி ந சந்த்ர தாரகம்,
3 4
நேமாவித்யுதோ பர்ந்திகுதோ அய்ம் அக்நி : !
4 4
தமேவ பாந்தம் அநு பர்திசர்வம்,
3 4
தஸ்ய பாசா சர்வமிதம் விபாதி !! ம. 10

இ—ள்

அங்கு சூரியன் பிரகாசிக்கிறதில்லை, சந்திரன் மிளிர்கிறதில்லை, உடுக்களும் விளங்குகிறதில்லை. அங்ஙனம் இருப்ப நெருப்பு எங்ஙனம் விளங்கும். மின்னலும் மிளிர்கிறதில்லை. அது விளங்குவதால் அனைத்தும் விளங்குகின்றன் எல்லா உலகமும் அதன் ஒளியில் பிர்கர்சிக்கின்றன.

ஆன்மா சுவயம் பிரகாசம். அந்தப்பிரகாசத்தில் கதிரவன் இலங்குகிறதில்லை. ஆதவனும் அந்தகாரமாகிவிடுகிருன். அந்தகர்ரம் — இருள். ஒரு வீட்டில் மெழுகுபத்தி எரிந்து கொண்டு இருக்கிறது; அங்கு நூறு வலிமையுள்ள மின் விளக்கு எரியுமானல் மெழுகுபத்தியெரிவது தெரியுமா? தெரியாதல்லவா? அதுபோல் சூரியனே யில்லாதபோழ்து சந்திரன், உடுக்கள், நெருப்பு இவைகளைப்பற்றி யென்ன சொல்லவேண்டியிருக்கிறது.

கதிரவன் கண்ணுக்குத் தேவதை. கண்ணுக்கு உலகந் தெரிகிறது. ஆதவன் உதயமான பிறகு வாக்கு இது குடம், இது துணியென்று சொல்லுகின்றது. வாக்குத்தேவதை கனல். வாணி அனலோன் வலிமையால் பேசுகின்றது. மனம் நினைக்காமல் பேசமுடியுமா? மனதிற்குத் தேவதை சோமன். ஓஷதிகளிலும், நீரிலும் சந்திரனின் சக்தியிருக்கிறது. சோமன் இருந்தால்தான் நீரிலும் தருவர்க்கங்களிலும் ஓஷதியுண்டாகும். அதை உண்டபின்னர் மனதில் நினைக்கும் வலிமையுண்டாகிறது.

நான்கு ஐந்து தினம் நிர்ஜலவிரதம் அவ்வாருயின் இம் மனதால் எதையும் நினைக்கமுடியுமா? முடியாது. உடலில் கொதிப்பு இருந்தால்தான் பேசஇயலும். இந்நிலையில் பிரஹ்மதத்வம் என்னது? எதைக் கண்ணைக்கொண்டு காண இயலாதோ, வாக்கைக்கொண்டு பேசமுடியாதோ, மனதைக் கொண்டு எண்ண இயலாதோ அது பிரஹ்மம். எது கண்ணிலும், கருத்திலும், வாக்கிலும் இருந்துகொண்டு அவைகளுக்கு வலிமையைக்கொடுக்கின்றதோ அதை ஆன்மாவென்று அறி.

4
"ந தத்பாசயதே சூரியோ நச சாங்கோ ந பாவக :"
3 3 3 4
யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாசயதே அகிலம்
யச்சந்த்ரமசி யச்சாக்நௌ தத்தேஜோ வித்திமாமகம் !!
கீதை

இ—ள்

பகவான்—எந்த ஒளி சூரியனிடத்திலிருக்கிறதோ, எது எல்லா உலகத்தையும் இனிமையாக விளக்குகிறதோ, சோமனிடத்தில் எந்த ஒளியுண்டோ, எது நெருப்பில் இருக்கிறதோ, அதையென்னுடைய பிரகாசம் என்று நினையென்று பார்த்தனுக்குப் பகருகின்றார் என்பது பொருள்.

தத்ரவித்யுதோ நவித்யோதன். ஞாலத்தில் காணப்படும் மின்னல் ஆன்மாவில் காணப்படுகிறதில்லை, எப்பொழுது சாதகன் இறைவனைத் தியானம் பண்ணுகின்றானே, அப்பொழுது அவனுள்ளத்தில் மின்னொளியெழுகின்றது. உள்ளத்தில் சிறிது ஒளி மிளிர்கின்றது. ஆனல் அவ்வொளியில் ஆன்மா தெரிகிறதில்லை. அவ்வொளிக்கு எது பிரகாசத்தைத் தருகிறதோ அது பரமாத்மா.

தமேவ பாந்தம் அநுபாதி சர்வம். அவ்வான்ம ஜோதியினல் சகலபொருள்களுக்கும் ஞானமுண்டாகிறது. இதனல் "உலகவிளக்கெலாம் ஆனாய் நீயே" என்கின்றது தேவாரம்.

(விடையேறும் பெருமானே) நீதான் எல்லாஒளிகளும் ஆனுய் என்று அப்பர்சுவாமிகள் அருளுகின்ருர். யாரால் தத்வ ஞானம் உண்டாகுமோ அவரைக் கொல்லக்கூடாது. வேதம், பிராஹ்மணர், குரு, இவர்கள் மூலமாக நமக்குத் தத்வஞானம் உண்டாகிறது. ஆகையால் இவர்களை இம்சிக்கக்கூடாது. ''வேதியர் நிந்தை வியாதியாய் மாறும்'' பழம்சொல். குரு நிந்தகன் தவளையாய்ப் பிறப்பான் என்று துளசிதாசர் கூறுகின்ருர்.

வேதத்தை நிந்தைசெய்தால் (பிரஹ்மகாதம்) பார்ப்பாரைக் கொன்றதோஷம் உண்டாகும். எல்லாபாவத்தைப் பார்க்கிலும் பெரிய பாவம் ஆத்மஹத்யா. தன்னையறியாமையால் வாழ்வது. தன்னை காமி, கோபியென்றும், கர்த்தா போக்தாவென்றும், சுகி துக்கியென்றும் விஷயப்படுகுழியில் விழுந்துகிடக்கின்ருனே அவன் ஆத்மகாதி.

4

அசுர்யா நாம தே லோகா அந்தேந தமஸாவிருதா :!

3

தாம்ஸ்தே ப்ரேத்யாபி கச்சந்தி யேகேசஆத்மஹநோஜநா:!!

ஈ.உ. ஆத்மாவையறியாமல் எவன் இறந்துபோகிருனே, அவன் இருள்நிறைந்த உலகத்தையடைகிருன் என்று சுருதி சொல்லுகின்றது. தஸ்யபாசா சர்வம் இதம்பாதி. உலகத்தில் எங்கெல்லாம் பிரகாசம் தெரிகிறதோ அவை யனைத்தும் இறையொளிதான்.

நான்குபேர்கள் கைலாய யாத்திரைக்குச்சென்றனர். அவர்களில் ஒருவர் மகாத்மா. மற்ருெருவர் வைணவபக்தர். மூன்ருமவர் வியாபாரி. நான்காமவன் மாணவன். வழியில் சென்றுகொண்டு இருக்கும்போது மாலைப்பொழுது மலர்ந்தது. ஒரு மரத்தடியை அணுகினர். சிறிதுநேரம் ஓய்வெடுத்தனர். மரத்தின் கிளையிலிருந்து ஒரு பறவை கூவ ஆரம்பித்தது. நால்வரும் எழுந்தனர். இப்பறவையென்ன

சொல்லுகிறதென்று கேட்டனர். முதலில் மகாத்மாவிடம் கேட்டனர். மகாத்மன்! இப்பறவையென்ன மொழிகிறது?

மகாத்மா—ஏ இறைவா! (சுபாந்தி தேரி குதரத்) காணப் படுகின்ற ஒளியெல்லாம் உன்னுடைய ஒளியேயென்கின்றது என்ருர். பக்தர் — அவ்வாறன்று பின்னே? (சீதாராமன் தசரத்து) சீதாராமன் என்கின்றது பறவையென்ருர். மூன்ரு மவர் வியாபாரி—அது நமக்கு மிரிச்சு, அதரக்கு, உப்பு, மிளகாய், இஞ்சி யென்கின்றது என்ருர். நான்காமவன்— மாணவன். பறவையவ்வாறு அறையவில்லை பின்னே, பான் பீடி, சிகரட்டு என்று சொல்லுகிறது என்ருன்.

மக்களே ! இதில் யார் சொன்னது உண்மையென்று ஊகித்துணருங்கள். மகாத்மா சொன்னதுதானே உண்மை. எல்லாம் இறைவன் ஒளிதானே. ''ஜோதியே சுடரே யென்றபடி. எல்லா ஒளியிருப்பினும் ஆன்மாவில் ஒளியில் லாது இருக்குமாளுல் எந்த ஒளியும் காண இயலுமா? ஆகவே தனது வடிவத்தைநினை. அறி. அதையறிய முயல். தடம் புரண்டு திரியாதே. ம. 10

தொடர்ச்சி

திவ்யே பிரஹ்மபுரே, — ஹிரண்மயே பரே கோசே, இதயத்தில் தூய்மையானதும், அவ்யவமின்றியதுமான பிரஹ்மம் இருக்கிறது. அதன் ஒளியில் சகலமும் விளங்கு கின்றன. இவையெல்லாம் முந்திய மந்திரத்தில் மொழியப் பட்டன. இதனுல் ஆன்மா இதயத்தில் இருக்கிறது என்ற எண்ணம் உண்டாகக்கூடும். அந்தயகற்றும் பொருட்டு அடுத்த மந்திரம் ஆரம்பிக்கப்படுகிறது—

3
பிரஹ்மைவேதம் அமிர்தம் புரஸ்தாத் பிரஹ்ம
பஸ்சாத்பிரஹ்ம தக்ஷிணதஸ்ச உத்தரேண !
4 4
அத்ஸ்ச ஊர்த்வம் ச பிரசிருதம்
3 3
பிரஹ்மைவேதம் விஸ்வமிதம் வரிஷ்டம் ம. 11

இந்த அமிர்தவடிவ பிரஹ்மந்தான் முன்னேயிருக்கிறது, பின்னேயும் இருக்கிறது, வலது இடதுபக்கங்களிலும் பிரஹ்மமேயிருக்கிறது. மேலும் கீழும் பிரஹ்மம் இருக்கிறது. இந்த விஸ்வம் மேன்மையான பிரஹ்மமாக இருக்கிறது.

அமுதக்கடல் உருண்டு புரண்டு நமது முன்னே வருகிறது. அந்த சமுத்திரம் அமிர்தவடிவபிரஹ்மம். நாம் பொறிகளைக்கொண்டு எந்த புலன்களையறிகிரேமோ அந்த புலன்வடிவ சம்சாரம் உண்மையில் ஆன்மசொரூபம். எதையெதை நாம் செவிகளால் கேட்கிரேமோ ''தத்தத் பிரஹ்மேதி பாவயேத்'' அவையனைத்தையும் ஆன்மாவென்று நினை. எந்த கருமங்களைச் செய்கின்றேனே, அவையெல்லாம் ''சம்போ தவஆராதனம்'' என்று ஆசாரியசங்கரர் கூறுகின்ருர்.

சூரதாஸ் ஜஹம் ஜஹம் சலஉம் சோஇ பரிகர்மா
ஜோ ஜோ கரஊம் சோ பூஜா !! சூ—தா.

நான் எங்கெங்கேசெல்லுகின்றேனே அஃதெல்லாம் (இறைவா) உனக்கு வலமாகட்டும். நான் என்ன செய்வேனே அது உனக்கு வழிபாடாகட்டும் என்று ஒரு பக்தன் கூறுகிருன். இந்தஅமிர்தபிரஹ்மம் நமக்கு முன்னும் பின்னும், வலது இடது புறங்களிலும் இருக்கின்றது. மேலும் கீழும் நிறைந்திருக்கிறது. ''அநுருதம் இதரத்'' அதற்கு அந்நியமாக எவையெல்லாம் தெரிகின்றனவோ அவையெல்லாம் பொய்.

பிரஹ்மைவேதம் விஸ்வமிதம் வரிஷ்ட்டம்—வாழ்க்கையில் பிரியமாக எதை நாம் பெறவேண்டுமோ அது பிரஹ்மம். அதுதான் உலகவடிவமாகத் தோற்றுகிறது. கயிறு பாம்பாகத் தோற்றுவதுபோல் பிரஹ்மம் பிரபஞ்சவடிவமாகத் தோற்றுகிறதென்று பகவான் சங்கரர் பகருகின்ருர். இவையெல்லாம் ''பிரஹ்மைகம் பரமார்த்த சத்யம் வேதாநுசாசனம் என்பது சங்கரபாஷ்யம். ஆத்மஞானம் இன்றியது

யறியாமை. எல்லாம் பிரஹ்மஞானம் என்று வேதம் உபதேசிக்கின்றது. வேதாநுசாசனம். அநுசாசனம் — உபதேசம். எவ்வாறு கயிற்றைப் பாமபு என்று எண்ணுவது அக்ஞானமோ அதுபோல் பிரபஞ்சத்தை பிரஹ்மம் என்று எண்ணுவதும் அக்ஞானம். பிரஹ்ம பிரத்யயம் — பிரஹ்ம ஞானம். இறைவனைவிட்டு தேசம், காலம், வஸ்து இவைகளை மெய்யென்று எண்ணுவது அறியாமை.

அஹமேவேதம் விஸ்வம்—உனது முன் மனைவியாகவும், மகளாகவும், மணவாளனுகவும், பேரன் பேத்தியாகவும், வீடு வாசலாகவும் தெரிகிறதே, அதை என்னவென்று நினைக்கின்ருய்? அத்தனை வடிவமாகவும் ஆன்மாதான் உன்முன் நிற்கிறது என்றுணர். எதிரே நிற்கின்ற ஜெகத்தை இறைவனென்று உன்னு. அப்பொழுது உன்னை ஜகத்து வந்திக்கின்றது. ''தம் வந்தே துவிபதாம் வரம்'' மா. கா. அந்த ஞானியை மனிதனில் சிறந்தவனென்று வணங்குகின்றேன் என்று கௌடபாதசுவாமிகள் உரைக்கின்ருர்.

புரஸ்தாத் — எதிரே. திசையென்னும் மயக்கத்திற்கு ஏதுவாக முன்னும் பின்னும், அக்கம் பக்கமும், வலது இடது புறங்களும், மேலும் கீழும் பிரகாசிக்கின்றது. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்னும் திசைத்தோற்றம் எவ்வாறு காணப் படுகிறது? நீ தன்னை தேகமென்று என்றைக்கு எண்ணுகின்ருயோ அன்றைக்கு உனக்குத் திக்பிரமம் உண்டாகிறது. பிரமம்—மயக்கம். தேகத்திற்குத்தான் முன் பின், வலது, இடது, மேல், கீழ் இவையெல்லாம் கானல்ஜலம்போல காணப்படுகின்றன. எனவே எல்லா இடர்களுக்கும் மூலம் தேகாபிமானம் என்று உணர்.

என் நண்பன் ஒருவன். அவன்—சுவாமின்! எப்பொழுது இறைவன் என்முன் உலகத்தை உண்டுபண்ணுவனே அப் பொழுது இறைவனை யொப்புக்கொள்வேன் என்ருன். ஆக்கல் காத்தல் அழித்தல் இவை முத்தொழில். ஈசனர்

என் முன் இவைகளைச் செய்யட்டும் அவரை நான் வணங்கு வேன் என்றான். அவன் சொன்னது சரி. நான் அவனிடங் கேட்டேன்—நீ இத்தேகத்திலேயே பார்க்க விரும்புகிறாயா வேறு தேகத்தில் பார்க்கவிரும்புகிறாயா என்று மீண்டும் கேட்டேன். ஈசுவரன் பிரளயம் செய்துவிட்டால் நீயும் அதில் அழிந்துபோவாயே யெப்படிப் பார்க்கமுடியும் என்றேன்.

மக்களுக்கு இறைவனிடத்தில் அபிமானமில்லை, தேகத் தில் அபிமானம் இருக்கிறது. இறைவனையடைந்தபோதி னும் உடலைவிடுவதற்கு இஷ்டமில்லை. ஏன் அதனிடத்தில் அத்தனைபற்று? நம்முடைய அபிமானமும் இருக்கட்டும் இறைவனும் இதயத்தில் இருக்கட்டுமென்று எண்ணுகிறார் கள். மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசையென்றபடி. இங்கே யிரு அல்லது அங்கேயிரு. திரிசங்குமாதிரி இராதே. இது பிரஹ்மானந்தயுக்தி. இறைவனுக்கு அகங்காரத்தை அணி கலமாக ஆக்கப்பார்க்கிறார்கள்.

நமது இல்லத்தில் நமது நண்பன் வருகிறான், உறவினர்கள் வருகிறார்கள், வழக்கறிஞர், வைத்தியர் முதலியோர் வருவது போல பிரஹ்மமும் வரட்டும் என்று எண்ணுகிறார்கள். இறைவன் இம்மாதிரி நமது இல்லத்திற்கு வருகிறதில்லை. தேசாபிமானம், காலாபிமானம், வஸ்துஅபிமானம், மேல், கீழ், அக்கம், பக்கம் என்னும் அபிமானத்திற்கு மூலகாரணம் இக்காயந்தான். இக்காயத்துக்குள்ளிருக்கும் நீ யமிர்த வடிவம். இஃதன்னியமாக வேறு பொருளில்லை. இதற்கு வேருகத் தோற்றுகின்றபொருள் இரவில் பூதம் தோற்றுவது போல் தோற்றுகிறது.

பிரஹ்மைவேதம் விஸ்வமிதம் வரிஷ்ட்டம்—ஒன்றுதான் உண்மை, மற்றது பொய். உலகத்தில் துன்பம் வருகிறதே அது துன்பமல்ல. அது ஆன்மா. அது அமிர்தம். அது அருந்துவதற்கு யோக்கியமுடையது.. ஏ ஆத்மதேவ! நீ உறவினனுகவும், பகைவனுகவும், ஜடமாகவும் சேதனமாக

வும் அக்ஞானமாகவும், விக்ஞானமாகவும், வருகின்ருயே, இன்பமாகவும் துன்பமாகவும் வருகின்ருயே உனக்கு வந்தனம் வந்தனம். இம்மாதிரி இறைவன் நிலையை யுணர வேண்டும். ஆனந்தமாக இருக்கவேண்டும். மனிதன் பச்சோந்திமாதிரியாகிவிட்டான். சில மக்கள் குள்ளநரி மாதிரி வாழ்கிருர்கள். யாரை நீ பகைவன் என்றும், உறவினன்என்றும் நினைக்கின்ருயோ அவன் உறவினன் அல்லன், பகைவனும் அல்லன். பின்னே மனிதன். நீ தான் அவன்வடிவமாயிருக்கிருய். இந்த ஞானத்தினுல் ஆன்மா வின் அடைவு உண்டாகிறது.

இரண்டாவது முண்டகத்தின் இரண்டாவது கண்டம் முற்றுப்பெற்றது. இரண்டாவது முண்டகமும் நிறைவேறி யது. (சமாப்தம்)

## மூன்றுவது முண்டகம் முதலாவது கண்டம

### தொடர்ச்சி

இரண்டாவது முண்டகத்தின் முடிவில் இவ்வுலகம் அனைத்தும் பிரஹ்மசொரூபம் எனக்கூறி ஆன்மாவை அறிவித்திருக்கிறது. இனி யந்த பிரஹ்மத்தில் மனதை யெவ்வாறு வைப்பது என்பதை யினிவரும் மந்திரத்தில் உரைக்கப்படுகிறது. இது முண்டக உபநிடதம். குருவாயிலாக முண்டனஞ் செய்யப்பெறுகிறது. முண்டனம் முடியிறக்கும் ஒரு சடங்கு.

மக்கள் உள்ளத்தில் தலைரோமம்போல வாசனை படர்ந்திருக்கிறது முண்டனஞ்செய்து முடியை இறக்குவதுபோல் வாசனையை ஒழித்துக்கட்டவேண்டும். பக்தன் ஒருவன் என்னிடம் சுவாமின் ! நீங்கள் இனிமையான கதைகளைச் சொல்லிச்சொல்லி எங்கள் வீட்டைக்கெடுத்து விட்டீர்கள். எங்கள் பரிவாரம் உங்கள் கதைகளைக்கேட்டு முன்போல வீட்டைக் கவனிக்கிறதில்லை என்று சொன்னுன். நான் அப்பா ! இம்மாதிரி யென் கதைகளைப் புகழ்ந்தவர் யாருமில்லையென்றேன். அவன் சிரித்துக்கொண்டு போனுன்.

தத்வஞானம் முன்னர் மொழிந்தாகிவிட்டது. மீண்டும் வேறு விதமாகத் தத்வஞானத்தைக் கூறுவதற்குக் காரணம் இந்த ஞானம் புண்ணியம்இல்லாத மக்களுக்கு அரிது. ஆகையால் மீண்டும் ''புந: கிரியதே அத்யந்தம் துரவகாஹ்யத்வாத்'' என்பது சங்கரபாஷ்யம். ஒரு மகாத்மா தத்துவத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார். மற்றெருருவன்-மகாத்மன்! எப்போதும் பிரஹ்மந்தானு என்ருன். வேறு சில கதைகளையும் சொல்லும் என்ருன். மகாத்மா—அதைத்தவிர மொழிவதற்கு என்ன இருக்கிறதென்ருர். உண்டதையே யுண்கிறேம், உடுத்துவதையே உடுத்துகிறேம். கண்டதைக் கண்டு களிக்கிறேம். இவைகளில் புதியதைக்காணவில்லை.

வேதாந்தத்தில் மட்டும் புதுமையை விரும்புகிறோம். புதுமை சம்சாரத்தில். ஆத்மா பழமையானது. சத்யம் புதிதல்ல. அனாதி. அதில் வியப்பென்ன? "சத்யம் சநாதனம் வித்தி" சமயோசிதமாலே. சநாதநம் சிருஷ்டிக்கு முந்தியது. "முன்னவனே யானை முகத்தவனே" வள்ளலார். விநாயகப் பெருமானைப்பார்த்து முன்னவனே—முதல்வனேயென்றார். "ஆதிபகவன் முதற்றேயுலகு" பொய்யாமொழி. பழைமையான பரம்பொருள் உலகத்திற்கு நிமித்தம் என்பது குறளின் பொருள்.

பழைமையைப் புதுமைப்படுத்திப்பேசுவதுதான் நமது உபந்நியாசத்தின் பெருமை. அவ்வாறு சுருதியும் நூதன முறையில் சொல்லுகின்றது —

3 2
துவா சுபர்ணா சயுஜா சகாயா
சமாநம் விருக்ஷம் பரிஷஸ்வஜாதே !
3
தயோரந்ய : பிப்லம் ஸ்வாது அத்தி
4
அநஸ்நந் அந்யோ அபிச்சாகசீதி. ம. !

இ—ள்

ஒரு மரத்தில் இருபறவைகள் ஒன்று சேர்ந்திருக்கின்றன. அவைகளில் ஒன்று அரசமரத்தின் பழத்தையுண்கின்றது. மற்றொன்று உண்ணாமல் பார்த்துக்கொண்டு இருக்கிறது.

சமாநம் விருக்ஷம்—சமாநம் ஒன்றுதான். இவ்வுடம்புதான் மரம். "விருஸ்சோநோதீதி விருக்ஷ : என்பது 3 இலக்கணம். எது வெட்டப்படுமோ அது மரம். "அசங்க 4 சஸ்த்ரேண திருடேனச் சித்வா" கீதை. உறுதியான வாளைக்கொண்டு இம்மரத்தை வெட்டு யென்பது கீதையின்பொருள். ஒரு மரத்திலிருந்து மற்றொருமரம் உண்டாவதுபோல ஒரு

ச்ரீரத்திலிருந்து மற்ஞெரு சரீரமுண்டாகிறது. இந்த தருவை வைராக்கியம் என்னும் வாளைக்கொண்டு எப்பொழுது வெட்டி ஞானத்தழலில் எரிப்பாயோ, அப்பொழுது இது மாளும். அஃதில்லையேல் ஒன்றின் பின் ஒன்ருக இது படரும்.

4 4 2
ஊர்த்வமூலம் அத : சாகம்
அஸ்வத்தம் பிராஹுரவ்யயம் ! கீதை.

இக்காயம் என்னும் மரம் மேலே வேரைக்கொண்டது. தலை மேலே. கை, கால், பொறிகள் இவையெல்லாம் கீழே யுள்ளன. இதன் திருநாமம் அஸ்வத்தம். நாளைக்கு இருக்கும் என்று எண்ணவோதிடமில்லை. இந்திரன், சந்திரன், வேந்தன் மந்திரி, வீரன் சூரன் முதலியோர்களை யும் காலன் விட்டபாடில்லை. இவர்கள் எல்லாரும் இறந்து விடுவார்கள் நாம் மட்டும் இறக்கமாட்டோம் என்று எண்ணு கிருயா?

6 ''நிர்ஹிர்த்யபுத்ரம் பிதரம் ஜிஜீவிஷதி'' பா—ம் புதல்வன் இறந்துபோனுன், அவனைக்கையில்ஏந்திக்கொண்டு மயா னஞ் சென்றனர். எரித்து சாம்பலைக் கரைத்துவிட்டு வீடு திரும்பினர். ஆனுல் தந்தைக்கு வைத்தியம் பார்க்கிருர்கள். இது என்ன புதுமை? இவ் அழியும்காயத்தில்தான் இறைவனைத் தேடவேண்டும்.

'துவா சுபர்ண சயுஜா—இந்த் ஒரு விருக்ஷத்தில் ஜீவனும் ஈசனும் வசிக்கின்றனர். ஒரு பார்தீயன் அயல்நாடு சென் ருன். ஒரு விடுதியில் தங்கினுன். அங்கு ஒரு அறையில் அவன் வசித்துவரும் நாளில் அவன் ஊரிலிருந்த மற்ஞெரு நண்பனும் அங்கு சென்று அதே அறையில் வசித்து வந் தான். நெடுங்காலம் நெருங்கி வாசஞ்செய்தும் ஒருவர்க் கொருவர் அறியாதிருந்தனர். ஒருநாள் அவர் தந்தை மகனுக்குக் கடிதம் எழுதி யுன்னுடன் வசிப்பவன் உன் ஊர்க்காரன் என்று அனுப்பினுர். அதைக்கண்டதும் இரு வரும் உசாவி ஒருவராஞர்.

அதுபோல் இச்சரீரம் உணவுவிடுதி. இதற்குள்ளிருக்கும் இதயம் அறை. இதில் வாழும் ஜீவனும் ஈசனும் நண்பர்கள். ''நண்பனே யெங்கள்கோவே நாதனே ஆதிமூர்த்தி'' என்கின்றது தேவாரம். பொருள் தெளிவு. ''என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்'' என்று அப்பர் சுவாமிகளும் செப்புகின்றூர். 'முயற்சி திருவினையாக்கும்' பழஞ்சொல். தேடியவர்க்கு இறைவன் கிடைப்பான். உண்டால் பசிபோகும் என்பதுபோல.

''சமாநம் விருக்ஷம்—இத்தேகமாகிய மரம் அளவுக்குள் பட்டது. இதற்கு வரம்புண்டு. இது மூன்றறை முழம் உயரம் உள்ளது. இரண்டுமணு எடையுள்ளது. நூறு அல்லது ஐம்பது ஆயுள் கொண்டது. இவ்வளவுள்ள தேகத்திலிருக்கும் ஆன்மா அளப்பரியது. இந்த மரம் நதிக்கரையோரம் நிற்கிறது. இது எப்போதுவிழும் என்று தெரியாது. என்ன என்ன செய்தோம் என்று (நீங்கள்) சிறிது எண்ணி பாருமம்மா எமன் வந்தழைக்கும்போது (நீங்கள்) என்ன செய்யப் போரீரம்மா. காலையில் எழுந்திருந்து கண்ணன் கீதையை யோதுமம்மா. பொருள்வெளி.

நாம் யாரிடம் தோன்றினோமோ அந்த அன்னையையும் பிதாவையும் காணோம். யாருடன் ஓடித்திரிந்து படித்தோமோ அவர்களையும் காணோம். ஆற்றில் உள்ள வெள்ளம் ஆற்றங் கரையில் உள்ள மணலைக் கரைத்துக்கொண்டு போவதுபோல நம்முடைய ஆயுள் குறைந்துகொண்டே போகிறது. இன்றைக்கோ நாளைக்கோ என்று இருக்கிறோம். நிரம்பப் பேர்கள் இரவில் தூங்கினுல் காலையில் விழிக்கிறதே இல்லை. ''என்றுமழியும் இக்காயம்'' தாயுமானர். ''தூங்கையில் வாங்கின்ற மூச்சு சுழிமாறிப் போனாலும் போச்சு'' பொருள் வெளி.

இந்நிலையில் உள்ள காயத்தில் என்ன நம்பிக்கை? ஆனாலும் ஒரு நம்பிக்கை. என்னை? இதற்குள் அழியாத

ஆன்மா இருக்கிறது. துவா சுபர்ண — ஜீவன் ஈசுவரர் இருவரும் சுபர்ண்ம். இவர் இருவருக்கும் இரு அழகுடைய இறக்கைகள் இருக்கின்றன. மரம் விழும்போது இந்த இரு பறவைகளும் பறந்துவிடும். தேகம் அழியும்போது இவர்கள் அழிகிறதில்லை. மின்சாரம் திடீரென அணைந்துபோவது போல காயமும் அழிந்துபோகும்.

சயுஜா — இவையிரண்டும் ஒருஜாதியையுடையன. ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது இருக்கும். சாரசபறவை யென்பது ஒரு ஜாதி. அது ஆண் பெண் சேர்ந்துவாழும். ஒன்றைப் பிரிந்து மற்ருென்று வாழாது. அப்பறவையைப் போல இதுவும் கூடிவாழும். ஒரு மகாத்மா இறைவனிடத்தில்—இறைவா ! ''துவாம்விநா நிஸ்சொரூபோஹம் மாம்
2
விநா துவம் கதம் ஸ்தித :'' என்று சொன்னர்.

இ—ள்.

நீ யில்லாதுபோனல் எனக்கு இருப்பேயில்லை, நான் இல்லாதுபோனல் நீ யெப்படியிருப்பாய் என்ருர்.

நிறைவு இல்லையானல் குறைவு எவ்வாறு இருக்க முடியும். ஜீவனிடத்தில் ஈசுவரனும் ஈசுவரனிடத்தில் ஜீவனும் (சயுஜா) எப்போதும் ஒன்ருய் இருக்கிருர்கள். இந்த தேகவடிவ மரத்தில் உள்ள கூட்டில் இருவரும் வாழ்கிருர்கள்.

சகாயெள—இவர் இருவரும் பதி பத்தினியில்லை. ஜீவன் என்னும் போர்வையைப் போர்த்திக்கொண்டு இறைவனே வசிக்கிருன். ஜீவன் ஈசுவரனுக்குத் தேகம். நியம்யன், வியாப்யம். ஜீவன் இறைவனுக்கு அணிகலம். இறைவன் நியாமகன், சரீரி, வியாபகன். எங்கும் நிறைந்தவன். இம் மந்திரத்தில் ஈசனும் ஜீவனும் இரண்டு இடத்திலும் வேறு வேறு நிலையில் இருக்கிருர்களா என்று ஒரு கேள்வி. இவரிருவரும் ஈரிடத்திலிருப்பார்களானல் இருவரும் பரிச்சின்னமாவர். அழிவையும் உறுவர். ஒரு இடத்தில் இருவரும்

இருக்கஇயலாது. இருவரும் இருகாலத்தில் உள்ளவரு மில்லை. ஒருவர் இறந்த பின்னர் மற்றொருவர் பிறக்கிறார் என்பதும் பொருந்தாது.

குடம் படம்போல இருபொருளுமல்ல. பின்னை? ஒன்றைத்தான் ஈண்டு இரண்டு என்று சொல்லுகின்றது சுருதி. சகாயௌ — இருவருக்கும் (கியாதி சமாநம்) கீர்த்தி ஒரு மாதிரிதான். எவ்வாறு? நரநாராயணன் கிருஷ்ணு அருஜுனன் என்பதுபோல. எவர்களுடைய பெயர் இணைத்து சொல்லப்படுகிறதோ அவர்கள் நண்பர்கள் எனப்படுவர். இறைவனும் ஜீவனும் சமான பெயரையுடையவர்கள்.

ஜீவன் இருந்தால்தான் ஈசுவரனிருக்கமுடியும். ஜீவன் இல்லையென்றால் ஈசுவரன் யாருக்கு? தனயன் இருந்தால் தான் தந்தை. ''ஈஸ்வர ஜீவாபாவே தத்வமசி'' ஈசுவரனும் ஜீவனும் இல்லையென்றால் ஒரேபிரஹ்மந்தான். பரிஷஸ்வ ஜாதே—இவர் இருவரும் ஒருவரையொருவர் தழுவியிருக்கிறார்கள். இருவரும் ஒருவராக மேவியிருக்கிறார்கள். அங்ஙனமாயின் இருவர் எங்ஙனம்? இவரிருவருக்கும் வேற்றுமை யாது?

தயோரந்ய : பிப்பலம் ஸ்வாது அத்தி — இவர் இருவரும் சுதாமா ஸ்ரீகிருஷ்ணனைப்போல தோழர்கள். குசேலர் கடலையையுண்டார், கிருஷ்ணன் உண்ணவில்லை. இவர் இருவரில் ஒருவன் லிங்கதேகத்தோடுகலந்து அல்லது காரிய உபாதியோடிருந்து வேறுவேறு சுவையுள்ள கருமப் பலன்களையுண்ணுகிறான். ஆகலின் அதில் விழுந்துகிடக்கிறான்.

அநஸ்நந் அந்யோ அபிச்சாகசீதி—மற்றொருவன் உண்கிறதில்லை. ஆனால் பார்த்துக்கொண்டு இருக்கிறான். சாக்ஷி மாத்திரமாக இருக்கிறான். வீட்டில் இரு எலிகள் இருந்தன. நித்தம் தொல்லைகொடுத்துக் கொண்டிருந்தன. வீட்டார்

எலிக்கூண்டில் ஒரு தேங்காய்ச்சில்லை வைத்து இரவில் அடுக்களையில் வைத்துவிட்டனர். அதிலிருந்த தேங்காய்ச் சில்லைத் தின்பதற்காக ஒரு எலி உள்ளே நுழைந்து அகப் பட்டுக்கொண்டது. மற்றொரு எலி ஆசைக்குள் வராமல் உள்ளே வரவில்லை. அதனால் அவ்வெலி கூண்டுக்குள் அகப் படவில்லை.

வனத்தில் வசிக்கின்ற ஒருவகை வகுப்பினர் வேடுவர். அவர்கள் பசு பக்ஷிகளையுண்பர். ''வனம் உறைவேடன் அருளிய பூஜை மகிழ் கதிர்காம முடையோனே'' திருப்புகழ். கானகத்தில் வாழும் வேடுவர்கள் செய்யும் அர்ச்சனையை உவந்து கதிர்காமத்தில் வாழும் முருகா! என்பது திருப் புகழின் கருத்து. இதனால் வனத்தில் வசிப்பவர்களில் ஒரு வகுப்பினர் வேடுவர் என்பது புலனும். அவர்கள் பறவை யைப் பிடிப்பதற்காகத் தரையில் வலைவீசுவர். இதற்கு இடையில் இரையைத் தூவி வைப்பர். அதையுண்பதற்காக பறவைகள் வலையில் வந்து விழும். எது இரையை யுண்ண வருகிறதோ அது வலையில் அகப்படும்.

கட்டு யாருக்கு? எவன் போகத்தை விரும்புகிறானோ அவனுக்குக் கட்டுண்டாகும். எவன் போகத்தை விரும்ப வில்லையோ அவன் முக்தன். போகம் தீரா இடும்பைதரும். ஒரு அடியவர் வனத்தில் வாசம் புண்ணினார். அங்கு அரசன் பல வித்வான்களோடு சென்றிருந்தான். வித்வான்கள் அடியவரிடம் பல கேள்விகளைக் கேட்டனர். அடியவர் அத் தனைக்கும் பதில் அருளினார். வித்வான்கள் அடியவரை நிரம்ப கல்விமான் என்று உணர்ந்து அரசனிடம் இவர் நம் அரண்மனையில் இருந்தால் நன்றாயிருக்கும் என்றார்கள். அரசன் அவர்கள் கூறியதை மனதில் உன்னி யோகியை அரண்மனைக்கு அழைத்துவந்து ராஜோபசாரம் செய்து வந்தான். கழிந்தன சில காலங்கள். மகாத்மாஇருக்கிற மகிழ்ச்சியைப்பார்த்து சில பொறாமைகொண்டவர்கள் மன்ன

னிடம் இவர் எப்படி யோகி, யிவர் ஆடம்பரத்தைப் பார்க்கும் போது சாதுவாகத் தெரியவில்லையே என்றனர். வேந்தன் பெரும்பாலும் கர்ணசக்ஷுவாகத்தான் இருப்பான். பிறர் சொன்னதைக்கேட்பான். இவர்கள் இவ்வாறு இசைத்ததும் பார்த்திவன் சிவயோகியிடம் வந்தான். மகானுக்கு இலக்கணம் யாதென்ருன். மகான் — வா சிறிது தூரஞ்சென்று வருவோமென்ருர். வேந்தனும் யோகியும் வெளியே சென்ருர்கள். மாலைப்பொழுது வந்தது. மன்னன் போவோம் நகரத்திற்கென்ருன். சிவயோகி — வா பத்திரிநாராயணம் போவோம் என்ருர். நான் இல்லாதுபோனல் அரசு காரியத்தை யார் கவனிப்பாரென்ருன் அரசன். யோகி—வினையின் பயனுக எல்லாம் நடக்கும் வா என்ருர். உணவிற்கு என் செய்வது என்ருன் மன்னன். வினையூட்டும் என்ருர் விமல யோகி. பாசம் மிகுந்த பார்த்திபன் நகரந் திரும்பினுன். பின்னர் மடிந்தான். ஜெகத்பாசத்தையறுத்தசிவயோகி முக்தனுகி சித்திநிலையைப் பெற்ருர்.

எல்லாரும் அவரவர் வினைவழி வருவர். அதன் பயனை நுகர்வர். உடம்பு ஐம்பூதத்தின் விகாரம். இதற்கு அதன் வினையின் விளைவு கிடைத்துக்கொண்டேயிருக்கும். தாய் சேய்க்கு ஊட்டுவதுபோல் ஊழ் உடம்புக்கு ஊட்டும். ஆத்மா நித்தியமாயும் சுத்தமாயும் இருக்கும். அதற்கு அழிவு வராது. இதை நினையாமல் போகத்தில் ஆசக்தியுடையவர்கள் கட்டுண்டு படுகுழியில் விழுகிருர்கள். எவன் தன்னை இன்ப துன்பம் உடையவன் என்றும், செய்பவன் நுகர்பவன் என்றும் எண்ணுகின்ருனே அவன் ஜீவன். எவன் தன்னுடைய சொரூபத்தைத் தெரிந்துகொண்டானே, அவன் அவித்தையிலிருந்து விடுபட்ட பரமாத்மா.

ஞானம் அக்ஞானம் என்னும் இவ்விரு கூறுகளின் நிமித்தம் ஈசனும் ஜீவனும் ஆம். இவரிருவரும் இரு தேசத்தில், இருகாலத்தில் இருவடிவத்தில் இல்லை. பின்னை? அறிவு

அறியாமையால் இருவராக காணப்படுகின்றனர். தனது வடிவத்தில் அறிவும் அறியாமையும் கற்பிதம். ஆன்மா எப்போதும் சின்மயந்தான். அடையவில்லையென்பதும் அறியாமை, அடைந்துவிட்டோம் என்பதும் அறியாமை. நித்தியனுகவும், முக்தனுகவும், சுத்தனுகவும் உள்ளவன் ஈசுவரன். அவன் உண்கிறதுமில்லை, பருகுகிறதுமில்லை, உறங்குவதுமில்லை. ஏன்? அவனுக்கு லிங்கசரீரமில்லை. லிங்கசரீர உபாதியையுடைய ஜீவன்தான் உண்கிருன். ம. 1

தொடர்ச்சி

ஜீவனுடைய நிலையென்னே? மரம் ஒன்று, பறவையிரண்டு. ஜீவன் ஈசன். ஜீவன் என்னும் பறவை மரக்கனியை நன்றுநன்றெனத்தின்னும். ஈசுவரன் என்னும் பறவை வியங்கியப்பொருளாகத் தின்னுது பார்த்துக்கொண்டிருப்பதால் அது சாட்சிமாத்திரம். இந்நிலையில் ஜீவன் இன்பதுன்பவடிவமாயிருக்கிருன். அவனுக்கு அந்நிலையெதற்காக? அந்நிலையில்இருந்து எங்ஙனம் விடுபடப் போகிருனென்று இனிவரும் இருமந்திரங்களினுல் சுருதியியம்புகின்றது—

சமாநே விருக்ஷே புருஷோ நிமக்3ந :
அநீஸயா சோசதி முஹ்யமாந : !
ஜுஷ்டம் யதா பஸ்யதி அந்3யமீஸம்
அஸ்ய மஹிமாநம் இதி வீதசோக : 2

இ—ள்

ஒரே மரத்தில் (இறைவனேடு வசிக்கும்) ஜீவன் தன்னுடைய ஏழ்மையால் மோஹத்தில் விழுந்து கவலை கொள்கிருன். அவன் எந்த வேளையில் தனக்கு வேருன இறைவனுடைய பெருமையையுணர்கிருனே, அந்தவேளையில் கவலையிலிருந்து விடுபடுகிருன்.

சமாநே விருக்ஷே — ஒரே காயத்தில் இறைவனோடு இணைந்திருந்தும் நான் அக்ஞானி, நான் பாவி, நான் காமி, நான் கோபி, இழிந்தவன், குறைந்தவன், மூடன், அறிவிலி யென்றெல்லாம் தன்னை யெண்ணித் துயரம் உறுகிறான். தன்னை வாழ்த்தவோ தாழ்த்தவோ கூடாது என்பது நன் மொழிக்களஞ்சியம் ஐநூறு. ஜீவன், சமுத்திரத்தில் விழுந்து கிடக்கின்றான். அதில் மிதக்கின்ற பொருளைத் தனது என்று பற்றுகிறான். கடலில் மூழ்குகிறான். இவன்மேல் மிகுந்த பாரம் ஏறியிருக்கிறது.

நான் தேகம், இது எனது தந்தையின் நாமம் என்பது இவனது அறியாமை. காசியில் சிவகுமாரசாஸ்த்ரியென்று ஒரு பெரிய வித்வான் இருந்தார். அவர் மகனுக்கு வாசஸ்பதி யென்று நாமம் சூட்டினார். ஆனால் அவனுக்குக் கையெழுத்து கூடப் போடத்தெரியாது. பெயரில் என்ன மகத்வம் இருக் கிறது. மக்கள் என்ன சொல்கிறார்கள்? எங்கள் தந்தை கோடீஸ்வரன் என்கின்றனர். பிரச்சனையென்னவென்றால் உனக்கு குடிக்கிறதற்குக் கூழாவது கிடைக்கிறதா என்பது தான். உடலில் உள்ள உருவம் அழகு, நிறம், குணம் இவைகளில் யார் மூழ்கியிருக்கிறார்களோ அவர்களுக்குக் கதி — சாவு, பிற, ஒழிந்துபோ, அழிந்துபோ, மடிந்துமாள் என்பதுதான்.

சமாநே விருக்ஷே புருஷோ நிமக்ந :— மானம் அவ மானமுள்ள தேகவடிவ தருவில் எவன் அழுந்தியிருக்கிறானோ, அவனது மனக்கவலை மாற்றலரிது. தன்னை ஜீவன் என்று என்றைக்கு எண்ணினானோ அன்றைக்கு இன்பமும் துன்ப மும் உள்ளானே. மோகம் கவலைநிறைந்தமனிதனை மூர்ச்சித நிலைக்குத் தள்ளுகிறது. அதனால் அவன் தடம்புரண்ட வண்டிபோல் தடுமாறுகிறான். ஜன்னி வந்தவன் புலம்புவது போல் நான் ஒன்றுக்கும் உதவாமல் போய்விட்டேனே யென்று சொல்லுகிறான்.

எப்பொழுது உடல் வலிமை குன்றிவிடுமோ அப்பொழுது பிதாவின் பேச்சை மகன் கேட்கிறதில்லை. அப்போது தந்தை கவலைப்படுகிறார் என்மகன் என் சொல்லைக் கேட்கிறதில்லையேயென்று. இனி நானிருந்து என்ன பயன்? ஆகா, நானிருந்தவாறென்னே, இவ்வாறு எண்ணி நெஞ்சம் புண்ணாகி மரணத்தை நினைக்கிறான். பாரசமணியென்னும் ஒரு நூலில் ஒரு கதை வருகிறது — குருவும் சீடனும் ஒரு இடத்தை நோக்கிச் சென்றனர். அவ்வழியில் ஒரு நாய் இறந்துகிடந்தது. சீடன் — குருதேவ! என்ன நாற்றம் என்றான். குரு — சீடனே! இதனுடைய பல் எவ்வளவு தூய்மையாக இருக்கிறது பூர்வஜென்மத்தில் என்ன புண்ணியஞ்செய்ததோ இந்நாயிக்கு இவ்வளவு வெண்ணிறமான பல் கிடைத்திருக்கிறதேயென்றார். குருநாதருடைய பார்வை புனிதமான பல்லில் இருந்தது, சீடனுடைய திருஷ்டி நாற்றம் பிடித்த மேனியில் இருந்தது. எண்ணத்தின் மாற்றந்தான் ஜீவனைக் கவலைநிறைந்த அவலக்கடலில் தள்ளுகின்றது.

அநீசயா ஸோசதிமுஹ்ய மாந :— மோஹத்தில் அகப்பட்டுக் கவலையுறுகிறான். மோஹம் எதையும் செய்யும். சிலகாலம் பூதமாக்கும், சிலகாலம் பிரேதமாக்கும், சிலகாலம் மனிதனாக்கும், சிலகாலம் பசு பறவையாக்கும். மோஹத்தினால் ஜீவன் பல பிறவிகளைப் பெறுகிறான்.

வெகு ஜென்மபுண்ணியத்தால் மனுடஜென்மம் கிடைத்திருக்கிறது. இதில் எப்பொழுது அஹிம்சை, சத்யம், அஸ்த்தேயம்—(பிறர்பொருளைவிரும்பாதிருத்தல்) பிரஹ்மச்சரியம், அபரிகிரஹம், தியாகம், சௌசம், சந்தோஷம், சுவாத்யாயம், ஈசுவர பிரணிதானம் யமம், நியமம், சமம், தமம் முதலிய சாதனங்களைப்பெற்று மனிதன் அடங்கப்பெறுவானோ, அப்பொழுது இறைவனைத் தியானஞ்செய்கிறான். அதனால் அவனுக்கு உண்மையுணர்வு உதிக்கின்றது.

அவன் மனதில் தேகம் என்னும் மரம் உபாதியென்று தெரிகிறது. நான் பறவை. இப்பறவையென்னுந் தன்மை யும் கற்பிதம். உண்மையில் நான் பரமாத்மசொரூபம் என்று எண்ணுகிறுன். அப்பொழுது அவன் அசம்சாரியாகி விடுகிறுன். அசம்சாரியானதும் அவனுக்குப் பசிதாகம் உண்டாகிறதில்லை. ம. 2

தொடர்ச்சி

ஜீவன் இச்சோகமோகத்திலிருந்து எங்ஙனம் விடுபடு கிறுன் என்பதை மீண்டும் வலியுறுத்திக் கூறுகின்றது சுருதி.

3
யதா பஸ்ய: பஸ்யதே ருக்ம வர்ணம்
கர்த்தாரம் ஈசம்புருஷம் பிரஹ்ம யோநிம்,
3 4
ததா வித்வாந் புண்ய பாபே விதூய
நிரஞ்ஜந : பரமம் சாம்யம் உபைதி. 3

இ—ள்.

எப்பொழுது திருஷ்டா ஒளிமயனுக இருந்து நான்முகன், நாரணன் முதலியோரை ஈன்ற பரம்பொருளைப் பார்க்கி ருனே, அப்பொழுது, புண்ணிய பாவத்திலிருந்து விடுபட்டு பாவபுண்ணியமற்ற மேலான சாம்யநிலையை அடைகிறுன்.

யதா பஸ்ய :— பார்க்கிறுன். பார்ப்பவன் யார்? எவனுக்குக் கண்ணிருக்கிறதோ அவன் பார்க்கிறுன். குருடன் எதைப்பார்க்கப்போகிறுன்? கண்ணில்லாதவன் குருடனல்ல. பின்னே? கருத்தில்லாதவன் குருடன். சூரதாசுக்குக் கண்ணில்லை, ஆனுல் கருத்திருந்தது. பிருந்தாவனத் திற்குச்சென்று முரளிதரனையடைந்தார். சம்சாரத்தில் எத்தனை விஷயங்கள் இருக்கின்றனவோ அத்தனை விஷயங் களும் செல்லுந்தன்மையன. ''சம்சரதீதி சம்சார :'' எது நகர்ந்துகொண்டே போகிறதோ அது சம்சாரம். சவலைப் பிள்ளைமாதிரி யிவ்வுலகம். நழுவிக்கொண்டேபோகும். பாட்டியிருந்தாள், அன்னையிருந்தாள், பாட்டன் இருந்தான்,

நேற்றிருந்தார். இன்றில்லை. இவர்களுக்காக ஆகா என்பது முறையில்லை. எது நழுவுகிறதில்லையோ அது நமது சொரூபம். எதனோடு எப்போதும் சம்யோகம் உண்டாகிறதில்லையோ அது சம்சாரம் என்பது மற்றொரு இலக்கணம்.

பஸ்ய: பஸ்யதி—பஸ்ய: சாதகன், வித்வான் பஸ்யதி—பார்க்கிறான். எதைப் பார்க்கிறான்? ருக்மவர்ணம் — தங்கமயமான புருஷன் விக்ஞானமயன். விக்ஞானமயகோசத்தில் இருப்பதால் இவன்தான் கர்த்தாபோக்தா. இவனிடத்தில் உள்ள கர்த்ருத்வ போக்த்திருத்வத்தையெடுத்துவிட்டோமானால் இவனே ''விரஜம் பிரஹ்ம நிஷ்களம்'' ஜோதிவடிவமானவன். அதனால் ருக்மவர்ணம்—தங்கத்தைப் போல மேனியையுடையவன் என்பது கருத்து. ''பொன்னார் மேனியனே'' சுந்தரமூர்த்தித் தேவாரம். பொருள்வெளி. அப்படிப்பட்ட ஒளிமயபரமாத்மா உள்ளத்தின்கண் ஒளிவீசிக் கொண்டிருக்கிறார் என்பது குறிப்பு.

கல்வியறிவிற்சிறந்த ஒருவன் தோணியில் உலாவச் சென்றான். அவன் ஓடம் ஓட்டியிடம் இலக்கியம் தெரியுமா என்றான். ஓடம் ஓட்டி தெரியாது என்றான். அறிஞன்—விக்ஞானசாஸ்த்ரம் படித்திருக்கிறாயா? ஓடம் ஓட்டி — ஐயா! அதுவும் படிக்கவில்லையென்றான். அறிஞன் — பூகோளம் தெரியுமாவென்றான். மாலுமி—அதுவும் தெரியாதென்றான். அறிஞன்=உனது அரையாயுள் பாழாகிவிட்டது என்றான். இக்கேள்வி ஆற்றில் தோணி செல்லும்போதே நடந்தது. இதற்குள் புயல் வந்தது. மாலுமி—ஐயா உமக்கு நீந்தத் தெரியுமா என்றான். அறிஞன்—தெரியாதென்றான். மாலுமி — உம்முடைய வாழ்நாள் முழுவதும் பாழாய்ப்போயிற்று என்றான். காற்று வந்து தோணியைக் கவிழ்த்தது. அறிஞன் நீரில்மூழ்கி மடிந்தான். மாலுமி நீந்திக்கரையேறி மகிழ்வுடன் வீடு சென்றான்.

இதுபோல் எவன் இறைவனையறியவில்லையோ அவன் வாழ்க்கை முழுவதும் அடியோடு கவிழ்ந்துவிடும். அவன் அவசியம் இப்பவக்கடலில் மூழ்குவான் என்பது திண்ணம். யதா ''ஏவம்பூத காலோ துர்லப:'' இன்றைக்கே வருமோ என்று ஒரு பக்தன் ஏங்குகிருன். ''இன்று வருமோ நாளைக்கே வருமோ'' என்கின்ருர் இராமலிங்கசுவாமிகள். நல்லகாலம் வருவது அரிது. குருபரன் கிருபை யாருக்கு இருக்குமோ அவரே பெரியவர். வைத்தியர் அறுவைச் சிகிச்சை செய்து கண்ணுடிகொடுக்கிருர். அதன் பின்னர் பொருளையறிகின்ருர்கள்.

அதுபோல் குருநாதன் சாதனவாயிலாக உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, பாவம் முதலிய தோஷங்களை அறுவைச் சிகிச்சை செய்து ஞானக்கண்ணை யாருக்கு அளிக்கின்ருரோ அவர் தனது இதயத்தில் ஜோதிவடிவ பிரஹ்மத்தை அறிகிருர். ''அவனருளாலே அவன்ருள் வணங்கி'' என்றபடி. குருபரன் அருள்இருக்குமாயின் அரியதும் உரியதாகின்றது. தூரத்தில் உள்ளதும் சமீபமாகின்றது.

பஸ்ய :— உன்னுடைய வேலை பார்ப்பதுதான். தெரிகிறதைக் கெடுக்கக்கூடாது. ''கெடுப்பதொழி'' ஔவையார். பிறரைக் கெடுப்பதை யொழித்துவிடு என்பது அன்னையின் அருள்வாக்கு. எப்பொழுது மனிதன் இயல்பை மாற்ற விரும்புகிருனே அப்பொழுது துயரத்தை உறுகிருன். இறைவன்காரியம் நமக்குப்பிரியம் இல்லாமல் போகும் போது மாற்றவேண்டும் என்ற எண்ணம் மனிதனுக்கு உண்டாகிறது. இறைவன்காரியத்தை மாற்றவேண்டும் என்று எண்ணுவது மனிதன் அதிகாரத்திற்குப் புறம்பானது.

நாடகமேடையில் இருப்பவர்க்குக் காட்சியைக்காண்பது தான் வேலை, மேடை யெப்படியமைக்கவேண்டும், எந்தப் பாத்திரத்தை யழைக்கவேண்டும். எப்படி கோலம் பூண வேண்டும் என்பது அல்ல. உன்னுடைய வேலை பார்ப்பது

தான். அது மரணக்காட்சியாக இருந்தாலும்சரி, திருமணக் காட்சியாக இருந்தாலும்சரி, ஈரிடத்திலும் இன்பத்தை நுகர். அதிஷ்ட்டானத்தின் திரையிலிருந்துகொண்டு சுவயம் பிரகாச ஆன்மா விளங்குகின்றது. ஆண்டு காட்சிக்கு சத்வம் மகத்வமில்லை.

பஸ்யதீதி திருஷ்டா. பஸ்ய : என்னும் சொல் வைதிக வியாகரண முறைப்படி வந்திருக்கிறது. பாணினீய முறைப் படியல்ல. பாணினீய முறைப்படி பஸ்யதி என்று வரும். பஸ்யதி—பார்க்கிருன். ருக்மவர்ணம் சுவயம் பிரகாசம். தங்கத்தை அதன் ஒளியைக்கொண்டு அறியலாம். அது போல் (ஒளி) பிரகாசத்தைக்கொண்டு பிரஹ்மத்தைப் பார்க் கலாம். தங்கஒளி யொருபோதும் குறைகிறதில்லை. அதனுல் பிரஹ்மத்திற்கு உவமானமாக உரைக்கப்பெற்றது. ஸ்வர்ண மயம், ஹிரண்யமயம், ஹிரண்யகர்பன், ஹிரண்யஸ்மஸ்ரு என்றெல்லாம் சுருதியில் சொல்லியிருக்கிறது. பிரஹ்மம் சுவயம்பிரகாசம் என்பதுதான் இத்தனைக்கும் பொருள்.

கர்த்தாரம் ஈசம் — அது சகலஉலகத்தையும் உண்டு பண்ணி நியமனஞ் செய்கின்றது. புருஷம், பிரஹ்மம் அதுதான். அது சேதனம். யோநிம் — அவ்யாகிருதம். உலகத்தில் கர்த்தா இல்லாமல் காரியம் நிகழுமானுல் அதற்கு மகத்வமில்லை. கொத்தன் இல்லாமல் நாம் வீடு கட்டுவதுபோல. மேலேயிருந்து ஒரு சவம் மனிதன்மேல் விழுந்தது. அவன் கை யொடிந்தது. பாவம் யாருக்கு உண்டாகும்? பிணத்திற்கு உண்டாகுமா? வினை செய்பவ னிடத்தில் நான் செய்கிறேன் என்று அபிமானம் நேருமானுல் பாவம் பற்றும். கர்த்தா இல்லாமல் புண்ணிய பாவம் உண்டாகாது.

கர்மத்தின் உபாதியால் யாரைக்கர்த்தாவென்று சொல்லுகிருேமோ அவனே இன்ப துன்பத்தின் உபாதியால்

போக்தாவென்று சொல்லப்படுகிறது. கர்த்தாவும் போக்தாவும் இருவர் அல்லர். செய்யும் தன்மையும், நுகரும் தன்மையும், விக்ஞானமய கோசத்தினுலும், ஆனந்தமய கோசத்தினுலும், உண்டாகின்றன. இவையிரண்டும் ஜீவனிடத்தில் கற்பிக்கப்படுகின்றன. ''கோசோபாதி விவிக்ஷாயாம் யாதி பிரஹ்மைவ ஜீவதாம்'' கோசத்தைப்பற்றிப் பேசவேண்டுமானுல் பிரஹ்மத்தை ஜீவன் என்று சொல்லவேண்டும். உபாதியைக்கொண்டு சொல்லும்போது பிறபொருள் இல்லாததால் பிரஹ்மத்தை ஜீவனிலையில் வைத்துப் பேசவேண்டியிருக்கிறது. நியந்தா, நியமனம் பண்ணுபவன் இல்லாமல் ஜகத்தில்லை. கருமம், போகம், செயல் இவையெல்லாம் ஜீவன் இல்லாமல் நிகழமாட்டா. அதுபோல் ஈசுவரன் இல்லாமல் சிருஷ்டியுண்டாகிறதில்லை.

யோநிம்—பிரகிருதி இறைவனும் அதுதான். நெல்லு, புல்லு, கோதுமை, வரகு, கேப்பை முதலியன காரியம். ஒருவிதை நிலத்தில் விதைத்தால் அது நூறு விதைகளைக் கொடுக்கின்றது. முதல்விதை நஷ்டமான பின்னர் முளையுண்டாகிறது. பரமாத்மாவின் விசேஷம் என்னவென்ருல் உலகத்திற்குக் காரணம் இறைவன்தான். ஆனுல் அவருக்கு அழிவுண்டாகிறதில்லை. உலகரூப மரத்திற்கு உடையவன் வித்தாக இருந்தாலும் அவன் அழியவோ மாறவோ ஆகிறதில்லை. உணர்வுமயஆன்மா உள்ளபடியாக இருக்கும். ''ஒரு படித்தாயிருக்கும் உடையவனே'' யென்றபடி.

உலகத்திற்குக் கர்த்தா நியந்தா — நியமனஞ் செய்பவன் அந்தர்யாமி ஈசுவரனே. எவன் ஒருவன் இவ்வுண்மையையுணர்வானே அவன் பவக்கடலில் இருந்து கரையேறுவான். ஒருமுறை காசியில் பண்டிதர்கள்கூடி விவாதம் நடத்தினர். அவர்களில் ஒருவர் நீலமேகஆசாரியர். அவர் இயல்பாக எழுந்து, ஜீவன் பிரஹ்மசொரூபமானுல் ஜீவனிடத்தில் உள்ள குணங்குற்றங்கள் பிரஹ்மத்தினிடத்தில் பொருந்துமேயென்ருர்.

இதைக்கேட்டதும் கமலாகாந்தர் என்ற பண்டிதர் சிரித்தார். பண்டிதர்கள் சிரிப்புக்குக் காரணம் வினவினர். கமலாகாந்தர்—ஜீவனும் பிரஹ்மமும் ஒன்று என்று ஏற்றுக் கொள்ளுங்கள், பின்பு இருவரில் யார் பலவானே அவன் குணம் எஞ்சிநிற்கும் என்றார். கங்கையில் விழுந்த சாக்கடை நீர் சாக்கடைநீராக இருக்கிறதில்லை. கங்கையாகிவிடும். எதுவரை நம்மை தனித்தனியாக எண்ணுகிறோமோ அது வரை பரிச்சின்னமாயிருக்கிறோம். அதுவரை குணங்குற்றங் கள் நம்மிடம் இருக்கின்றன.

ததாவித்வாந் புண்ய பாபே விதூய — சலவைக்குப் போட்ட ஆடைபோல் மிளிர்கின்றான். பாவ புண்ணியம் ஞானியைப் பற்றுகிறதில்லை. பெண்அன்னம், குளிர்காலச் சந்திரன், பால் இவைகளைப்போல உள்ளும் புறமும் ஞானி பொலிவடைகிறான். ''அறிந்தவன் மயங்கானே'' என்றபடி.

காலகூட விஷமுடைய கருநாகம் சந்தனமரத்தில் ஒட்டி யிருப்பினும் சந்தனம் தன் குணம் மாறாது. விடாதென்பது பொருள். ''கடல்போல் கலங்காதிருப்பவனே கனிந்த ஞானி'' என்பது சமயோசிதமாலை. பொருள்வெளி. வேட்கையுடை யவன் தனம் வரட்டும் தரித்திரம் வேண்டாம் என்று விரும்பு வான். கல்யாணஞ்செய்யவேண்டும் கலகம் வரக்கூடாது என்று எண்ணுவான். இது பொருந்தாத விஷயம். புண்ணி யத்தோடு பாவமும், பாவத்தோடு புண்ணியமும் கலந்து தானிருக்கும்.

நீ பயிர்செய், சமையல்பண்ணு, யக்ஞம்செய். எதைச் செய்தாலும் கொஞ்சம் கொஞ்சம் பாவம் அவசியம் உண்டா கும். சிறிய உயிர்கள் மடியும். சுவர்க்கம் அசோக விடுதிக் குச் சமானம். பணம் இருந்தால் விடுதியில் தங்கலாம், இல்லையேல் வெளியில் தள்ளிவிடுவார்கள். அதுபோல் புண்ணியம் இருந்தால் சுவர்க்கத்தில் இரு. இல்லையேல்

கீழே தள்ளிவிடுவர். முக்தி நமது வீடு. யாரும் தள்ளுவ தில்லை. மாமியார் வீட்டிலும் கூசித்தான் இருக்கவேண்டும். மாமியார் மாமனுர் நேசமாக இருந்தாலும் மைத்துனன், மைத்துனி துவேசமாக இருப்பார்கள்.

பிரம்ஹ்மமும் முக்தியும் நமது வடிவமாதலால் யாருக்கும் வெறுப்புவராது. ''ஞாத்வா தீரோ ஹர்ஷ சோகௌ ஜஹாதி'' ஞானவீரன் தனது சொரூபத்தையறிந்து வாட்டமும் மகிழ்ச்சியும் இன்றியவனுக இருக்கிறுனென்பது சுருதிப் பொருள். இரவியினிடத்தில் இருள் இராதது போல ஆன் மாவின்கண் பாவபுண்ணியம் இருக்கிறதில்லை. இவை யிரண்டும் மனவடிவ துணியில் இருக்கின்றன. வடமாநிலங் களில் ஒலிப்பண்டிகை கொண்டாடுவார்கள். பல நிறத்தில் உள்ள பொடிகளைக்கலந்த தண்ணீரை மக்கள்மேலேயடிப் பார்கள். அது வேஷ்டியில் படுகின்றது. வேஷ்டி களைவது தானே. மலின நீர்பட்டாலும் புனிதநீர் பட்டாலும் ஆடை யில்தான் படுகின்றன. இம்மாதிரி ''ஏவம் விதி பாபம்கர்ம ந ஸ்லிஷ்யதே'' சுருதி. ஈண்டு பாவகர்மம் என்றதால் புண்ணியகர்மத்தையும் கொள்ளவேண்டும். ந ஸ்லிஷ்யதே = பற்றமாட்டா என்பது பொருள். ''பத்மபத்ரம் இவ அம்பசா'' கீதை. ''நீடு தாமரையிலைநீர் நிகராவாரென்ற வரோ'' கீதாசாரதாலாட்டு. பாவகர்மமும் புண்ணியகர்மமும் பாவனஞானியைப் பற்றமாட்டா என்பது பொருள்.

''ததத்திகம<sup></sup> உத்தரபூர்வயோ : அகயோ : அஸ்லேஷ விநாசௌ தத்வியபதேசாத்'' பி—சூ. ஆத்மாவை பரமாத்ம ரூப்மாக அறிந்தபின்பு முன் செய்த தீவினையும், இனிவரும் தீவினையும் நாசம் உறும், மற்றது பற்றமாட்டாது என்பது பொருள். மனதோடு கூடினவனுக்குப் புண்ணிய பாவமுண் டாகும். மனம் நானல்ல என்றவுடனே கர்த்ருத்வம் நீங்கி விடுகின்றது. ஒருபக்தன்—

யத் கிருதம் யத் கரிஷ்யாமி தத்சர்வம் ந மயா கிருதம்
4
துவயாகிருதம் துவம் பலபுக் துவமேவ மதுசூதந ! 11

என்று சொல்லுகின்றான். ஹே மசூதன ! நான் என்ன செய்தேனோ. பின்னர் என்ன செய்வேனோ, அவையெல்லாம் நான் செய்யவில்லை. நீதான் செய்கிறாய். ஆகலின் அதற்குரிய பலனும் உனக்கே உரித்தாகுக என்பது பொருள்.

நிரஞ்ஜந :— எல்லாம் புனிதமாயின. அரசன் ஒரு அபராதிக்கு அஞ்சு லட்சம் பொருள் தண்டம் விதித்தான். குற்றவாளி — ஐயா என்னுடைய உடைமைமுழுவதும் அரசாங்கத்திற்குக் கொடுத்துவிட்டேன். மீதியிருப்பதையும் நீங்கள் எடுத்துக்கொள்ளலாம் என்றான். குற்றம் அவனைப் பொருந்தவில்லை. இன்பதுன்பத்திற்கு ஒரு வரலாறு—இன்ப துன்பத்திற்குக் காரணம் நல்வினை தீவினை, நல்வினை தீவினைக்குக்காரணம் அந்தக்கரணத்தின் அபிமானம். அந்தக்கரணத்திற்குக் காரணம் சம்ஸ்காரம். அதற்குக்காரணம் அக்ஞானம். அது நஷ்டம் ஆகிவிட்டால் (வரலாறு) பரம்பரை அழிந்துவிட்டது. அப்பொழுது ஆன்மா நிரஞ்ஜனம், நிர்மலம், புனிதமாகிவிட்டது.

அஞ்ஜந :— கண்ணிலிடும் மை, மலம். கண்ணுக்கு சமானம் பிரஹ்மம். அதில் அஞ்ஜனம் மைபோல மாயை. நிரஞ்ஜனத்திற்குப் பொருள் மாயாரஹிதம்.

பரமம்சாம்யம் உபைதி — துவைதத்தை நிமித்தமாகக் கொண்ட சாம்யம் சிறியது. தாழ்த்தப்பட்டது. மேலானதும், இனிமையானதும் அத்வைதமானதுமான பிரஹ்மசாம்யம் மிகச்சிறந்தது என்பது சங்கரபாஷ்யத்தின் கருத்து. துவைதசாம்யம் என்னது? வைணவர்கள் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரத்தை விட்டுவிட்டு மற்றையவைகளில் ஜீவேஸ்வரர்க்கு சாம்யம் ஒப்புக்கொள்கின்றனர்.

ஏனெனின், இத்தொழில் இறைவன்தான் செய்ய இயலும், மற்றையவர்கள் செய்யஇயலாது என்கின்றனர். ''ஜகத்வியாபார வர்ஜம்'' பி—சூ. ஈண்டு ஜீவனுடைய அநைஸ்வரியத்தையும் இறைவனுடைய ஐஸ்வரியத்தையும் நீக்கிவிட்டு எஞ்சிநிற்கும் சாம்யத்தை சங்கரமதம் சாற்று கின்றது. துவைதசாம்யம் உபாதியுடையது. அத்வைத சாம்யம் உபாதியின்றியது. ம, 3

தொடர்ச்சி

மேலான சாமியநிலையைப் பெற்றவர் நிலை என்னவா கிறது என்பது இனிவரும் மந்திரத்தில் உரைக்கப் படுகிறது.

பிராணோ ஹி ஏஷ ய : சர்வ பூதைர் விபாதி (4, 4)
விஜாநந் வித்வாந் பவதே நாதிவாதி ! (4, 3)
ஆத்மகிரிட ஆத்மரதி : கிரியாவாந்
ஏஷ பிரஹ்மவிதாம் வரிஷ்ட : 4 (3)

இ—ள்

எல்லாவடிவமாகத்தோற்றுகின்றபிராணனை அறிந்து அறிஞன் அதிவாதியாகிறதில்லை. இவன் தன்னிடத்தில் விளையாடுபவன், தன்னிடத்தில் இன்புறுபவன். கிரியாவான், இப்புருஷன் பிரஹ்மஞானிகளில் சிறந்தவன்.

பிராணோஹி ஏஷ — இந்த பரமாத்மா உன்னுடைய பிராணன். பிராணனுக்குப்பொருள் (ஜீவனம்) வாழ்க்கை. மிகுந்த பிரியமுடையது. விருப்புக்கு விஷயம் ''பிராணஸ்ய பிராண :'' என்று சுருதி கூறுகின்றது. பிராணனுக்கு ஒளியை அளிப்பது, பிராணனுக்கு இருப்பிடம். இதுதான் ஆன்மா.

சர்வைர் பூதைர் விபாதி — பிரஹ்மா முதல் புல் ஈருக அதுதான் விளங்குகின்றது. எல்லாவடிவமாகவும் விளங்குகின்றது. நகையினுல் பெண் இலங்குகின்ருள் என்பதுபோல் அல்ல, பின்னே வனிதைவிளங்குகின்ருள் என்பதுபோல.
4

''லக்ஷணேர் விபாதி'' ச. பா. சிருஷ்டி, திதி, லய வடிவமாக விளங்குகின்றது. படைப்பும் பரமாத்மா, பாலனமும் பரமாத்மா, துடைப்பும் பரமாத்மா. முத்தொழிலுக்குரிய மூவரும் பரமாத்மா. அயன்வடிவமாக ஆக்கலும், ஹரிவடிவமாகக் காத்தலும், அரன்வடிவமாக அழித்தலும் அதுதான் செய்கின்றது. அது—பிரஹ்மம். அந்தப் பரமாத்மா உனது ஆத்மாவாக இருக்கிறது.

விவிதம் பாதி—வேறு வேறு ரூபமாக (பாதி) தோற்றுகிறது. பல வடிவமாக முன்னிற்கிறது. நிலமாகவும், நீராகவும், நெருப்பாகவும், காற்ருகவும் விசும்பாகவும் தோற்றுகிறது. இருளாகவும் ஒளியாகவும் அது தோற்றுகிறது. மனம், புத்தி, நாமரூப வடிவமாகவும் தோற்றுகிறது. இதை இவ்வாறு அநுபவிப்பவன் நாதிவாதியாகிறதில்லே.

பவதே நாதி வாதி— ஒருவன் சொன்னுன்—நான் பாவியென்று. எதிரி ஆம் என்ருர். மற்ருெருவன் நான் குணசீலன், அதற்கும் ஆம் என்ருர். ஞானி எதற்கும் நான் அந்நியமில்லேயென்ருன். ''ஜோதியனே ! துன்னிருளே ! தோன்ருப்பெருமையனே'' மணிவாசகம். ஜோதிவடிவமும், இருள்வடிவமும், உத்பத்தியாகாத பெருமையுடையவனும் நீதான் என்பது திருவாசகத்தின் கருத்து.

அதித்ய சர்வாந் வதிதும் சீலம் யஸ்ய இதி அதிவாதி. ந அதிவாதி இதி நாதி வாதி. எல்லோருடைய பழக்க ஒழுக்கங்களேத் தள்ளிவிட்டுப்பேசுபவன் அதிவாதி. அவ்வாறு செய்யாமல் எல்லாருக்கும் ஆமாம் போடுபவன் நாதிவாதி. நீ தன்னே யெப்படி நினேக்கின்ருயோ நானும் உன்னே யப்படி நினேக்கின்றேன் என்ருன். சாந்தோக்ய உபநிடதத்தில்

இதற்கு வேறுவிதமாகப் பொருள் பண்ணியிருக்கிறது ''ஏஷ ரூப அதிவததி ய:சத்யேந அதிவததி'' நாமம் முதல் பிராணன் ஈருக உள்ள சிருஷ்டியை (மித்யா) பொய்யென்று தள்ளி விட்டு உண்மையான சத்யம் பிரஹ்மம் அது நான் என்று எவன் சொல்லுவானே அவன் அதிவாதி. அம்மாதிரி சொல்லுபவர் மகாத்மா. ஈண்டு மகாத்மாவைத்தான் நாதி வாதியென்று சொல்லப்படுகிறது. ஏன்? அவர் எதையும் தனக்கு அந்நியமாகவும் அவைகளுக்குத் தன்னை வேருகவும் சொல்லுகிறதில்லை. அதனுல் அவர் (மகான்) நாதிவாதி யெனப்படுவர். அங்ஙனமாயின் ஈரிடத்திலும் பொருள்வேரு? இல்லை. பின்னை? ஈரிடத்திலும் உண்மையான சத்தியம் பிரஹ்மம். அது நாருக இருக்கிறேன் என்பதுதான். இதனுல் விரோதம் ஒன்றுமில்லை.

ஆத்மகிரீட :— குழந்தைகள் விளையாட்டுச் சாமான் களோடு விளையாடுகின்றன. சம்சாரிமனிதர்கள் பெண்டு பிள்ளை உறவினர்களோடு விளையாடுகின்றனர். பக்தன் பகவானேடு விளையாடுகின்ருன். ஞானி தன்னேடு விளையாடு கின்ருன். பகவான்சங்கரன் பிரளயத்தோடு விளையாடுகிருன். பிரளய காலத்தில் உண்டாகும் பயங்கரமான கர்ஜனையில் சரஉயிர்களும் அசரஉயிர்களும் ஆடி, அலறி அழிந்துபோகும் போது யாருக்குச் சிறிதளவேனும் கலக்கமில்லையோ அவர் மகாத்மாவென்று மகான்கள் சொல்லுவார்கள்.

இந்தச் சிருஷ்டியும் பிரளயமும் மகாத்மாவின் விளை யாட்டேயாம். ஆத்மரதி :— ரதி — ருசி. ஞானியின் ருசி வெளியில் இல்லை. ரதி. பிரியம், ருசி, விருப்பம், விழைவு என்பன ஒருபொருள் பல சொற்கள். ஞானிக்கு விருப்பம் தன்னிடத்தில்தான் உண்டாகும். ஞானி யெந்தவேலையைச் செய்தாலும், என்ன பண்ணிலும் ஆத்மாவில்தான் அவனது இச்சையிருக்கும். ''எத்தொழிலைச் செய்தாலும் ஏத வஸ்தைப்பட்டாலும் முத்தர் மனம் இருக்கும் மோனத்தே''

பட்டிணத்து அடிகளார். இகத்தில் என்ன செய்தாலும், என்ன நிலே நேர்ந்தாலும் ஜீவன் முக்தர்கள் மனம் சிறந்த பிரஹ்மத்தில்தான் இருக்கும் என்பது முனிபெருமானின் வாக்கு.

பிரஹ்மவிதாம் வரிஷ்ட்ட :— இவர்கள் நான்குவிதம் — பிரஹ்மவித்து, பிரஹ்மவித்துவரன், பிரஹ்மவித்துவரீயான், பிரஹ்மவித்து வரிஷ்ட்டன். இவர்கள் முறையாக நான்கு, ஐந்து, ஆறு, ஏழு பூமிகளில் வசிப்பவர்கள். எட்டாவது பூமியில்லே. எட்டாவது பிரஹ்மம். பிரஹ்மஞானத்தில் பூமிகள் கிடையாது. ஜீவன் முக்தியில் அதிகாரிகளுக்கு அறிவிக்கும் பொருட்டு பூமிகள் சொல்லப்படுகின்றன. பூமிகள் பிரஹ்ம வித்தையில் ஏற்கத்தக்கவை அல்ல. சித்தத்திற்குத்தான் பூமி. ம. 4

தொடர்ச்சி

தத்வஞானத்தினுல் மேலான நிலேயுண்டாகிறது. அதற்கு முக்கிய சாதனம், துணே சாதனம் என்று சாதனம் இரு வகைத்து. முக்யசாதனம், ஆன்மஞானம், துணேசாதனம்— சத்யம், தபசு, சமம், பிரஹ்மச்சரியம் இவைகளே யிந்த மந்திரத்தில் தெரிவிக்கின்ருர். ரிஷியென்பது கருத்து. குறி வைக்க வேண்டுமானுல் கண் நன்ருக இருக்கவேண்டும். கண்ணுடி தூலமாக அல்லது சூக்குமமாக இருந்தாலும் கண் குற்றமற்று இருந்தால்தான் பார்க்கஇயலும். எனவே கண்ணேத் தூய்மைசெய்யவேண்டும்.

விழியில் யேதாவது குற்றம் இருக்குமானுல் மருந்து மூலமாக ஒழுங்கு பண்ணவேண்டும். அதுபோல் ஆத்ம ஞானத்திற்காக அந்தக்கரணத்தைச் சுத்தம் செய்யவேண்டும். விழியில் நோய் இருப்பதுபோல் அந்தக்கரணத்திலும் வியாதி இருக்கும். அந்தக்கரணத்திற்குப்பிணி ராகமும் துவேஷமும் ஆம். அகத்தில் விருப்பு வெறுப்பு இருக்கும் வரை தத்வஞானம் நன்ருக உதியாது.

சமர்த்த இராம்தாஸ் இராமாயணநூல் ஒன்றைச் செய்தார். அன்னை சீதாபிராட்டியார் இருந்த அசோக வனத்தில் உள்ள கமலங்களை வர்ணித்தார். அதை யெழுதும்போது அசோகவனத்தில் உள்ள தடாகத்தில் வெண்தாமரை விரிந்திருந்தது என்று எழுதினார். ஆண்டு அநுமார் தோன்றி யெழுதுகோலைப் பிடித்து தடுத்தார். சுவாமி—ஏன் என்றார்? அநுமான்—நான் பார்த்தபோது அங்கு செந்தாமரை பூத்திருந்தது என்றான். சமர்த்த ராம்தாஸ் நான் உண்மையைத்தான் எழுதியிருக்கிறேன் என்றார். நான் ஞானி என்னுடைய சிந்தனம் மாறுபடுவதில்லை. ஆண்டு வெண்டாமரைதான் விரிந்திருந்தது. அநுமார் செந்தாமரையென்றார். சமர்த்தர் — வெண்டாமரையென்று சொன்னார். இருவருக்கும் விவாதம் நடந்தது. இருவரும் ஒருவர் சொல்லையொருவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இருவரும் ஒரு முடிவிற்கு வந்தனர். நாம் இருவரும் பிராட்டியாரிடம் கேட்போம், அம்மையார் என்ன அருளுவாரோ அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று ஒப்புக்கொண்டனர். இருவரும் ஒருமுகமாக ஸ்ரீஜானகியை நினைத்தார்கள். அம்மையருள்மேனிதாங்கி முன்னே தோன்றினாள். விவாதத்திற்குக் காரணத்தை வினவினாள், இருவரும் தங்கள் கருத்தையெடுத்து இயம்பினர். அவரிருவர் விவாதத்தைக்கேட்டு அனுமானை நோக்கி யருளத் தொடங்கினாள்—

அனுமன்! அங்கு உதித்தது வெண்டாமரைதான். ஆனால் நீ அசுரர்களோடு போராடினதால் உன் கண் சிவந்திருந்தது. அதனால் வெண்டாமரையும் செந்தாமரையாகக் காணப்பெற்றது. அம்மையும் அனுமானும் சமர்த்த ராம்தாசர்க்கு வணக்கத்தைத் தெரிவித்துவிட்டு மறைந்தருளினர்.

உண்மையை உரைப்பதில் விருப்பு வெறுப்புற்ற மனம் வலிமையுடையதன்று. எவனுடைய மனதில் விருப்பும்

வெறுப்பும் பொருந்தியிருக்குமோ அவனுக்கு இறைவனிடத்திலும், இனிய குருவிடத்திலும் நம்பிக்கையிருக்கிறதில்லை. யாரிடத்தில் அன்பிருக்குமோ அவரிடத்தில் குற்றம் தோற்ற மாட்டாது. அதிகாரிக்குச் சத்தியத்தில் பிரியம் இருக்க வேண்டும். சத்யம் எவ்வாறு பிரியமாக இருக்கமுடியும்? நீ உண்மையை உரைக்க உரைக்க உனக்குச் சத்தியத்தில் பிரியம் உண்டாகும். வாய்மையைப் பேசும்போது அதன் பெருமையை அறிய ஆவல் உண்டாகும். அதையறிகிற போது பரமாத்மாவை அறிந்து விடுவாய்.

பரமாத்மாவிற்கு அந்நியம் சத்யம் அல்ல. ''சத்யம் பிரஹ்ம'' பிரு—உ. பிரிய வடிவம் பிரஹ்மம். உலகத்தில் விருப்பு வெறுப்பு எல்லோரிடத்திலும் இருக்கின்றன. எல்லோரும் புண்ணியபாவஞ் செய்கிறார்கள். ''ஏவம்

4

விமர்ஸ்ய சுதயோ விரமந்தி சப்தாத்'' பாகவதம். அறிவாளிகள் இந்நிலையை உணர்ந்துகொண்டு பேச்சை நிறுத்தி விடுகிறார்கள். உலகத்தில் பேசுவதே பைத்தியக்காரத்தனம். இங்கு சிறிதும் மெய்யும் இல்லை பொய்யுமில்லை.

இறைவன் சத்யத்தால் அடையப்பெறுகிறான். தபசு, சம்யமம், திடஞானம், பிரஹ்மச்சரியம் முதலிய சாதனங்களாலும் ஆன்மா அடையப்படுகிறது. எனவே சத்யம், தபசு, ஞானம் பிரஹ்மச்சரியம் இவைகளை வாழ்க்கையில் தேடிக்கொள். பொருளைத் தேடுவதுபோல் இவற்றையும் தேடு. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி. ஔவையார். பணம் கையில் கல்வி கண்டத்தில். கைப்பொருள் அழியும், மெய்ப்பொருள் அழியாது. கல்வி, ஞானம், வித்தை, அறிவு எல்லாம் ஒருபொருள் பல சொற்கள்.

நம் மடியிலிருக்கும் பொருள் நாளைக்கு மற்றொருவன் மடிக்கு ஏகும். பொருள் வரும், போகும் பொருள் வெளியேயிருக்கிறது, கல்வி யுள்ளேயிருக்கிறது. பொருள் ஜடம், கல்வி

சேதனம். பொருள் உடம்பு அழிந்ததும் இங்கு இருந்து விடும். கல்வி உடம்பு விழுந்ததும் உயிரோடு ஏகும். ஆகலின் பொருளைப்போல அருளையும்தேடு. பிரஹ்மச்சரியத்திற்குப் பொருள் பிரஹ்மத்தையடைவதற்குரிய ஆச்சரணம்.

ஒரு மனிதன் தனக்கு ஜென்மம் வேண்டாம் என்று நினைக்கிறான், ஆனால் அவன் புத்திரனைப் பெறுகிறான். நீ ஒருவனைப் பந்தனத்தில் தள்ளுகின்றாய், தான் முக்தனாகவேண்டும் என்று எண்ணுகிறாய். இது முறைதானா? ''ஆத்மா வை புத்ரநாமாசீத்'' ''பிரவிஸ்ய ஆத்மா ஜாயாயாம் புத்ரரூபேண ஜாயதே'' இந்த வாக்கியங்கள் மூலமாக ஆன்மாவே புதல்வனாக வருகிறதென்பது தெளிவாகிறது. விடுதலை பெறும்பொருட்டு புத்திர ஏடனையைவிட்டுவிடு. உடல் உடலோடு ஒன்றிப்போகும். இவ்வுடல் உதிப்பதாலும் ஒடுங்குவதாலும் ஆன்மாவிற்கு ஒரு பயனுமில. சம்பந்தமுமில. இம்மாதிரி விசாரஞ் செய்யும்போது அவசியம் விரும்பிய சாதனம் உண்டாகிறது என்பதைச்சுருதி மொழிகின்றது—

4
சத்யேந லப்ய : தபசா ஹி ஏஷ ஆத்மா
சம்யக் ஞாநேந பிரஹ்மச்சரியேண நித்யம்,
4
அந்த : சரீரே ஜோதிர் மயோ ஹி சுப்ரோ
3
யம்பஸ்யந்தி யதய : க்ஷீணதோஷா : ம. 5
இ—ள்

இவ்வுடம்புக்குள்ளே ஒளிமயமாகவும், புனிதமாகவும் ஆத்மா இருக்கிறது. இதைப் புண்ணியசீலர்கள் பார்க்கிறார்கள். இவ்வான்மா எப்பொழுதும் சத்தியம், தபசு, திடஞானம் மற்றுஞ் சிறந்த சாதனங்களால் அடையப்பெறுகிறது. இச்சாதனங்களைப் பழகுகிறபோது ஆன்மா பள்ளத்தைக்கண்டு நீர் பாய்வதுபோல நமது உள்ளத்தில் உதிக்கிறது.

ஏஷ—இந்த—அபரோட்ச ஆத்மா நான், நான் என்று மக்கள் வியவகாரஞ் செய்தபோதினும், அடையப்படாதது போலக் காணப்படுகிறது. அதை நமது சொரூபமாக எவ்வாறு அறிவது? உண்மையில் உறங்கினனென்றால் தட்டிக் கொட்டி யெழுப்பினல் எழுந்திருப்பான். விழித்திருந்தும் உறங்கினவன்போல் நடித்தான் என்றால் எவ்வாறு எழுப்புவது? ஆன்மா எங்கேயும் செல்லவுமில்லை, அதை நாம் இழக்கவுமில்லை. தன்னைத்தானே தேடுகிறான். தேடுவதை நிறுத்திவிடுவதுதான் அதைப்பெறுவதற்கு உபாயம் ''வேறு வழி பெறுவதற்கு யில்லையடியம்மா வீணைகத் திரிந்ததனல் என்னயடியம்மா'' சமயோசிதமாலை. பொருள்வெளி.

அறியாமையை அகற்றுவதுதான் அதைப் பெறுவதற்குச் சிறந்த உபாயம். அறியாமை அறிவால் நீங்கும். 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்னும் அறிவைக்கொண்டு அறியாமையை அகற்று. அதைத் தவிர வேறு மார்க்கம் இல்லை. இந்த அறிவைப் பெறவேண்டுமானல் சாதனம் வேண்டும். பிரமாணம் வேறு, சாதனம் வேறு. உருவத்தையறிவதில் கண் பிரமாணம். பார்வை குறைந்தால் கண்ணாடி சாதனம். பார்வைக்காக மருந்தும் சாதனந்தான்.

3

''சத்யேந அநிருததியாகேந மிருஷா வதந தியாகேந லக்ஷ்ய : பிராப்தவ்ய :'' என்பது சங்கரபாஷ்யம். உண்மை பேசுவதாலும், பொய்பேசாததாலும், இந்த ஆன்மாவையடையலாம் என்பது பாஷ்யத்தின் கருத்து.

சத்யேந—உண்மை உரைப்பது தருமம் அல்ல, பின்னே? பொய்யை விட்டுவிடுவது தருமம். நீ உன் மனைவியுடன் தனியிடத்தில் என்ன உரையாடினையோ அதை யாரிடமும் சொன்னல் தருமமாகுமா? ஆகாதல்லவா அதையுரைத்தால் நீ மடையன் என்று உரைக்கப்படுவாய் பொய்பேசுவது அவசியம் அதர்மமாகும். வாய்மையானலும் அதைச்

சொல்லவேண்டும் என்பது தேவையில்லை. சம்சாரத்தை நினைப்பதையும், அதைப்பற்றி உரைப்பதையும் விட்டுவிடு. ''நினையாமல் நினைந்து பவத்துடக்கைவெல்வாம்'' திருவிளையாடல் புராணம். நினையாமல்=உலகத்தை நினையாமல், நினைந்து=ஆன்மாவை நினைந்து. பவத்துடக்கை=உலகத் துயரத்தைத் தீர்ப்பாய் என்பது புராணத்தின் பொருள். அங்ஙனமாயின் நான் பிரஹ்மம் என்று சொல்லவா? வேண்டாம். தானுகவோ பிறரிடத்திலேயோ நான் பிரஹ்மம் என்று சொல்லாதிரு. சும்மாயிருக்கச் சுகமுண்டே என்றபடி.

நேதி நேதி—திருஸ்யம் சத்யம் என்று உனக்கு மயக்கம் ஏற்பட்டதே யதை நீக்கிவிடு. இதன் மூலமாக வாக்கும் மனமும் மௌனமாகிவிடும். சத்யம் நமது ஆன்மா. நாம் சம்சாரத்தில் பேசுவதும், எண்ணுவதும் அசத்தியம். உண்மையல்ல. எனவே உலகத்தைப்பற்றிப் பேசுவதையும், எண்ணுவதையும் விட்டுவிடு. நீ சுவயம் சத்யம். விரும்பியதற்கு அதிகம் பேசுவது பிறரைக் கீழ்மைப்படுத்துவதாகும்.

ஒரு மகாத்மா தனது மாணவர்களோடு மாலைப்பொழுது வெளியூருக்குச் சென்றனர். சிறிது தூரஞ் சென்றபின்னர் மகாத்மா தனது மாணவர்களில் ஒருவரிடம் இவ்வழியாகச் சென்ருல் அந்த கிராமத்திற்கு எவ்வளவு தூரம் இருக்கும் என்ருர்? அதில் ஒருவன் நான்குகல் தொலையிருக்கும் என்ருன். மற்ருெருவன் ஐந்துகல் தொலையென்ருன். மூன்ருமவன்எட்டுக்கல் என்ருன். இவர்களுக்குள் கலகம் நேர்ந்தது. இவர்களில் யார் சொல்லும் உண்மையென்று எண்ணவில்லை; பின்னே? இவர்கள் ஒருவர்க்கொருவர் தன்னை மேன்மையாகவும், பிறரைத் தாழ்மையாகவும் செய்யவேண்டும் என்பதுதான் என்று எண்ணிஞர்.

எவன் உண்மையைத் தெரிந்திருக்கிருனே அவன் வாய்மையுரைக்கவேண்டும். தன்னையே தெரியாத மக்கள் சத்தியத்தையெவ்வாறுஉரைக்கமுடியும்.பொய்பேசவேண்டும்

ஆனால் பல வார்த்தைகளைப் பேசவேண்டும். உண்மை யுரைப்பதற்கு நிரம்பப் பேசவேண்டுவதில்லை. வன்மையாகப் பேசவேண்டுவதில்லை. நேர்மையாகவும், சுருக்கமாகவும் பேசினால் போதும்.

வாய்மை யெப்போதும் ஏகரசமாக இருக்கும். ஏகரசம் — ஒரே படித்தாக இருப்பது. உண்மையை நினைக்க வேண்டுவதில்லை. பொய்யை நினைக்கும்படிநேரும். நாம் நினைக்கிறோம் எல்லோரும் நம்மிடம் சத்யம் பேசவேண்டும் என்று. ஆனால் நாம் பிறரிடம் பொய்பேசுகிறோம். இது நியாயந்தானா? எல்லோரும் நம்மிடம் உண்மையுரைக்க முறையா? வேண்டுமானால் நாம் அனைவரிடமும் உண்மையை யுரைக்க வேண்டும். ''பொய்யை யொழியாப் புலாலை விடாய்'' என்கின்றார் பட்டிணத்தார். மனத்தூய்மைக்காகப் பொய்யை வேரோடு விட்டுவிட வேண்டும்.

தப :— வாழ்க்கையில் இரண்டு முக்கியமானவை — ஒன்று தபனம் — தபசு. மற்றொன்று பதனம் — விழுவது. வாழ்க்கையில் மேலேயேறு. அல்லது கீழேவிழு. எவன் வாழ்க்கையில் துன்பத்தை யநுபவிக்கவில்லையோ அவன் இன்பத்தை யநுபவிக்க அதிகாரியில்லை. கதிரவனைக் கண்டு தான் கமலம் விரிகிறது. நெருப்பில் விழுந்த தங்கந்தான் மிளிர்கின்றது. கோடைகாலத்தின் பின்பு மழைகாலம் வரு கிறது. வியாபாரத்தில் நஷ்டமும் வரும் லாபமும் வரும். நஷ்டத்தையனுபவிப்பவன்தான் லாபத்தையும் அனுபவிக்க முடியும்.

எவன் ஒருவன் தனது பொறிபுலன்களை யிறைவனிடத் தில் செலுத்துகின்றானோ அவனுடைய போகஇச்சை குறைந்து முடிவில் மடிந்துவிடுகின்றது. தேனையருந்துபவன் எட்டிக்காயை உண்ண விரும்பமாட்டானல்லவா. பகைவனைக் கண்டதும் தூயவன் எவ்வாறு முகத்தைத்திருப்பிவிடுகி றானோ அதுபோல் பக்தன் போகத்தைக் கண்டவுடன் அவனது

விருத்தி யோகத்தில் திரும்பிவிடுகிறது. கொலைகாரனை குடிமக்கள் வெறுக்கின்றனர். அதுபோல் யோகி போகியை வெறுக்கின்றான்.

பிருந்தாவனத்தில் ஒரு சாது இருந்தார். அவர் பாயா சங் கிடைத்தால் பிரஹ்மஞானங் கிடைத்துவிட்டது என்பார். சாதாரண உணவு கிடைத்தால் அறியாமை கிடைத்து விட்டது என்பார். இவ்வாறு உணவுகளில் விருப்பும் வெறுப்பும் வைப்பவர்கள் இறைவனையடைவதற்கு அதிகாரி யெங்ஙனமாவர்? ஆகார் என்பது கருத்து. தவத்திற்குப் பொருள் என்னை? மனம் பொறிகளை யிறைவனிடத்தில் வைப்பது.

''மநஸ்ச இந்திரியாணுஞ்ச ஐகாக்ரியம் பரமந்தப :'' ச. பா. பொறிகளும் பொருந்தியஉள்ளமும் ஒன்றுபடுவது தவம் எனப்படும். இது சங்கரரின் மதம். இத்தவம் மனிதனை இறைவன் முன்னிலையில் நிறுத்தும். போகம் மனிதனை சம்சாரபக்கமாகத் தள்ளும். தோல்பையில் காற்றை நிரப்பினுல் அது ஊதிப் பெரிதாகிறது. காற்றைப் பிடிங்கிவிட்டால் சுருங்கிவிடுகிறது. அதுபோல் விருத்தியில் சம்சாரத்தை நிரப்பினுல் அது கோடிகோடி அண்டங்களையுண்டுபண்ணு கிறது. அதைப் பிடிங்கிவிட்டால் தனக்குப் பற்றுக்கோடா கிய பிரஹ்மத்தோடு ஒன்றிப்போகிறது.

நிர்விஷயவிருத்தி தனக்கு அந்நியமாகத் தன்னைக் காட்டுகிறதில்லை. பசிப்பிணியோடிருத்தல், பஞ்சாக்னியில் நிற்றல், உடலை வாட்டுதல், சாந்தராயணவிரதம் இருத்தல் இவையெல்லாம் அவசியமில்லை. பிரஹ்மவிசாரம் பண்ணுவது அவசியம்.

சம்யக்ஞாநேந—எப்பொருளை யறிய விரும்புகின்றுயோ அதை நன்ருக அறியவிரும்பு. சம்சாரிகள் பொருளை நன்ருக உணர்கிறதில்லை. கூர்ந்து நோக்குகிறதில்லை அரையும்

குறையுமாக அறிகிருர்கள். இதனுல் அதில் பற்றுவைக் கிருர்கள். ஒரு டம்ளர்நீர், ஒரு இரத்தினக்கல். இவையிரண் டிலும் எது விலையுயர்ந்தது? எண்ணிப்பார். யாருக்குத் தாகமில்லையோ அவனுக்கு இரத்தினம் விலையுள்ளது, தாகத் திஞல் தவிக்கின்ற மனிதனுக்கு நீர்விலையுள்ளது. இரத்தினம் இல்லாமல் வாழலாம், நீரில்லாமல் வாழஇயலுமா? இயலா தல்லவா.

இராவணனுக்கு மண் தேவைப்பட்டது. இலங்கை முழுதும் தங்கவடிவம். ஆகையால் இலங்கைக்குள மண் கிடைக்கவில்லை. வெளியேயிருந்து மண் வாங்கும்படி நேர்ந் தது. எனவே தண்ணீரில் கவனஞ்செலுத்து. காரணத்தைத் தனக்கு லக்ஷியமாகக்கொள். உலகத்தில் மனிதன் சிறந்த வனு? பசு சிறந்ததா? பஞ்சபூதம் இருவருக்கும் பொது. ஐம்பூதத்தில் எது சிறந்தது? எல்லாபூதங்களும் ஒரே அகங் காரத்திலிருந்துதான் உண்டாயிருக்கின்றன.

அங்ஙனமாயின் அகங்காரஞ் சிறந்ததா? நிரகங்காரம் சிறந்ததா? இரண்டும் இடத்திற்குத் தக்கவாறு சிறந்தவை. ஒரு வேதியரிடம் தனவான் சென்ருர். வேதியர், வந்தவனை வினவினுர். தனவான் எனக்காகப் பொய்ச்சாட்சி சொல்ல வேண்டும் என்ருன். வேதியர்—ஐயா! நான் ஒரு அந்தணன் காலை மாலை சந்தியாவந்தனம் செய்பவன். வேதம் படிப்ப வன். எனவே நான் பணத்திற்காகப் பொய்சாக்ஷி சொல்ல மாட்டேன் என்ருன். இது தனது அகங்காரத்தைக் காக்கும் பொருட்டும் பொய்சாக்ஷியத்திலிருந்து விலகும் பொருட்டும் துணைபுரிந்தது.

சம்யக்ஞாநேந—விபரமில்லாமல் எப்பொருளையும் கைக் கொள்ளாதே. வஸ்து எப்பொழுது பரமாத்மரூபமாகக் காணப்படுகிறதோ அப்பொழுது அதனது உண்மைவடி வத்தைத் தெரிந்திருக்கிருய் என்று நினை. நகை தங்கத் தோடு காணப்படவேண்டும். நகை மட்டும் தெரிந்து தங்கம்

தெரியாதுபோனால் அது உண்மையில்லையென்று அறி. ஆகலின் தனது ஞானத்திற்கு ஆதரவு அளி. தெரியாத் தனத்தால் எதையும் ஒப்புக்கொள்ளாதே.

பிரஹ்மச்சரியேண நித்யம்—நித்யம் சத்யேந, நித்தியம் தபசா, நித்தியம் பிரம்மச்சரியேண என்று நித்தியம் என்னுஞ் சொல்லை யெல்லாவாக்கியத்தோடுங் கூட்டுக. இரண்டு பேர் விவாதம் பண்ணினர். ஒருவர் அதைக்கேட்டேனென்றார். மற்றொருவர் அதைக் கண்டேனென்றார். இவையிரண்டிற்கும் நிர்ணயம் பண்ணும் வழி யாது? காதும் பிரமாணம் கண்ணும் பிரமாணம். ஆனால் கேட்டதைப் பார்க்கிலும், கண்டது சிறந்தது. எனவே கண்டதை யொப்புக்கொள்ள வேண்டும்.

இல்லறத்தான் பிரம்மச்சரியம்—உசிதகாலத்தில் மனைவியோடு நேசித்தல். வானபிரஸ்த்தன் பிரம்மச்சரியம்—மனைவியிருந்தாலும் நேசம் பண்ணாது இருப்பது. பக்தன் சித்த விருத்தியோடு இருப்பான், ஆனால் விருத்தி ஆனந்தத்தை யனுபவிக்கிறதில்லை. யோகி விருத்தியோடு இருக்கிறான், ஆனால் திருஷ்டாவாக இருக்கிறான். அவனே வானப்பிரஸ்த்தன் என்றுஞ்சொல்லலாம். ஞானியின் இடத்தில் விருத்தி எரிந்து விடுகிறது. அவன் சந்நியாசி. அவன் மனைவி மக்களோடிருக்கிறதில்லை. பிரஹ்மச்சாரி குருவிற்காக வாழ வேண்டும்.

அவன் அதிகாரி, தருமாத்மா, பிரம்மச்சரியத்திற்கு நான்கு நிலைகள் — 1 விருத்தியை குருபணி அல்லது இறை பணியில் செலுத்தவேண்டும். அவன் பிரம்மச்சாரி. 2 விருத்தியை இறைவனிடத்தில் வைப்பது. பக்தியின் ஆனந்தம் அடைவது. (கிரகஸ்த்தன்) இல்வாழ்வான். 3 விருத்திக்குத் திருஷ்ட்டாவாக இருந்தால் வனவாசி. 4 விருத்தி யெரிந்த துணி போலிருந்தால் சந்நியாசி.

அந்த : சரீரே — இறைவனைத் தேடுவதற்கு எங்கே போகின்றாய்? அரித்வார், ரிஷிகேசம், காசி, கன்னியாகுமரிக்குப் போகின்றாயா? அங்கு செல்வதில் நமக்கு ஒரு விரோதமும் இல்லை. ஆனால் ஆத்மாவைத் தேடவேண்டுமானால் வெளியே போகவேண்டுவதில்லை. நாம் சிரார்த்தம், தீர்த்தம், மூர்த்திபூஜை, அவதாரம் எல்லாம் ஒப்புக்கொள்ளுகின்றோம். இருப்பினும் பிரஹ்மத்தையடைய வேண்டுமானால் வெளியேயில்லை, உள்ளே போகவேண்டும்.

ஆன்மா அந்த : சரீரே. சரீரத்திற்குள்ளே. உள்ளேயிருக்கின்ற பரமாத்மா எப்படியிருக்கிறார்? சுப்ர: ஜோதிர்மய: அது—ஒளிமயம். ''மாசற்ற ஜோதி மலர்ந்த மலர்ச்சுடரே'' திருவாசகம். குற்றமற்ற ஜோதி, விரிந்த மலர்போல் ஒளிர் வீசும் இறைவா! என்கின்றார் வாதவூர் அடிகளார் பிரகாச வடிவினன் என்பது கருத்து.

உள்ளத்திலிருந்தும் ஏன் தெரியவில்லை? யம் பஸ்யந்தி
3
யதய : க்ஷீணதோஷா :—உலகத்தில் இருக்கிற பொருள்கள் எல்லாம் தெரிகிறதில்லை. ஆகாசம் இருக்கிறது தெரிகிறதில்லை. வயிற்றில் வலியிருக்கிறது தெரிகிறதில்லை. மடியில் பணம் இருக்கிறது தெரிகிறதில்லை. பெட்டியில் இருக்கிற துணிமணி தெரிகிறதில்லை. அங்ஙனமிருக்க ஆன்மா மட்டும் தெரியவில்லையேயென்று கேட்பது முறையல்ல.

ஆத்மாவில் மாசு இல்லை. சித்தத்தில் தோஷமிருக்கிறது. ''சித்தத்தில் செறிந்திருக்கும் கேளு பாப்பா, சினமெல்லாந் தொலைந்துபோனால் தெரியும் பாப்பா'' சமயோசிதமாலை. சித்தத்தில் இருக்கும் ராகத்துவேசம் நீங்கினால் அங்கிருக்கும் ஆன்மா நன்றாகத்தெரியும். தோஷம் நீங்கிய ஞானிகள் முயற்சி செய்து அதை அறிகிறார்கள். ம. 5

தொடர்ச்சி

சத்யேந லப்ய: என்று முந்திய மந்திரத்தில் மொழியப் பட்டிருக்கிறது. சத்தியம், தவம், சம்யக்ஞானம், பிரஹ்மச் சரியம் இவையெல்லாம் அதில் கூறியிருக்கின்றன. இருப் பினும் முக்கிய சாதனம் சத்தியம். சத்தியத்தின் பெருமை யென்ன என்பதற்குப் பதில் இம்மந்திரம்—

சத்யமேவ ஜயதே நாந்ருதம்
சத்யேந பந்த்தா விததோ தேவயாந:!
யேநாக்ரமந்தி ரிஷயோ ஹ்யாப்த காமா
யத்ர தத் சத்யஸ்ய பரமம் நிதாநம். 6

இ—ள்

உண்மை வெல்லும், பொய் வெல்லாது. சத்தியத்தினால் தேவயான மார்க்கம் விரிவடைகிறது. வாய்மையால் எல்லா இச்சையும் நீங்கிய ரிஷிகள் வாய்மையென்னும் மேலான நிலையடைகிறார்கள். சில நூல்களில் 'சத்யமேவ ஜயதி' என் னும் பாடம் காணப்படுகிறது. ஆனால் சங்கரபாஷ்ய முறைப் படி 'ஜயதே' என்னும் பாடம் முறையானது என்று தெரி கிறது. பின்னால் 'பஸ்யதே' யென்னுஞ்சொல் வருகிறது. இதனாலும் 'ஜயதே' என்ற பாடம் மிகப்பொருத்தம்.

சத்யமேவ ஜயதே—வாய்மைக்கு வெற்றியுண்டாகிறது. பொய் ஒருபோதும் வெல்வதில்லை. அங்ஙனமாயின் வாய்மை யும் பொய்மையும் ஒன்றுக்கொன்று போராடுகின்றனவா? இல்லை. பொய்மையும் வாய்மையும் ஒருபோதும் முட்டிக் கொள்கிறதில்லை. மெய்யான கயிறும், பொய்யான பாம்பும் தங்களுக்குள் போர் புரியுமா? பொய்யில் போர் புரிவதற்குரிய வலிமை யெங்கிருக்கிறது? இல்லை. பின்னை, யாருக்கு வாய்மையே வழிபடுந்தெய்வமோ அவருக்கு எல்லாக் காரிய மும் கைகூடும். ஆனால் பொய்யிலே பிறந்து, பொய்யிலே

வளர்ந்து, பொய்யையே குலதெய்வமாக வழிபடுபவனுக்கு அவன் என்ன எண்ணினாலும் ஒன்றும் கைகூடாது. அவன் என்றும் தோல்வியேயுறுவான்.

சாஞ்சகோ ஆஞ்ச கியா? ஹிந்தி. உலகத்தில் சத்யத்திற்கு ஆதரவு உண்டு. பொய்யுரையாளனுக்கு அவன் இதயமும் ஆதரவு அளிக்காது. புறத்தில் ஆதரவு அளிப்பது போல் தெரிந்தாலும் அவன் நெஞ்சம் அவனைச்சுடும். ''தன்னெஞ்சே தன்னைச்சுடும்'' பொய்யாமொழி. அவனுடைய மனம் அவனைக் கொட்டிக் கொண்டேயிருக்கும். ''வாய்மையே வரமளிக்குந்தெய்வம்'' எவன் ஒருவன் சத்தியத்தை ஆதரிக்கிறானோ அவன் எஙிதியடைகிறான்?

சத்யேந பந்த்தா விததோ தேவயாந:— எவன் சத்தியத்தை மனமார வழிபடுகின்றானோ அவனுக்கு மோக்ஷத் துவாரம் திறந்திருக்கிறது. தேவயானம் — உத்ராயணம். பதம்—வழி. அவனை யெதிர்நோக்கிக்கொண்டு இருக்கிறது. ஒரு கேள்வி—ஒரு புண்ணியசீலன், இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம், இவைகளில் இறந்தவன் நல்லகதியை அடைவானா, அடையமாட்டானா என்று வினவினான். இந்த விஷயத்தில் சிறிது சிந்திக்கவேண்டும்.

புண்ணியசீலன் இரவில் இறந்தால் இரவு தேவதை இரவு முழுதும் தன்வசம் வைத்திருந்து பகல் வந்ததும் பகல் தேவதையிடம் கொடுத்துவிடும். கிருஷ்ணபக்ஷத்தில் இறப்பானாகில் தேய்பிறையின் தேவதை தன்வசம் வைத்திருந்து வளர்பிறையின் தேவதை கையில் ஒப்படைத்துவிடும். தக்ஷிணாயனத்தில் இறப்பானாகில் அவனை தக்ஷிணாயன தேவதை சிலகாலம் வைத்திருந்து உத்தராயணதேவதையிடம் கொடுத்துவிடும். அவனுக்கு எப்படியும் நற்கதி அவசியம் உண்டாகும்.

இதைப்போல பாவிஜீவனுக்கு மாற்றிக்கொள்ளவேண்டும். யேநாக்ரமந்தி ரிஷயோ — ஆப்தகாமா — மகாத்மா.

காமம், இச்சை, விழைவு, ஆசை, திருஷ்ணை யென்பன வெல்லாம் ஒருபொருள் பல சொற்கள். ஞானிகளுக்கு சகல இச்சையும் நிறைவேறிவிட்டன. கடலில் எல்லா நீரும் அடங்கியிருப்பதுபோல மகாத்மாவின் உள்ளத்தில் காமங்கள் திருப்தியடைந்திருக்கின்றன. ஆசை சாந்தமாகிவிட்டது. உலையிரும்புண்ட நீர்போல் உள்ளத்தில் மடிந்திருக்கும்.

மகாத்மா, பரமாத்மாவையடைவதற்குச் சத்தியத்தைச் சாதனமாகக் கொண்டிருக்கின்ருர். அதனுல் அவருக்கு வெற்றியுண்டாகிறது. சத்யத்திற்கு அழிவு கிடையாது. யத்ர சத்யஸ்ய பரமம் நிதானம் — எல்லாம் உண்மையில் ஒடுங்கும். நிதானம்—முடிவிடம். அசத்ய பொருளனைத்தும் சத்யத்தில் மறைந்துவிடும். உண்மை யொளிர்விட்டு வீசும். வாய்மைக்கு இடம் பரமாத்மா. ரிஷி = ஆப்தகாமன். யாரிடத்தில் சூது, வாது, வஞ்சனை மாயை இல்லையோ அவர்ரிஷி. "சூதும் வாதும் வேதனை செய்யும்" ஔவையார். வேதனை = துன்பத்தைத்தரும். வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தையென்பதும் ஈண்டு ஊகித்துணர்க. அகங்காரம், ஆசை, பொருமை, ஆடம்பரம், பொய் இவையெல்லாம் இன்றி, புனிதமாகவும், நிறைந்த ஞானம் உடையவராகவும் இருப்பவர் ரிஷி எனப்படுவர். "ஞானுத்ரிஷி:" என்பது இலக்கணம். ஞானவான் ரிஷி என்பது பொருள். இத்தகைய ரிஷி அந்த பரபிரஹ்ம பரமாத்மாவையடைகிருர். எல்லா நதிகளுக்கும் இருப்பிடம் கடல், அதுபோல் சத்தியம் அசத்தியம் உலகமனைத்திற்கும் பரமாத்மா புகலிடம். நிதானம்— பற்றுக்கோடு. ம. 6

தொடர்ச்சி

சத்தியசீலன் தேவயான மார்க்கமாகச் செல்கின்ருன் என்றும், அவ்வழியிற் சென்று ஆப்தகாம ரிஷிகள் மேலான பதத்தையடைகிருர்கள் என்றும், அவர்களுக்கு நற்கதி

யென்றும் மேலே சொல்லப்பட்டது. அதன் வடிவம் என்ன தென்பதை யுணர்த்தும் பொருட்டு மந்திரம்—

3 3
பிருஹச்ச தத்திவ்யம் அசிந்தியரூபம்
4
சூக்ஷ்மாச்ச தத் சூக்ஷ்மதரம் விபாதி !
3 3 3 3
தூராத் சுதூரே ததிஹாந்திகேச
3
பஸ்யத் ஸ்வ இஹைவ நிஹிதம் குஹாயாம். 7

இ—ள்

3
பிருஹத் = பெரிதாகவும், ஒளிமயமாகவும், சிந்தனைக்கு எட்டாததாகவும், நுண்ணியதாயும், விளங்குகின்றது. தூரத்திலும், சமீபத்திலும், இருந்தபோதினும் இதயகுகையில் இலங்கிக்கொண்டிருக்கிறது. அது பரமாத்மா.

பிருஹத்—அதிகமாகவும், மிகப்பெரியதாயும் எது இருக்கிறதோ அது பிரஹ்மம். பௌதிகத்தைப்பார்க்கிலும் ஐம்பூதம் பெரியது. ஐம்பூதத்தைப்பார்க்கிலும் மகாபூதம் பெரியது. மகாபூதத்தைப்பார்க்கிலும் தன் மாத்திரை பெரியது. தன் மாத்திரையைப்பார்க்கிலும் அகங்காரதத்வம் பெரியது. அதைப்பார்க்கிலும் தேசகாலம் பெரியது. இவைகளைப் பார்க்கிலும் மகத்தத்வம் பெரியது. இதைப்பார்க்கிலும் பிரஹ்மம் பெரியது. எதற்குமேல் பெரியதொன்றுமில்லையோ அது பிருஹத்து. பிரஹ்மம். ''பெரிய பொருளைப் பணிகுவாம்'' தாயுமானுர். சிறந்த பிரஹ்மத்திற்குச்சிரந்தாழ்த்துவோம் என்பது பொருள். உலகமுழுவதும்அற்பம். பிரஹ்மம் மகத்து. ''மஹதிதி பிரஹ்ம'' தை—உ.

தத் திவ்யம்—திவிபவம் திவ்யம் என்பது இலக்கணம். உதயவன் ககனத்தில் உதிக்கிருன். ககனம் — ஆகாசம். ஆதவனும் அம்புலியும் ஆகாசத்தில் உதிக்கின்றன. அம்புலி

— அழகிய சந்திரன். அவையும் திவ்யவடிவம். ஆன்மா அகத்தில் உதிக்கின்றது. அகம்—சித்தாகாசம். சித்தத்தில் இருப்பதால் சித்தாகாசம் எனப்படுகிறது. இதயம் என்பது தெளிவு. இதயத்தில் இலங்கும் ஆன்மா ஞானமயம். ஆத லால் அது திவ்யம்.

கதிரவன் புறத்திலுள்ள இருளையகற்றுகிறுன். ஞான ஆதவன் அகம்புறம் இரண்டிலும் உள்ள இருளைக் கடிகிறுன். கதிரவன் பகலில் உதிக்கிறுன் இரவில் மறைகிறுன். ஞான சூரியன் ஒருபோதும் மறைகிறதுமில்லை. மாறுகிறதுமில்லை. கிரகணகாலங்களில் சூரியனுக்கும் சோமனுக்கும் மாசு உண்டு. ஆனுல் ஆத்மா மாசற்றஜோதி, மலர்ந்த மலர்ச் சுடர். ஒருகோடி உதயவன் ஒன்ருக உதித்தாலும் ஒளிர்மய ஆன்மாவின் முந்நிலையில் மெழுகுவத்திபோல் காணப்படும்.

அசிந்திய ரூபம்—சித்தத்திற்கு எது விஷயமோ அது சிந்தியம். சம்சாரம். எது விஷயமாகாதோ அது அசிந்தி யம். பரமாத்மா. மன வாணிக்கு பரமாத்மாவில் கதி இல்லை. செல்லுந்தன்மையும்இல்லை. பத்மாசனனுல் படைக் கப்பெற்ற வாக்கு, மனம், பொறிகள் இவையெல்லாம் சேர்ந்து பிரஹ்மத்தைப்பார்த்துவருவோம் என்று சென்றன. ஆனுல் பிரஹ்மத்தைக் காண இயலவில்லை. அவையனைத் தும் மீண்டும் திரும்பின. ஒருவனைக் காண்பதென்ருல், அவன் உருவத்தைக் காண்பதல்ல. பின்னை, அவன் உள்ளத்தைக் காண்பது.

காசியில் கங்கைநதியிருக்கிறது கங்கைக்கு மேல்புறம் காசிமாநகரம் இருக்கிறது. கீழ்புறம் ராமநகரம் என்னும் ஒரு அழகிய நகரம் இருக்கிறது. அங்கு காசிநரேசன் வசிக் கிருர். மக்கள் அவரைத் தெரிசிப்பது வழக்கம். மாலையில் அவர் பொதுமக்களுக்குத் தெரிசனம் கொடுப்பார். அவர் வருவதற்கு முன்னதாக அதே கோலத்தில் அமைச்சர் வரு வார். சிலர் அவரையே அரசரென்று எண்ணி கண்டுகளித்து

வீடு திரும்புவர். அதுபோல் எதோ ஒருவடிவத்தைப் பார்த்து விட்டு பரமாத்மாவைப் பார்த்ததாகச் சொல்வார்கள்.

பரமாத்மா அசிந்தியம் — கருத்திற்குப் புலனுகாதது கண்ணுக்கு எவ்வாறு புலனுகும்? ஆகாதென்பது குறிப்பு.
4 3
''பாவாதீதம் திரிகுணரஹிதம் சத்குருந்தம் நமாமி'' எண்ணத் திற்கப்பால்பட்டதும், முக்குணமின்றியதும், நல்ல ஆசானு மாகிய பராபரனுக்கு வணக்கம் என்றபடி.

சூக்ஷ்மாச்ச சூக்ஷ்மதரம்—இவ்வான்மா நுணுக்கமானது. இது உலக்கையைப் போலல்ல, ஊசியைப்போல. தூணைப் போலல்ல, துரும்பைப்போல. கடலைப்போலல்ல, கடுகைப் போல். ஏணிபோலல்ல், எள்ளைப்போல. இது ஊனக் கண்ணுக்குப் புலனுகாது. ஞானக்கண்ணுக்குப் புலனும். ''நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுர்வே'' திருவாசகம். அறிவிலர்தார்க்குச் சுட்டியறியப்படாதவனே! அறிவுடைய நுண்ணிய மதியுடையவர்க்கு அறியப்பட்ட வனே ! என்கின்றது மணிவாசகம்.

சரீரம் தூலம். பொருளைக்கவரும் பொறிகள் சூக்குமம். தன் மாத்திரைகள் வெகு சூக்குமம். பரமாத்மா சூக்குமதரம். உணர்வைக்கொண்டு அறியலாகும் என்பது பொருள். எந் நிலையிலும் தன்னிலை குலையாதது என்பது பொருள்.

தூராத்சுதூரே—அறிவிலிகளுக்கு வெகுதூரம். அறிவாளி களுக்கு வெகு சமீபம். ''சேயாய் நணியானே'' மணிவாசகம். தாயிக்குத் தலைமகன்போல் தூரமும், கைக்குழந்தைபோல் கிட்டத்திலுமாம். அறிவைப் பொருத்து சமீபமும், அறியா மையைப் பொருத்து தூரமுமாம். பரமாத்மா அருகிலும் இல்லை, தூரத்திலும் இல்லை. நமக்கு நாம் அருகிலும் இல்லை, தூரமும் இல்லை. முன்னேயிருந்தும் தெரியாது போனல் தூரந்தான். தெரிந்தபொருள் தூரத்தில் இருந் தாலும் சமீபந்தான்.

திருவள்ளுவர் குறள் எழுதி கையொப்பம்வாங்குவதற்காக மதுரைக்கு வந்தார். சீத்தலைச்சாத்தனுர் இல்லத்திற்குச்சென்ருர். மனைவியாரிடம் கேட்டார். வைகைக்குக் குளிக்கச் சென்றிருப்பதாகச் சொன்னுள்.

வள்ளுவர் வைகைக்குச் சென்ருர். பல துறைகளைப் பார்த்தார். ஒரு துறையில் சீத்தலைச்சாத்தனுர் குளித்துக் கொண்டு இருந்தார். வள்ளுவர் அவரிடம் ஐயா! இங்கு சீத்தலைச்சாத்தனுர் எங்குள்ளார் என்ருர். யாரிடங் கேட்கிருரோ அவர்தான் சீத்தலைச்சாத்தனுர். ஆனுலும் வள்ளுவருக்கு இவர்தான் சீத்தலைச்சாத்தனுரென்று தெரியவில்லை. சீத்தலைச்சாத்தனுர் — எழுத்தாணி யில்லத்தில் வைத்துவிட்டு வந்துவிட்டேன். நீர் யார் என்ருர். தன்னை வள்ளுவர் என்ருர். வந்தகாரணத்தைச் சீத்தலைச் சாத்தனுர் வினவினுர். நான் குறட்பாவில் ஒருநூல் செய்திருக்கிறேன். அதையவரிடம் காண்பிக்கவேண்டும் என்ருர்.

நான்தான் சீத்தலைச்சாத்தனுரென்ருர். இதைக் கேட்டதும் வள்ளுவர் வெட்கமுற்று நின்ருர். முன்னே நின்றும் சீத்தலைச்சாத்தனுர் பரோக்ஷமாக இருந்தார். தன்னைத்தான் என்றுகுறித்ததும் அபரோக்ஷமானுர். தெரியாதவரை அவர் தூரத்திலிருந்தார். தெரிந்ததும் சமீபமானுர். தெரிவதற்கு முன்னரும் அண்மையில் தான் இருந்தார். ஆனுல் தெரியாத தோஷத்தால் தூரம்போல் தெரிந்தார். அதுபோல் ஆன்மா எப்போதும் அண்மையிலிருந்தும் சேய்மையிலிருப்பதுபோல் காணப்படுகிறது. சுதூரம் என்றது உபாதியால்.

ஆன்மா தனது வடிவத்தை யொருபோதும் விடுகிறதில்லை. இஹைவநிஹிதம் குஹாயாம்—ஆகாசத்தில் இல்லை. மலையில் ஏறவேண்டாம், கடலில் குதிக்கவேண்டாம். வானில் திரிய வேண்டாம் வனத்தில் அலையவேண்டாம். பின்னை

ஆன்மாவை யெங்கு அடையவேண்டும்? இறைவ—இங்கே தான். நமது சரீரத்துக்குள். வீட்டில் பொருளை வைத்து விட்டுக் காட்டில்தேடுவது மதிநலமாகாது. சரீரத்துக்குள். தூலசரீரத்திலா? சூக்குமதேகத்திலா? காரணகாயத்திலா? இல்லை. பின்னை?

குஹாயாம்—உடலுக்குள் மறைந்திருப்பதால் இதயம் குஹை யெனப்படும். பெட்டியில் துணிமணியும் இருக்கிறது, மணியுமிருக்கிறது. அதுபோல் இதயத்தில் போகம் இருக் கிறது. வாசனையிருக்கிறது, நோயிருக்கிறது, பரமாத்மாவும் இருக்கிறார். ஆத்மா உள்ளே இருந்து என்ன செய்கிறது? "ப்ராமயந் சர்வ பூதாநி" கீதை. அருஜுன! (உள்ளே யிருந்துகொண்டு) கருவி கரணங்களை இயக்கி வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பது கீதையின் பொருள். பஸ்யத் — உள்ளத்தில் இருந்துகொண்டு கண்வாயிலாக ஆத்மா பார்க்கிறது. காது வாயிலாகக் கேட்கிறது. மூக்கு வாயிலாக முகருகிறது. துவக்கு வாயிலாகத் தொடுகிறது. நாக்கு வாயிலாகச் சுவைக்கிறது. மனதினால் பலவிதமாக எண்ணு கின்றது. புத்தியினால் நிச்சயிக்கின்றது. உள்ளேயிருந்து நான் நான் என்று குரல் கொடுக்கிறதே அது பரமாத்மா. அதுவே பரமபதம். ம. 7

தொடர்ச்சி

அது தேகத்திலிருக்குமானால் வா பார்ப்போம். ஆனால் ஆன்மா எப்படித் தெரிகிறது? பார்க்கும் விதத்தை மந்திரம் பகருகிறது—

3 1
நசக்ஷுஷா கிருஹ்யதே நாபி வாசா,
3
நாந்யைர் தேவைஸ் தபஸா கர்மணா வா !
3 4
ஞானப்ரசாதேந விசுத்தசத்வஸ்
ததஸ்து தம் பஸ்யதே நிஷ்கலம் தியாயமாந : 8

இ—ள்

(இது ஆத்மா) நசக்ஷுஷா—நேத்திரத்தாலும், வாக்கிறைலும், இந்திரியங்களாலும், தவத்தாலும், கர்மத்திறைலும், ஆத்மா அடையப்படமாட்டாது. பின்னே? ஞானத்தின் கிருபையாலும், தூய்மையான மனத்திறைலும், தியானத்திறைலும் அந்த உருவமற்ற ஆன்மாவையடைகிருர்கள்.

நசக்ஷுஷா— அது கண்ணுக்குப் புலனுகிறதில்லே. ஏன்? உருவமில்லாததால். விழி உருவத்தைமட்டும் பார்க்க இயலும். நாபிவாசா—வாக்கைக்கொண்டு வசனிக்க முடியாது. (அது அநிர் வசநீயம்) சொல்லுவதற்கு யோக்ய முடையதல்ல. சொல்லிருந்தால் பொருளுண்டு. பிரஹ்மத்தைச் சொல்லுவதற்கு வேதத்தில் ஒரு வாக்கியமும் இல்லே. எந்த வாக்கியத்திற்கும் பிரஹ்மம் பொருளல்ல. அது பரம்பொருள். ''வாக்குக்கெட்டாதென்றும்'' வாச்சியார்த்தமில்லாததால் லக்ஷியார்த்தமும் அல்ல. கௌரி விருத்திக்கும் அது விஷயமல்ல. ஏனெனின் ஆன்மா நிர்குணம்.

நாந்யைர் தேவை : — ஒரு இந்திரியத்திறைலேயும் ஆன்மா அறியப்படுகிறதில்லே. ஏனெனின் பொறிகள் புலன்களே மட்டும் நுகருகின்றன. ஆன்மா நிர்விஷயம். பொறிகள் விஷயஞானத்தை உண்டுபண்ணும், ஆன்மஞானத்தையுண்டுபண்ணுது. தத்வஞானத்தையுண்டுபண்ணும் வலிமை பொறிகளுக்கு இல்லே.

தபசா—அதைத் தவத்தாலும் அறியஇயலாது. தவம் அதுவரை செல்லமுடியாது. தவம் எல்லாவற்றையும் அடைவிக்கும், ஆனுல் ஆன்மாவை அடைவிக்காது. அங்ஙனமாயின் வைதிக யாகமூலமாக அடையப்படாதோவெனின் இல்லே. ந கர்மணு— வினேயினுலும் ஆன்மாவை விழைய இயலாது. அங்ஙனம் ஆயின் எங்ஙனம் அடையப்படுகிறது?

ஞாநப்ரசாதேந — ஞானம் தத்வமசிமகாவாக்கியத் (ஜன்ய) திலிருந்து எழுந்த அஹம் பிரஹ்மம் என்னும் ஞானம். தத்வதரிசனத்திற்குக் காரணமாகிறது. ஞானப் பிரசாதம்—சித்தப்பிரசாதம். வெறுப்பு விருப்பு, ஆசை முதலி யவைகளால் மனம் கலுசிதமாகிறது. இக்குணம்குற்றங் களிலிருந்து விடுபட்டசித்தம் நிர்மலமாகும். அந்தச் சித் தத்தில் உதிக்குஞ்ஞானம் ஞானப்பிரசாதம்.

ஆலயப்பிரசாதம் பாவத்தைப் போக்குகின்றது. குருப் பிரசாதம் அறியாமையை அகற்றுகின்றது. ஞானப்பிரசாதம் நலங்கனிந்த முக்தியைநல்கும். இன்றைக்குள்ள இளைஞர் களுக்கு இறைவனிடத்திலும் குருவினிடத்திலும் நிஷ்டை இல்லை. நிஷ்ட்டை — பக்தி. இதையறிவோமா அதை யறிவோமா என்று இங்கும் அங்குமாக மந்திபோல அலமந்து திரிகிறார்கள். ஒருபக்கம் உலகவாசனை. மறு பக்கம் மனச்சஞ்சலம். இவையிரண்டும் மனதை மலினப் படுத்துகின்றன. மனதிலிருந்து ஆசையையும், சித்தத்தி லிருந்து சலனத்தன்மையையும் விட்டுவிடு. ஞானத்தை யுறுதிப்படுத்து. இந்த ஞானப்பிரகாசத்தினால் அந்தக்கரணம் தூய்மையை அடைகின்றது.

மனம் தூய்மையைஅடைந்துவிட்டால் பிரஹ்ம தெரி சனத்திற்குத் தகுதியாகிவிடுகிறது. அப்பொழுது நிஷ்கலம் தியாயமாந :— நிற்குண பிரஹ்மத்தைநினை. தியானம் எப்போதும் இறைவனை நினைப்பது.

4

''தியாநேந ஆத்மநி பஶ்யந்தி கேச்சித் ஆத்மாநம் ஆத்மநா'' கீதை. சிலர் தியானத்தின் வாயிலாக தன்னிடத் தில் தன்னைப் பார்க்கிறார்கள். தியானம், நிதித்யாசனம் இரண்டும் வெவ்வேறு. நிதித்யாசனசப்தத்தில் நி. உப சர்க்கம். பிரஹ்மம், தியானம் பண்ணுபவனுக்குச் சொரூமா யிருக்கிறது என்று வேதாந்தம் கூறுகின்றது. ஆகலின் தியானஞ்செய்பவனுக்கு விஷயமல்ல, சொரூபம். ஆத்மா

வின் கற்பிதவடிவம் தியானத்திற்கு விஷயம், உண்மை வடிவம் தியானியின் வடிவம். எனவே வேதாந்தத்தில் 'தியாதவ்யம்' அன்று. பின்னே 'நிதித்யாசிதவ்ய:' என்பது தான். தன்னே பிரஹ்மம் என்று நினைப்பதால் எல்லா இடர் களும் இரவியைக்கண்ட இருள்போல் ஏகிவிடும்.

நிஷ்கலம்—ஐந்து விஷயங்களும் கலைகள். இந்தக் கலை களிலிருந்து ஆன்மா வேருக இருக்கிறது.

''கதா : கலா : பஞ்சதஸப் பிரதிஷ்டா :'' இதன் பிர காரம் ஐம்பொறிகளும் கலைகள்தான். பிராணனும் கலைதான். ஐம்பூதங்களும் கலைதான். ஆகமொத்தம் பதினேந்து கலைகள். மாயை, அவித்தை, எனவே பதினேழுதத்துவ லிங்கசரீரத்தை விட்டுவிடு. அதன் பிறகு நீ தூய்மையாகின்ருய். அவ்வா ருனஉன்னே பரமாத்மா தானே வந்து அடைவார். ம. 8

தொடர்ச்சி

சித்த சுத்தியான பிறகு நிஷ்கலபிரஹ்மத்தை யெங்கு தியானஞ்செய்வது, எவ்வாறு செய்வது என்பதற்குப்பதில்—

ஏஷோ அணுராத்மா சேதஸா வேதிதவ்யோ
யஸ்மிந் பிராண : பஞ்சதா சம்விவேஸ !
பிராணைஸ்சித்தம் சர்வமோதம் பிரஜாநாம்,
யஸ்மிந் விசுத்தே விபவத்யேஷ ஆத்மா. 9

இ—ள்

இந்த நுணுக்கமான ஆத்மாவில் ஐந்து பிராணனும், மற்றவைகளும், பற்றியிருக்கின்றன. இது காயத்திலிருக் கின்றது. இதை விசுத்த விக்ஞானத்தால் அடையவேண்டும். இது பொறிகள் வாயிலாக வியஷ்டி சமஷ்டி எல்லாவற்றி லும் இலங்குகின்றது. நெஞ்சம் நிர்மலம் ஆனபின்பு ஆத்ம சொரூபமாக விளங்குகின்றது,

சேதசா—ஞானத்தை யெவ்வாறு தேடவேண்டும்? தியானஞ்செய்வது எங்கே? எந்த உடலில் பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் வசிக்கின்றனவோ, எந்த தேகத்தில் ஞாநேந்திரியம், கர்மேந்திரியம்வசிக்கின்றனவோ அந்த தேகத்தில் பரமாத்மாவை தியானஞ் செய்யவேண்டும்.

பிராணைஸ்சித்தம் சர்வமோதம் பிரஜாநாம் — எல்லா உயிர்களுடையசித்தமும் இந்திரியங்களோடு கலந்து போயிற்று. சித்தம் சிவன்பால் செல்லவேண்டும். ஆனால் அது போகத்தைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறது. சித்தம் சிவனை விட்டுவிட்டு ஜெகத்தை நினைத்துக்கொண்டிருக்கிறது. விலைமகள் தன்னுயகனை நினையாமல் பரபுருஷனை நினைப்பது போல. ஆகலின் சித்தத்தை இந்திரியத்திலிருந்தும் இந்திரிய விஷயங்களிலிருந்தும் திருப்பு. பரமாத்மாவோடு பழகும் படிசெய்.

விபவத்யேஷ ஆத்மா—எங்கு சித்தம் விஷயத்திலிருந்தும், இந்திரியத்திலிருந்தும் வெளியேறுகின்றதோ அங்கு ஆத்மா தன்னைப் பிரகாசிக்கிறது. நீ செய்யவேண்டிய வேலை சித்தத்தில் இருக்கின்ற வாசனையை விலக்கவேண்டுவது தான். விபவே—தூய்மையான மனதில் ஆன்மா தானுக இலங்குகின்றது. எனவே மனத்தூய்மையைத்தேடு. பம்பையில் ஒரு பக்தன் ஒரு மகாத்மாவை உணவிற்காக அழைப்புக் கொடுத்திருந்தான். மகாத்மா அவன் வரச்சொன்ன நேரத்தில் அவன் இல்லத்திற்குச் சென்றார். அங்கு அப்பொழுதும் சமையல்வேலை முடியவில்லை. சிறிதுநேரம் வெளியில் நில்லும் என்றான் பக்தன். மகாத்மா அவன் சொன்னதும் வெளியே சென்று நின்றார். சமையல் முடிந்ததும் அழைத்து உணவையளித்தான். அவர் உண்டு பருகி வெளியே சென்றார். அவர் மகாத்மா.

பரமாத்மா சர்வக்ஞன். அவன் நமது உள்ளத்தை நன்கு அறிவான். நமது உள்ளம் வெள்ளையா? கருப்பா என்று

உணர்ந்து மெள்ள உள்ளே நுழைகிருன். உள்ளம் வெள்ளை போல சுத்தமானதும் தனது வடிவத்தை வெளிப்படுத்து கின்ருன்.

ஒருமுறை ஜெகன்ஞதபுரி சங்கராசாரியார்க்கு கான்பூர் பக்தர்கள் அழைப்பு விடுத்திருந்தனர். அவர்க்கு வெகு ஆரவாரத்தோடு வரவேற்புக்குழு அமைத்திருந்தனர். அவர் மூன்று நாளைக்கு முன்னர் போய்ச்சேர்ந்தார். புகைவண்டி நிலையத்திற்குப் பக்தர்கள் வந்து சுவாமிகளுடைய எளிய நிலைமையைக்கண்டு நீங்கள் நகரத்திற்குள் வராமல் மூன்று நாள் கழிந்ததும் வாருங்கள் என்று அனுப்பிவிட்டார்கள்.

இம்மாதிரி இறைவனல்ல. எப்பொழுது அந்தக்கரணம் காமம், வெகுளி, மயக்கமிவைகளிலிருந்து புனிதத்தன்மையை அடையுமோ அப்பொழுது இறைவனை வரவேற்பதற்கு அருகதியுடையதாகிறது. ஆன்மஒளியைக்காணவேண்டு மானுல் அதற்கு ஒருமுறையிருக்கிறது. காமம், வெகுளி, மயக்க முதலியவையிருக்கும்போது நான் உள்ளே நுழைந் தால் அவைகளும் எனது வடிவமாகிவிடும், ஆகையால் அவைகள் நீங்கின பின்னர் உள்ளே நுழைவோம் என்று ஆன்மா எண்ணுகிறது.

ஆகையால் அவைகளையகற்றவேண்டியது அவசியம். மேகம் நீங்கிய பின்னர் சூரியன் தோன்றுவதுபோல் சித்தத் தில் உள்ள தீய குணங்கள் நீங்கியபிறகு சின்மய ஆன்மா மிளிரும். ம. 9.

தொடர்ச்சி

ஆன்மஞானத்திற்கு ஏன் அதிக கிலேசப்படவேண்டும்? மனம் சுத்தமானதும் தத்வஞானம் உண்டாகிவிடும், அங்ஙன மாயின் ஆத்மஞானத்தால் என்ன மஹிமையுண்டாகிறது என்பதற்குப் பதில் இம்மந்திரம்—

4

யம்யம் லோகம் மநசா சம்விபாதி
விசுத்த சத்வ : காமயதே யாம்ஸ்ச காமாந் !
தம் தம் லோகம் ஜயதே தாம்ஸ்ச காமாந்,
தஸ்மாத் ஆத்மக்ஞம் ஹி அர்ச்சயேத் பூதிகாம 10.

இ—ள்

தூய்மையான மனிதன் மனதினுல் எந்த எந்த உலகத்தை யடைய விரும்புகின்ருனே, எந்த எந்த போகங்களை நுகர விரும்புகின்ருனே, அந்தந்த போகத்தையும். அந்தந்த உலகத்தையும் அடைகிருன். ஆகலின் இகபரசௌக்கியத்தை விரும்புகின்ற மக்கள் ஞானிகளை வழிபடவேண்டும்.

ஞானிகள் வழிபாடு— ஆலயங்களுக்குச் சென்று மூர்த்திகளை வழிபடுவதால் எவ்வளவு பயனைப் பெறுகிருேமோ அதைப்பார்க்கிலும் ஞானியின் வழிபாட்டால் இருமடங்கு பயன் உண்டாகும். இதைப்பற்றி சம்சாரிகளுக்கு நன்கு தெரியாது. அவர்களுடைய கருத்து மூர்த்தி பரமேசுவரன், ஞானி பரமேசுவரன் அல்ல என்பது. ஒரு மகாத்மா சொல்வது—ஞானி பரமேசுவரனல்ல, அவருக்கும் மேன்பட்டவன் என்பர்—

பிரம்மஞானி ! நீ பரமேசுவரன்.

பிரம்மஞானியைத் தேடுபவன் பரமேசுவரன். சமயோசித மாலை. சிவகாமிநேசன் சிவயோகியை தேடிக்கொண்டிருக்கிருன். ஞானியெங்குளான் என்று ஞாலமுழுதும் அலைகிருன். ஆலயத்தில் கிடைக்கின்ற லாபம் நமது நம்பிக்கையால் கிடைக்கின்றது. இறைவன் மூர்த்தியில் எவ்வளவு விசுவாசம் வைப்பாயோ அவ்வளவு பலன் உனக்குக் கிடைக்கிறது. வழிபாடு நம்பிக்கையைப் பொருத்திருக்கிறது.

மூர்த்தி தானுக பக்தன் நன்ருயிருக்கட்டும் என்று எண்ணுவதில்லை. எண்ணுவதற்குரிய கருவி மனம். அது மூர்த்தியில்

இல்லை. இதனால் இறைவழிபாட்டைப்பார்க்கிலும் இனிய ஞானி வழிபாடு சிறந்தது. தீர்த்தங்களுக்குப் போவதைப் பார்க்கிலும் குருவின் அண்மைக்குச்சென்றால் நல்லது. விரதம் இருப்பதைப்பார்க்கிலும் குருபிரசாதம் அருந்துவது நலம். ஏனெனின், ஞானிவழிபாட்டில் பக்தனுடைய எண்ணமும் ஞானியினுடைய எண்ணமும் ஒன்றாகிவிடுகின் றன. எனவே ஞானியின் வழிபாட்டில் இருமடங்கு பலன் உண்டாகிறது. தீர்த்தம், மூர்த்திபூஜை, அல்லது விரதம் இவைகளில் கர்த்தாவின் எண்ணந்தான் வேலை செய்கிறது.

இருவர் மனம் ஒன்றாகச்சேருமானால் உலகத்தையே வென்று விடுவான்என்று மகான்கள் சொல்வார்கள். உலகில் மற்றவர்கள்மனம் வேறு வேறாக இருக்கிறது. ஆகலின் ஞானியின் வழிபாட்டின்விதியை விதிக்கின்றது — யம்யம் லோகம் மநசாசம்விபாதி—மனம் சும்மா இருக்காது. யானை, குரங்கு, கைக்குழந்தை யிவைகள் சும்மா இருக்கமாட்டா. "சித்தம் வானரச்சஞ்சலம். ஞானவாசிட்டம்." குரங்குபோல் மனம் திரியும் என்றபடி, குரங்கு ஒரு கிளையில் இருந்து மற்றொரு கிளைக்குக் குதிப்பதுபோல மனமும் பல எண்ணங் களில் அலமந்து திரியும்.

கடலில் அலையெழுந்து விழுந்து கொண்டிருப்பதுபோல சித்தம் என்னும் பெருங்கடலில் எண்ணம் என்னும் அலைகள் வாரிபோல மாறிமாறி வரும். சம்விபாதி — சங்கல்பயதி. சங்கற்பம் பண்ணுகின்றான். ஞானி புருஷனின் எண்ணம் பழுது அடைகிறதில்லை. அவனை வழிபடுகின்ற மக்கள் அவ் வவ்வுலகத்தை அடைகின்றனர். ஞானியும் பல நன்மைகளை யெண்ணுவான். அதன் பயனை அவனும் அடைவான். ஞானி யெதற்காக எண்ணுகிறான் என்பது ஒருகேள்வி. அவனும் எண்ணுவான். தன் பொருட்டாகவோ தனது அன்பர்கள் பொருட்டாகவோ எண்ணுவான். எண்ணிய பயனைத்திண்ண மாயடைவான். ஞானி யெங்கும் போகவேண்டும் என்று

எண்ணமாட்டான். ஒருவேளை போகவேண்டும் என்று எண்ணினால் அவனைத் தடுப்பாரில்லை. ஞானி தனது அன்பன் எந்த உலகத்திற்கு ஏக விரும்புகிறானோ அவன் அங்கு செல்லட்டும் என்று எண்ணினால் அவன் அங்கு செல்லுவான். பக்தன் வைகுண்டம், சுவர்க்கம், கைலாசம் முதலிய எந்த உலகத்திற்குப் போக விரும்பினாலும் ஞானியின் சங்கல்பத்தால் அவன் போகமுடியும்.

ஞானிக்கு இந்த எண்ணம் தன் பொருட்டல்ல. பின்னை? பக்தன் பொருட்டு. பக்தனுக்கு நலம் உண்டாகட்டும் என்பதுதான் ஞானியின் நோக்கம்.

''அன்பனுக்கு அன்பன் நீ ஆருயிர்க்குத்தோழன் நீ'' வேதாந்த இரத்தினம். பொருள்தெளிவு. தரையிலிருப்பவனுக்கு மாடியிலிருக்கும் பொருள் தெரிகிறதில்லை. அது போல் சம்சாரிகளுக்கு ஞானியின் பெருமை தெரிகிறதில்லை. ஞானியொன்றுஞ்செய்யப்படாது, உயிரோடிருக்கப்படாது. என்று எண்ணுகின்ற மனிதஇனமும் இருக்கின்றது. ஞானிகளிடத்தில் பற்று வராததற்குக் காரணம் வேதாந்தத்தில் அன்பு இல்லாததுதான் வேதாந்தத்தில் வாசனை புண்ணியாத்மாவிற்குத்தானுண்டாகும்.

ஞானம் அக்ஞானத்தை நீக்கும். அது அந்தக்கரணத்தை மாற்றியமைக்காது. ஆசைகள் ஆபாசனைப்பற்றும். சிதாத்மாவைப் பற்றுகிறதில்லை. அந்தக்கரண விசிஷ்ட ஆபாசனிடத்தில் காமம் வருகிறது போகிறது. வெகுளி வரும் போகும். அகண்ட பிரஹ்மத்தில் வருவதுமில்லை, போவது மில்லையென்று பஞ்சதசியில் வித்யாரண்ய சுவாமிகள் கூறுகின்றார்கள்.

எங்ஙனம் கொசு, நாய், பூனைகளுக்கும் இச்சையுண்டாகிறதோ அதுபோல் ஞானிக்கும் இச்சையுண்டாகிறது. அங்ஙனமாயின் இவ்விருவர் இச்சையில் என்ன வேற்றுமை

யிருக்கிறது? மனிதன் இது நான், இது எனது என்கிறான். ஞானி—இது நானல்ல, இது எனதல்ல என்கிறான். இது தான் இருவருக்கும் உள்ள வேற்றுமை. இந்நிலையில் ஞானி யார்பொருட்டு சங்கல்பஞ்செய்தாலும் அவனையொன்றுஞ் செய்யாது. இச்சைக்குக் கர்த்தா ஆபாசன். சுத்தச் சேதன மல்ல. ஞானி சுத்தச்சேதனம். அவனை அது அணுகாது.

பகவத்பாதாள் (சங்கராச்சாரியாள்) தங்கள் தாயாருக்கு வைகுண்ட பதவி கிடைக்கட்டும் என்று சங்கற்பஞ்செய்தார். அதன் வலியால் ஆரியாம்பாள் வைகுண்டத்திற்குச் சென்றாள். சனகாதிகள் வைகுண்டம் போகவேண்டும் என்று எண்ணினார்கள். அவ்வாறு அங்கு சென்றார்கள். இதனால் அவர்கள் ஞானம் நஷ்டமாகவில்லை. ஞானிகள் சங்கற்பம் மிக வலியது.

சாந்தோக்கிய உபநிடதத்தில் பல வித்தைகளில் ஒன்று ஹார்த்தவித்தை. அதன் பெருமைகளைப் பேசுகின்ற சுருதி. "சயதி பித்திருலோக காமோபவதி சங்கல்பாதேவ அஸ்ய பிதர : சமுத்திஷ்டந்தி" சா.உ. 8—2—1.

இ—ள்

தகரஉபாசகன் தங்கள் தலைமுறையினர் உலகத்தை யடைய விரும்பினால், அவர்களுடைய மூதாதிகள் முன்வந்து நிற்கின்றனர் என்பது சுருதியின் பொருள். "சங்கல்பாதேவ தத் சுருதே:" பி.சூ. தகர உபாசகன் எந்த உலகத்தையடைய விரும்பினாலும் அந்த உலகத்தை எளியமுறையில் தெளிவாக அடைகுவன் என்பது சூத்திரத்தின் பொருள். மகரிஷி வசிஷ்டர் தனது பர்ணசாலையில் இருந்தார். திடீரென அயோத்தியாவிற்குச் சென்று இராமனைக்கண்டு வருவோம் என்று எண்ணினார். அவ்வாறு அங்குசென்றார். ஸ்ரீராமனைக் கண்டு களித்து மீண்டும் நிஜஆச்சிரமத்திற்குத் திரும்பினார். இதனால் அவர் ஞானம் அழிந்துவிட்டதா? இல்லை இல்லவே யில்லை.

இதனுல் என்ன தெரிகிறது? ஆசை ஞானியின் ஞானத்தைக் கெடுக்காது. கெடுக்கும் என்று எவன் எண்ணுகிருனே; அவனுக்கு வேதாந்த உணர்வு நன்ருக உதிக்கவில்லை என்று கொள்ளவேண்டும். வேதாந்தம்—விவகாரத்தில் தலையிடுவதில்லை. யோகவாசிட்டத்தில் ஒரு கதை வருகிறது. ஒரு அரக்கி. அவள் திருநாமம் கர்க்கடி. அவள் தத்வஞானத்தை நன்கு பெற்றிருந்தாள்.

அவள் ஒரு வனவாசினி. அவள் அரண்யத்தில் திரியும் போது அரசனும், அமைச்சனும் அவ்வழியாக வந்தனர். நாம் மணங்கமழும் உணவையுண்பவர்கள். அவள் பிணங் கமழும் உணவையுண்பவள். ஆகையால் அவர் இருவரையும் உண்ணத்துணிந்தாள். விமலமன்னனும், மந்திரியும் எங்களுக்கு வேதாந்தம் தெரியும் என்றனர். அவள் அங்ஙனமாயின் வேதாந்த விஞக்களை வினவுகின்றேன் நீங்கள் பதில் பகருங்கள் என்ருள். ஆகட்டும் என்ருர்கள்.

கர்க்கடி—உருத்திரன் கோபத்தினுல் பிரளயம் பண்ணுகின்ருனே அவன் ஞானியா? இல்லையா?

விடை— அரசன்—ஆம் ஞானிதான்.

கர்க்கடி—விஷ்ணு சேஷநாகத்தில் தனது துணைவி திருமகளைவிட்டு தனது பாதத்தை பிடிக்கச்சொல்லி உலகத்தைப் பாலனஞ் செய்கின்ருரே அப்பொழுது அவர் ஞானியா? இல்லையா? அரசன்—ஆம். ஞானிதான் என்ருன். கர்க்கடி—கலைமகளோடு கமலாசனன் கலந்து ஞாலத்தைப் படைக்கின்ருனே அப்பொழுது அவனுடைய அறிவு இருக்கிறதா? அழிந்துபோகிறதா? அரசன்—ஞானமிருக்கிறது. அவனுடைய அறிவு ஒருபோதும் அழிகிறதில்லை என்ருன் கர்க்கடி-மன்னன் ஜனகன் ஞானியா? இல்லையா? மருமகன் ஸ்ரீராமன் ஞானியா? இல்லையா? அவர் இருவரும் அரசுபுரிந்தார்களே.

அங்ஙனமிருப்ப ஞானியா? இல்லையா? அரசன்—இருவரும் இணையில் தத்வஞானிகள் இதில் ஐயமில்லை.

ஞானிக்கும் புத்தகம், ஆடை, அணிகலம், நீர் நெருப்பு இவையெல்லாந் தோற்றத்தான் செய்யும். ஞானம் வந்ததும் கண்தெரியப்படாது, காது கேட்கப்படாது, நாக்கு சுவைக்கப்படாதென்பது பொருளல்ல. ஞானி குருடனாக இருக்கவேண்டும் செவிடனாக இருக்கவேண்டும் என்பது அருத்தமில்லை. ஆபாசனுக்குப் பொருளைப் பார்க்கவேண்டும், அடையவேண்டும் என்னும் அவா உண்டாகும். சாட்சி சுவயம் பிரஹ்மம். அதற்கு பொருளைப் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் உண்டாகாது. இச்சைக்கு இருப்பிடமான அந்தக்கரணமில்லை.

விசுத்த சத்வ :— அறிஞன் சத்வத்தை விசுத்தமாக்கி விட்டான். மனம் எப்போதும் இராது என்று அவனுக்குத் தெரியும். மேலும் தனக்கு பிறப்பிறப்பு இல்லையென்றும் தெரியும். ஒரு கிராமவாசிக்குக்கடல் ஒருபோதும் தெரியாது. ஒருமுறை கடற்கரைக்குச் சென்றான். அதைப்பார்த்தான். அலை கிளம்பியது. நகரத்தையரித்துக் கொண்டுபோய் விடுமோ என்று அஞ்சியலறினான். எவன் கடலின் இயல்பை யறிகிறானோ அவன் அஞ்சுவதில்லை. இம்மாதிரி ஞானி அந்தக்கரணத்தின் இயல்பை நன்கு அறிந்திருக்கிறான். மனதின் அலைகள் மாய்ந்துவிடும் என்று மகாத்மாவிற்குத் தெரியும்.

விசுத்த சத்வ :— கிலேசமற்றவன். அவனுக்கு உலகத்தில் இராகமும் துவேஷமும் இருக்கிறதில்லை. எவனுடைய மனம் எல்லாத் துயரங்களைவிட்டு கரையேறி நவீனமாக இருக்கிறதோ, மிருதுவாகவும், ஈரமாகவும் இனிமையாகவும், வெண்ணெயைப்போல வெள்ளை நெஞ்சமாகவும், இருக்கிறதோ அவனே சுத்தசத்வன்.

மனிதன் உணவு உண்கிறபோது பல சுவையை அனுபவிக்கிருன். சிலநேரம் பாயாசம், சிலநேரம் ஊறுகாய், சிலநேரம் சாம்பார், சிலநேரம் பச்சைமிளகாய்க்கலந்த தக்காளிச்சட்ணி. இதுபோல் இறைவனும் ரசங்களை மாற்றி மாற்றி உலகத்தைப்படைக்கிருன், பார்க்கிருன். ஞானி சிலநேரம் சிருங்காரரசத்தையனுபவிக்கிருன், சில நேரம் சாந்தரசத்தையனுபவிக்கிருன். அனுபவித்தாலும் அவன் மனம் அதனோடு பற்றுகிறதில்லை. சமையற்பறையில் பலரச உணவுகள் வருவதுபோல இசசம்சாரம் என்னும் சமையற்பறையில் எல்லா ரசங்களும் வந்துபோய்க்கொண்டிருக்கும்.

நாங்கள் ஒருமுறை பல மகாத்மாக்களோடு பம்பையிலுள்ள உபநகரம் தாதர்க்கு விருந்துக்குச்சென்ருேம். மழைக் காலம். எங்கள்கார் முன்னே ஒரு லாரி வந்தது. அதன் வேகத்தில் வழியிலுள்ள தண்ணீர் எங்கள் காரிலுள்ள ஆத்மானந்த சுவாமியின் வாயில் விழுந்தது. அவர் வேடிக்கைக்காக நான் இதுவரையெத்தனையோசரணமிர்தம் அருந்தியிருக்கிறேன், ஆனல் இன்று லாரிச்சரணமிர்தம் பருகினேன் என்ருர். இந்நிலை யொரு சம்சாரிக்கு நேர்ந்திருக்குமானல் கலகம்வந்து சேர்ந்திருக்கும். உலகத்தில் வாழ வேண்டுமானலும் சாதுக்களிடத்தில்தான் கற்கவேண்டும்.

வாழ்க்கையில் பல ரசங்கள் வரவேண்டும். பல சுவையை நுகர்ந்தால்தான் ஆனந்தமுண்டாகும். சௌராஷ்ட்ர சமுதாயத்தில் ஒரே உணவு உண்கிறதில்லை. ஒருநாள் வெறும் சாதம், மறுநாள் சர்க்கரைப்பொங்கல், மற்ருெருநாள் எலுமிச்சம்பழச்சாதம், இன்ஞெருநாள் தயிர்ச்சாதம். மற்ருெரு நாள் புளிச்சாதம். இவ்வாறு பல சுவைகளைச் சுவைத்து உண்பார்கள். அதுபோல் வையகத்திலும், வாழ்க்கையிலும் பல இன்பதுன்பங்கள் வரும். அவைகளையும் சுவைக்க வேண்டும்.

காமயதே யாம்ஸ்ச காமாந் — ஞானிகள் எந்தெந்த போகத்தை விரும்புவார்களோ அந்தந்த போகங்கள் அவர் களையடையும். ஞானிகள் அரசாக்ஷியும் புரிவார்கள். ராஜ லக்ஷிமியை நுகர்வார்கள். ஸ்ரீராமன், ஸ்ரீகிருஷ்ணன் ராஜா அஸ்வபதி முதலியோர்கள் ஞானிகளாக இருந்தனர். ஞானி கள் வனத்தில்தான் வசிக்கவேண்டும். நகரத்தில் வசிக்கக் கூடாது என்பதல்ல. ''பத்தநே வா வனேவா'' காட்டிலோ நாட்டிலோ ஞானிகள் வாழலாம்.

பாயாசம் உண்ணக்கூடாது, தீம்பண்டம் தின்னக் கூடாது. பால் பருகக்கூடாது. கூழ்தான் அருந்தவேண்டும் என்னும் நியமங்கள் ஞானிக்கில்லை. தூய்மையான மனத்தை யுடையவர்கள் எவ்வுலகத்தை விரும்புகிருர்களோ அவ்வுல கத்தையவர்கள் அவசியமடைகிருர்கள். அவர்கள் வாஞ்சித இன்பங்களும் அவர்களையணுகும். ''தள்ளினும் போகேன்'' சமயோசிதமாலே. ஞானிகளிடம் வந்த போகங்கள் — நீர் தள்ளினும் நாங்கள் போகமாட்டோம் என்கின்றன.

அலைமகளை அமரர் அனைவரும் விரும்பினர், ஆனல் ஹரி விரும்பவில்லை. இருப்பினும் மலர்மகள் மாலை விரும்பி னள். மால் — திருமால். அவர் அவளை மணந்தார். சிவபெருமான் சிவகாமியை விரும்பவில்லை, ஆனல் சங்கரி சங்கரனைச் சார்ந்தாள். ஞானி யெதையும் விரும்புகிறதில்லை. ஆனல் எல்லாம் அவனை விரும்பும். ஒருமுறை நான் பல மகாத்மாக்களோடு மூன்றுகல்தொலைவில் உள்ள மகாத் மாவை தெரிசிக்கப்போனேன். மகாத்மாக்களில் ஒருவர் போகும் வழியில் மாம்பழங்கிடைத்தால் உண்ணலாம் என் ருர். பேசிக்கொண்டே நாங்கள் போனேம். அவ்வேளையில் உள்ளேயிருந்து சுவாமிகள் வெளியே வந்தார். எங்கள் அனைவரையும் அன்போடு அரவணைத்தார். மாமரத்தில் பூக்கள் பூக்காதகாலம்.

எங்களைக்கண்டதும் உள்ளேயிருந்து ஒரு கூடை நிறைய மாம்பழம் கொண்டுவந்து சாப்பிடச் சொன்னார். நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அன்பர்களே! சத்சங்கம் பண்ண வந்தீர்களா மாம்பழம் சாப்பிட வந்தீர்களா என்று வேடிக்கையாகக் கேட்டார். நாங்கள் மாம்பழம் நினைத்ததை எவ்வாறு அவர் உணர்ந்தார்? மாம்பழம் எங்ஙனம் வந்தது? ஞானி, இறைவன் என்பதை மறந்துவிடாதீர்கள்.

ஞானி கற்பகத்தரு, காமதேனு, சிந்தாமணி. அவர் அண்மையில் இருந்துகொண்டு என்ன நினைத்தாலும் நமக்குக் கிடைக்கும். அவரது சான்னித்தியம் ஈசுவரசான்னித்தியத்திற்கு மேலானது. மக்கள் உள்ளத்தில் என்ன உதிக்குமோ அதை மகான்கள் அறிவார்கள். ஞானிகள் விரும்பினால் அயன், அரி, அரனையும் அழைக்கமுடியும். மூவரும் வணங்கிமுடியால் அவனது ஏவல்செய முந்துறுவரே. சசிவன்ன போதம். ஞானி விரும்பினால் ஞாலமுழுவதும் அனுபவிக்கலாம்.

தஸ்மாத் ஆத்மக்ஞம் ஹி அர்ச்சயேத்பூதிகாம:— எந்த மக்கள் விபூதி—ஐஸ்வர்யங்களை விரும்புகின்றனரோ அவர்கள் ஐஸ்வர்யங்களையடைகின்றனர். ஆசையுடையவர்களாக இருந்தால் ஞானிகளை வழிபட்டு நலத்தைப்பெறலாம். ஆசையின்றியவர்களாகஇருந்தால் ஞானியை வழிபட்டு முக்திநலத்தையடையலாம். அர்ச்சயேத் — ஞானியின் பாதத்தைக்கழுவி, பணிபுரிந்து, வணங்கி, வாழ்த்தி வழிபட வேண்டும் என்பது சங்கரபாஷ்யத்தின் கருத்து. "சேவையா இச்சேத்—பணிபுரிந்து பயனைக்கருது. சேவா மேவாவைத் தரும். மேவா — முக்தி என்பது நியாயம். ஞானி சத்திய சங்கற்பன். ஆகலின் அவன் வந்தனீயன். அவன் ஞானி. எவன் உலகப்பொருளை விரும்புகிறானோ, அவனும் அவசியம் ஞானியை வழிபடவேண்டும். எவன் மனத்தூய்மையையும், ஞானத்தையும் விரும்புகிறானோ அவன் அறிஞனை அவசியம் அன்புடன் வழிபடவேண்டும். ம. 10.

மூன்றாவது முண்டகத்தின் முதலாவது கண்டம் முற்றிற்று.

## மூன்றுவது முண்டகத்தின் இரண்டாவது கண்டம்

தொடர்ச்சி

ஞானிவழிபாட்டிற்குரிய பலன் — ஆசையுடையவனுக இருந்தாலும் ஞானியை வழிபடவேண்டும் என்று முந்திய மந்திரத்தில் அர்ச்சயேத் பூதிகாம: என்ற மந்திரத்தில் கூறியிருக்கிறது. இனிவரும் மந்திரத்தில் நிஷ்காமனுக இருந்தாலும் ஞானியை வழிபடவேண்டும் என்பது உரைக்கப்படுகிறது.

3 4
ச வேதைதத் பரமம் பிரஹ்ம தாம
4 4
யத்ர விஸ்வம் நிஹிதம் பாதி சுப்ரம் !
உபாசதே புருஷம் யே ஹி அகாமா :
4
தே சுக்கரம் ஏதத் அதிவர்தந்தி தீரா: ம. 1

இ—ள்

எதில் இவ்வுலகமுழுவதும் இருக்கின்றனவோ எது சுத்தரூபமாக விளங்குகின்றதோ, அந்த பிரஹ்மத்தை ஆத்மஞானி யறிகிறுன். ஆகையால் எந்த நிஷ்காம மனிதன் அந்த ஆன்மாவை வழிபடுகின்றுனே அவன் அறிவாளி. யோனி வடிவபிறவியை அடையான்.

படைப்பில் மேலானவணக்கத்திற்குரியவன் யார்? எவன் ஒருவன் பரமாத்மாவை நிஜ ஆத்மரூபமாக அறிந்திருக்கிறுனே அவன். அவ்வான்மா எத்தகையது? எதில் எல்லா உலகமும் இலங்கிக்கொண்டிருக்கின்றனவோ அது பரப்பிரஹ்ம பரமாத்மா. மாயாப்பிரபஞ்சமுழுவதும் அங்குதான் மிளிர்கின்றன. அதுவே ஞானவடிவ ஆன்மா. யத்ர விஸ்வம் நிஹிதம் பாதி சுப்ரம் — குடம் மண்ணிலிருந்து விளங்குகின்றது, நகைகள் பொன்னிலிருந்து பொலிகின்றன. நூலிலிருந்து சேலை மிளிர்கின்றது. அவ்வாறு ஆன்

மாவில் இருந்துகொண்டு அகிலமும் ஜாஜ்வலிக்கின்றது. ஆனாலும் ஆன்மா சுத்தமாயும் ஜோதி ரூபமாயும் துலங்கு கின்றது.

நித்தியமாயும், நிர்மலமாயும், நிறைந்ததாயும் உள்ள ஆன்மா உனதுவடிவம். அது உனது பிராணனுக்குப் பிராணன். மனத்திற்கு மனம். அத்தகைய ஆன்மாவை விட்டு பொறிகள்வாயிலாகப் புலன்களுக்கு ஏன் செல் கிறாய்? அங்கு செல்வதற்குக்காரணம் ஆசைதான். அதற்குப் பெயர் காமம்.

அன்னை தனது தடக்கையால் தனது குழந்தையைத் தூக்கி ஒக்கலில் வைத்து பருப்பும் நெய்யும் கலந்த உண வைக் குழைத்து ஊட்டுகிறாள். அக்குழந்தை யதைவிரும் பாமல் ஒக்கலிலிருந்து கீழேயிறங்கி முன்னே நிற்கும் பூனைக் குட்டியையும் நாய்க்குட்டியையும் பிடிக்கின்றது. இனிய ஒக்கலைவிட, இனிய உணவைவிட பூனை நாய்களில் ஆனந்த மில்லை. இருப்பினும் அக்குழந்தைக்கு அதனிடத்தில்தான் ஆனந்தமுண்டாகிறது. அதுபோல் ஆனந்தநிலையமாகிய பிரஹ்மத்தைவிட்டு துன்பநிலையமாகிய உலகத்தை மனிதன் விரும்புகின்றான்.

ஒரு கோடீசுவரனுடைய பையன் ஞாயிறுதோறும் உணவு விடுதிக்குச் சாப்பிடப்போனான். நான் அவனைப் பார்த்துச்சிரித்தேன். ஒருநாள் அவன்தந்தையைக் கண்டேன். ஐயா! உங்கள் இல்லத்தில் இனிமையான உணவு செய்கிறதில்லையா, உங்கள் புதல்வன் ஞாயிறு தோறும் உணவுவிடுதிக்குச் செல்கிறானே யென்றேன். கோடீசுவரன்—எனது மைந்தன் அன்னிய நாட்டிற்குப் போகப் போகிறான், அதனால் இங்கே விடுதிகளில் உண்டு பழகுகிறான் என்றார்.

நீ வெளியில் ஏன் செல்கிறாய்? வீட்டில் எல்லாம் இருக் கும்போது வெளியில் செல்லவேண்டியதில்லை. இருப்பினும்

வீட்டிலுள்ள பதார்த்தத்தில் உருசியில்லை. நீ ஒவ்வொரு அடிதூரம் வெளியே செல்வதும், தனக்குப் புறம்பாக நேரங்காலத்தை அறிவதும், தனக்கு வேருகப் பொருளை விரும்புவதும் முறையில்லை. இதற்குக் காரணம் தன்னை நிறைந்தவனுகக் கருதாததுதான். உன்னுடையமதி குறைவிலிருக்கிறதேயொழிய நிறைவில்இல்லை. நிறைந்த பூரணத்தைப்பார். நிறைவில் பார்வையைச் செலுத்திஞல் குறைவு தெரியாது. ஆன்மா நிறைந்தது. குவலயம் குறைந்தது. உனக்கு உண்மை ஞானமில்லை. அதையுணர்வதற்குப் புண்ணியமும் இல்லை. இப்பேராசையைப் போக்குவதற்குச் சொரூபத்தில் இருப்பது அவசியம்.

என்றுமாயிலங்கி யின்புருவான தன்னைத் தெரியாததால் அன்னிய பொருளையடைய அவாவுகின்ருய். இதுவே காமம் எனப்படும்.

காமக் கடுங்கனலில் கருகிஎனை வாட்டாமல் க்ஷேம நலத்திலென்றுந் திகழவைப்பாய் குருபரனே. குருபரக் கண்ணி. காமம் கனலுக்குச்சமானம். கனல் உடலைவாட்டும், காமம் உணர்வை வாட்டும். க்ஷேமநலம் — முக்தி. திருவருள் இருந்தால்தான் முக்தியில் வாழலாம்.

உபாசதே புருஷம் யேஹி யகாமா :— எவன் நிஷ்காமனே, எவனுக்கு இப்பொழுது தத்வஞானம் உண்டாகவில்லையோ, அவனுக்கு நல்லது கெட்டது இன்னதென்று தெரியும். கெட்டதைவிட்டு நல்லதையடைந்து போக முழுதையும் துறந்திருக்கிருன். போகத்தை விரும்பவில்லை. வைராக்கியனுகிவிட்டான். இந்நிலையில் உள்ளவன் ஞானியை வழிபடுகிருன். பின்பு தீரன்—வீரனுகி விடுகிருன்.

யம்ஹி ந வி2தயந்தி யேதே புருஷம் புருஷர்ஷ4ப!
ஸம2து3க்க சுகம் தீரம் சோ அமிர்தத்வாய கல்பதே!! கீதை.

வீரகுலத்தில் பிறந்த சூரனே! எவனை இந்த பொறிகளும் புலன்களும் துன்பப் படுத்துகிறதில்லையோ அவன் இன்பதுன்பங்களில் சமானமாக இருப்பவன். அவனே வீரன். அவன் முக்தி நிலையைப் பெற அருகதியுடையவன் என்பது கீதையின் பொருள்.

4

''தமேவதீரோ விக்ஞாய பிரக்ஞாம் குர்வீத பிராஹ்மண:'' வேதங்களை யோதிய வேதியர்கள் அந்த ஆன்மாவையறிந்து ஞானநிலையில் இருக்கவேண்டும் என்பது சுருதிப் பொருள்.

அகாம :— யாரிடத்தில் ஆசையில்லையோ அவன் தீரனாகின்றான். வீரன் என்பது பொருள். வீரன், சூரன், தீரன், வலியவன் என்பனவெல்லாம் ஒருபொருள் பல சொற்கள். அந்த ஆசையற்ற உள்ளத்தைப்படைத்தவன் தத்வஞானியை வழிபடுகின்றபோது ''சுக்ரம் ஏதத் அதிவர்த்தந்தி'' சுக்ரத்தைவென்றுவிடுகின்றான். சுக்ரம்—புருஷ வீரியம். வீரியம் ஜென்மத்திற்குக் காரணம். வீரியத்தில் யார் நுழைகிறார்? எவன் ஆசையில் உழன்றுகொண்டு இருக்கிறானோ அவன். பிறப்பையெவன் வெல்கிறான்? எவன் ஆசைக்குள் அகப்படுகிறதில்லையோ அவன். பிறவிக்கு வித்து ஆசை. ஆசைக்கு வித்து அவித்தை. தத்வ ஞானத்தால் ஆசை யொழிகின்றது. ஆசையின்மையால் அவித்தையின்மை. அவித்தையின்மையால் பிறப்பின்மை. இச்சை பிறவிக்குக் காரணமும், இச்சையின்மை பிறவாமைக்கு நிமித்தமாகின்றது. ''தவா அ பிறப்பீனும் வித்து'' குறள். அவா—ஆசை. தவா—தவறாமல். பிறப்பீனும்—பிறப்பை ஈயும் வித்து—காரணம் என்பது பொருள்.

வீரியம் ஜடம். புருஷன் சேதனம். சேதனபுருஷனை ஜடத்தோடு பொருத்துபவன் யார்? காமம். ஆசையில் ஜடம் என்னது? தனது ஆனந்தத்தை யறியாததுதான். மனிதன் ஆசையற்றவனாகிவிட்டால் வீரியம் செயலற்றுப்

போகிறது. சுக்ரத்தை வெல்வதற்குப் பொருள் சம்சாரச் சக்கரத்திலிருந்து விடுதலையடைவது. பின்னர் இன்னோர் கர்ப்பைக்குள் வரவேண்டுவதில்லை. ''கருப்பாசயக்குழிக்கே தள்ளுமோ கண்ணன்காணரீய திருப்பாதமே தருமோ தெரியாது சிவன் செயலே'' என்கிறார் அடிகளார்.

இம்மாதிரி முந்திய மந்திரத்தில் ஆசையோடு ஞானியை எவன் வழிபடுகிறனோ அவன் இவ்வுலகத்தையும், இறந்த பின்னர் வேறு எந்த உலகத்தை யடைய விரும்பினாலும் ஞானியின் சங்கற்பத்தால் அடைகிறனென்று சொல்லியிருக்கிறது. இந்த மந்திரத்தில் நிஷ்காமன் ஞானியை வழிபடுவானானால் ஜென்ம மரணத்தை வெல்வானென்று சொல்லியிருக்கிறது. எனவே சகாமன் நிஷ்காமனாகியஇருவரும் ஞானியை வழிபட வேண்டும் என்பது குறிப்பு. ம—1

தொடர்ச்சி

எவன் ஜென்ம மரணத்திலிருந்து விலகவேண்டுமோ, அவன் ஆசையை அவசியம் விடவேண்டும். விட்டவன் வீடு பெறுவான் என்றபடி.

காமாந்$_4$ய : காமயதே மந்யமாந :
ச காமபிர் ஜாயதே தத்ர தத்ர!
பர்யாப்த காமஸ்ய கிருதாத்மநஸ்து
இஹைவ சர்வே பிரவிலீயந்தி காமா : 2

இ—ள்

விஷய இச்சையுடையவர்கள் விஷயத்தை விரும்புகின்றனர். அவர்கள் அந்தந்த போகங்களை நுகர்வதற்கு அந்தந்த யோனிகளில் போய்ப் பிறக்கிறார்கள். ஆனால் யாருக்குப்போகங்களில் இச்சை நீங்கிவிட்டதோ அவர்க்கு எல்லா வாசனையும் ஒழிந்து போனதால் ஆசையெல்லாம் இங்கேயே மடிந்து விடுகின்றன.

இறைவனை யடைய விரும்புகின்ற மக்கள் முதற்கண் விட வேண்டியவை ஆசைகள்: இகபர சௌக்யத்தை எளிதில் விடவேண்டும். இவ்வுலகமும் துன்பவடிவம், அவ்வுலகமும் துன்ப வடிவ மென்று அறவே விட்டு விட வேண்டும். கடலில் இக்கரையில் உப்புத்தண்ணீர் அக்கரையில் மதுர ஜலம் என்பது மதிஹீனம் (பிரஹ்மானந்தயுக்தி) சம்சாரம் ஒரு பெரியகடல். இவ்வுலகம் இக்கரை. பிரஹ்ம லோகம் அக்கரை. இங்கும் துன்பம், அங்கும் துன்பம்.

இவ்வுலகில் பெற்ற தாயும் பகை. கொண்ட பெண்டிரும் பகை. ஈன்ற குழந்தையும்பகை. யாரும்பகை, நின்தாள் சதம். அயன் மால் உலகமும் அழியும். அரன்உலகமும் அழியும். பிரஹ்மம் சத்யம். ''சக்கர நெறி நில்'' ஔவை யார். சிறந்த மார்க்கத்தில் செல்ல வேண்டும். ''மோனம் என்பது ஞானவரம்பு''. பாட்டியார். ஞானத்திற்கெல்லை முக்தி. உலகம் படர்வது போல் ஆசையும் விரிகிறது. சுரைக்கொடி படர்வதுபோலும், அவரைக்கொடி படர்வது போலும் மனிதனுடைய ஆசைக்கொடி மேலுங்கீழுமாய்ப் படர்ந்திருக்கிறது.

ஒருநாள் தரையில் தவழ்ந்தோம். சிலகாலங்கழிந்ததும் கூரைமேய்ந்த இல்லில் வாழ்ந்தோம். பிறகு ஒடு மேய்ந்த வீட்டில் வசித்தோம். பின்பு காரைக்கட்டிடத்தில் இருந் தோம். இப்பொழுது பெரியமாளிகையில் வசிக்கிறோம். இன்னும் ஆசை தணியவில்லை. இந்திரபவனத்தில் வாழ எண்ணுகிறோம். இவ்வாறு ஆலம்வேர்போல் ஆழமாய்ப் போய்க்கொண்டேயிருக்கிறது. ஆசைக்கோரளவில்லையென்ற படி. பரமார்த்தம் மேலே செல்லும் வழி. தனியாகப்போகும் மார்க்கம். உடம்பும் சுமையாவதே என்றபடி.

காமாந்காமயதே மந்யமாந :— கருமிகள் கருமத்தைப் பற்றியும், யோகிகள் யோகத்தைப் பற்றியும் ஞானிகள்

ஞானத்தைப்பற்றியும் நவில்வார்கள். ஆனால் போகி — போகத்தைப்பற்றிப் பேசுவான். அவனுடைய சிந்தனம் எல்லாம் உணவில்தான் இருக்கும். பக்தன் பகவானுடைய குணானுவாதங்களைக் கூறுவான். போகி உணவைப்பற்றி யுரையாடுவான். இதுவேண்டும் அதுவேண்டும் என்று எண்ணுவான். ''போகே ரோகபயம்'' என்பது அவனுக்குத் தெரியாது.

எல்லா உலகத்திலுள்ள போகத்தையனுபவிக்க வேண்டுமானால் அவ்வவ் உலகத்தில்போய்ப் பிறக்கவேண்டும். அந்தந்த யோனிகளில் பிறந்து அந்தபோகத்தைத் துய்க்க வேண்டும். ''ஜாயதே தத்ர தத்ர'' ஆங்காங்கு போய்ப் பிறக்கவேண்டியிருக்கும். நீ விரும்புவது இன்பம், அது எங்கேயிருக்கிறதோ அங்கு நீ செல்லவேண்டும். எந்தச்சரீரத்திலிருந்து அதை நுகரவேண்டுமோ அந்தச் சரீரத்தில் நீ பிறக்கவேண்டுமென்பதைத் திட்டவட்டமாகத் தெரிந்து கொள். எந்த இன்பமும் துன்பம் கலவாமல் இல்லை.

யாருக்குப் பெண்களிடத்தில் மிகுதியாக இச்சையிருக்குமோ அவன் நாய், குரங்கு, ஆடு, பன்றி இவைகளாகப் பிறப்பான். யாரிடத்தில் மிகுதியாகக் கோபமிருக்குமோ அவன் சென்னாய், கரடி, புலி, சிங்கம், பாம்பு இவைகளாகப் பிறப்பான். மாமிசம் உண்ண விரும்புபவன் கழுகு, காக்கை, நாய் இவைகளாகப் பிறப்பான். இச்சையநுசாரம் பிறவியுண்டாகிறது. ஆசைதான் நமது வடிவமாக ஆங்காங்கு சென்று பிறக்கிறது.

பர்யாப்த காமஸ்ய — யாரிடத்தில் காமமில்லையோ, யார் ஆப்தகாமனோ, யார் பூர்ணகாமனோ, யார் மகாத்மாவோ அவருக்கு என்ன பலன்? ஒரு சக்ரவர்த்தி. அவன் இன்பத்தை நுகர்வதாக நாம் கனவு காண்கிறோம். ஆனால் அந்தச் சக்ரவர்த்தி இன்பம் துய்ப்பது நமது கனவு, நமது சங்கற்பம். நமது எண்ணம்.

3 2 3 4
இந்த்ராதி தேஹேஷு நாநாகாத்யாநி பக்ஷயந் !

நானே இந்திரனாக இருந்து சுவர்க்கத்தையும், அயனாக இருந்து சத்திய உலகத்தையும், சூரியனாக இருந்து சூரிய உலகத்தையும் அநுபவிக்கிறேன் என்று வித்யாரண்யசுவாமிகள்விளம்புகின்றார்கள். படைப்பில் எத்தனை யின்பம் உண்டாகின்றனவோ அத்தனை யின்பங்களும் மனோவிலாசந்தான். மகாத்மா ஆப்தகாமனாக இருக்கிறான். அவன் தனக்கு வேறாக எதையும் பார்க்கிறதில்லை. அங்ஙனம் இருக்க. எங்ஙனம் எதை விரும்புவான்? சிருஷ்டி முழுதையும் அவன் தன்னிடத்தில் பார்க்கிறான். ஆகையால் நாலாபக்கங்களிலும் அவனது ஆசைகள் சாந்தமாகின்றன. எல்லா உலகமும் தன்னிடத்தில் என்று எண்ணுகிறான்.

அவனது நோக்கம் பரந்தநோக்கம். சிறந்த எண்ணம். ஸ்ரீராதாகிருஷ்ணன், ஸ்ரீசீதாராமன், ஸ்ரீலக்ஷ்மிநாராயணன், ஸ்ரீகௌரிசங்கரன் இவர் அனைவரும் எனதுள்ளேயிருப்பதாக நினைக்கிறான். இம் மகாத்மா பரியாப்தகாமன். படைப்பில் எத்தனைஇன்பதுன்பங்களுண்டோஅத்தனையும் அவனது உள்ளத்திலிருக்கின்றன.

உனக்குப் பணத்தினால் துன்பம் உண்டாகிறது, அது என்னை? அதுபோல் பணத்தினால் இன்பமுண்டாகிறது. அந்த இன்பம் என்னது? பணத்தையுண்பதால் வரும் இன்பமா? அல்லது என்னிடத்தில் இவ்வளவு தனமிருக்கிறது என்பதால் உண்டாகும் இன்பமா? மனிதனே சிறிது சிந்தித்துப்பார். பணம்இருக்கிறதென்று உண்டாகும் இன்பம் அபிமான ஜன்யம். அபிமானத்தினால் எழுந்தது. இன்பம் எப்போதும் மானசிகமாகும். மனதிற்கு விஷயம்.

இந்தஉண்மையைஅறிபவன்ஞானி. ஆனால் அக்ஞானி, இன்பம் பொருளிலிருப்பதாக நினைக்கிறான். கிருதாத்ம

நஸ்து — யார் கிருதாத்மாவோ அவர் பரியாப்தகாமன். யாருடைய எண்ணம் தானுக நிறைவேறுகிறதோ அவர் பரியாப்தகாமன். கிருதாத்மா. அறியாமையை அகற்றி அறிவோடிருந்து பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் ஒன்றென்று உணர்ந்து தன்னைப் பிரஹ்மம் என்று சிந்தனை செய்பவன் கிருதாத்மா.

இஹைவசர்வே பிரவிலீயந்திகாமா :— இகைவ — மரணத்திற்குப்பின்னில்லை. வாழ்க்கையிலேயே. ஞானியின் வாசனைகளும், காமங்களும் நாசமாகின்றன. இங்கு தானம் பண்ணினுல் இறந்தபின்பு மறுஉலகத்தில் பலனுண்டாகும். தானம் பண்ணும்போது இன்பமில்லையெனில் பின்னுல் வரும் என்பதில் என்ன உறுதியிருக்கிறது? தானஞ்செய்யும்போது யாருக்கு சுகமுண்டாகுமோ அவர்க்கு இறந்த பின்பும் உண்டாகும். என்ன செய்கிறது என்றுஈயும் தானமும், கோபத்தால் கொடுக்குந்தானமும் பலனைத் தரமாட்டா.

4 3
அஸ்ரத்தயாஹுதம் தத்தம் தபஸ்தப்தம் கிருதஞ்சயத் !
அசதிதிஉச்யதே பார்த்த நசதத் ப்ரேத்ய நோ இஹ!! கீதை.

அருஜுன! நம்பிக்கையில்லாமல் யாகம், தானம், தபம், அல்லது நல்லகாரியங்கள் எவைகளைச் செய்தாலும் அவை அசத்தெனப்படுகின்றன. இறந்தபின்னரும் பலனை நல்க மாட்டா, வாழ்க்கையிலும் இன்பம் நல்கமாட்டா.

உனக்கு விஸ்வாசமில்லை, ஊக்கமில்லை, இதனுல் பலனை இங்கேயே இழந்துவிட்டாய். நீ இறைவனைவழிபடுகின்றுய், இறைவனது இனிய நாமத்தைச் சொல்கின்றுய். உனக்கு இன்பமுண்டாகிறதா? இல்லையா? இங்கு இன்பமுண்டாகு மானுல் அங்குபலனுண்டாகும். இல்லையேல் பலன் அங்கு இல்லை. அங்கு—பரலோகம்.

ஒரு தனவந்தர் காசிக்குச்சென்றுர். அவரை அங்கு ஒரு அவைக்குத் தலைவராக ஆக்கினுர்கள். அங்கு அம்மையார்

ஒருவர் அவர் கரத்தில் மங்கலகாப்பு ஒன்றை அணிவித்தாள். அவர்—தங்கை! நீ யென் கையில் காப்பு அணிவித்து விட்டாய் உனக்கு என்னவேண்டும் என்றார். மாது—எனக்கு ஒன்றும் வேண்டாமென்றாள். மீண்டும்நீங்கள் எனது அண்ணன், நான் உங்கள் சகோதரி யெனவே யிதுவே எனக்குப் போதுமென்றாள். அவர்—அண்ணனுக்கு உவகை வரும் பொருட்டு எதாவது ஒன்றை விரும்பு என்றார்.

தங்கை — நான் ஒருபள்ளிக்கூடம்நடத்துகிறேன். அதற்கு ஐயாயிரம்ரூபாய்தேவைப்படுகின்றது. கொடுங்கள் என்றாள். இவள் கேட்டது சபையில். இவர் என்ன செய்வார் பாவம். அவையில்அனைவரும்அமர்ந்திருந்தார்கள். தருகிறேனென்றார். வீடு திரும்பினதும் வேதனையடைந்தார் வேதனைக்குக்காரணம் என்னவென்று கணக்கப்பிள்ளை வினவினார். தனவந்தர்—நிகழ்ந்ததை நிகழ்த்தினார். கணக்கப் பிள்ளை! ஐயாயிரங் கொடாதிருப்பதற்கு உபாயம் இருந்தால் சொல் என்றார். இதற்குள் பலநாட்கள் கழிந்தன. அவள் பல கடிதங்கள் எழுதிப்பார்த்தாள். பலன் கிடைக்கவில்லை. யார்யாரிடத்திலோசொல்லிப்பார்த்தாள். ஆனால் பணம் வந்து சேரவில்லை.

அன்போடு அளிக்கும் தானம் உடனே பலனை நல்கும். நல்ல வினையைச் செய்கின்றபோது செய்பவனுக்கு உத்சாகமும் பலனும் உடனேயுண்டாகின்றன. இந்த ரகசியத்தை ஞானிகள் அறிவார்கள். நம்பிக்கையுடன் செய்யும் தானத்திற்கு இகைவ, ஜீவிதகாலத்திலேயே பலன் கிட்டும் என்றார். ஞானம் உடனே பயனை நல்கும். ஞானிதேகத்தோடு இருக்கும் போதே நான் பிரஹ்மம் என்று எண்ணுகிறான்.

ஞானமார்க்கத்தில் கருமத்திற்கு முக்கியத்வம் இல்லை. ஒளியேற்றியதும் இருள் ஓடிப்போவதுபோல் ஞானம் வந்ததும் வினைகள் மறைந்துபோகும். ''சர்வம் கர்மாகிலம் பார்த்த ஞாநே பரிசமாப்யதே'' கீதை. பார்த்திவா! எல்லா

வினைகளும் ஞானத்தீயில்வெந்து நீருகிவிடும்என்பது கீதையின் பொருள். ஒரு பவனத்தில் பல மின்சாரவிளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. மின்சாரகோளாறுஏற்பட்டு விளக்குகள் அணைந்துவிட்டன. உடனே வீட்டில் உள்ளவர்கள் மெழுகுவர்த்தி யேற்றிவைத்தார்கள். திடீரென மின் விளக்குகள் வந்தன. மெழுகுவர்த்தி மறைந்தது. அதுபோல் ஞானத்தைக்கண்டதும் கருமம் நகர்ந்து ஓடிப்போயிற்று.

ஆசைக்கு ஏது ஆத்மாவின் அறியாமை. தன்னைத் தெரியாத்தன்மை. ஒருவர்வீட்டில் அவர்தந்தை பெட்டியில் பத்தாயிரம் ரூபாய் வைத்துவிட்டு இறந்துபோனுர். ஆனுல் மகனுக்கு அதில் பணம் இருப்பதாகத் தெரியாது. அவனுக்குப் பத்துரூபாய்த் தேவைப்பட்டது. அடுத்தத்தெருவில் உள்ள நண்பனிடம் யாசனை பண்ணினுன்.

இதுபோல் தன்னிடத்திலுள்ள இன்பத்தைப் புரிந்து கொள்ளாமல் பெண், ஆண், பணம், உறவினர், நண்பரிடங்களில் இருப்பதாக எண்ணி அலைகின்றனர். அவர்களிடம் கிடைக்கவில்லையென்ருல் புலன்கள் வழியில் செல்கின்றனர். நீர் நிலையத்தில் நீரிருப்பதுபோல இன்பநிலையமாகிய ஆன்மாவிலிருக்கும் ஆனந்தம் அவர்களுக்குத் தெரிகிறதில்லை. ''தெரிந்தவன் மயங்கானே'' என்றபடி. அக்ஞனுக்கு மறதியியல்பு. மறதியேமறலி. யமன். தந்தை கோடீசுவரன். மகன் அடுத்தவனிடம் ஒரு ரூபாய்க்காகக் கையையேந்துகிருன். தந்தையின் பெருமை தெரிந்தால் அவ்வாறு ஏந்துவானு? ஏந்தமாட்டான்.

ஆஞ்ஜநேயர் பல வானர வீரர்களோடு பிராட்டியாரைத் தேடும்பொருட்டு கடற்கரைக்குச்சென்ருர். இலங்கைக்கு யாரையனுப்புவதுஎன்று ஆலோசனை செய்தனர். கடல் குறுக்கிட்டு நிற்கிறது. அதைத்தாண்டவேண்டும். ஆஞ்சநேயர் அஞ்சினுர். அனைவரும் கெஞ்சினர். சம்பாதி

வந்து ஹநுமன்! நீ யார்மகன் என்று எண்ணிப்பார் என்ருன். தந்தையின் ஞாபகம் வந்தது. தனது சொரூபத்தை நினைந்தான். கடலைத்தாண்டிஞன்வாயுபுத்ல்வன், அதுபோல் நம்மை யாரென்று குருபரன் ஞாபகம்ஊட்டுகிருர். நீ ''தத்வமசி'' என்று.

குருபரர் ஆப்தகாமன். அவரை வணங்கிஞல் சகல நலங்களும் நமக்கு உண்டாகும். ஆசையுடன் வழிபட்டாலும், ஆசையின்றி வழிபட்டாலும், ஞானியின் வழிபாட்டால் ஞால மனைத்தையும் உறலாம். தத்துவஞானி, பரமாத்மாவோடு கலந்தொன்ருகிவிட்டான். என்வே அவன் வழிபாடு இறை வழிபாட்டிற்குமேலாகும். தெரிந்தவன்ஞானி. என்ன தெரிந்தான்? பிரஹ்மம் எல்லாப்பொருளுக்கும் இருப்பிடம். சர்வாதிஷ்டானம். அவித்தைமாயையென்னும் இவையிரண்டிற்கும் வேறு என்று உணர்கிருன். அந்த ஞானியை எவ்வாறு உபாசிக்கவேண்டும்? ''யதா[2]தே[3]வே ததா[2]குரௌ''

ஈசுவரனுக்கு வழிபாடு எங்ஙனஞ்செய்கிறேமோ அங்ஙனம் குருவாகிய ஞானியை வழிபடவேண்டும். நிஷ்காம பாவனையால் வழிபடுதல் மிகநன்று. அவ்வுபாசகன் சுக்ரத்தின் மரியாதைக்கு வருகிறதில்லை. பிறவிப்பெருங்குழியில் விழுகிறதில்லையென்பது பொருள். அன்னையின் கருப்பத்திற்கு வீரியம் வருவதற்கு ஒரு கிரமம் உண்டு—மேகம், மேகத்திலிருந்து நீர், நீரிலிருந்து அன்னம், அன்னத்திலிருந்து வீரியம். வீரியத்திலிருநது கருப்பையில் நுழைவது. இவ்வழி ஞானியை பூஜிப்பவனுக்கில்லை. அடியவர், சத்குரு, ஞானி யிவர்கள் வழிபாடு அவனது பிறவியை மாற்றிவிடுகின்றது.

உண்மையில் ஓர்ந்துபார்த்தால் ஜென்மம், மரணம், சுவர்க்கம், நரகம் இவையெல்லாம் (சகாமன்) ஆசையுடையவர்களுக்குத்தான்உண்டாகின்றன. ஆசையோடு கூடின்

வன்தான்பலயோனிகளில்விழுந்துதிரிகிருன். "புநரபிஜநநம் புநரபி மரணமென்ற"படி. எவனுக்குப்பல பொருள்கள் தேவையோ அவன் அங்காடியில் அலேகிருன். அங்காடி யலேகிறதில்லே. இச்சையிவனுக்கிருக்கிறது. அங்காடிக் கில்லே. இவனேயிங்குமங்குமாய் அலேயவைக்கிறது ஆசாபிசாஸ்.

மகாத்மா, கிருதாத்மா. ஆப்தகாமன். அவன் ஆன்மாவை அங்கையின்நெல்லிபோல அறிந்திருக்கிருன். அவனேத்தேடி ஆசைகளெல்லாம்அலேகின்றன. அவன் உடம்போடிருந் தாலும், உள்ளிருக்குங்காமங்கள் மடிந்துவிடுகின்றன. முக்தாத்மா—கடைந்த வெண்ணெய் மோரில் கிடப்பதுபோல் வையகத்தில்வாழ்கிருன். அவனேநோக்கி "அசரீரம் வாவ சந்தம் பிரியா பிரியே நஸ்பிருஹத:" என்று ஆரணம் அருளு கின்றது. எப்பொழுது மனதில் அசரீரியாகி விடுகிருனே, அப்பொழுது அவனே விருப்புவெறுப்புக்கள் பற்றுகிறதில்லே. மற்ருெரு சுருதி—

"ச சரீரஸ்ய : ந பிரியாபிரியயோரபஹதி ரஸ்தி"

இ—ள்

உடலில் எவனுக்குப் பற்று இருக்குமோ அவனே ராக துவேஷம் விடுகிறதில்லே. காயம் இருக்குமானுல் நெருப்பில் எரியும், பனியில் குளிரும். இந்நெறி ஞானிக்குப் பொருந்து கிறதில்லே. அவன் உண்பான், உறங்குவான், உடுத்து வான், ஊரெல்லாந்திரிவான், பேசுவான், பேசாதிருப்பான். அங்ஙனமாயினும் அவைகளுக்கும் அவனுக்கும் எள்ளளவும் சம்பந்தமில்லே.

தூயசக்தியின்முன் தீயசக்தி யெவ்வாறு மறைந்து விடு கின்றதோ அவ்வாறு அவனது ஆசைகள் மறைந்து விடு கின்றன. அவனுடைய காமங்கள் லீனமாகிவிடுகின்றன என்பதற்குப்பொருள் என்னே? ஞானி தன்னேப்பிரஹ்மமென்று அறிந்ததும், பிரஹ்மத்தில் மாயைஇல்லே, பிரகிருதியில்லே.

பிரகிருதிக்குசித்தி தேகதிருஷ்டியால் உண்டாகிறது. தேகத்தை எவன் நானென்று அபிமானிக்கின்ருனே, அவ னுக்குச் சிறியது, பெரியது, காரியம். காரணம், இது, அது, உது என்னும் வேற்றுமையுண்டாகிறது. தேகாபிமானம் நீங்கியதும் நியம்ய நியாமகத்தின் பேதம் விலகிவிடுகிறது.

இந்நிலையில் விஷய விஷயிக பேதமும் எங்ஙனமுண்டா கும்? உண்டாகமாட்டாதென்பது குறிப்பு. ஞானியின் சொரூ பத்தில் விஷயமும், ஆசையும், போக்திருத்வமும் இல்லை. ஞானிக்குச் சரீரம், சரீரத்தின் விவகாரம் இவைகள் இருக் கும், ஆனல் தத்துவதிருஷ்டியில் அவனுக்குக் காமி, காமனை, அபிமானம் இவை இல்லை. மேற்கூறிய அனைத்தும் லீன மில்லை, பின்னை பிரலீனம். முற்றிலும் லீனம் என்பது முடிபு.

ஈண்டு லீனம், பிரலீனம் என்பதின் வேற்றுமையைத் தெரிவது அவசியம். ஆசை, விஷயம், அபிமானம், இவை யெல்லாம் உறக்கத்தில் (லீனம்) ஒடுங்கிவிடுகின்றன. பிரள யத்திலும் ஒடுங்கிவிடுகின்றன. முற்றிலும் ஒடுங்கிவிடுகின்ற தில்லை, ஆனல் ஞானியினிடத்தில் பிரலீனம் — முற்றிலும் நீங்கிவிடுகின்றன என்பது விசேஷம். இது என்ன புதுமை? ஞானி உயிரோடிருக்கிருன், ஆனல் ஆத்மதிருஷ்டியில் விஷயமின்றியவனுகவும் இருக்கிருன். ஆகா என்ன புதுமை? அவனை யீன்ற தாயல்லவா தாய்.

கீதையில் இரண்டாவது அத்யாயத்தின் இறுதியில் ஞானி யின் இலக்கணம் நவின்றிருக்கிறது—

ஆபூர்ய மாணம் அசலப் பிரதிஷ்டம்
3 3
சமுத்ரமாப : பிரவிசந்தி யத்வத்.
தத்வத்காமா யம் பிரவிசந்தி சர்வே,
ச சாந்திம் ஆப்நோதி ந காம காமி. கீதை.

யார் போகத்தை விரும்புகிருரோ அவர்க்கு சாந்தி கிடைக்கிறதில்லே. நதிகள் எப்போதும் கடலில்போய்க் கவிழ்கின்றன, ஆனுல் கடல் கலங்காதிருக்கின்றது. ''கலக்கினுந் தண்கடல் சேருகாது'' என்றபடி. தன்னுடைய மரியாதையைக் கடக்கிறதில்லே. கலங்குகிறதில்லே. அதுபோல் ஞானியசையாத தீரன், ஆசையற்றவன். அவனேயெல்லாப் போகங்களும் விரும்புகின்றன. அணுகுகின்றன. அதனுல் அவன் கலங்குகிறதில்லே. மாருக அமைதியை அடைகிருன். அமைதி —சாந்தி.

தத்துவஞானி போகத்தை விரும்புகிறதில்லே. பின்னே? போகம் அவனே விரும்புகின்றது. தத்துவஞானி உணவுக்கும், உடைக்கும் ஆவல் கொள்வதில்லே. உணவும் உடையும் அவனேயடைய ஆவல்கொள்கின்றன. ஞானி வாயில் எப்போது விழப்போகிருேம் என்று உணவு நினேக்கின்றது. விஷயத்தை யவன்விரும்புகிறதில்லே, விஷயம் அவனே விரும்புகின்றது. விஷயங்கள் ஒன்ருேடொன்று போராடுகின்றன. ஏன்? ஞானியைத்தீண்டி நாம் புனிதமாவோமென்று. சூரியன், சந்திரன், அநலம், அனிலம் எல்லாம் ஞானிக்குப் பணிபுரிந்து தூய்மையாவோம் என்று எண்ணுகின்றன. நான் தேகம் என்ற மயக்கம் அவனுக்கு இருக்கிறதில்லே. எனவே உடலுக்குரிய உணவு, நடை, உடை அவனேப் பற்றுகிறதில்லே. ம. 2.

தொடர்ச்சி

ஆத்மஞானம் மிக நல்லது. ஆனுல் அதையடைவது எங்ஙனம்? தத்துவஞானங் கிடைத்ததும் மனிதன் சுகத்தையடைகிருன். பிறரையும் சுகத்தை அடைவிக்கிருன். ''சுவயம் சுகி பரான் சுகயதி'' என்பது ஒரு நியாயம். இன்பமுடையவன் பிறரையும் இன்பமுறச்செய்கிருன் என்பது மரபு. இதனுல் ஆத்மஞானம் சிறந்ததென்பது தெளிவு. இந்த ஞானம் கிடைப்பதற்கு உபாயமென்னே? எவ்வாறு முயற்சிக்க

வேண்டும் என்பது பிரச்சினை. படிப்போமா, உபந்நியாசம் செய்வோமா, கற்றவரிடங் கேட்போமா, சத்சங்கம் பண்ணுவோமா என்பது கேள்வி. விடை — இவைகள் மூலமாக ஞானம் வராது. பின்னை, எதனால் வரும் என்பதற்கு மந்திரம் —

நாயமாத்மா பிரவசநேந லப்யோ[4]
ந மேதயா[4] ந பஹுநா[3] சுருதேந
யமேவைஷ விருணுதே தேந லப்ய[4]:
தஸ்யைஷ ஆத்மா விவிருணுதே தநும்ஸ்வாம். 3

இ—ள்

இவ்வாத்மா உபந்நியாசத்தாலும் அடையமாட்டாது, புத்தியாலும் அடையமாட்டாது, நிரம்ப படித்ததினாலும், கேட்டதினாலும் அடையமாட்டாது. அந்த ஆன்மா யாரையடையவிரும்புகின்றதோ அவனால் அடையப்படும். அவனுக்குத் தனது வடிவத்தை வெளிப்படுத்தும்.

இந்த மந்திரத்திற்கு மூன்றுவிதமாகப் பொருள்பண்ணுகின்றனர். ஸ்ரீசங்கரர்மதாநுசாரம், ஸ்ரீஇராமநுஜ மதாநுசாரம், பிரசங்காநுசாரம் என்று மூன்றுவிதம். முதலாவது பிரசங்காநுசாரம்விசாரஞ்செய்வோம். அதிகாரி — நான் பிறப்பு இறப்பு, பாவபுண்ணியம், சுவர்க்கம் நரகம், இன்ப துன்பவடிவ பந்தனத்திலிருந்து விடுதலையடைவதற்கு ஆன்ம சாக்ஷாத்காரஞ் செய்யவேண்டுமா? அல்லது வேறு ஏதும் செய்யவேண்டுமா என்று எண்ணுகிறான். குரு — உனக்கு என்னதோற்றுகிறது? அதிகாரி—உங்களைப்போல நானும் உபந்நியாசஞ்செய்யலாம் என்று நினைக்கிறேன். குரு — நாயமாத்மா பிரவசநேந லப்ய:— பிரவசனம் செய்யவேண்டுமானால் முன்னர் அப்யாசஞ்செய்யவேண்டும். பிரவசனம் என்றால் பிறருக்குக் கற்பிப்பது. அதனால் நிரம்பப் படிக்கவேண்டும், குரு முன்னிலையில் நெடுநாள் சிரவணஞ் செய்யவேண்டியிருக்கிறது.

இதனுல் இறைவனையடைய முடியாது. பகவான் பதஞ்ஜலி மகரிஷி வாழ்க்கையில் நான்கு (அவஸ்த்தை) நிலைகளை ஒப்புக்கொண்டிருக்கிருர் — 1 கல்வி பயிலுங்காலம், 2 ஞானகாலம், 3 ஆசரணகாலம், 4 பிரவசனகாலம். முதலாவது படி. பின்பு படித்ததைச் சிந்தனைபண்ணு. அதன் பிறகு படித்தபடி ஒழுகு. அதன் பின்பு பிறருக்குப் போதனை செய். ஆனுல் இன்றைக்குள்ள இளைஞர்கள் நினைத்த உடனே பிரவசனம் பண்ண எண்ணுகிருர்கள்.

சுவாமி கரபாத்திரிஜிக்கு ஒரு நண்பர் கடிதம் எழுதினுர்— சுவாமின் ! நான் எம். ஏ. பட்டம் பெற்றிருக்கிறேன். பால பிரம்மச்சாரி. அன்னியநாட்டிற்குச் சென்று இந்து தரும பிரச்சாரஞ் செய்யவேண்டியிருக்கிறது, எனவே என்ன புத்தகம் படிக்கவேண்டும் என்று வினவினுர். சமஸ்கிருத ஞானம் கடுகளவேனும் இல்லை. தருமசாஸ்த்ரம் சுரைக் காயா, பூசனிக்காயாவென்று தெரியாது. ஆனுல் தரும பிரச்சாரஞ்செய்யவேண்டுமென்று எண்ணுகிருன்.

காவிய நூல்களிலே நைடதம் என்னும் காவியம் மகா காவியம். காவியகர்த்தா—ஸ்ரீ ஹர்ஷர். அந்த காவியத்தில் ஒரு சுலோகம் —

4 3 4
அதீத போதாசரணபிரச்சாரணை : அமுஷ்ய
4
வாணி ரசாநாக்ர நர்த்தகீ'' என்பது.

இ—ள்

கல்வி, போதம், ஆசரணம், பிரசாரகாரணம் இவையனைத்தும் வேந்தன் நளனுடைய நாவில் தாண்டவமாடின என்பது சுலோகத்தின் பொருள். கதாகரன் வாசனையுடையவன் கதைசெய்யவேண்டும் என்னும் வாசனையவனிடத்தில் இருக் கிறது. மாமிச அங்காடி வழியாகக் காற்று வீசினுல் மாமிச வாடை வருவதுபோல் பிரசங்கஞ்செய்ய விரும்புபவர்க்குப்

பிரசங்கவாசனையிருக்கும். அவர்கள்வாக்கியத்தின் பொருளை விளக்குவதில்லை. பின்னை, கேட்பவர் பொருளைப் . பறிக்கப் பார்ப்பார்கள். பிரசங்கம் நல்லது. உபயோகமும் கூட. அதனோடு இறைவனையடைய வேண்டும் என்னும் இச்சையும் இருக்கவேண்டும்.

அதிகாரி—உபந்நியாசத்தால் இறைவனடைவு உண்டாகிறதில்லையென்றால் மேதையினால் உண்டாகுமா? அங்ஙனமாயின் புத்தியை கூர்மை செய்யட்டுமா? குரு—ந மேதயா.
4
"தீ தாரணாவதி மேதா" என்பது நிகண்டு. மேதையினாலும் உண்டாகாது. எந்தமதி வஸ்துவின் பொருளை விளக்குவதில் ஈடுபட்டிருக்கிறதோ அந்தமதி மேதையெனப்படும். குடம் ஒருபொருள். இதற்குக் காரணம் மண். எந்த மண்ணினால் இது செய்யப்பட்டது, எப்படி செய்யப்பட்டது, இதனுடைய அமைப்பு எவ்வாறு என்றெல்லாம் விசாரிப்பது மேதையின் வேலை.

மேத்ரு ஹிம்சாயாம் என்பது ஒரு (பகுதி) தாது. எது உண்மையைத் துண்டுபண்ணி அதை விசாரிக்கிறதோ அது மேதை. இந்த மேதையால் விவேகம் உண்டாகும் ஆனால் ஆன்மா அடைவதில்லை. அதிகாரி—அங்ஙனமாயின் வேதம் படிக்கவா? அதில் வருகிற மந்திரங்களை மனனஞ்செய்யவா?
3
குரு—நபஹுநா சுருதேந வேதங்களை நிரம்ப படித்தாலும் ஆன்மா அடையமாட்டாது. கேட்டாலும் அடையமாட்டாது.

சில மகாத்மாக்கள் இம்மந்திரத்திற்கு வேறுபொருளும்
3
பண்ணுகிறார்கள். பஹுநா சுருதேந — சிரவணத்தினால், மேதையால், மனனத்தால், யுக்தியால், அநுமானத்தால், தர்க்கத்தால். பிரவசநேந, உபந்நியாசத்தால் பாராவாணியுடன்கூட உள்ளத்தில் நிதித்யாசனஞ்செய்து சிவோஹம் பாவனைபண்ணி, அல்லது சோஹம் என்னும் பாவனைசெய்து ஞானத்தைப் பெறலாமா? இல்லை. தத்வஞானம்பெற

இயலாது. அதிகாரி—அங்ஙனமாயின் எங்ஙனம் பெறுவது? குரு—யமேவைஷ விவிருணுதே தேந லப்ய:—ஸ்ரீராமாநுஜ ஆசாரியர்—நாயமர்த்மா பிரவசநேந லப்ய :— ஈண்டு ஆத்ம சப்தம் பரமாத்மாவிற்காக வந்திருக்கின்றது என்கின்றனர். அந்தபரமாத்மா இன்னும் அடையவில்லை. எனவே ஈண்டு ஆத்மா என்னும் சொல் பரமாத்மாவைக் குறிக்கிறது என் கின்றனர். இந்தப்பரமாத்மா, தன்னை அடைக்கலம் புகுந்த பக்த ஜீவனையடைய விரும்புகிறார். ஆகையால் அந்த அன்ப னுக்கு அடைகிறார் என்பது இராமானுஜர் கருத்து.

இது சகுணஈசுவரனைப்பற்றிப் பேசியது. ஏனைய ஆசாரி யரும் இதைத்தான் கொண்டிருக்கிறார்கள். ''சர்வே த்வைத வாதின:'' பகவான் சங்கரர் நீங்கலாக மற்றைய அனைவரும் த்வைதவாதிகள் என்பது பொருள். ஆனால் ஈண்டு சிறிது சிந்திக்கவேண்டும். பகவான் விரும்பினால் யாரை விரும்பு வது? விதுரர் என்ன ஜாதி? இவர் தாசிபுத்திரர். மன்னன் உக்ரசேனனிடம் என்ன பலம் இருந்தது? கம்சன் அவனைச் சிறையில் வைத்திருந்தான். சபரியிடத்தில் என்ன அழகு இருந்தது? கஜேந்திரன் எந்த ஞானத்தைப்பெற்றிருந்தான்?

இறைவனுடைய அருள்—ஜாதி, சம்பிரதாயம், லிங்கம், அடையாளம், யோகம், விரதம், கல்வி, வலிமை. இவை களிடத்தில் உண்டாகாது. ஆத்மா யாரை விரும்புகின்றதோ அவரையடையும் என்றால் இறைவனிடத்தில் பக்ஷபாதம், வைஷம்யம், விருப்பு வெறுப்பு என்னும் குற்றம் வந்து பொருந்தும். எனவே எப்பொழுது ஜீவன் ஈசுவரனுக்கு அனு கூலமாக நடக்கிறானோ அப்பொழுது இறைவன் கருணைபுரி கிறான். எவன் அவனுக்கு பிரதிகூலமாக நடக்கிறானோ அவ னிடத்தில் அருள் பாலிக்கிறதில்லை. ஒருவன் இறைவன் மற்றொருவன் ஜீவன்.

''தஸ்ய ஏஷ ஆத்மா விவிருணுதே தநும்ஸ்வாம்'' ஆத்மா அவனுக்குத் தனது வடிவத்தை யருளுகின்றது. அவனுக்குத்

தனும்—ஞானப்பிரகாசத்தையளிக்கின்றது அவன் முன்னே தோன்றிடினே'' என்றபடி. இம்மந்திரம் வேறு உபநிஷத்திலும் வந்திருக்கிறது. ஆசாரியசங்கரர் — எந்த மகாத்மா பரமாத்மாவையடைய விரும்புகிருரோ அந்த மகாத்மா பரமாத்மாவையடைகிருர் என்று கூறுகிருர்.

பண்டைய காலத்தில் அரசர்கள் சுயம்வரம் நடத்துவார்கள். அப்பொழுது கன்னிப் பெண்ணைக் கொணர்ந்து அவையில் நிறுத்துவார்கள். அக்கன்னி அங்குள்ள அரச குமாரர்களில் யாரை மணந்து கொள்வதென்று அவையில் உள்ள அனைவரையும் அங்கும் இங்கும் பார்ப்பாள். யாரும் அவளிடத்தில் மமதைகொள்கிறதில்லை. யாரை மணந்து கொள்ளப்போகிருளோ என்று எல்லோரும் நினைத்து உதாசீனமாக இருந்து விடுவர்.

அதுபோல் எல்லாப்பற்றையும்விட்டு இறைபற்று மட்டும் எவன் வைத்திருக்கிருனே அவன் ஆத்மாவையடைவான். உருக்மிணி—தாய் தந்தையர், தமையனர், தமர்கள் மற்றுமுள்ள மக்கள் அனைவர் பற்றையும்விட்டு கண்ணனைக் காதலித்தாள் அவனையடைந்தாள். அதுபோல் அகப்பற்றும் புறப்பற்றும் அறவேவிட்டு ஆன்மாவை யெவன் நாடுவானே அவனை அது அடையும். அது—ஆன்மா. ஆயர்குலமாதர்கள் அளவிலோர் கண்ணனை விரும்பினர்கள். அவனிடத்தில் நாட்டத்தைச் செலுத்தினர்கள். மற்றைய நாட்டத்தை மறந்தார்கள். மாதவனையடைந்தார்கள்.

''சர்வம் தியக்த்வா பதிம் விரஜேத்'' எல்லாவற்றையும் விட்டபின்னர் பதியை அடைகிருர். என்பது சமயோசித மாலை. பதி—பர்மாத்மா. தஸ்ய ஏஷ ஆத்மா — நமது சொரூபம். ''சவித்ரு பிரகாசவத்'' சூரியனும் சூரிய ஒளியும் போல என்பது சங்கரபாஷ்யம். இதுவரை நமக்குத் தெரியாதிருந்தது. தெரியாதவரை நாம் வேறு ஆத்மா வேறு. தெரிந்ததும் நமது வடிவமாகி விடுகிறது. அறியாமை யென்னும் திரையகன்றதும் ஈசுவரன் நமது வடிவம்.

இவர் நம் கணவன் என்று தெரிந்ததும் மனைவி தன்னை நாயகன் முன்னிலையில் மறைக்கிறதில்லை. அதுபோல் இவன் நண்பன் என்று தெரிந்ததும் இறைவன் தன்னை மறைக்கிற தில்லை. இதற்கு அனுவரணம் என்று பெயர். ''மறைந்த தனால் மறைப்பு. திறந்ததனால்திறப்பு முதுமொழி. கண்ணை மூடினால் மறைப்பு, கண்ணைத்திறந்தால் வெளியாகிறது.

இம்மந்திரத்திற்குச் சில மகான்கள் வேறுவிதமாகவும் பொருள் பண்ணுகிறார்கள்—முந்திய மந்திரமூலமாக ஞானி யின் பெருமை வருகின்றது. அதனால் இது ஆத்மஞானியின் பிரகரணம். மந்திரத்தில் ஏஷ பதம் வந்திருக்கிறது. அது பக்தனுக்குமல்ல, பகவானுக்குமல்ல. துவம் பதார்த்தத்தை முக்கியமாகக்கொண்டால் ஏஷ சப்தத்திற்கு சாதகன். தத் பதார்த்தத்தை முக்கியமாகக்கொண்டால் ஏஷ, என்னுஞ் சொல்லுக்குப்பொருள் ஈசுவரன். ஆனால் ஈண்டு ஏஷ, பதம் ஞானிக்காக வந்திருக்கிறது. ஞானியார்? நமது குருநாதன்.

ஏஷ என்ற சொல்லால் குருநாதனைக் கொள்ளவேண்டும். விசுத்தாத்மா, ஆப்தகாமன், கிருதாத்மா, ஞானி இவையெல் லாம் குருநாதனுக்கு வந்தசொற்கள் குருநாதனை வழிபட் டால் எல்லா நலங்களும் எய்தும் என்று இயம்பியிருக்கிறது. இதுமட்டுமல்ல, பிறப்பிறப்பிலிருந்து பிறவாத தன்மையை அடைகிறான் என்று அறைந்திருக்கிறது.

உலகில் எவை தனம், போகம், தருமம், மோக்ஷம் எனப்படுகிறதோ இவையெல்லாம் இறைவன். இதையறி பவர் மகாத்மா. அரசனை அமைச்சர் அறிவதுபோல மகாத்மா பரமாத்மாவை அறிவார். ஒருவன், பொருள் எனக்குக் கிடைக்கட்டும் என்கிறான், ஒருவன் இறைவன் எனக்குக் கிடைக்கட்டும் என்கிறான். மகாத்மாக்கள் இரண்டையும் ஒன்றுபோலப் பார்ப்பார்கள். ஒருவன் பொருள் வடிவமான இறைவனையடைந்து நலமாக இருக்க விரும்புகிறான்,

முற்றறிவுடையவன் முருகனையடைந்து நலமாக வாழவிரும்புகிறான் என்று மகாத்மா அறிகிறார். ஒருவனுக்குப் பொருளில் ஆசை. பொருள் அவனுக்குப் பரமாத்மா. மற்றொருவனுக்கு முருகன் பரமாத்மா.

நனவு, கனவு உறக்கம், சமாதி, விக்ஷேபம், மலம் நிர்மலம், எல்லாரூபமாகவும், இறைவன்தான் முன்னே நிற்கிறான். இதைத்தெரிந்தவன் மகாத்மா. எல்லா வடிவமாக இறைவனைப் பார்ப்பவன் மகாத்மா. அங்ஙனமாயின் எனக்கு ஆரஞ்சிப்பழம் வேண்டும் என்றான், ஒரு மனிதன், மகாத்மா (இந்தா) வாங்கிக்கொள். ஆரஞ்சிப்பழம் பரமாத்மா என்றார்.

எனவே மகாத்மா—யார் எதை விரும்பினாலும் தடுக்கிறதில்லை. எனக்குப் பணம் வேண்டும். (இந்தா) வாங்கிக்கொள். பணமும் பரமாத்மா என்பார் மகாத்மா. எவன் இறைவனை விரும்புகிறானோ அவனை யிறைவனோடு சேர்ப்பிப்பவன் மகாத்மா. யார் எந்நிலையில் இருக்க விரும்புகிறார்களோ அவர்களை மகாத்மா அங்கு இருக்கச்செய்கிறார். ஒருவன் வியாபாரஞ்செய்யவில்லை, ஆனால் பணம் விரும்புகிறான். ஒருவன் விவாகஞ்செய்துகொள்ளவில்லை, ஆனால் போகம் விரும்புகிறான். ஒருவன் யக்ஞஞ்செய்யவில்லை, ஆனால் சுவர்க்கத்தை விரும்புகிறான். ஒருவன் சிரவணம், மனனம் பண்ணவில்லை, ஞானத்தை விரும்புகிறான், இவைகளை மகாத்மா கொடுகிறதில்லை. கொடுக்கவேண்டுமென்ற அவசியமுமில்லை.

யார் எந்த இடத்தில் நிற்கிறாரோ அவர் அந்த இடத்தில் நிற்பது பரமாத்மாவின் வடிவந்தான். நீ யழுகிறாய். மகாத்மா—இதுவும் இறைவன் விளையாட்டுத்தான் என்கின்றார். கதாகாரர் அவ்வாறு அருளுவது சரியில்லையென்கிறார். அவர் துவைதத்தைப் பிரச்சாரஞ்செய்பவர். துவைத வாதிகள் படைப்பில் முதலில் மூன்று பொருள் இருந்தன என்று சொல்கிறார்கள். அவை—பதி, பசு, பாசம். இவை மூன்றும் எப்போதும் இருக்கும் என்கிறார்கள். இவர்கள் அத்வை

த்தை சுவைக்கிறதில்லை. வேப்பமரத்தில் தோன்றிய எரும்பு கல்கண்டைச் சுவைக்கிறதில்லை.

அதற்குக் கசப்புத்தான் நன்ருயிருக்கும். அதுபோல் துவைதவாதிகளுக்குத் துவைதந்தான் இனிக்கும். பதி — பாதி—ரக்ஷதி இதிபதி—இறைவன். பசு—பத்யதே இதி— பசு—ஜீவன். பத்நாதீதி—பாசம்—ஆசை. ஆசைதான் பாசம். இவை மூன்றுந் தனித்தனியாக இருக்கின்றன என்னும் வாதம் துவைத வாதம். இவைமூன்றும் எப்போதும் இருந் தால் ஞானத்தால், அல்லது பக்தியால் என்னபயன்? பாடு பட்டும் பயனில்லையென்றபடி. விவகாரத்தில் இவை மூன்றும் மூன்ருக இருந்தாலும் முடிவில் ஒன்ருய்விடுகின்றன என்பது அத்வைதம். அத்வைத வாதியின் மதி நிரந்தரம் ஆத்மாவில் இருக்கிறது. ஆசாரியர் வேறு அவதூதர்கள் வேறு. தேகத் தைப் பொருட்படுத்தாமல் எந்த அதிகாரி வருகிருனே அவ னுக்கு அவதூதர்கள் உபதேசம் பண்ணுவார்கள். ஆனல் மண்டலேசுவரர், மடாதிபதிகள் தாளுக உபதேசஞ் செய்யப் போவார்கள்.

அவதூதர் — எல்லாவற்றையும் கடந்தவர். ''இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம் உருக்கமுடன் கொண்டு வந்தால் உண்பேன்'' இது அவதூதகோலம். பொருள்வெளி. தஸ்ய ஏஷ ஆத்மா விவிருணுதே தநும் ஸ்வாம் — இவ்வதி காரி உண்மையாக இறைவனை எய்த விரும்புகின்ருன் என்று தெரிந்த குருநாதன் தனது வடிவத்தை வெளிப்படுத்துகின் ருர். உபதேசமும் செய்கின்ருர்—மைந்தனே! நான் மூன்றரை முழமுள்ள வடிவதேகம்போல் தெரிகிறேன், ஆனல், நான் பிரஹ்மசொரூபம். அதுபோல் நீயும் பிரஹ்மரூபமென்று நினை. நான் உண்கிறேன், உடுத்துகிறேன், உறங்குகிறேன், நடக்கிறேன், திரிகிறேன். ஆனலும் நான் பிரஹ்மசொரூபம். அதுபோல் நீயும் உண்டாலும், உறங்கினலும், திரிந்தாலும்

பிரஹ்மம் என்று தெளி. எல்லாஞ்செய்தாலும் நீயும் பரமாத்மாதான். மகனே! நம்மாணை மறந்திடாதே. ம. 3.

தொடர்ச்சி

ஆன்மாவின் அடைவு, பிரவசனத்தாலும், மேதையினுலும், நிரம்பியகேள்வியாலும் உண்டாகாது என்று சொல்லப் பட்டது. அங்ஙனமாயின் மகாத்மா கிருபையில்லாமல் வேறு வழியில்லையா? வேறு சாதனமில்லையா? அடியார் உறவைப் பெறுவதற்கு என்ன செய்யவேண்டும் என்பதற்குரிய பதில்

நாயமாத்மா பலஹீநேந லப்யோ
நசபிரமாதாத் தபசோ வாப்யலிங்காத் !
ஏதைருபாயைர் யததே யஸ்து வித்வாந்
தஸ்ய ஏஷ ஆக்மா விசதே பிரஹ்மதாம. 4

இ—ள்

இவ்வாத்மா மெலிந்தவனுக்குக் கிடைக்கமாட்டாது, பிரமாதிமனிதனுக்குங் கிடைக்கமாட்டாது. குறியில்லாத தவத்தாலும் கிடையாது. ஆனல் அறிவாளி இவைகளோடு முயற்சிசெய்வானுகில், அவனுக்கு ஆன்மா அவசியங்கிட்டும். அவன் பிரஹ்மத்தில் பிரவேசிப்பான்.

நாயமாத்மா பலஹீநேந லப்ய :— நிஷ்டையில்லாமல் பலம் உண்டாகிறதில்லை. நம்பிக்கையில்லாமல் வலிமை வராது. ஒரு இடத்தில் நிலைத்திராதுபோனல் காற்றுப்போன போக்கில் நீயும் போவாய். சக்தி விசுவாசத்தால் உண்டாக வேண்டும். அவ்வலிமை சாதகனுக்குத்தேவை. சூருவளிக் காற்றிலும் மலை அசைகிறதில்லை. அதுபோல் நீ, நினது வடிவத்தில் நிலைத்திரு. யாருக்கு நிஷ்டையில்லையோ, நம்பிக்கையில்லையோ யாருடைய மனம் உஞ்சலையொத்து அலைகிறதோ அம்மனிதன் ஆன்மாவை யெங்ஙனம் அடைய முடியும்?

எதிலிருந்து நீ விலகுகிருயோ அது ஆத்மா. அங்கிருந்து திரும்புகின்ருயே அதுவும் பரமாத்மா. யாருடன் நீ, நட்புக் கொள்கிருயோ அவனும் பரமாத்மா. உனது இதயத்தில் இருப்பவன் யார்? அவன் பூதமா? இதயத்தில் இருப்பவனும் இறைவன்தானே. பலம் எதில் இருக்கிறது? தியாகத்தில் இருக்கவேண்டும். பொன், பொருள், போகம், சுவார்த்தம், ஆசையிவைகளைவிடுவதில் பலம் இருக்கவேண்டும். எவனிடத்தில் ஆசை, போகம், சுயநலம் இல்லேயோ, எவனிடத்தில் தத்துவஞானம், தியாகம், மெய்யுணர்வு, பொறுமை, அமைதி, ஈகையிருக்குமோ அவன் பலவான்.

''விட்டவன் வீடு பெறுவான்'' என்றபடி. யாரிடத்தில் தியாகம் பண்ணுவதற்கு வலிமையில்லேயோ அவனுல் எங்ஙனம் ஆத்மாவையடைய முடியும்? அவன் எங்கேயிருப்பான்? பெண், பொருள், மனே, வீடு வாசல், நிலம் புலம் இவைகளோடு இணேந்திருப்பான். ஒரு அன்பன் ஒரு மகானிடம், ஐயனே! எனக்கு ஒரு புதல்வன் பிறந்தால் எல்லாவற்றையும் விட்டு இறைவனே வழிபடலாம் என்று நினேக்கிறேன் என்ருன்.

மகாத்மா — இறைவனே வேண்டினர். ஆண்குழந்தை பிறந்தது. அன்பனே! எல்லாவற்றையுந்துறந்து இறைவனே யிறைஞ்சுகின்ருயா? ஐயே! குழந்தை சிறியது, பெரியதாகட்டும் என்ருன். பையன் பெரியவனுன். மகாத்மா வினவினுர் — இப்போதாவது விட்டாயா என்ருர். சுவாமின்! குழந்தை படிக்கிறது விவாகம் நடக்கட்டும் பின்பு விட்டு விடுகிறேன் என்ருன். மைந்தனுக்குத் திருமணம் நடந்தது, உத்யோகம் பார்க்க ஆரம்பித்து விட்டான். பொருள் தேடத் துவங்கிவிட்டான். மகாத்மா — அன்பனே! என்ன செய்கின்ருய் என்ருர். குருநாதா! பைனுக்கு அநுபவங் காணுது, அவனுக்கு ஒரு குழந்தை பெறக்கட்டும், அவசியம் இல்லறத்திலிருந்து ஏகித்துறவறம் பூண்டு இறைவனே வழி படுகிறேன் என்ருன்.

பேரன் பிறந்தபிறகு மகாத்மா மகனே என்ன! இன்னும் ‘‘இனஞ் சார்ந்திலேயே’’ என்றார். இனம் — துறவறம். அன்பன்—சுவாமின்! எனக்கு வயதாகிவிட்டது, வெளியேறி நான் என்ன செய்யப்போகிறேன், இந்நிலையில் என்னை யார் கவனிப்பார், எனவே நான் இங்கேயே இருந்துவிடுகிறேன் என்றான். இவன் இறைவனை யெப்படி வழிபடமுடியுமென்று நீங்களே ஊகித்துணருங்கள்.

எனது நண்பன் ஒருவன். ஒருமுறை குடும்பத்தகராறு நேர்ந்தது. தனது மாமனாருக்கு அஞ்சல் அனுப்பினான். அது அவர் கையில் கிடைத்தது. மாமனாருக்கு ஒரே மகள்தான். மாமனார் கடிதத்தை உடைத்துப்பார்த்தார். நான் துறவி யாகப் போகிறேன். உடனே என்னை வந்து சந்தியுங்கள் என்று எழுதியிருந்தது. மனைவி யென்ன என்று வினவினாள். உன் மருமகன் சந்யாசியாகப்போகிறானாம். உடனே நாம் சந்திக்கவேண்டுமென்று எழுதியிருக்கிறான் என்றார். மாமியார் அழத்தொடங்கினாள். மகளும் அழத்தொடங்கினாள். மாமனார் —மனைவியையும், மகளையும் சமாதானப்படுத்தி அழாதீர்கள், மருமகன் ஒருபோதுந் துறவியாகமாட்டார் என்றார்.

மாமியார் கணவனிடம் ஏன் அப்படிக் கூறுகின்றீர்கள்? கணவன்—இப்படிப்பட்ட மனிதன் சாதுவாக ஆகமுடியாது என்றார். மனைவி — எப்படிப்பட்டவர்கள் சாது ஆவார்கள்? என்றாள். கணவன்—அதைத் தெரிவிக்கவேண்டுமா? என்றார். பாரியாள்—எனக்குத் தெரிவிக்கவேண்டுமென்றாள். கணவன் — தன் தாரத்தின்தாலைத் தொட்டுக்கும்பிட்டு வெளியேறி னான். மீண்டும் அவன் வீடு திரும்பவேயில்லை. மாமனார் துறவியாகிவிட்டாரென்று கேள்வியுற்ற மருமகன் தன் குடும் பத்தையும் தனது மாமனார் குடும்பத்தையும் பேணி வந்தான். இவனிடத்தில் என்ன பலம் இருக்கிறது? தியாக உணர்வு இவனிடத்தில் சிறிதளவேனும் உண்டா? இவன் ஆத்மாவை அடையப்போகிறானா? இல்லவேயில்லை. இவன் நிலைதான்

மற்றவர்க்கும். இவர்கள் பரமாத்மாவை அடைவதென்பது ஆகாசத்தைக் கறந்து பால் உண்ண விரும்புவதுபோல் தெரிகிறது.

நசபிரமாதாத்—தியாகத்தின் வலிமை இருந்தபோதினும் தியாகம் பண்ணுகிறதில்லை. இறைவனை அடையவேண்டுமே எனத்துடிக்கிறதில்லை. அதையறிவிக்கும் குருநாதன் எங்குளான் என்று அவனை நாடி விரைகிறதில்லை. பிரமாதம்—நல்லகாரியத்தை உடனே செய்யாமல் பின்னால் செய்வோமென்று ஒத்திவைப்பது. இவனுக்கும் ஆன்மலாபம் உண்டாக மாட்டாது. இறைவன்அடைவு முயற்சிசீலனுக்கு உண்டாகும். உழைப்பு உயற்சியைத்தரும். உயற்சி — உயர்வு. மேன்மை. முக்தியென்பது முடிபு.

தபசோ வாப்யலிங்காத்—லிங்கம்—குறி, அடையாளம், சின்னம் என்பனவெல்லாம் ஒருபொருள் பலசொற்கள். குறியில்லாமல் வெறும் தவத்தால் பிரயோஜனம் இல்லை. இறைவனையெய்த இயலாது. ஈண்டு லிங்கம் — தியாகம், லிங்கம், அநுமானம், பிரகிருதி, சிவமூர்த்தியென்னும் பல பொருள் ஒருசொல். அமரகோசம். ஈண்டு மந்திரத்தில் வந்த லிங்கசப்தம், சந்நியாசத்தைப்பற்றி வந்திருக்கிறது. மெய்யுணர்வு உதித்தபின்பு பொய்ப்பொருளிலுள்ள பற்றை விடவேண்டும். அப்பொழுதுதான் உதித்த உணர்வு உண்மையென்று உரைக்கப்படும்.

எவை ஜடமோ, அசத்தோ, அழிந்துபோகுமோ, துக்க வடிவமோ அவையெல்லாம் விடவேண்டும். தியாகத்தோடு கூடிய ஞானம் வலிமையுடையது. தியாகமில்லாத ஞானம் பயனையளிக்கமாட்டாது. ஞானம் சிறந்தது. அதைப்பார்க்கிலும் பிரம்மச்சரியம் மிகச்சிறந்தது. போகத்தைத் தியாகஞ் செய்யாவிடின் பிரஹ்மச்சரியம் பங்கமாகும். அறிவோடு உண்மையுரைப்பது மிக நன்று. ஆனால் பொய் இதயத்தை விட்டு விலகவேண்டும். அஃதில்லாமல் ஞானமும் இருக்க வேண்டும் பொய் நீங்கலாகாது என்றால் அது பலஹீனம்.

எதையறிந்த பின்னர் மீண்டும் அறியவேண்டுவதில்லையோ எதையடைந்த பிறகு அடையவேண்டுவதில்லையோ அது உண்மை உணர்வு. கர்த்தவ்யம், போக்தவ்யம், ஞாதவ்யம், நான் செய்கிறேன் என்னுந்தன்மையும், நான் போகத்தை நுகருகிறேன் என்னும் தன்மையும் அவித்தையின் காரியமாகும். இவையெல்லாம் நீங்குமோ அந்தஉணர்வு மெய்யுணர்வு, அதுவே திடஞானம்.

ஏதை: உபாயை: யததே யஸ்து வித்வாந் :— இவ்வழியால் எவன் முயற்சிக்கின்றானோ அவன் அதையடைகிறான் அதை—ஆன்மாவை. அதிகாரியென்பவன் முயற்சிசீலனாக இருக்கவேண்டும். சிரவணம் மனனம் நிதித்யாசனம் செய்துகொண்டேயிருக்கவேண்டும். அவன் எப்பொழுதும் குருபரனுக்கு உவகையளித்துக்கொண்டேயிருக்கவேண்டும். குருநாதன் சிரிப்பில் இறைவன் தோன்றுகிறான். குருநாதன் கிருபையை நாம் அவசியம்பெறவேண்டும். "அவனருளாலே யவன்றாள் வணங்கி" திருவாசகம், பொருள்வெளி. குருநாதன் திருவருளாலே ஆன்மா மறைப்பின்றியடையப்படும். ஆத்மஞானத்தோடு அதிகாரிக்கு நிஷ்டையும் வேண்டும். நிஷ்டை—நான் பிரஹ்மசொரூபமாக இருக்கிறேன் என்னும் உறுதிப்பாடு.

அன்னியப்பொருளில் ஆசக்தி உண்டாகக்கூடாது. பிரமாதமும் உண்டாகக்கூடாது. "பிரமாதம் வை மிருத்யும் அஹம் பிரவீமி" ம. பாரதம். பிரமாதத்தை மரணம் என்று நான் சொல்லுகிறேன் என்றார் சநத்சுஜாதர். கொல்லும் மனிதனைப் பிரமாதம். பொய்ப்பொருளை விடுவதில் நமது வலிமையைச் செலுத்தவேண்டும். பொய்யை விடுவதுதான் மெய்யை அடைவது. இதற்கு உபாயஞ்செய்யவேண்டும். இதற்குச் சிறந்த உபாயம், கேட்டல், சிந்தித்தல், தெளிதல். அயராத முயற்சி தளராத இன்பத்தைத் தரும்.

4

தஸ்யைவ ஆத்மா விசதே பிரஹ்ம தாம—எவன்மேலே சொன்ன உபாயத்தால் விடாது முயற்சி செய்கிருனே அவனுக்கு ஆன்மா உரிமையாகிறது. அவன் ஆன்மாவில் நுழைகிருன், அவனிடத்தில் ஆத்மா நுழைகிறது. பிரஹ்மதாமம்—பிரஹ்மமும் அவனும் ஒன்ருகிவிடுகிருன் என்பது பொருள். ஒரு மங்கை குளத்திற்குக் குடத்தையெடுத்துக்கொண்டு குளிக்கச்சென்ருள். குளிப்பதற்கு முன்பதாகக் குடத்தில் நீரை நிறைப்பி கரையில் வைத்துவிட்டு நீராடச் சென்ருள். அதற்குள் ஒரு காக்கை வந்து அக்குடத்தில் அமர்ந்தது. அவள் அங்கிருந்து ஒரு கல்லையெறிந்தாள். அது குடத்தில் பட்டது. காக்கை பறந்தது. குடம் உடைந்தது. குடத்து நீர் குளத்து நீரோடு கலந்து நீராயிற்று. அதுபோல் இவன் பிரஹ்மத்தை யறிந்ததும் பிரஹ்மசொரூபமாகிவிட்டான். ''தஸ்யாஹம் ந பிரணஸ்யாமி ச சமே ந பிரணயஸ்யதி'' கீதை. அவனுக்கு நான் தூரமல்ல, எனக்கு அவன் தூரமல்ல என்பது கீதையின் பொருள். பால் பாலோடு கலந்தது போலும், நதி கடலோடு கலந்தது போலும் மகாத்மா பரமாத்மாவோடு கலந்து ஒன்ருனர் என்பது குறிப்பு.

ஒரு மகாத்மா ஞானியாய்த்திரிந்தார். ஆனல் அவர்க்கு பாகவதம் கேட்பதற்குப் பிரியம் இருந்தது. அவரிடம் ஒரு வேதியர் வந்தார். அவரைப் பார்த்து மகாத்மா—வேதியரே! உமக்குத் தெரிந்ததைக் கூறுமென்ருர். வேதியர்—எனக்குப் பாகவதந்தெரியும் என்ருர். மகாத்மா—அதையுரையும் என்ருர். வேதியர் — பாகவதஞ்சொன்னர். மகாத்மா கேட்டு ரசித்தார். அந்தணரே! உமக்கு தக்ஷிணை தருகிறேன் வாரும் என்ருர். இருவரும் தனியிடஞ்சென்றனர். மகாத்மா வீதராகி. பணம் அவர் தொடுகிறதில்லை. மகாத்மா என்ன தரப்போகிருர் என்று கூசி பின் சென்ருர். தனியிடத்தில் மறையவரை அழைத்து அந்தணரே? நீர் பிரஹ்ம சொரூபம். தன்னை

ஒருபோதும் மனிதனென்றோ, ஜீவன் என்றோ நினையா தீரென்றார். மீண்டும் தன்னையெவனொருவன் பாவி. புண்ணிய வான் என்றும், கர்த்தா போக்தாவென்றும், இன்பதுன்ப முடையவன் என்றும், நான் சம்சாரி, அளவுக்குட்பட்டவன் என்றும் எண்ணுபவன் ஜீவன் எனப்படுவன். உயர்குலத்தில் உதித்த உத்தமரே! நீர் அவ்வாறு நினைக்கக் கூடாதென்று உபதேசித்தார். "தக்ஷிணு ஞாந சந்தேச:" பாகவதம்— ஞானத்தை உபதேசிப்பதே காணிக்கையாகும். என்று கூறி வேதியருக்குப் ப்ரேஸ்மந்திரத்தை உபதேசஞ் செய்து, மறையவரே! இனி நீர் இல்லத்திலிருந்தாலுஞ்சரி துறவறத் திலிருந்தாலுஞ்சரி நீர் மறந்துங்கூட ஜீவனென்று நினையா மல் பிரஹ்மம் என்றே நினையும் என்று அனுப்பிவைத்தார்.

ஞானம் வந்தபிறகு வெள்ளாடையிலிருந்தாலும் கல்லாடை யிலிருந்தாலும் குற்றம் ஒன்றுமில்லை. முக்திமார்க்கத்திற்கு வேடம் காரணமன்று பின்னை, விராகம் காரணமாமேயென்ற படி. விராகம் — வைராக்கியம். இறைவனையடைவதற்கு, ஞானத்தில் உறுதிப்பாடு, பிரமாதம்இன்மை, நல்லகாரியத் தில் சுறுசுறுப்பு. தியாகத்தில் பலம், ஊக்கம், ஆக்கம் இவை யெல்லாம் வேண்டும். இவைகளையுடையவன் மகாத்மா. இவன் எப்போதும் பிரஹ்மானுபவத்திலிருக்கிறான். ம. 4.

தொடர்ச்சி

சத்ஸ்யஏஷ ஆத்மா விசதே பிரஹ்மதாமம் என்று சொல்லி யிருக்கிறது. தாமம்—சொரூபம். அங்ஙனமாயின் பிரஹ் மத்தில் அவன் எங்ஙனம் நுழைகிறான்? இவ்வாறு நுழை பவன் எவ்வாறு வாழ்கிறான் என்பதற்குப்பதில்—

சம்பிராப்யைநம் ரிஷயோ ஞானதிருப்தா :
3
கிருதாத்மாநோ வீதராகா : பிரசாந்தா : !
3
தே சர்வகம் சர்வத : பிராப்யதீரா
யுக்தாத்மாந : சர்வமேவா விசந்தி. 5

இ—ள்

ஆசையற்றவரும், ஞானத்தில் திருப்தியுள்ளவரும், புண்ணியசீலரும், ரிஷியானவரும், சாந்தமானவரும், ஆத்மாவையடைந்தவரும், எல்லாவிடத்திலும் உறுதியை உடையவரும், நிலையில் பொருந்தியவரும், எல்லாவிதத்திலும் சிறந்தவருமான ரிஷி ஆன்மாவில் பிரவேசிக்கின்றனர்.

சம்ப்ராப்ய ஏநம் ரிஷய:— ரிஷிகள் இந்த பிரஹ்மத்தையடைந்து அறிவில் சிறந்தவர்களாகத் திகழ்கின்றனர். ரிஷ—தர்ஸநாத்—யார் பார்க்கிருரோ அவர் ரிஷி. 'ஸ்தோமாத தர்ஸ' ரிஷிகள் கண்மூடி மௌனியாக இருக்கும்போது அவர்கள் உள்ளத்தில் மறைந்திருக்கும் மந்திரங்கள் மலர்கின்றன. மந்திரங்கள் யாரும் செய்ததில்லை. தானுகவே தோன்றுகின்றன. இந்த விஷயம் பொதுவான மக்களுக்குத் தெரியாது. ஞானிகளுக்குத் தெரியும். சிலகனவு நனவில் ஸ்புரணமாகும். அதுபோல் காலவரையின்றிய மந்திரங்கள் மகான்கள் மனதில் உதிக்கும். தர்ப்பணத்தில் தலை காணப்படுவதுபோல் இதயத்தில் இனிய மந்திரங்கள் காணப்படுகின்றன.

"மந்த்ர திருஷ்டாரோ ரிஷய:" மனக்கண்ணுடியில் முதன்முதலாக மந்திரங்களைக் கண்டவர்கள் ரிஷிகள் என்பது வாக்கியத்தின் பொருள். இன்ன மந்திரத்திற்கு இன்ன ரிஷியென்று இயம்பப்பெற்றிருக்கிறது. படைப்பு அனுதி. அனுதி கால படைப்பில் வேதமந்திரங்களும் அனுதி.

"அனுதி நிதனுநித்யா" மநுஸ்மிருதி. வேதவாணி காலங் கடந்ததும், காரணமானதும், நித்யமுமாம், என்பது வாக்கியத்தின் பொருள்.

இவ்வாணி நான்கு பிரிவாக இருக்கின்றது—பரா, பஸ்யந்தி, மத்யமா, வைகரி யென்பன. பராவாக்கு மூலாதாரத்திலும், பஸ்யந்தி நாபியிலும், மத்யமா இதயத்திலும், வைகரி கண்டத்திலும் இருக்கின்றன. இந்த மந்திரம் ஞானி

கள் வாக்குத்தான். "நிறைமொழிமாந்தர் ஆணையிற்கிளர்ந்த மறைமொழிதானே மந்திரம் என்பர்" தொல்காப்பியம். நிறைமொழி மாந்தர்—ஞானிகள். அவர்கள் வாயிலிருந்து வந்ததெல்லாம் மந்திரந்தான். என்றபடி. ரிஷ—அதைப் பார்ப்பவர்கள். அவர்கள் ஊனக்கண்ணால் பார்க்கிறதில்லை. பின்னை ஞானக்கண்ணால் பார்ப்பார்கள்.

ஏநம் சம்பிராப்ய ரிஷயோ ஞானதிருப்தா :— இறைவனை யடைந்து ஞானத்தில் நிறைவு அடைவார்கள். ஞானத்தைப் பெற்று சந்தோஷத்தையடைவார்கள். மனிதர்கள் உணவு உண்பார்கள். உண்டபின்பு ஏப்பம்வரும். அதில் நல்ல உணவானால் நல்ல ஏப்பம்வரும், கெட்டஉணவானால் கெட்ட ஏப்பம்வரும். இதில் உணவுப்பிரியர்கள் சந்தோஷப்படுவார் கள். இது உணவிலுள்ள திருப்தி. இதுபோல் ஞானிகள் திருப்தியடையமாட்டார்கள். அவர்கள் ஞானத்திருப்தா :— இவ்வளவு நல்ல கர்மம் செய்திருக்கிறேன், இவ்வளவு தவம் பண்ணியிருக்கிறேன், இவ்வளவு அறநூல்கள் அறிவுநூல்கள் கற்றிருக்கிறேன் என்று உண்டாகும் (உவகை) திருப்தி புலவர்களுக்கு வரும். ஞானத்தைப்பெற்று பிரஹ்மத்தில் நிலைத்திருப்பதில் ரிஷிகளுக்கு உவகை உண்டாகும். இது ரிஷிகளுக்கு வரும் திருப்தி.

அக்ஞானிக்கு வெளியிலுள்ள பொருள்களிலிருந்து திருப்தி வரும். ஞானிகளுக்கு உள்ளேயிருந்துவரும். அளவில், அழிவில். அத்வைத, அமிர்தவடிவ ஆன்மாவை நிஜவடிவ மாக உணர்ந்து விருப்பு வெறுப்பற்ற நிலையான திருப்தி ஞானிகளிடத்தில் இருக்கின்றது. அந்தத்திருப்தி உள்ளிருக் கும் உத்தமனிடத்திலிருந்து உண்டாகிறது. கிருதாத்மானோ வீதராகா : பிரசாந்தா :— ஞானிகள் அநாத்மப் பொருள்களை விட்டு தனது நித்தியமாயுள்ள ஞானவடிவத்தில் நிலைத்திருப் பார்கள். வேதாந்த விஷயத்தில் அவித்தையை இருவித மாகக் கூறியிருக்கின்றனர்—முட்டாள்தனம், தூலஅவித்தை, அதற்குக்காரணம் மூலாவித்தை.

அவித்தை அத்யாசம் எனப்படும். அத்யாசமும் அவித்தையும் ஒன்றுதான். அத்யாசம், பிராந்தி, மயக்கம், விபரியாசம் என்பன ஒருபொருள் பலசொற்கள். கிழக்குத்திசையை மேற்குத்திசையென்று சொல்வது பிராந்திரூப அத்யாசம் என்று இலக்கணம் அறிந்த அறிஞர் இயம்புவர். இம்மாதிரி நாம் அகண்ட அத்வைதபிரஹ்மத்தை ஜீவன் என்று எண்ணுவது விருத்தியில் உண்டாகும் ஒருவித மயக்கம். எப்பொழுது பொருளின் உண்மை புலப்படுமோ அப்பொழுது விருத்தியிலிருந்த (பிராந்தி) அத்யாசம் விரைந்து அழிந்துவிடுகின்றது.

அத்யாசம்—அதஸ்மிந் தத்புத்தி: என்பது சங்கரபாஷ்யம். இது மயக்கம். எதில் எது இல்லையோ அதில் அதைப் பார்ப்பது. தூணைக்கள்வனாகவும், மரத்தை யானையாகவும், கயிற்றைக் கற்செவியாகவும், மார்க்கத்தில் நிற்கும் கம்பத்தை பூதமாகவும்பார்ப்பது அத்யாசம். இது அவித்தை. அவித்தை அத்யாசத்திற்குக் காரணம். மற்றொரு பக்ஷம் — நான் அந்தணன், நான் சந்நியாசி, நான் தொழிலாளி, முதலாளி என்பனவெல்லாம் அக்ஞானகல்பிதம். நான் ஜீவனென்பது நம்மால் கற்பிக்கப்பெற்றது. இதற்குப் பிரமாணமில்லை.

நான் பிசாசு என்று ஒருவன் சொல்கிறான். இதற்கு என்ன பிரமாணம்? ஒருவனையொருவன் கோபத்தால் எருமைமாடு என்கிறான். இதற்குப் பிரமாணம் என்னை? அறியாமையும், வெகுளியுங்காரணம். இவைகளை விட்டுவிடு. தன்னை அபரிச்சின்னமாகவும், தேசம், காலம், வஸ்து இவைகளுக்கு வேறாகவும் நினைந்து சொரூபத்தில் இருப்பவன்கிருதாத்மா. ஆத்மா—அந்தக்கரணம். மனம் யாருக்குத் தூய்மையாயிருக்கிறதோ அவர் கிருதாத்மா.

வீதராகா:— இராகம்—பற்று, விருப்பு, ஆசை, இச்சை, காமம், திருஷ்ணையென்பனவெல்லாம் ஒருபொருள் பல சொற்கள். ஊழில் இல்லாததை விரும்புதல். நமது ஊழில்

கூழிருக்கிறது, ஆனல் நாம் பால் விரும்புகிறேம். இதை இராகம் என்பர். கோந்தில் கையை வைக்கிறேம் அது நம் கையில் பற்றுகிறது. அதுபோல் நமதுவினையில் இல்லாததை விழைகிறேம், அது நம்மை துன்பப்படுத்துகிறது.

இராகசப்தத்தினல் துவேசத்தையும் கொள்ளவேண்டும். துவேஷம் வெறுப்பு. துவி விஷம் துவேஷம். இருமடங்கு நஞ்சு என்பது பொருள். விருப்பு வந்தால் வெறுப்பும்வரும். தடுமல் வந்தால் கபம். கபம் வந்தால் புகைச்சலும் வரும். அதுபோல் விருப்பு வெறுப்பு இவையிரண்டையும் விட்டவன் வீதராகன்.

உண்மையில் விருப்பும் வெறுப்பும் பூதகாலத்திலிருந்து வருகின்றன. பூதகாலம்—சென்றகாலம். அவன் இவ்வளவு நன்மை செய்திருக்கிருன், நிரம்ப உதவி புரிந்திருக்கிருன் என்று ராகம் வருகிறது. அவன் இவ்வளவு துயரம், தொல்லை கொடுத்தான். இன்னகாலத்தில் இன்ன இன்ன இடைஞ்சல்கள் செய்தான். இன்ன வம்புபண்ணினன் என்று அவன் பேரில் வெறுப்பு உண்டாகிறது. இறந்தகால விஷயங்களை மறந்துவிட்டால் நிகழ்காலத்திலுள்ள விருப்பும் வெறுப்பும் வரமாட்டா.

இனிப்பும் பொல்லாதது, கசப்பும் பொல்லாதது. இனிப்பு சர்க்கரைச்சத்து வாயிலாகத் தொல்லையையும், கசப்பு உஷ்ணவாயிலாக மூலநோயைக் கொடுத்து துயரத்தையும் அளிக்கும். அதுபோல் இராகத்தையும் துவேஷத்தையும் விட்டுவிடு. விருப்பும் வெறுப்பும் உன்னிடத்தில் இல்லை. உன்னைத்தெரியாததால் உனக்குத் தொல்லையும், துயரமும் வருகின்றன. ஆகலின் உன்னை யாரென்று உணர்.

பிரசாந்தா:-எவனுக்கு இந்திரியங்கள் அடங்கிவிட்டனவோ அவன் சாந்தன். ராஜஸ்தானத்தில் பீகாநேர் என்னும் ஒரு நகரம். ராமகிசோர் என்பவர் ஒரு சேட்டு. பொருள் படைத்தவர். அவருக்கு இருகண் இமைகளும் அசைந்துகொண்டே

யிருக்கும். அது ஒருநோய். அதுபோல் பொறிகளுக்கும் ஒரு விதமானநோய். சம்சாரத்தில் அலைந்துகொண்டேயிருப்பது. பொறிகள் வாநரம்போல இங்கும் அங்கும் திரியும். எங்கே திரியும்? விஷயங்களில் திரியும். எங்கே திரிந்தாலும் அங்குள்ள பொருளைத் தன்வயமாக்கிக்கொள்ளும்.

ஒரு கிராமத்தில் பயங்கரவிபத்து நடந்தது. அதைத் தாங்காமல் ஊரிலுள்ள அனைவரும் சிலகாலம் மௌனமாக இருக்கவேண்டுமென்று உறுதி பூண்டனர். இரண்டொரு நாட்கழிந்ததும் பலபெண்கள் ஒன்றுசேர்ந்தனர். அதில் ஒரு பெண் மற்றொருத்தியிடம் என்னால் பேசாமலிருக்க முடியாதென்றாள். மற்றொருத்தி, வா சண்டையாவது போடுவோமென்றாள். அடுத்தவள் ஓடிவந்து இவள் கலகக்காரிடி, இவளிடம் யார் பேசுவா, வா போவோமென்றாள். இதற்குள் ஒருவர்க்கொருவர் சண்டையிட்டனர்.

இதுபோல் பொறிகள் எப்போதும் பொறித்துக்கொண்டேயிருக்கும். ஐந்துவிஷயங்களும் உள்ளே வரட்டுமென்றும் அவாவிக்கொண்டேயிருக்கும். இதுதான் அசாந்தி. பொறிகள் தனது கோளகத்தில் அடங்கியிருந்தால் அது பிரசாந்தம். நாய் போலலைவது அசாந்தி. ‘‘அங்காடி நாய்போல அலைந்தனையே நெஞ்சமே’’ பட்டிணத்து சுவாமிகள். பொருள்வெளி. இந்திரியம் நாய். விஷயங்கள் அங்காடி. அங்காடியை நோக்கிச் செல்வதுதான் அசாந்தம்.

கண் தனது இருப்பிடத்தைவிட்டு வெளியே செல்லாது போனால் அது இறைவனிடத்தில்தான் இருக்கிறதென்பது பொருள். மனம் இதயத்தைவிட்டு வெளியே செல்லாது போனால் இதயத்தில் இருக்கும் நாராயணனிடத்தில் இருக்கிறானென்று தானே பொருள். இவ்வாறு ஞானத்தில் திருப்தியுடையவரும், ஆசையற்றவரும், பிரசாந்தபுருஷனுமாகிய மகாத்மா எங்கும் நிறைந்த பரமாத்மாவையடைந்து இன்ப

வடிவமாக இருக்கிறார். நிறைந்தமதியுடையவனுக்குப் பரந்த இறைவன் சிறந்த முறையில் எங்கும் கிடைப்பான்.

எவன் இறைவனைத் தெரிந்திருக்கிறானோ அவனுக்கு இறைவன் எளிய முறையில் தெளிவாக அடையப்படுகிறான். உனக்கு இறைவன் எங்கே கிடைத்தான்? குகையிலா? தீர்த்தஸ்தானத்திலா? அல்லது இதயத்திலா? இல்லை. பின்னை? எங்கும் யாருக்கு எங்கே கிடைக்கவேண்டுமோ அவருக்கு அங்கே கிடைக்கின்றான். காசியில் சிவனாகக் கிடைக்கிறான். வைகுண்டத்தில் திருமாலாகக்கிடைக்கிறான். சிவனும் திருமாலும் இதயத்தில் ஆன்மாவாகக் கிடைக்கின்றனர். நேற்றுங்கிடைத்தார், இன்றுங்கிடைக்கிறார், நாளையும் கிடைப்பார். உள்ளே கிடைப்பதுபோல் வெளியிலும் கிடைப்பார்.

எது எங்கும் நிறைந்திருக்கிறதோ, எல்லாவற்றையும் அறிந்திருக்கிறதோ, சகலத்திற்கும் காரணமோ, எதற்கு வேறாக ஒன்றுமில்லையோ, அந்த அத்விதீய ஆன்மாவை எவன் தனதுவடிவமாக அறிகிறானோ அவன் வீரன். அவனே ஞானியாவான். எவன் சிவன்பால் சித்தத்தை வைத்துச் சிந்திக்கின்றானோ அவன் சிவயோகி. எவன் முற்றறிவுடையவனோ அவன் விவேகி. எங்ஙனம் அன்னப்பறவை நீர் வேறு பால் வேறாகப் பிரிக்கிறதோ அங்ஙனம் ஞானி ஆன்மாவேறு அனாத்மா வேறாகப் பிரிக்கிறான். இது விவேகம் என்று பெயர் பெறும்.

சாங்கிய சாத்திரத்தில் இதற்கு வேறாகக் கூறப்படுகிறது. புருஷன் வேறு பிரகிருதி வேறு என்று சொல்வது விவேகம் எனப்படும். வேதாந்தத்தில் ஆத்மானாத்மவிசாரம், சாங்கியத்தில் புருஷப்பிரகிருதி விசாரம். ஆத்மாவில் சிருஷ்டியில்லவே இல்லை என்பது அஜாதவாதம். கற்பிதமாகத் தோற்றுகிறதென்பது சங்கரவாதம்.

யுக்தாத்மாந:— திடஞானிக்குத் தனக்கன்னியமாக ஒன்றும் தோற்றுகிறதில்லே. எல்லா வடிவத்தையும், எல்லாப் பொருள்களேயும், தனது வடிவமாகவே பார்க்கிருன். குடம் இருக்கும்போது குடாகாசம், குடம் உடைந்தால் மகாகாசம். சரீரம் இருந்தால் ஜீவாத்மா, சரீரம் இறந்தால் பரமாத்மா. சரீரம் இருந்தாலும் இறந்தாலும் பரமாத்மா என்பது தீவிர வாதம். உண்மையும் இதுதான். கற்பித அவித்தையும், கற்பிதமாயையும் நீங்கிய அக்கணமே ஆத்மஞானி அகண்ட பிரஹ்மத்தில் ஐக்கியமாகிவிடுகிருன். ''அஹம் பிரஹ்மாஸ்மி'' என்று நிரந்தரம் அனுபவித்துக்கொண்டிருக்கிருன் என்பது குறிப்பு. ம. 5

தொடர்ச்சி

ஞானதிருப்தன், கிருதாத்மா, வைராக்கியவான், அமைதியானவன், வீரன், முக்தாத்மா என்னும் நாமங்களனேத்தும் ஞானிக்கு உரியவை. இத்தகைய ஞானி இங்கேயே இறைவனே அடைந்துவிடுகிருன். எவன் இங்கு இறைவனே எய்தவில்லேயோ அவனுக்கு என்ன நிலேயுண்டாகிறது? அவனுக்கு ஜீவன் முக்தியுண்டாகிறதா இல்லேயா? முக்தியிருவகைத்து—கிரமமுக்தி. இதையினிவரும் மந்திரத்தில் கூறுகிருர்—

வேதாந்த விக்ஞாந சுநிஸ்சிதார்த்தா :
3 4
சந்யாஸ யோகாத் யதய : சுத்தசத்வா : !
தேபிரஹ்ம லோகேஷு பராந்தகாலே,
பராமிர்தா : பரிமுச்யந்தி சர்வே. ம 6

இ—ள்

எவன் வேதாந்தத்திஞல் உண்டாகும் விக்ஞான வாயிலாக உண்மை நிலேயை அறிந்துவிட்டானே, எவன் சந்யாச யோகத்தால் நிகிலத்தையும் தியாகம் பண்ணிவிட்டானே,

எவனொருவன் முயற்சியால் தனது மனதைத் தூய்மையாக்கி விட்டானோ, எவனுக்குத் திடஞானம் வரவில்லையோ அவன் பிரஹ்மலோகத்திற்குச் செல்கின்றான். அங்கிருந்து அயனிடம் வேதாந்தக்கலையைக் கற்று அவனோடு விதேகமுக்தியை அடைகிறான்.

வேதாந்த விக்ஞான சுநிஸ்ச்சிதார்த்தா :— எவன் வேதாந்த விக்ஞானத்தினால் ஆறுலிங்கங்களைக் கொண்டு சுருதிகளின் தாத்பரியம அத்வைத வடிவ ஆன்மாவில்தான், என்று உறுதியாக அறிந்திருக்கிறானோ அவன் திடஞானி. 1 ஆறுலிங்கம் — உபக்கிரமம் உபசம்ஹாரம், 2 அப்யாசம், 3 அபூர்வதை, 4 அர்த்தவாதம், 5 உபபத்தி, 6 பலம் என்பனவாம். உபக்கிரமம் — துவக்குவது. உலகம் உதிப்பதற்கு முன்னே சத்து இருந்தது என்று ஆரம்பிப்பது. உபக்கிரமம் — ஆரம்பம்.

உபசம்ஹாரம்—முடிப்பது. ''தத்வமசி'' நீ பிரஹ்மமாயிருக்கிறாய் என்று முடிப்பது. அப்பியாசம்—அடிக்கடி பழகுவது. அபி—ஆசம்—அப்யாசம். ஒருமுறை, இருமுறை. மும்முறை, பழகுவது அப்யாசம் எனப்படும். உத்தாலகர் மகன் சுவேதகேது. நான் பிரஹ்மசொரூபம் என ஒன்பதுமுறை பழகினான். இது அப்யாசமெனப்படும்.

அபூர்வதை—நபூர்வம் இதி அபூர்வம். உலகத்தில் எல்லாப் பொருள்களுக்கும் முன்னர் ஒரு பொருளுண்டு. ஆகலின் சம்சாரம் பூர்வமுடையது. பிரஹ்மத்திற்கு முன்னம் ஒரு பொருள் இல்லை. ஆகையால் அது அபூர்வம். அது பிரஹ்மம். அபூர்வதை — பிரமாணங்கள் பல—பிரத்யக்ஷப் பிரமாணம், அநுமாணப் பிரமாணம், உபமாணம், ஆகமம், அர்த்தாப்பத்தி, அநுபலப்தி யென்பன. இவ்வான்மா ஏனையப் பிரமாணங்களுக்கு எட்டாததாயும், ஆகமத்திற்கு எட்டுவதாயும் இருப்பதால் ஆன்மா அபூர்வம் எனப்படும். ஆகமம் —சாஸ்த்திரம்.

''தம்து ஔபநிஷதம் புருஷம் பிருச்சாமி'' என்பது சுருதி:. சீடன் குருவினிடம் வினவுகிருன்—ஐயனே! தம் ஔபநிஷதம் =உபநிடதத்தில் உரைக்கப்பெற்ற புருஷவடிவ ஆன்மாவை உம்மிடத்தில். பிருச்சாமி—கேட்கிறேன் என்ருன். என்பது சுருதிப் பொருள். ஆன்மவிஷயத்திலும், கர்த்தவ்ய விஷயத்திலும்—''தஸ்மாத் சாஸ்த்ரம் பிரமாணம் தே'' கீதை. தே= உனக்கு சாஸ்த்ரம் பிரமாணம் என்று கீதையில் கீதாநாயகன் கூறுகின்ருன். இச்சுருதிஸ்மிருதி வாக்கியத்திஞலும் ஆன்மா ஆகமத்தால் அறியப்படுகிறதென்று புலஞகின்றது. மேலும், ''சாஸ்த்ர யோநித்வாத்'' பிர சூ. யோநி—காரணம் பிரஹ்மத்தை அறிவதற்கு நூல்தான் காரணம் என்பது சூத்திரத்தின் பொருள். ''கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ,' திருப்புகழ். ஞானிகளுடைய இதயகமலத்தில் எழுந்தருளி இருப்பவர் என்பது வாக்கியத்தின் பொருள். இதனுலும் ஆத்மா அபூர்வதை யென்பது தெளிவு.

அர்த்தவாதம்—வாதம்—சொல்லுதல். அர்த்தவாதம் ஏற்றிக் கூறுவது. உங்களைப் போலக்காணுமா என்று புகழ்ந்து உரைப்பது. உத்தாலகர்மகன் பள்ளிக்குச்சென்ருன். பதினன்கு ஆண்டு கல்வி பயின்ருன். மீண்டும் வீடு திரும்பினுன். தந்தையின் முன் தலைநிமிர்ந்து நின்ருன். வணங்கா முடி மன்னனைக் கண்ட தாதை மகனே! எதை ஒன்றைக் கேட்டால் எல்லாங் கேட்டதாகின்றதோ, எதையொன்றை நினைத்தால் எல்லாம் நினைத்ததாகின்றதோ, எதையொன்றை யறிந்தால் எல்லாம் அறிந்ததாகின்றதோ அதை உன் குருநாதனிடங்கேட்டாயா? என்று மகனிடம் வினவினுர். இது பிரசம்சனம். போற்றுதல் என்பது குறிப்பு.

உபபத்தி—யுக்தி. குழந்தாய்! மண்ணினுல் வனைந்தகுடம் மண்ணுவது போலும், பொன்னினுல் செய்த பூஷணம் பொன்னுவது போலும், பிரஹ்மத்தினுல் செய்த புவியனைத்தும் பிரஹ்மம் என்பது உபபத்தி. உபபத்தி, யுக்தி, திருஷ்டாந்தம் என்பன ஒரு பொருள் பல சொல்.

பலம்—பிரயோஜனம். வேதாந்தத்தில் ஆங்காங்கு கேள்விப்படுகின்ற முக்தி பயனெனப்படும். ''யதா அபயம்கதோ பவுதி'' சுருதி. (நீ) அபயரூப ஆன்மாவையடைகின்றாய் என்றபடி. இவ்வாறு லிங்கங்களைக்கொண்டு விசாரம் பண்ணுவது வேதாந்த விக்ஞானம். மாதா பிதாக்கள் மகனுக்கு நாமகரணஞ் சூட்டுவார்கள். ஏழையாயிருப்பான். அவனுக்குக் குபேரன் என்று பெயர் வைப்பார்கள். கருப்பாயிருப்பான் சந்த்ரமௌலியென்று வைப்பார்கள். இவ்வாறு சுருதிமாதா நாமகரணஞ்சூட்ட எண்ணி மனதில் உன்னி மனிதனுக்குப் பெயர் வைப்பாள். நீ பிரஹ்மசொரூபம். நீ ஆத்மா, நீ சச்சிதானந்த வடிவம். நீ பராத்பர பரமேசுவரன் என்று நாமத்தை வைப்பாள். நீ உண்மையான பெயரை நம்புகிறாயா? பொய்யான நாமத்தை நம்புகிறாயா? உண்மையான நாமம் பிரஹ்மம். அதை நம்பு. நீ ஆன்மாவென்று வேதாந்தம் விளம்புகின்றது. இதில் ஐயங்கொள்ளாதே. நீ திருஷ்டா. சாக்ஷி நீ. சாக்ஷி—அறிபவன். வேதாந்த விக்ஞானத்திற்குப் பொருள் என்னை? பரமாத்மாவை நமது வடிவமாக அறிவது. இரண்டையும் ஒன்றென்று எண்ணுவது. இவ்வாறு எவன் உறுதியுடன் எண்ணுவானோ அவன் சுநிச்சிதார்த்தா :

சுநிச்சிதார்த்தா :— வேதாந்தத்தை நன்கு கேட்டு, சிந்தித்து, தெளிந்து அனுபவம் செய்யவேண்டும். அதன் பின்னர் அதில் நிலைத்திருக்க வேண்டும். வேதாந்த விக்ஞானம்—விக்ஞானம் பலவிதம். ஐந்திரிய விக்ஞானம், மனோ விக்ஞானம், பௌத்த விக்ஞானம், வேதாந்த விக்ஞானம் என்று நான்குவிதம். ஐந்திரிய விக்ஞானம்—இந்திரியங்கள் சரீரத்திலிருக்கிறது, இவைகளுக்கு விஷயமாகும் பொருள் வெளியே இருக்கிறது. விஷயஞானமும் வெளியே இருக்கிறது. பசு புல்மேய்கிறது என்று உண்டாகும் ஞானம் இந்திரிய விக்ஞானம். இந்திரிய விக்ஞானந்தான் ஐந்திரிய விக்ஞானம். இவ்வாக்கியத்தில் பசு என்னுஞ்சொல் வாயில்

இருக்கிறது. பசு வெளியில் இருக்கிறது. நான் பசுவை அறிகிறேன் என்ற ஞானம் தனக்கு வேருக இருக்கிறது.

மநோ விக்ஞானம்—இவன் பகைவன், இவன் உறவன் என்னும் ஞானமுண்டாகிறது. இந்த ஞானம் இந்திரியத்திலிருந்து உண்டானதல்ல. பின்னே? விருப்பு வெறுப்பு மூலமாக எழுந்து வாசனையினுல்கலந்த அந்தக்கரணத்தில் இவன் உறவன் இவன் பகைவன் என்னும் ஞானமுண்டாகிறது. கண் மனிதனை மட்டும் உணர்த்துகின்றது. இதில் இவன் நண்பன் இவன் பகைவன் என்னும் ஞானம் வாசனையினுல் மனதில் உதிக்கின்றது. இவன் தோழன், இவன் மாற்ருன் என்று தனித்தனியாகத்தோற்றினும் மனதைவிட்டு அன்னியமில்லை. எவ்வாறு மனதில் சொப்பனம் வருகிறதோ அதுபோல் உறவும் பகையும் உதிக்கின்றன. எனவே இதுவும் கனவுபோலத்தான்.

பௌத்த விக்ஞானம்—இவர்கள் பௌத்தர்கள். இவர்கள் மதத்தில் ஞானம்வேறு பொருள்வேறு அல்லை. உறக்கத்தில் எல்லா ஞானமும் ஒடுங்கிவிடுகின்றன, அதுபோல் எல்லாப் படைப்புகளும் தனது அபாவத்தில், அல்லது தனது இன்மையில் மடிந்துவிடுகின்றன. புத்தியால் எண்ணிப்பார்க்கும்போது எல்லாம் சூன்னியத்திலிருந்து உண்டாகின்றன. அவர்கள் மதத்தில் எல்லாம் க்ஷணிகம், எல்லாம் சூன்னியம், ஞானமும் சூன்னியம். சூன்னியம்—ஒன்றுமில்லாதத்தன்மை.

வேதாந்த விக்ஞானம் இத்தனைக்கும்வேறு. எங்கு விக்ஞானமும் பொருளும் இரண்டாக இல்லாமல் ஒன்ருக இருந்து பிரகாசமாக இலங்குகின்றனவோ, எது இனிமையாகவும் பிரியமாகவும், பிரகாசமாகவும், சைதன்ய வடிவமாகவும் இலங்குகிறதோ அது வேதாந்த விக்ஞானம். வேதாந்தத்தில், விக்ஞானமும், விஷயமும் ஒன்ருகிவிடுகின்றன.

அறிபவனும் அறியப்படும் பொருளும் அறிவு சொரூபமாக இருக்கின்றன. அறிவுதான் வேதாந்த விக்ஞானம். பௌத்தமதத்தில் விக்ஞானம் சூன்னியம். வேதாந்தத்தில் விக்ஞானம் ஆத்மா. விக்ஞானம் இதம், இதம்—சம்சாரம். இதம் என்னும் சொல்லுக்கு விஷயமாகிறபோது அது விக்ஞேயம்—திருஸ்யம். ஞானந்தான் ஞேயம் ஆகிறது. நான் என்னும் அகந்தைக்கு விஷயமாகிறபோது அஹம். மமதைக்கு விஷயமாகிறபோது இதம். அஹம்—ஆன்மா. இதம்—சம்சாரம்.

வேதாந்த விக்ஞானம் உலகில் உள்ள ஞானம் அனைத்திற்கும் வேறானது. எல்லா விக்ஞானத்திற்கும் இருப்பிடமானது. அதில் ஞானம், விக்ஞானம். அக்ஞானம் எல்லாம் கற்பிதம். ஆண்டு, அறிவும் அறிபொருளும் இல்லை. திருஷ்யமில்லை, திருஷ்டாஇல்லை. திருக்குமாத்திரந்தான். அனாத்மா இல்லை, ஆத்மாதான். சூன்னியமில்லை, பிரகாசம். இன்மையில்லை, உண்மை. துன்பம் இல்லை, இன்பம். ஆண்டு இருளில்லை யொளி. எங்கும் பிரகாசம்.

அத்வைதத்தைக் கேட்கின்ற மக்களும், சொல்கின்ற மகான்களும் இவ்விஷயத்தை நிச்சயம் பண்ணிக்கொள்ள வேண்டும். ஒரு வேதியர், ஒரு மகாத்மாவிடம் நீர், குருவாயிலாக வேதாந்தம் கற்றீரா என்று வினவினர். மகாத்மா — கற்கவில்லை கேட்டேனென்றார். வேதியர் — கேட்டதினால் என்ன ஆகப்போகிறது என்றார். மகாத்மா — வேதாந்தம் கற்கிறதில்லை, கேட்கத்தான் வேண்டும் என்றார். ''கேள்வியால், மனனத்தால் கிளர்ந்த யோகத்தினால்'' என்றபடி.

வேதாந்தம் படிப்பதற்குரியதன்று. கேட்கவேண்டும் என்பது தெளிவு. இவ்வாறு கூறியதும், வேதியர் மிக மகிழ்ச்சியடைந்தார். வேதாந்த விக்ஞானம் ஒன்றையே யுணர்த்தும். இரண்டென்பதை சகித்துக்கொள்ளாது. கழுத்தில் மாலை இருக்கிறது, உள்ளே உள்ளமிருக்கிறது. விக்ஞானந்தான் மாலையாகவும், தேகமாகவும், உள்ளமாகவும்

தோற்றுகின்றது. ஈண்டு தேசம், காலம், பொருள் இவைகளுக்கு வேற்றுமையில்லை. இருதாரமிருந்தால் ஒருவர்க்கொருவர் பொறுத்துக்கொள்ளமாட்டார்கள். அதுபோல் வேதாந்தம் இரண்டையேற்றுக்கொள்ளாது.

இவ்வுறுதி யார்க்கு உண்டாகும்?

சந்யாச யோகாத் யதய : சுத்த சத்வா :— ''நியாச ஏவ அத்ய ரேசயேத்'' சந்யாசம் எல்லாவற்றையும்விட மிகச் சிறந்தது. மேலும் ''நியாசம் ஏஷாம் தபசாம் அதிரிக்தமாஹு:'' தவங்கள் அனைத்தினும் சிறந்தது சந்நியாசம் என்று சாற்றப்படுகிறது.

சம் = சம்யக்—நன்றாக விசாரம் செய்து, நீ = முற்றிலும் நிச்சயஞ்செய்து, இம்மை மறுமை இரண்டையும் பொய் யெனத் தள்ளிவிடுவது சந்நியாசம். ''இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்டார்'' குறள். இகத்திலுள்ள ஆசையையும், பரத்திலுள்ள ஆசையையும் விட்டு ஞானத்தைப் பெற்று துறவறத்தையடைய வேண்டுமென்பது குறளின் குறிப்பு. இந்த அக்ஞான கற்பித தேகாதிகளிடத்தில் உள்ள பற்றைவிட்டு தியாகத்தைக் கையாளவேண்டும். கயிற்றில் பாம்பு மூன்றுகாலத்திலும் உண்டாகவேயில்லை. அதுபோல் பரமாத்மாவில் இவ்வுலகம் மூன்று காலத்திலும் இல்லை.

வேதங்களிலும், புராணங்களிலும், சிருஷ்டி சொல்லியிருக்கிறது. ஆனால் அது ஆரோபிதம். கற்பனையென்பது கருத்து. சிருஷ்டி பிரளயம் மந்தஅதிகாரிக்காக. இதுமூலமாக வைராக்கியம் உண்டாகும். சிருஷ்டி பிரளயத்தைச் சிந்தனைசெய்தால் ஞானமும் வைராக்கியமுமுண்டாகும். வீட்டிற்குப் போவதற்கு வாகனம் போலும், மாடிமேல் ஏறுவதற்கு ஏணி போலும் ஆம். தேகத்தைச் சிந்தனைசெய்தால் ஜீவன் கூடஸ்த்தனாகிறான். சிருஷ்டிப்பிரளயத்தைச் சிந்தனை பண்ணினால் ஈசுவரன் பிரஹ்மமாகிறான். முன்னது துவம்பத சோதனை, பின்னது தத்பத சோதனை. படைப்பும் துடைப்பும் விவகார சத்யம், உண்மையான சத்யம் பிரஹ்மம்.

அவிஞசியில் விஞசமும், சேதனத்தில் ஜடமும், இன்பத்தில் துன்பமும் தோற்றுகின்றனவே, இவைகளை அறவே விட்டுவிடுவது சந்நியாசம். துறவு உள்ளிருக்கும் ஒள்ளிய ஜோதி. சந்நியாசம் ஞாஞக்னி. ஞானமென்னும் தணலில் உலகம் வெந்து நீருகிவிடுகிறது. இந்த சந்நியாசயோகம் வாழ்க்கையில் யாருக்கு வருமோ அவர் சுத்த சத்வராகின்ருர். தூய்மையான உள்ளத்தையுடைவராகின்ருர் என்பது குறிப்பு. அப்பொழுது கலப்படம் இருக்கிறதில்லை. தெளிந்த ஞானியாகின்ருன். ஆன்மாவையுள்ளவாறு ஓருவது சுத்த சத்வன். ஓருவது — விசாரம் பண்ணுவது. ஆன்மாவை பிரஹ்மமென்று அறிவது. சத்தா, சத்தை, சத்வம். சத்தையை உள்ளவாறு உணர்வது சுத்தசத்வம். ஜீவனையிறைவனென்று எண்ணுவது. உலகந்தோன்ருமலிருப்பதே சத்வத்தின் சுத்தி.

சந்யாச யோகாத் — உலகத்தையடைவது யோகம். இது அக்ஞானியின் மதம். அனுத்மப்பொருளைவிட்டு பரமாத்மாவை யடைவது சந்யாசயோகம். இது சாஸ்த்ர சம்மதம். தனக்கு வேருன பொருளைத் தானல்லவென்று விலகிக் கொண்டே போனுல் எது எஞ்சி நிற்குமோ அது ஆன்மா.

''சந்யாச யோக கடிந ஊதோ ஹம் ந கரபஹோ'' இந்த சந்நியாச யோகம் மிக அரியது, எனவே உத்தவரே! மிக முயன்று அடையவேண்டும் என்றபடி. யதய:— சந்நியாச யோகத்தினுல் அனுத்மப் பொருள்களை விட்டபிறகு நமது சொரூபம் தானுக இலங்கும். நான் அளப்பரியவன்; நான் பரிபூரணன் என்றும், நித்தியவடிவ பிரஹ்ம சொரூபன் என்றும் உணர்வு உதிக்கும்.

இவ்வாறு சந்நியாசயோகத்தை யடைந்தவர்க்குண்டாகும் பலன் யாது? தே பிரஹ்ம லோகேஷு பராந்தகாலே — சம்சாரிகள் இறக்கும் காலம் அபராந்தகாலம். முமுட்சு இறக்குங்காலம் பராந்தகாலம். அடிக்கடி இறந்துபோவது மேலான மரணமில்லை. அறிவிலிகள் இறக்கும்போதுங்கூட

ஏதாவதொன்றை விரும்புகின்றனர். எனக்கு மைந்தன் வேண்டும், மனையாள் வேண்டும், மண் மனைவேண்டும் என்றெல்லாம் விரும்புவார்கள்.

இறக்கும்போது மனிதனது கை மூடியிருக்கும் காரணம்? சாகும்போதும் யாருக்கும் ஒன்றையும் ஈயமாட்டேன் என்பதை அது உணர்த்தும். சிலர்க்கு உள்ளங்கை விரிந்திருக்கும். மரணவேளையிலும் யாராவது ஒன்றைத் தரமாட்டார்களா என்பதையுணர்த்தி நிற்கும். இத்தகைய மனிதன் வாழ்வதும் பொய், சாவதும் பொய். ஒருவர் இல்லஞ்சென்று இரந்தால் நித்தியம் இறந்ததாகும். ''நல்லாறெனினும் கொளல் தீது'' குறள். நன்மையான காரியத்திற்கும் கூட பிறரிடம் ஒன்றை யாசிக்கலாகாது. ''உரவோர் என் கையிரவாதிருத்தல்'' ஒளவையார். எவன் பிறரிடம் ஒன்றை விரும்பாதிருப்பானோ அவன் அறிவாளியெனப்படுவன்.

பராந்தக்காலம் — இறந்த பின்னர் மீண்டும் பிறவாத தன்மையைப் பெறவேண்டும். அது அந்தக்காலம். உண்மையான மரணம் பராந்தக்காலம். இது யோகத்தினல் உண்டாகும், அல்லது உபாசனையாலுண்டாகும். ஞானியின் பார்வையில் தேகமில்லை, அதனல் அவனுக்கு மரணமில்லை. தே பிரஹ்மலோகேஷு—உபாசனை வாயிலாக உபாசகன் தான் விரும்பிய உலகத்தையடைகிருன். பகவானும் ஒன்று. உலகமும் ஒன்று. சிவனை வழிபடும் மக்களுக்கு அது சிவலோகமாகின்றது. திருமாலை வழிபடும் மக்களுக்கு வைகுண்டமாகின்றது. இராமனை வழிபடும் மக்களுக்கு சாகேதமாகின்றது. சாகேதம்—அயோத்தியா. இவ்வாறு உபாசகனுக்குத் தக்கவாறு ஒரு உலகம் பல உலகாய் உதிக்கின்றது. ஆகையால் அது பிரஹ்மலோகம் என்று சொல்லப்படுகிறது.

இந்த சுவர்க்கஉலகமும் எண்ணத்தின் தக்கவாறு மாறும். அவ்வுலகத்திற்கு நான்கு வாயில்கள். கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு. இந்த ஜீவன் உடலைவிட்டு சுவர்க்கத்திற்குச் சென்று தெற்குவாயில்வழியாக உள்ளே நுழையும்போது

கருத்த ஆடையை அணிந்து யமன் பார்ப்பதற்குப் பயங்கர மாகக் காணப்படுவான். ஈண்டு சுவர்க்கம் என்பது எமபுரி. அமராவதியல்ல. இவ்வாயிலில் நுழையுஞ்ஜீவன் பாவி ஜீவன். அதே எமபுரியின் வடக்குவாயில் வழியாக புண்ணிய ஜீவன் நுழையும்போது ஏமராஜன் மஞ்சள் அல்லது வெள்ளை யாடை அணிந்து ஆனந்தமாகக் காணப்படுகிருன் இவ்வாறு கருடபுராணத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

அதிகாரி தனது மனம்போல இருப்பான். அவனது எண்ணம் பலவாருக இருக்கும். அவனது எண்ணம்போல உலகமும் மாறி மாறி காணப்படும். பராமிர்தா:— முமுட்சு விற்குப் பராந்தக்காலம் உண்டாகும். பராந்தம்—இறுதியான மரணம். இனிமேல் அவனுக்கு மரணமில்லை. ஏன், பிறப் பில்லாததால். நாமரூப வடிவ உலகத்தைக் கடைசியாகத் தியாகம் பண்ணுவது கடைசி மரணம். அவ்வகை அதிகாரி அயன் உலகத்திற்கோ அல்லது அவன் விரும்பிய உலகத் திற்கோ செல்கிருன். ஆண்டு அவனுக்கு அமிர்தம்—அமுதங் கிடைக்கிறது. எவன் ஆன்மவடிவமாக ஆகிவிட்டானே அவன் பராமிர்தன். அவன் வாழ்க்கையிலேயே அமிர்த வடிவமாகிவிட்டான்.

விண்ணுலோகத்திலும் பரமலோகத்திலும் உள்ள அமிர் தம் உண்மையான அமிர்தமில்லை. ஏன், அதைப் பருகின பிற கும் ஜென்மமும் மரணமும் உண்டாகின்றன. எல்லா மரணத் திற்கும் எது சாக்ஷியோ அது அமிர்தம். சுவயம் பிரகாச ஆத்மதத்வம் அமிர்தம். இவ்வான்மா அந்தக்கரணத்தோடு சம்பந்தம் வைக்கும்போது அபராமிர்தம். எப்பொழுது அந் தக்கரணத்தோடு சம்பந்தத்தைத்துண்டிக்குமோ அப்பொழுது பராமிர்தம்.

தத்வஞானம் வந்த ஞானியின் தேகமும் மதுரமாகிவிடு கின்றது. இவ்வாறு நூல்களில் நுவலப்பெற்றிருக்கிறது.

நுவலுதல் — சொல்லுதல். ஞானிகள் உடலில் எறும்பு மொய்க்கும். பெண்கள் ஞானியை வளைந்திருக்கின்றனர். மும்மூர்த்திகளும் ஞானியைப் பின்தொடர்ந்து செல்கின்றனர் என்ருல் வேறு என்ன சொல்லவேண்டியிருக்கிறது? ஞானியை எவன் பகைக்கிருனே அப்பாவி நெடுங்காலம் இகத்தில் சிறை வாசமும், பரத்தில் நரகவாசமும் அனுபவிக்கிருன் என்று மாமறை உரைக்கின்றது. ''ரிபு காரா காரம் கலயதி'' என்பதனுல் ஊகித்துணர்க.

இவையெல்லாம் ஞானிகளிடத்தில் இயல்பாக இணைந்திருக்கின்றன. எங்ஙனம் கற்கண்டுமலையைச்சுற்றி எறும்புகள் மொய்க்கின்றனவோ அங்ஙனம் ஞானியைச்சுற்றி அனந்தகோடி பிரம்மாண்டங்கள் சுற்றுகின்றன. ஒரு பக்தன் புதிதாக மனை வாங்கி பவனம் உண்டுபண்ணினுன். அதில் குடி புகுந்தான். அப்பவனத்தில் ஒரு ப்ரேதம் இருந்து கொண்டு அவர்களை அல்லல் படுத்திக்கொண்டிருந்தது. இதற்குள் அங்கொரு ஞானி வந்தார். அவரை அவர்கள் அப்பவனத்தில் அமரும்படி செய்தனர். அவர்கள் அகன்று விட்டனர். ஞானி உண்டு களித்து இரவில் உறங்கினுர். இரவு நடுநிசியில் மேன்மாடியில் ஒருபகுதி இடிந்து அவர் காலடியில் விழுந்தது. அவருக்கு ஒரு சேதமும் ஆகவில்லை. அவ்விழுந்த பகுதி ஞானியின் பாதத்தைத்தொட்டது. இவர் விழித்துப்பார்த்தார். அப்பகுதி—இறைவா! உன்னுடைய பாதம்பட்டதும் நான் பூதயோனியிலிருந்து விடுதலை அடைந்தேன். உனக்கு வணக்கம் என்று கூறிக்கொண்டு விண்ணை நோக்கிச சென்றது.

மகாத்மா, நிகழ்ந்ததை அன்பனிடம் அருளினுர். அன்பன்—ஐயனே! இவ்வில்லத்தில் ஒருபூதம் இருந்து எங்களை யிரவும் பகலும் தொல்லை கொடுத்துக்கொண்டேயிருந்தது. நீங்கள் வந்து தங்கியதும், உங்கள் பாதம் பட்டதும் அப்பூதம் போய்விட்டது என்ருன். நான் என்னும் அபிமானம்

யாருக்கு நீங்கிவிடுகின்றதோ அவருக்குச் சகல சித்திகளும் உண்டாகின்றன. சதாசிவபிரமேந்திராள் சித்தபுருஷன். அவரை ஒரு இஸ்லாமியன் அடிப்பதற்கு கையை ஓங்கினுன். அவர் சிரித்தார். அவன் கை அவ்வாறே நின்றுவிட்டது.

இந்நிலையைக்கண்ட ஒரு அன்பன் சுவாமிகளிடம் நீங்கள் என்ன செய்தீர்கள் என்று வினவினுன். சுவாமிகள் — நான் ஒன்றுஞ்செய்யவில்லை என்னைச்சுற்றித் தேவதைகள் இருக்கின்றன. அவைகள் அவ்வாறு செய்திருக்கின்றன என்று இயம்பினுர். அறிவிலிகளோடு பிசாசுக்கள் திரியும். ஞானிகளோடு தேவதைகள் திரியும். ஞானிகளைக் காப்பதற்கு ஞாலமுண்டவன் தேவதைகளை யனுப்பிவைக்கிருன். ஞாலம் உண்டவன் = நாரணன். ''ரிபு :— பகைவன் காராகாரம் கலயதி'' ஞானியிடம் ஒருவன் வம்பு பண்ணினுல் ஞானி அவனை நீதிமன்றத்திற்குக் கொண்டுபோகமாட்டான். ஆனுல் அந்த வம்பன் ஏதாவது ஒரு காரணத்தினுல் சிறைச்சாலைக்குச் செல்லுவான்.

பரிமுச்யந்தி சர்வே—பராமிர்தாவிற்குப் பொருள் ஞானியின் மேனியில் மாதுரியம், இன்சுவை, தித்திக்கும் குணங்கள் எல்லாம் அவனையணுகி இருக்கின்றன என்பது. அவன் இருந்தாலும், நடந்தாலும், பேசினுலும், எங்கு சென்ருலும் இனிப்பே இனிப்பு. உடனே முக்தியுண்டாகும். அவனுக்கு எங்கும் போகவேண்டுவதில்லை. எந்த ஊரிலும் முக்தியைப் பெறவேண்டுமென்பதுஇல்லை. யாரிடமும் முக்தியை விலைக்கு வாங்குவதில்லை. அவன் எங்கிருக்கிருனே அங்கு முக்தியிருக்கிறது. ''முக்தனும் ஞானியிருப்பிடம் முக்தியாம்'' சமயோசித மாலை. பொருள்வெளி.

''ஞாநிநாம் மகாத்மியம் ஞாதும் ந சக்யதே'' சமயோசித மாலை. ஞானிகளின் பெருமையை நவிலவொண்ணுது என்றபடி.

சகுநிநாமி வாகாசே ஜலே வாரி சரஸ்யச !
3 2 2 3
பதம் யதா ந திருஸ்யேத ததா ஞாநவதாம் கதி!! ம-பா.

இ—ள்

ஆகாசத்தில் பறவைகள் பறக்கின்றன. அவைகளின் தடயந் தெரிகிறதில்லை. தண்ணீரில் ஜல ஜந்துக்கள் திரிகின்றன. அவைகளின் தடயமும் தெரிகிறதில்லை. அதுபோல் ஞானிகள் ஞாலத்தில் திரிந்தாலும் அவர்கள் மகிமை அறிவிலிகளுக்குத் தெரிகிறதில்லை. ''வாய்விட்டுப்பேச ஒண்ணாதது''
3
திருப்புகழ். ''அநத்வகா அத்வசு பாரயிஷ்ணவ:'' க. உ. அதிகாரி மார்க்கத்தைக் கடந்து விரும்பிய பொருளையடைவோம் என்று எண்ணுகிறான். ஆனால் வழிகடந்து செல்ல வேண்டுவதில்லை. ஏன் நாம் விரும்பிய பொருள் நம்மை விட்டு அன்னியமில்லை. ''சென்றடையாதத் திருஉடையானை'' தேவாரம். அன்பர்கள் சென்று அடையவேண்டிய அவசியமில்லாத பரம்பொருள் என்றபடி.

போயடைய வேண்டிய பொருள் பரிச்சின்னமாகும். பரிச்சின்னம் — அளவு. சாதனமும் அளவுக்கு உள்பட்டதாகும். பிரஹ்மம் நமது வடிவம். சித்தப்பொருள். இயல்பாக உள்ளதென்பது கருத்து. பின்னை மோக்ஷம் என்று எதைச் சொல்வது? அறியாமையை அகற்றுவதுதான் முக்தி. ''மோக்ஷோ அவித்யா நிவிருத்திர் வா'' சங்கரபாஷ்யம். அக்ஞானம் நீங்குவதுதான் மோக்ஷம் என்று பகவத்பாதாள் பகருகின்றார்.

தெளிந்த சிவயோகிகள் முக்தியை விரும்புகிறதில்லை. பின்னை, தொல்லை தொலையட்டும், துயரம்நீங்கட்டும், தொடர் பவம் ஒழியட்டும், தொல்லுகப் துரிதமாக ஓடட்டும் என்று எண்ணுவார்கள். இன்பம் அடையட்டும் என்று எண்ணுவதில்லை. இன்பம் ஞானிகள் சொரூபமாக இருக்கிறது. கிடைத்தும் கிடையாததுபோல காணப்படும். இது மயக்கம்.

சம்சாரிகள் பிறவிப்பெருங்குழியில் அடிக்கடி விழுந்து எழுகின்றனர். ஒருவர் இடத்தில் நட்பு வைத்தோமானால் அவர்க்காகப் பிறக்கவும் இறக்கவும் வேண்டிவரும். இல்லத்தில் தனியாக இருக்கும்போது ஆடையை அடிக்கடி அணிவதும், அடிக்கடி களைவதும் எரிச்சலாக இருக்கும். நமக்குப் பிரியமான நண்பனோ அல்லது காதலியோ வந்தால் ஆடை அணிகலங்களை அணிந்து காண்பிப்பதற்கு ஆவலாக இருக்கும்.

உனக்கு யாரிடத்தில் காதல் இருக்கிறது? உண்மையை உரை, மக்களிடத்தில் காதலிருக்கிறதா? மகேசனிடத்தில் காதல் இருக்கிறதா? யாரிடத்தில் உனக்கு அன்பு இருக்கிறதோ அவர்களுக்கு அணிகலங்களை அணிந்து காட்டு. அவர்களிடத்தில் உவகைக்கொள். மீரா நடவரன் முன் நடனமாடிக் களித்தாள். நடவரன்-நந்தலால். அக்ஞானிகள் தனது சுகத்திற்காக நடனம் புரிகின்றனர். பக்தன் பகவானுக்காக நடனம் புரிகின்றான். யோகிகள் யாருக்காகவும் ஆடுகிறதில்லை. அதிகாரி ஆடுகின்ற உலக வாழ்க்கையில் இருந்து வெறுப்பு அடைகிறான். ஞானியின் பார்வையில் பராந்தகாலமுமில்லை. அபராந்தகாலமுமில்லை. சம்சாரிக்கு அபாரந்தகாலம், முமுட்சுக்குப் பராந்தகாலம். இறந்ததும் முக்தி. ஞானிக்குப் பந்தனமுமில்லை, முக்தியுமில்லை. சம்சாரமும் இல்லை மோக்ஷமுமில்லை. ஞானி உண்மையில் பிரஹ்மரூபம்.

## தொடர்ச்சி

பரிமுச்யந்தி சர்வே—எல்லோரும் முக்தியை அடைந்து விடுகிறார்கள் என்று முந்திய மந்திரத்தில் மொழியப்பட்டிருக்கிறது. அந்த முக்தியின் நிலையென்னை? அதன் பெருமை யாது? அது நித்தியமா அநித்தியமா என்பதைப்பற்றி இனி வரும் மந்திரம் கூறுகின்றது—

3
கதா : கலா : பஞ்ச தச பிரதிஷ்டா
3 3
தேவாஸ்ச சர்வே பிரதி தேவதாசு
கர்மாணி விக்ஞாந மயஸ்ச ஆத்மா
4
பரே அவ்யயே சர்வ ஏகீ பவந்தி !! ம. 7

இ—ள்

பதினைந்துகலைகளும் தமது காரணத்தில் நிலைபெறுகின்றன. எல்லா இந்திரியங்களும் தங்கள் காரண தேவதைகளில் லீனமாகின்றன. சகல கர்மங்களும், விக்ஞானமய ஆன்மாவும் மேலான அவ்யய ஏகவடிவ தத்வத்தில் ஒன்ருகி விடுகின்றன.

கதா : கலா : பஞ்சதச பிரதிஷ்டா — நமக்கு நல்ல காலம் வரும்போது சத்குருநாதன் கிடைப்பார். அப்பொழுது ஞானம் வரும். ஞானத்தால் முக்தியுண்டாகும். முக்தியுண்டாகும் நேரத்தில் பதினைந்துகலைகளும் தமது காரணத்தில் ஒடுங்கிவிடுகின்றன. இவ்வுடலை யுண்டுபண்ணுகின்ற தத்வம் பதினைந்து—ஐந்துபிராணன், பத்து இந்திரியம். இவை பதினைந்தும் தமது காரணவடிவ அதிஷ்டானத்தில் மறைந்துவிடுகின்றன. குடம் உடைந்தால் மண்ணில் மறைந்துவிடுகின்றது. குடம் மண்ணுகிவிடுகின்றது என்பது குறிப்பு. நகையை உருக்கினுல் தங்கமாகிவிடுகிறது.

பிரஸ்ன உபநிஷத்தின் ஆருவதுவினு—(ஆத்மா) புருஷனிடத்தில் எத்தனைகலை? விடை—பதினுறுகலை. கலைகள் எப்போதும் பரிச்சின்னமாயிருக்கும். பரிச்சின்னம்—அளவு. இந்துவிற்குப்பதினுறு கலையென்று புராணம் சொல்லுகின்றது. சூரியனுக்குப் பன்னிரண்டு. அதுபோல் ஆன்மாவிற்கு ஐந்து பிராணன், சிரத்தை, மகாபூதம், பொறிகள், மனம், அன்னம், வீரியம், தவம், கர்மம், உலகம், நாமம் இவைபதினுறு. இவை பதினுறும் பிராணிகளிடம் இருக்கின்றன.

பிருஹதாரண்ய உபநிஷத்தில்—அக்ஞானிகள் இறந்தால் அவர்களுடைய பதினாறு கலைகளும் மறுஜென்மத்தை யளிக்கின்றன என்று கூறி இருக்கிறது. அதிகாரி புருஷன் ஆன்மஞானத்தை அடைகிறான். அவனது ஞானவலிமையால் அவனுடைய பதினாறுகலைகளும் முற்றிலும் மறைந்துவிடுகின்றன. ஒருகலை மிஞ்சியிருக்கிறது. அக்கலைநாமம். ஏனெனின், முற்றிலும் எது பொய்யோ அது எங்ஙனம் ஒடுங்கும். நாமமும் வாசனை நிறைந்த உள்ளத்தில் உதிக்கும். உலகத்தில் பெரிய பெரிய ஞானிகள் இறந்துபோன பிறகும் அவர்கள் நாமங்களை மக்கள் சொல்கின்றனர்.

உள்ளிருக்கும் வாசனை யழிந்த பின்னர் நாமமும் மறைந்துபோகும். இந்திரியங்களுக்குரிய தேவதைகள்—சூரியன், சந்திரன், அக்னி முதலிய தேவதைகள் தங்கள் காரணவடிவுப் பரதேவதையில் ஒடுங்கிவிடுகின்றன. அதிகாரி வினை செய்திருந்தானே, அந்தவினை இருவிதம். ஒன்று பலனைத்தரத்தக்கது. மற்றொன்று பலனைத்தராதது. எந்த வினையினால் இவனுக்கு உடல் கிடைத்ததோ அவ்வினை பலனைத்தரத்தக்கது. அதற்குப் பிராரப்த வினையென்று பெயர். எவ்வினையால் சரீரம் கிடைக்கவில்லையோ அது பலனைத்தராதது. அதற்குச் சஞ்சிதம் என்று பெயர். குயவன் மண்ணைக்குழைத்து சிறிது மண்ணைச் சக்கரத்தில் வைத்துவிட்டு மிச்சத்தைத் தரையில் வைத்து விட்டான். எந்த மண்ணினால் குடம் செய்யப்பட்டதோ அந்த மண்குடம் இருக்கும்வரை மண்குடமாய் இருக்கும். எந்த மண்ணினால் குடஞ்செய்யவில்லையோ அது மண்ணாகவேயிருக்கும்.

இம்மாதிரி ஞானிக்கு எவ்வளவு போகம் செய்யப்பட்டிருக்கிறதோ அது தேகம் இருக்கும்வரை இருக்கும். போகம் நீங்கும்வரை உடல் இருக்கும். பிராரப்தமும் இருக்கும். சஞ்சிதகருமம் ஞானம் வந்ததும் வெந்து நீறாகும்.

விக்ஞான மயஸ்ச ஆத்மா—அக்ஞானவிசிட்ட ஜீவன். விக்ஞானமயகோசத்தை நானென்று எண்ணுபவன். உண்மையில் ஆன்மா மனதில் இல்லை. மனம் அழுதால் ஆன்மா அழாது. மனம் சிரித்தால் ஆன்மா சிரிக்காது. அந்தக்கரணத்தில் ஆன்மாவில் நிழல்மட்டும் விழுகிறது. கண்ணுடி தூய்மையாக இருந்தால் பிரதிபிம்பம் விழும், இல்லையேல் விழாது. ஆன்மாவும் அந்நிலைதான். சூரியன் அழுக்காகிறதில்லை. அம்மாதிரி ஆன்மாவும் மலினம் உறுகிறதில்லை. பிரதிபிம்பத்தினுல்வரும் குற்றம் பிம்பத்தைச்சாராது. நீரசைவதால் சூரியன் அசைகிறதில்லை. இம்மாதிரி அந்தக்கரணத்தில் ரஜோகுணமிருந்தால் சஞ்சலம் உண்டாகும். சத்வகுணமிருந்தால் தூய்மையாயிருக்கும். தமோகுணம் இருக்குமானுல் மலினம் உறும். முக்குணத்தினுல் அந்தக்கரணம் மூன்று விதமாக மாறும். இது அந்தக்கரணத்தின்னிலை.

நாய் கண்ணுடியில் தனது முகத்தைப்பார்த்து வேறு நாயென்று எண்ணிக் குறைக்கிறது. சிறுகுழந்தை தனது முகத்தைத்தர்ப்பணத்தில் பார்த்து தனக்கு அன்னியம் என்று எண்ணி அதோடு விளையாடுகின்றது. பறவைகள் பறக்கும் போது தனது வடிவத்தைக் கண்ணுடியிற்கண்டு அவையும் தனக்குப்புறம்பாக எண்ணி கண்ணுடியில் வந்து மோதுகின்றன. மனிதன் குழந்தைமாதிரி. அவன் அந்தக்கரணத்தில் எழும்கவலையைத் தனக்கு வந்ததாகக் கருதுகிருன். அழுகிருன், தொழுகிருன். இம்மயக்கத்தால் உலகத்தில் உண்டாகும் இன்பதுன்பத்தைத் தனக்கு வந்ததாக நினைக்கிருன்.

இந்த விக்ஞானமய ஜீவன் புத்தியில்விழும் ஆபாசத்தை என்னுடையதென்று மேவுகிருன். அதனேடு இவன் நிறைய அபிமானம் வைத்திருக்கிருன். அந்தக்கரணத்தின் உபாதி நீங்கியதும் இவையெல்லாம் பரமாத்மாவில் ஒடுங்கிவிடுகின்றன. இவை எந்தப் பரமாத்மாவில் லீனமாகின்றன? இவ்

விஷயத்தில் ஆசாரிய சங்கரர் மதம்—மேலானதும், அழிவில்லாததும், அனந்தமாயும், அமிர்தமாயும், அபயமாயும் நித்ய சுத்தமாயும் உள்ள பிரஹ்மத்தில் ஒடுங்குகின்றன என்று பகவத்பாதாள் பகருகின்றனர். எதுபோல் குடத்தையெடுத்த பிறகு குடாகாசமும், நீர் நிறைந்த பாத்திரத்தை அகற்றின பின்னர் பிரதிபிம்பமும் தனது காரணத்தில் லயத்தையடைகின்றனவோ அதுபோல் உபாதி நீங்கியதும் எல்லாம் இறைவனிடம் இணைந்து ஒன்றாய் விடுகின்றன.

எது சைதன்யமோ அது பிரஹ்மம். உபாதி அக்ஞான கற்பிதம். அதுவும் ஆன்மாவிற்கு வேறல்ல. இவ்வாறு எண்ணியதும் கதிரவனைக்கண்ட இருள்போல அக்ஞானம் நீங்கிவிடுகின்றது. ஆன்மாவில் கற்பிதவஸ்து அனைத்தும் கடலில் விழுந்த உப்புப்போல் கரைந்துவிடுகின்றன. எங்ஙனம் பிரஹ்மஞானத்தினால் நான் ஜீவன் என்னும் தன்மை நீங்கிவிடுகின்றதோ அங்ஙனம் தேகம், அந்தக்கரணம், உலகம் இவை தனக்கு வேறு என்ற மயக்கமும் நீங்கிவிடுகின்றது. அந்நேரம் ஜீவன் சிவசொரூபமாகிவிடுகிறான். ''திருச் சுழியைக் குறைத்துவிட்டால் சிவசொரூபம் அம்மே'' வேதாந்தரத்தினம். பொருள்வெளி.

கதா : கலா :— கலா என்பது குறைந்த அளவு. கலா, கலை சிறிய அளவு, என்பன ஒரு பொருள். கலைகள் அனந்தம்— நிவிருத்திகலா, வித்யாகலா, சாந்திகலா, பிரதிஷ்டாகலா, அதீதகலா என்பன. கலா—கலை. கஸ்மின் பிரஹ்மணி லீயந்தே இதிகலா : என்பது இலக்கணம். முடிவில் எதுபிரஹ்மத்தில் மறைந்து விடுகின்றதோ அது கலையெனப்படும். பலகலைகளில் நாட்டியக்கலையொன்று. நடன் நாட்டியம் ஆடுகின்றான். அபிநயம் பண்ணுகின்றான். அக்கலை அவனுக்கு வேறாகவா இருக்கிறது? இல்லை. கலைக்கு வடிவம் என்னை? தனது பற்றுக்கோடுக்கு வேறில்லாமல் இருப்பது. அபின்னமாக இருந்து கொண்டு வேறு

போல தன்னைக் காண்பிக்கும். ஒன்றை அநேகவடிவமாகக் காண்பிப்பது கலை. ஒரு சுரத்திலிருந்து பல சுரம், ஒரு வாத்தியத்திலிருந்து நாநாசுரத்தையுண்டுபண்ணுவது கலையின் தன்மையாகும்.

ஆத்மாவின்கண் உண்டான இந்த சிருஷ்டி பதினைந்து கலையுடையது. ஆத்மா இப்பதினைந்திற்கும் வேருனது. ''நாதபிந்து கலாதீநமோ நம :'' திருப்புகழ். நாதம் சிவதத்வம். பிந்து—சக்திதத்துவம். கலை—சம்சாரதத்துவம். அதீதம் — பிரஹ்மதத்துவம் என்பது முருகன் புகழின் முடிபொருள். இக்கலைகள் எல்லாம் ஆன்மாவில் பெயரளவுதான். ''வாசாரம்பணம்'' சுருதி. சொல்மாத்திரம் என்பது பொருள். ஞானம் எப்பொழுது உண்டாகும்? இவையெல்லாம் எப்பொழுது தனக்கு அன்னியமாகதோன்றவில்லையோ அப்பொழுது ஞானம் உண்டாகும்.

காசியில் ஒருவித்வான் மூன்று அன்னம் கலந்து உண்பார். கடலை, கோதுமை, அரிசி. இம்மூன்றையும் கலந்து ஐம்பத்தாறுவிதம் உணவு சமைப்பார். இது என்னே? இதுதான்கலை. ஒரு இறைவனிடத்திலிருந்து அநேகசிருஷ்டிகள் உண்டாயின. இதுகலை. அறிவாளிக்கு இச்சிருஷ்டி ஆத்மாவிற்கு அன்னியமாகத் தோற்றுகிறதில்லை. இப்பதினைந்து கலைகளும் தனது காரணத்தில் ஒன்ருகிவிடுகின்றன.

தேவாஸ்ச சர்வே பிரதிதேவதாசு— தேவதை—தீப்திமான் ஒளிமயன். பொறிகளையும் புலன்களையும் விளக்குவது தேவதை. ''திருக்குருபம் அர்க்கம்'' சமயோசிதமாலை. சூரியன் கண்வடிவம். கண்ணும் கெடியாரமும் இருந்தாலும் ஒளியில்லை யாஞல் கெடியாரந்தெரியாதுதானே. அதுபோல படைப்பிலுள்ள பொருளைப் பார்ப்பதற்குப் பரமாத்மா அவசியம் வேண்டும். எப்பொழுது நாம் இதயத்தில் பொருளைப் பார்க்கிறேமோ அப்பொழுது திருஷ்டா நாமாக இருக்கிறேம்.

திருஸ்யம் பொருளாகின்றது. அதைப்பார்ப்பதற்கு இறை யொளி வேண்டும். ஆனால் எப்பொழுது தத்வஞானம் வந்து விட்டதோ அப்பொழுது கலை கலா காரன், நடன் நாட்டியம், திருஷ்டா திருஸ்யம், இவையெல்லாம் ஒன்றாகிவிடுகின்றன. தேவதை, இந்திரியம், விஷயம் எல்லாம் ஈசுவரனாகி விடுகின்றன.

கர்மாணி விக்ஞான மயஸ்ச ஆத்மா—கருமம், விக்ஞான மயம், ஆத்மா. விக்ஞானம் அந்தக்கரணம். விக்ஞாயதே யேந தத் விக்ஞானம். அந்தக்கரணத்தில் வசிக்கும் இந்திரி யங்கள். விக்ஞானமய ஆத்மா நாம்தாம். தனது நிலைமை யைத் தெரியாது புத்தியை நான் என்று அபிமானிக்கிற போது விக்ஞானமயனாகிறான். வீட்டுக்குள் நுழைந்ததும் வீட்டுக்காரன் என்பதுபோல அந்தக்கரணத்தில் நுழைந்த தும் ஆபாசனென்று தன்னை நினைக்கிறான். இவன்தான் அந்தக்கரணத்தை விளக்குகின்றான்.

உள்ளத்தோடு ஒன்றுகிறபோது இவனே விக்ஞான மயனாகின்றான். நாம் புத்தியை நான் என்று அபிமானிக்கிற போது நாம் விக்ஞானமயமாகின்றோம். மனதோடுகலந்த லோபி தனமயனாகவும், காமி காமனாகவும், ஞானி பிரஹ்ம மயனாகவும் ஆகின்றான் "யந்த்ராரூடாநி மாயயா" கீதை. மனிதன் யந்த்ராரூடனாக ஆகிவிட்டான். நீ மனமுகியா? குருமுகியா? மனதிற்குப்பின்னால் செல்கின்றாயா? குருவிற்குப் பின்னால் செல்கின்றாயா? மனம் எதைச் சொல்கின்றதோ அதைச்செய்கின்றாயா? குரு எதைச் சொல்கின்றாரோ அதைச் செய்கின்றாயா? மனம்போன போக்கில் நீ சென்றால் அழிவை நோக்கிச் செல்கின்றாய். குரு சொன்னபடி சென்றால் ஆக்கத்தைநோக்கிச் செல்கின்றாய். ஆக்கம்—இறைவன்.

ஒரு மனிதன் கனவில் பல கனவுகள்கண்டான். அவை நனவில் பலித்தன. மற்றொருநாள் லாட்டரிச்சீட்டு வாங்கி னான். கனவில் ஒருகோடிரூபாய் விழுந்ததாகக் கனவு

கண்டான். காலையில் எழுந்தான். கடைக்குச் சென்றான். சீட்டை வாங்கினான். அதன்படி கோடிரூபாய் விழுந்தது. மறுநாளும் அவ்வாறு கனவுகண்டான். சீட்டை வாங்கினான். கிடைத்த ஒருகோடி ரூபாயும் போய்விட்டது. பிச்சையெடுக்க ஆரம்பித்தான். கனவை நம்புகிறவன் ஒரு நாளைக்கு அவசியம் ஏமாந்துபோவான். மனம் மனிதனை அவசியம் ஏமாற்றும். எனவே மனதின் சொல்படி வாழ்க்கையை நடத்தாதே. மனதை நான், எனது என்று நினையாதே. கனவு சிலநேரம் குணக்ஷர நியாயம் போல உண்மையாக இருக்கலாம். குணக்ஷர நியாயம்—மணலில் செல்கின்ற புழுவின் கால்கள் பட்டு எழுத்து வடிவம் ஆகிவிடும். அது குணக்ஷர நியாயம் எனப்படும். ஆனால் அப்புழு வித்வானல்ல. மனோராஜ்யம் தனது இராகத் துவேஷத்திற்குத் தக்கவாறு தோன்றுகிறது. இதனால் அடியார்கள் பற்றற்று வாழ்கிறார்கள்.

ஒருபக்தன்—இறைவனை ஞேயமாக ஏன் ஆக்குகிறீர்கள் என்றான்? ஞேயம் இல்லையென்றால் அக்ஞேயம் ஆகிவிடும் என்றார். தன்னை அக்ஞேயம் என்று அறிந்தால் வேதாந்தத்தைத் திலாஞ்ஜலி கொடுக்கவேண்டுவதுதான். பரமாத்மா குடத்தைப்போல ஞேயமுமல்ல ஆகாசத்தைப்போல அக்ஞேயமுமல்ல. அது இரண்டிற்கும் இடையில் உள்ளது. எதுவரை நீ உள்ளத்தோடொன்றி ஞாதாவாக இருக்கிறாயோ அதுவரை பரமாத்மா ஞேயவடிவமாகிறார். இறைவன் அறிபடும் பொருளாகிவிடுவான். இறைவனும் காட்சிப்பொருள், சம்சாரமும் காட்சிப்பொருளாகிவிடும். இரண்டும் சமானமானதால் அழிவுறும்.

நீ தன்னை அக்ஞானியாகவும், இறைவனை அக்ஞேயமாகவும் எண்ணும்படிநேரும். இது ஜீவனுடையநிலை. இறைவனை அறியாவிடத்து முக்தியுண்டாக மாட்டாது. எதுவரை ஜீவன் அறிபவனோ அதுவரை ஈசுவரன் ஞேயமாகிவிடுகிறான். உலகமில்லாமல் போய்விடுகிறது. ஒருநடன் பல

கோலத்தை யெடுப்பதுபோல பரமேசுவரனும் பலவடிவத்தை யெடுக்கிருன். ஞானமாகவும், ஞேயமாகவும், ஞானத்திற்கு விஷயமாகவும் ஆகிருன்.

3

''ஞானம் ஞேயம் ஞானகம்யம்''
ஹிருதிசர்வஸ்ய விஷ்டிதம்,, கீதை.

அந்த ஈசுவரன் ஞானவடிவினன், காட்சிக்கினியன், ஞானத்திஞல் அறியப்படுபவன். எல்லோருடைய இதயத்தி லும் இருப்பவன் என்பது கீதையின் பொருள்.

விக்ஞானமய ஆத்மா—விக்ஞானமயகோசம். அந்தக் கரணத்தில் ஏறியிருக்கும் சிதாபாசன். அந்தக்கரண அவச் சின்னச் சைதன்யம். புத்தியோடு கூடிய சேதனம். சேதனத் தோடு கூடிய புத்தியென்பது பொருள்.

அறியாதகாலத்தில் தன்னிடத்தில் நான் ஞாதா வென்றும், இறைவன் ஞேயம் என்றுந்தோற்றம் உண்டா கிறது. முதலாவது தன்னை ஞாதா என்பதை விட்டுவிடு. அப்பொழுது பரமாத்மா ஞேயமாகத்தோன்றமாட்டார். ஆன் மாவின் உண்மை வடிவம் ஞானசொரூபம். நித்தியமாயும், சுத்தமாயும், முக்தமாயும் இருக்கும் பூர்ணபிரஹ்மம். சிலர் நான் காட்சியிலிருந்தும், சாட்சியிலிருந்தும் வேறு என்று அறிகிருர்கள். வேதாந்தப் விசாரப் பிரதானம். எப்பொருளை யும் விசாரம்பண்ணும் இயல்பினையுடையது. நீயும் விசாரம் பண்ணிப்பார். திருஸ்யம் என்னது? புத்தகம். அதற்கு உபாதானகாரணம் எது? மண். தாள், எழுத்து, அட்டை இவை ஐம்பூதத்தின் காரியம். ஐம்பூதம் சூக்கும பூதத் திலிருந்து உண்டாயிருக்கிறது. சூக்கும பூதம் ஆத்மாவில் கற்பிதம். இது ஒருமுறை.

மற்ருெருமுறை—கண்ணைமூடிவிடு, புத்தகந் தெரியாது. மனதை மூடிவிட்டால் கண்தெரியாது. எல்லாம்பரமான் மாவின் பார்வைதான். திருஷ்டாவின் திருஷ்டியென்பது

தெளிவு. அகண்ட ஆன்மாவில் இது, அது, உது என்பன வெல்லாம் கானல்நீர்போற் கற்பிதம். கயிற்றுக்கு வேருகப் பாம்பில்லை, மண்ணுக்குவேருகக்குடமில்லை. ஆனுல் குடத்திற்கு வேருக மண்ணும் பாம்பிற்கு வேருகக் கயிறுமிருக்கின்றன. இதுபோல் இறைவனுக்கு வேருக வையகமில்லை, வையகத்திற்கு வேருக இறைவன் இருக்கிருன்.

ஜீவ உபாதியும், ஈசஉபாதியும் ஒழிந்தபின்னர் இருவரும் திருக்கு சொரூபமாகிவிடுகின்றனர். அப்பொழுது பிரகிருதி, பிராகிருதவடிவ பிரம்மாண்டம், தேகம், பிரபஞ்சம் எல்லாம் கடலில் விழுந்த நதிகள் கடலாவதுபோல பிரஹ்மமாகிவிடுகின்றன. அப்பொழுது ''பரே அவ்யயே சர்வே ஏகீபவந்தி'' எல்லாம் ஒன்ருகிவிடுகின்றன என்பது குறிப்பு. ம. 7

தொடர்ச்சி

சம்சாரநதி போகட்டும். எல்லாம் பிரஹ்மசொரூபமென்ருல், அவையெல்லாம் பிரஹ்மானந்தக்கடலில் கலந்து கொள்ளட்டும். அந்தபிரஹ்மத்தில் சகலமும் எப்படியொடுங்கும்? ஒடுங்கித்தான் இருக்கிறது. அறியாமையால் வேறு என்று நினைக்கிருேம். உலகம் பிரஹ்மத்தில் கலந்துதான் இருக்கிறது.

8-வது மந்திரம்

2 3
யதா நத்ய : ஸ்யந்த மாநா : சமுத்ரே
3
அஸ்தம் கச்சந்தி நாமரூபே விஹாய
2 3
ததா வித்வாந் நாம ரூபாத் விமுக்த :
3
பராத் பரம் புருஷம் உபைதி திவ்யம். 8

இ—ள்

எவ்வாறு பிரவாகரூப நதிகள் தனது பெயரையும், வடிவத்தையும் விட்டு கடலில் விழுந்து ஒன்ருகின்றனவோ

அவ்வாறு வித்வான் நாமம் ரூபம் இவைகளிலிருந்து விடு பட்டு மேலான ஒளிமய ஆன்மாவில் ஒன்ருகின்ருன்.

யதா நத்ய: ஸ்யந்தமாநா: சமுத்ரே—ஆறும் நீருதான், கடலும் நீருதான். நிலத்தின் காரணமாக நதிவேறு சமுத்திரம் வேருகக் காணப்படுகின்றன. கடலின் நீர் உப்பு. ஆற்று நீர் மதுரம். விக்ஞானிகளிடங்கேளுங்கள்—நிலத்தில் நீரிருக்கிறதா? நீரில் நிலமிருக்கிறதாவென்று சிந்தனை செய்துபாருங்கள். பூமியில் கடலிருக்கிறதா? கடலில் பூமியிருக்கிறதாவென்று பொறுமையோடு எண்ணிப் பாருங்கள்.

சமுத்திரத்திலுள்ள நுரைகள் பாரை பாரையாக உறைந்து கல்லாகி விடுகிறது. அக்கல் தண்ணீரில் மிதக்கிறது. இக்கல் நீரினுல் உண்டாயிற்று. இம்மாதிரி நீரிலிருந்து நிலம் உண்டாயிற்று. கடலின் ஒருபகுதியில் பூமியிருக்கிறது. விக்ஞான நூலில் பத்துபாகம் ஜலம், ஒருபாகம் மண் என்று கூறியிருக்கிறது. பௌதிகப் பொருளிலும் பத்து பாகம் நீரும் ஒரு பாகம் நிலத்தத்வமும் இருக்கின்றன. ''த்ரயாத்மகத்வாத்'' என்னும் நியாயத்தால் நான்கில் மூன்று பங்கு ஜலாம்சம் என்று பகவான் வியாசர் வேதாந்த சூத்திரத்தில் விளம்பியிருக்கிருர். இதனுலும் உலகில் நீரம்சம் அதிகம் என்று தெரிகிறது. நமது உடலும், உலகமும் எந்த உபாதானத்தினுல் செய்யப்பட்டனவோ இவையனைத்தும் ஆன்மாவிற்கு அன்னியமில்லை. இத்தனைக்கும் நான்தான் சாக்ஷி. என்னையொழித்தொன்றுமில்லை. ஒருவர் ஒருமகானிடம் திருஷ்டாவிற்கும் திருஸ்யத்திற்குஞ்சந்தியென்ன என்று கேட்டார். பொருள் இரண்டாக இருக்குமானுல் இரண்டையும் வேறு படுத்துவதற்காகமத்தியில் ஒருபொருள் வேண்டும். மற்றொருவன், திருஷ்டா திருஸ்யத்திற்கு இடையில் விருத்தியிருக்கிறதென்ருன். கேட்டவன்—விருத்தியும் திருஸ்யந்தானே என்ருன். இதற்குள் மகாத்மா திருஷ்டாவையறியாத அறியாமைதான் சந்தியென்ருர்.

இந்த் அறியாமைதான் பிளவை யுண்டுபண்ணுகிறது. இதனுல்தான் திருஷ்டாவேறு திருஸ்யம்வேறு என்று அறிகிருய். வீதிக்கு வருகிறமின்சாரந்தான் நம் வீட்டிற்கும் வருகின்றது. அதுபோல் அந்தக்கரண உபகிதச் சைதன்யமே மாயாஉபாதிகச்சைதன்யம். அதுதான் திருஸ்யரூபமாகத் தோற்றுகிறது. அதற்கு அன்னியமாக சமஷ்டியுமில்லே, வியஷ்டியுமில்லே. காரியமுமில்லே காரணமுமில்லே. எங்ஙனம் நதிகள் சமுத்திரத்தை நோக்கிச் செல்கின்றனவோ, அங்கு சென்று நாமத்தையும் வடிவத்தையும் விட்டுவிட்டு கடலோடு ஒன்ருகிவிடுகின்றனவோ அங்ஙனம் ஞானியும் நாமரூபத்தை விட்டு இறைவனையெய்துகின்ருன்.

நாம ரூபத்தை விடப்படாதெனின் சமுத்திரத்தை நோக்கிச் செல்லக் கூடாது. எங்ஙனம் மின்னல், மின்மினிப்பூச்சிகள் சூரியப்பிரகாசத்தில் கலந்து விடுகின்றனவோ அங்ஙனம், ஞானி முற்றிலும் பிரஹ்மத்தை யடைந்து ஒன்ருகிவிடுகிருன்

பிரயாகை மாகாத்மியம் என்னும் நூல் ஒன்று இருக்கிறது. அதில் பிரயாகை நம்முடைய பாரத நாட்டிலுள்ள தீர்த்தங்களுக்கு இராஜதீர்த்தம் என்று சொல்லியிருக்கிறது. இயல்பாக உள்ளது. கங்கை பின்னுல் வந்ததாக எழுதியிருக்கிறது. கங்கையும் யமுனையும் இமவானுக்கு இருபுத்திரிகள். யமுனையென்கின்ற அக்காள் தங்கையென்கின்ற கங்கையை வரவேற்க முன்வந்தாள். யமுனை தங்கையேவா இருவரும் சேர்ந்துகொள்வோம் என்ருள். கங்கை—நான் வரமாட்டேன், உன்னேடு கலந்தால் எனது நாமத்தையும் உருவத்தையும் விடும்படி நேருமென்ருள். யமுனை—தங்கை! நீ வருந்தாதே. நான் ஸ்ரீகிருஷ்ணனுடையதுணைவி, சமுத்திரத்திற்கு மனைவியாகமாட்டேன். வா என்னுடைய நாமத்தையும், உருவத்தையும் உனக்குத்தருகிறேன். இன்று முதல் நீ கடலுக்குச்சென்று கடலரசனுக்கு மனைவியாக ஆகு என்ருள். என் பெயரையும் வடிவத்தையும் அன்பளிப்பாக உனக்குத்தந்து விட்டேன் என்ருள்.

ஒன்றோடொன்று கூடவேண்டுமானால் சிறிதுதியாகஞ் செய்ய வேண்டும். இறைவனோடு இணையவேண்டுமானால் நாம ரூபத்தை அவசியம் தியாகம் பண்ணவேண்டும். நான் பிரஹ்மத்தை யறிகிறேன் என்று சேரமுடியாது. நான் என் பதை விட்டு பிரஹ்மத்தோடு சேரவேண்டும். பிரஹ்மஞானம் ஆணவத்திற்கு அணிகலமாகாது. ஆத்மஞானி தனது நாமத் தையும், ரூபத்தையும் விட்டு விடுகிறான் ''ஞாநி தியாகேந பவதி'' பொருள்வெளி.

ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு, நளன், தமயந்தி. பாண்ட வர்கள், திரௌபதி, முதலியோர்கள் மிகஅழகுடையவர் களாக இருந்தனர். இருப்பினும் அவர்கள் உருவமும் அழிந்து போயிற்று. பெயரும் யாரோ சிலருக்குத்தான் தெரியும். வரலாறு மாறும். ஆகையால் பெயர் இருக்காது. பாரத நாட்டில் வெள்ளைக்காரன் பெயர்ப்பலகைகள் இப்பொழுது அகற்றப்படுகின்றன. அவர்களுடைய சிலைகளும் அகற்றப்படு கின்றன. உருவம் முற்றிலும் மாறுபட்டவடிவம், எந்தவடிவம் குழந்தைப்பருவத்திலிருந்ததோ அது காளைப்பருவத்தில் இல்லை. காளைப்பருவத்திலுள்ளஉருவம் கிழப்பருவத்திலில்லை. ஞானியார்? எவன் நாமரூபத்திலுள்ள அபிமானத்தை விட்டு விடுவானோ அவன் ஞானி. நாமரூபத்திலுள்ள அபிமானத் தைத் தியாகஞ்செய்யவேண்டும். அபிமானத்தை விட்டஞானி நாசமின்றியதாயும், காரணாதீதமாயும் திவ்யமாயும் நித்ய சுயம்பிரகாசமாயுமுள்ள பிரஹ்மத்தோடு கலந்து ஒன்றாகிவிடு கிறான். ம 8

தொடர்ச்சி

வித்வான் நாமரூபத்தைவிட்டுபராத்பரபுருஷனைஅடைந்து ஒன்றாகிவிடுகிறான். இது உண்மைதான். ஒருசமயம் நாம ரூப அபிமானம் நீங்காதுபோனால் மீண்டும் சம்சாரத்திற்கு வருவானா என்ற கேள்விக்குப்பதில்—

9—வது மந்திரம்

3 3
சயோ ஹவை தத் பரமம் பிரஹ்மவேத பிரஹ்மைவ பவதி
4
நாஸ்ய அப்ரஹ்மவித்குலே பவதி !
தரதிசோகம் தரதி பாப்மாநம்
3 4
குஹா கிரந்திப்யோ விமுக்தோ அமிர்தோ பவதி 9

இ—ள்

எவன் ஒருவன் பரப்பிரஹ்மத்தை யறிகிருனே, அவன் பிரஹ்மமாகிவிடுகிருன். அவனுடைய குலத்தில் அக்ஞானி பிறக்கிறதில்லை. அவன் கவலையை வென்றுவிடுகிருன். பாவத்தைத் தீர்த்துவிடுகிருன். இதயமுடிச்சு அற்றுவிடுகின்றது. அமுதநிலையைப் பெற்றுவிடுகிருன்.

ஒரு தந்தை மகனைநோக்கி—நமது வீட்டில் நிரம்பப் புதையல் இருக்கின்றது என்று சொன்னர். சிலகாலங் கழிந்ததும் தந்தை இறைவனடி எய்தினர். மகனுக்குப் பொருளாதார நிலை மோசமாகிவிட்டது. உணவுக்குங்கூடத் திண்டாட்டம் வந்துவிட்டது. வீட்டை விற்கமுடியாது. இல்லத்திலிருக்கும் பொருள் கிடைக்கவில்லை. அப்பொருளால் என்ன பயன்? ஒன்றுமில்லையென்றபடி.

தனக்கு வேருகப் பொருளிருக்குமாஞல் அறிந்த மாத்திரத்தில் கிடைக்காது. அறிந்த பின்னர் அதை அடைய முயற்சிக்கவேண்டும். ஆனல் உனது வடிவமாயிருக்கும் பொருளை யறிந்தால் போதும். அடைய முயற்சிவேண்டுவதில்லை. அது அடைந்ததாகவேயிருக்கிறது. அடைந்தது தெரியவில்லையென்ருல் அறியத்தான் வேண்டும். இதனல் ஞானம் கர்மத்திற்கு அங்கமன்று.

சம்சாரஞானம் கர்மத்திற்கு அங்கமாகின்றது சம்சாரத்தில் கருமம் பெரியது. ஞானம் சிறியது. உலகத்தில் ஒரு

கல்வியைப்பயின்று அதற்குரிய தொழிலைச்செய்யாதுபோனல் அக்கல்வியால் பயனென்றுமில்லை. ஒருவன் இஞ்ஜினியர் கல்வியைக் கற்றிருக்கிருன், ஆனல் பவனம், அணை முதலிய வேலைகளைச் செய்யவில்லை. அவன் படித்ததனல் பலன் என்னை? ஒன்றுமில்லையென்றபடி. தத்வஞானம் இதற்கு வேறு. அது தொழில்ஞானம், சில்ப்பஞானம் போல அல்ல. அது தன்னைப்பற்றிய ஞானம். இந்த ஞானத்தைப்பெற்று செய்யவேண்டுவதொன்றுமில்லை. கர்த்தவ்யம் முடிந்துவிடு கிறது. ''சர்வம் கர்மாகிலம் பார்த்த ஞாநே பரிசமாப்யதே'' கீதை. பார்த்த! புகழ்பெற்றப் புண்ணிய அருஜுந! எல்லா வினைகளும், அவைகளுக்குரிய பலன்களும் தத்வஞானத்தில் முடிந்துவிடுகின்றன என்பது பொருள். இதனலும் தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கமில்லையென்பது புலனும்.

தனக்கு வேருன பொருளை யறிந்தபோதினும் அது அடை கிறதில்லை. ஆன்மாவை யறியாதுபோனலும் அடைந்த தாகவேயிருக்கிறது. எனவே இந்த மேலான ஆன்மதத்து வத்தையறிந்து ''பிரஹ்மைவ பவதி'' பிரஹ்மமாகிவிடுகிருன்.

ந அஸ்ய அப்ரஹமவித் குலேபவதி — தத்வஞானியின் குலமரபில் அல்லது சிஷ்யமரபில் அக்ஞானி உதிக்கிறதில்லை. அறிவிலிகள் பிறக்கிறதில்லை. ஞானிகள்பரம்பரை சிஷ்ய பரம்பரை. குலம் இருவிதம்—பிந்துபரம்பரை, நாதபரம்பரை. ஞானியின் இவ்விரு பரம்பரையிலும் உதிக்கின்றமக்கள் தூய்மையான உள்ளத்தையுடைய அதிகாரியாவார்கள். அதன் பிறகு ஆத்மஞானத்தைப் பெறுவார்கள். பிறந்த குலத் தில் தத்வஞானம் இல்லாதிருப்பினும் புகுந்த குலத்தில் தத்வஞானிகள் இருப்பாராயின் புகுந்தவர்க்கும் தத்வஞானம் வரும்.

3
''சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோக பிரஷ்டோபி ஜாயதே'' கீதை. ஞானத்திலிருந்து நழுவிய மனிதன் பாவன குலத்திலும், தனவான் குலத்திலும் தோன்றுவான் என்பது கீதையின் பொருள். ''தரதி சோகம் ஆத்மவித்'' ஆத்மஞானி சோகத்தைக் கடந்துவிடுகிருன். ஈண்டு இதை ஏன் சொல்ல வேண்டியிருக்கிறது? சாமான்ய மனிதர்கள் கடக்கமுடியாது. ஏன்? அவர்கள் நல்வழியில் செல்லும்போது எத்தனையோ இடையூறுகள் எழுகின்றன. ஒரு ரிஷி சாபம் கொடுத்துவிடலாம், அல்லது தேவதைகள் தடைபண்ணலாம். இவ்வாறு தவ முதலிய நல்வழியில் இடர்கள் வருமென்று இனிய நூல்களில் இயம்பியிருக்கின்றது. இம்மாதிரி தத்துவஞானத்திலும், தத்வஞானிக்கும் தடைகள் நேருமோ என்ற ஐயத்தை அகற்றும் பொருட்டு ''தரதிசோகம் ஆத்மவித்'' என்றது சுருதி. ஞானியை யாரும் தடைசெய்ய இயலாது. ஞானத்தால் எல்லாப் பிரதிபந்தங்களும் இரவியைக்கண்ட இருள்போல் விலகிவிடுகின்றன. முக்தி மார்க்கத்தில் பெரியதடை அக்ஞானந்தான். முக்தி நித்திய சித்த நமது சொரூபம்.

தரதிசோகம்—ஆத்ம ஞானி கவலையைக் கடக்கிருன். இதயத்திலிருந்தும் இறைவன் தெரியவில்லை. இதற்குக் காரணம் நாம்தான். என்னை? க-பரமாத்மா. வலை—மறைப்பு. நாம் வலையையுண்டுபண்ணி நம்மை மறைத்துக் கொள்கிருேம். தன்கரத்தால் வாளையெடுத்துத் தன்வயிற்றை அறுப்பதுபோல் நமது அக்ஞானம் நம்மை மறைக்கிறது. என்ன அநியாயம்! மனிதன்மனதில் எத்தனையோ பொருள்கள் வந்து தொல்லை கொடுக்கின்றன. தலைவராகவேண்டும், வியாபாரஞ்செய்ய வேண்டும், இஞ்ஜினியராக வேண்டும், டாக்டராகவேண்டும், இன்னும் பிற. இவைகள் நிறைந்த சித்தத்தில் உறுதியுண்டாகிறதில்லை.

மனிதனுடைய மனதில் கவலை அதிகரிக்கிறபோது சோகம் உண்டாகிறது. பதவிமோகம், சம்சாரச் சிந்தனை யாருக்கு

இல்லையோ அவனுக்குச்சோகம் எங்ஙனமுண்டாகும்? ஆன்ம நிஷ்டனுக்குக் கவலைவருவதற்குக் காரணமில்லை. ''தரதி பாப்மானம்''. கவலைக்குக் காரணம் பாவம். துன்பம் பாவத்தின் அடையாளம். யார் மிகுதியாகக்கவலைப் படுகிருரோ அவரது உள்ளத்தில் பாவவாசனை மிகுதியாக இருக்கிறது. பாவத்தை மூன்றுவிதமாக அறியவேண்டும். மனதில் வாசனையிருப்பது, அதனுல் கவலைப்படுவது, மீண்டும் பாவத்தைச் செய்வது—இது ஒருவிதம்.

ஈண்டு தரதிபாப்மானம்—பாவ புண்ணியமிரண்டையும் கொள்ளவேண்டும். இரண்டும் பந்தனத்திற்கு நிமித்தம். எனவே தரதிபாப்மானம் என்பதற்குப் பொருள்—பிரஹ்ம ஞானியிவையிரண்டிலுமிருந்து விடுதலையடைகிருன். பாவம் இருவடிவமாக இருக்கிறது—தருமம், அதர்மம். இவையிரண்டும் கருமபந்தனம். இப்பந்தனத்திலிருந்து கரையேறுகிருன் என்று ஆசாரியசங்கரர் அருளுகின்ருர். தருமத்திலும் பாவமுண்டாகிறது. எங்ஙனம் சுவர்க்கநிமித்த வேள்வியில் பசுஹிம்சை செய்தாலும் பாவமில்லையோ அங்ஙனம் ஓர்ந்து பார்த்தால் சிறிது தருமத்திலும் பாவம் உண்டாகும்.

ஒருதடவை ஒருகிராமத்தில் பிரார்த்தனை நடந்து கொண்டிருந்தது. நூற்றுக் கணக்கான அடியவர்கள் அங்கு குழுமினர். அக்கிராமத்திலுள்ள ஒரு சட்டைதைப்பவன் ஓடி வந்து கரபாத்திரிசுவாமிகளிடம் அழுதான். அவர் காரணம் வினவினுர். அவன் சுவாமின்! நீங்கள் மிக மகிழ்ச்சியுடன் விழாக்கொண்டாடுகிறீர்கள், நான் கிராமத்தை விட்டு வெளியேறப்போகிறேன் என்ருன். மகாத்மா—ஏன் என்ருர். துணிதைப்பவன்—சுவாமின்! விழாவிற்கு வீட்டுவாரியாக நூறு நூறு ரூபாய் இக்கிராமத்து ஜமீந்தார் வசூல்பண்ணுகின்ருர். என்னுல் கொடுக்க இயலாது. ஆனுல் நீங்கள் வெளியேறினதும் என்னைச் செருப்பைக்கழற்றி அடிப்பாரென்ருன்.

மகாத்மா—ஒருதனவானை யழைத்தார். அவன் வந்தான். வணங்கினன். மகாத்மா—அப்பா! இப்பிரார்த்தனையில் எவ்வளவு பணஞ்செலவாகுமோ அத்தொகையை நீயேகொடுத்து விடு என்று சொல்லி ஜமீந்தாரைக் கூப்பிட்டு கிராமத்தில் யாரிடமும் வசூல் பண்ணுதேயென்று மொழிந்தார். எவ்வளவு சாவதானமாக இருந்தாலும் யாகஞ்செய்யும் போதும், சமையல் பண்ணும் போதும், உறங்கும் போதும் எப்படியாயினும் மெள்ள பாவம் நுழைந்துவிடும். புண்ணியத்தில் பாவம் ஒட்டிக்கொண்டே இருக்கும்.

4 3

சர்வாரம்பாஹிதோஷேண தூமேந அக்னி ரிவாவிருதா:! கீதை. எங்ஙனம் நெருப்பு எரியும்போது புகை அவசியமுண்டாகுமோ அங்ஙனம் எந்தக்கருமத்தைச் செய்தாலும் சிறிது குற்றம் அவசியம் நேரும். வேதாந்த விக்ஞானம் கப்பல்போல் மக்களைப் புண்ணிய பாவத்திலிருந்து கரையேற்றுகிறது.

குஹாக்கிரந்திப்யோ விமுக்தோ அமிர்தோ பவதி—அவித்தையும் வாசனையும் இவைகளின் கூட்டமும், ஹிருதய கிரந்தியெனப்படும்! இது வெறும் அக்ஞான மாத்திரம். ஆத்ம ஞானத்தால் அக்ஞானம் அகன்று விடுகிறது. காமவாசனை முடிச்சு நீங்கிவிடுகின்றது. இதிலிருந்துவிடுபட்டு மனிதன் அமிர்த நிலையையடைகிருன். தன்னை பிரஹ்மமென்று தெரிந்துகொள்கிருன். தெரிந்துவிடுவதால் அழியாத பெற்றியை எய்துகிருன். ம. 9

தொடர்ச்சி

இக்கண்டத்தின் ஒன்பதாவது மந்திரத்தில் வித்தையை முடித்திருக்கிருர். உபநிஷத்தின் ஆரம்பத்தில் எதையறிந்தால் எல்லாம் அறிந்ததாகின்றதோ அது எது என்று கேட்கப் பெற்றது. அதற்கு அன்னிய உபநிஷத்தில் மண் திருஷ்டாந்தமூலமாக அறிவிக்கப் பெற்றது. அதுபோல்

பிரஹ்மம் ஒன்றைத் தெரிந்து கொண்டால் சகலத்தையும் தெரிந்து கொள்ளலாம் என்று உணர்த்தியிருக்கிறது.

அகம் இதம் இவையிரண்டும் ஒன்ருகிவிடுகின்றன. இதனுல் அறியாமை ஒழிந்து விடுகிறது. இவ்விஷயத்தில்
4
பிரமாணம் என்னே? மகாபாஷ்யகாரர்—கிம் போ: ஸ்லோக : பிரமாணம்? பிரமேயத்தை எதைக்கொண்டு நாம் அறிய விரும்புகிரேமோ அது பிரமாணம். உருவவிஷயத்தில் கண் பிரமாணம். உறக்கம் கனவுஇவைகளுக்கு சாக்ஷிபிரமாணம். நான் கனவுகண்டேன் என்னும்விஷயத்தில் நான்பிரமாணம். இம்மாதிரி ஜீவ பிரஹ்ம ஐக்யத்தில் சுருதி பிரமாணம். இதைப்பற்றி சுருதி விரிவாகக் கூறியிருக்கிறது.

பிரஹ்ம ஞானத்தில் வேதம் பிரமாணமாயின் வேதம் படிக்கின்ற அனேவருக்கும் இந்த ஞானம் ஏன் உண்டாக வில்லே? எல்லோரும் வேதம் ஓதத்தானே செய்கிருர்கள்? பதில்—வேதத்தில் இருவகை ஞானம் வருகின்றது—பர ஞானம், அபரஞானம். எதைச்செய்யவேண்டும் எதைச் செய்யக்கூடாது என்று சொல்லும் ஞானம் அபரஞானம். இதுபேதஞானம். ஆனுல் பிரஹ்மதத்துவத்தைப் போதிக்கும் விஷயத்தில் பரவித்தை பிரமாணம்.

ஆன்மாவை யறிவிக்கும் விஷயத்தில் ஞாபகப் பிரமாணம் வேண்டும். இதனுல் உபநிஷத்தில் வெவ்வேறு விதமாகப் போதிக்கபடுகின்றன. பரஞானத்திற்காக பல சாதனங்கள் பகரப் பெற்றிருக்கின்றன. முடிவில்—தரதிசோகம் ஆத்ம வித்'' என்று அருளியிருக்கிறது.

இம்மாதிரி யிவ்வுபநிஷத்தில் விதேக முக்திக்கு விசேஷம் கொடுக்க வில்லே. இன்று உணவை உண்டு நாளேக்குப் பசிபோகட்டும் என்று எண்ணுவது மதிஹீனம். ஆத்மாவை யிங்குதியானஞ் செய்துவிட்டு இறந்த பிறகு முக்தியை அடை வோம் என்று எண்ணுவது நியாயமாகாது. 'பிரஹ்மவித்

பிரஹ்மைவபவதி' உண்கிறபோதே பசிபோக வேண்டும். முக்தி இங்கேயே, வாழ்கையிலேயேகிடைக்க வேண்டும். மாண்ட பிறகல்ல. ஆத்மஞானத்திற்குப் பலன் இறந்த பின்னர் சுவர்க்கமோ, நரகமோ முக்தியோ அல்ல. வாழ்க்கையில் ஆனந்தமுண்டாகிறது அதுதான் ஆத்மஞானத்திற்குரிய பலன்.

அத்வைத் சம்பிரதாயத்தில் பிரஹ்மஞானத்திற்குப் பிறகு சம்சாரத்திற்கு சத்வமும் மகத்வமுமில்லை. எனவே இவ்வுபநிஷத்தில் இஹைவ என்று பலமுறை வந்திருக்கிறது. ''அவித்யாகிரந்தி விகிரதி இஹ சோம்ய'' என்ற வாக்கியத்தாலும் உணரலாம். இம்மாதிரி இந்த உபநிஷத்து சத்ய முக்தியை உணர்த்தும். இவ்வான்மா — உலகப்பொருள் குடம், சட்டி, படம், வீடு வாசல்போல் லௌகிகப்பொருளல்ல. பின்னை சாட்சிவடிவ பிரஹ்மமாகும். இந்த ஜீவன் பிரஹ்மமென்று இந்த உபநிஷத்தில் உரைக்கப்பெற்றிருக்கிறது.

ஈண்டு இப்பரவித்தைக்கு அதிகாரியார் என்று கூறப்படுகிறது. ''ததேதத் ரிசாப்யுக்தம்''[3] இவ்விஷயத்தை ரிக் வேதத்திலும் சொல்லியிருக்கிறது. ரிக்வேதத்திலுள்ள மந்திரம்—

ரிசோ[1] அக்ஷரே பரமே வ்யோமந்<br>
யஸ்மிந்தேவா[3] அதிவிஸ்வே[4] நிஷேது[3] : !<br>
யஸ்தந்ந[3] வேத கிமுரிசா[1] கரிஷ்யதி<br>
ய இத்[3] தத்விது : த இமே சமாஸதே !! ரி.வே.

இ—ள்

நாசமில்லாத பரமாத்மாவில் அதிதெய்வங்கள் லீனமாகி விடுகின்றன. அந்தபரமாத்மாவை எவன் அறிகிறதில்லையோ அவன்கற்ற கல்வி அவனுக்கு என்ன நலத்தைச்

செய்யப் போகிறது? அவன் நிரம்பப் படித்தானே அந்தப் படிப்பினுல் என்ன லாபம்? ஒரு பயனுமறிந்திலேனே யென்ற படி. இத்தகைய உபநிஷத்திற்கு அதிகாரி யார் என்பதை யினிவரும் மந்திரத்தில் மொழியப்படுகிறது.

10—வது மந்திரம்

கிரியா வந்த : ஸுரோத்திரியா பிரஹ்மநிஷ்டா:
4
சுவயம் ஜுஹ்றவத: ஏகரிஷம் சிரத்தயந்த : !
3
தேஷாமேவ ஏஷாம் பிரஹ்ம வித்யாம் வதேத
4
சிரோ விரதம் விதிவத் ளயஸ்து சீர்ணம் ம. 10

இ—ள்

கிரியைகளையுடைய அதிகாரியானவனும் சுரோத்திரியனும், பிரஹ்ம நிஷ்டனும், தானுக ஏகரிஷியென்னும் அக்னியில் ஓமம் செய்பவனும், முறைப்படி எவன் சிரோ விரதத்தைச் செய்துவந்திருக்கிருனே, அவனுக்கு இந்த பிரஹ்மவித்தையை உபதேசஞ்செய்யவேண்டும்.

கிரியாவந்த : சுரோத்திரியா பிரஹ்மநிஷ்டா :— வேதத்தில் இருபாகங்கள் உள்ளன. அவையிரண்டிலும் முற்பகுதியை எவன் குருவாயிலாகக் கற்றிருக்கிருனே, உபநிஷத்து பாகங்களை யோதியிருக்கிருனே பரஞானமும் யாருக்கு இருக்குமோ அவன் அதிகாரி. அவன் கிரியா சீலனுக இருக்கவேண்டும். கிரியை—வேதாந்தத்தில் விளம்பிய வினைகள். நிஷ்காம கருமம் யோகம், தவம், தருமம் இவைகளை எவன் நன்கு செய்திருக்கிருனே, அவன் கிரியாவான். கிரியை — நல்வினை.

பிரஹ்ம நிஷ்டா :- பிரஹ்மம்—வேதம். வேதத்தில் நிஷ்டை வேண்டும். நிஷ்டை — பூர்ணவிசுவாசம். பிரஹ்ம நிஷ்டை — பிரஹ்மம்—பரமாத்மா. அதில் நிஷ்டைவேண்டும். பிரஹ்ம நிஷ்டை யெவ்வாறு உண்டாகும்? ஸ்வயம்

ஜுஹ்வத: ஏகரிஷிம்—ஏகரிஷியினிடத்தில் நம்பிக்கை வை. தானுகக்கடமைகளைச் செய். கடமைகள் பரஞானத்திற்கும் அபரஞானத்திற்கும் பரமசாதனமாகும். தெய்வகாரியங்களை நாமே செய்யவேண்டும். பிறரைக் கொண்டுசெய்யக்கூடாது. குளிக்கவேண்டுமானுல் நாமே குளிக்கிரோம், உண்ண வேண்டுமானுல் நாமே யுண்கிரேும், உடுத்த வேண்டுமானுல் நாமே உடுத்துகிரேும், உறங்கவேண்டுமானுல் நாமே உறங்குகிரேும். அதுபோல் இறைவழிபாடு குருவழிபாடு நாம் தானுகவே செய்யவேண்டும்.

பிணி யாருக்கு இருக்கிறதோ அவர்தானே மருந்து உண்ண வேண்டும். மலஜலம் தானுகத்தானே கழிக்க வேண்டும். அங்ஙனம் இருப்ப இறைவழிபாடு குருவழிபாடு மட்டும் பிற ரைக் கொண்டு எங்ஙனம் செய்வது? இந்த வேள்வி அந்தணர்களை பிரதிநிதியாகக்கொண்டு செய்யக்கூடாது. செய்யவும் கூடாது. கடமைகளை நாமே செய்ய வேண்டும். யாருக்குச் செய்ய வேண்டும்? ஏகரிஷிம், ஏகரிஷி—அக்கினி. அதில் அவனம் பண்ண வேண்டும் அவனம் எவ்வாறு செய்ய
4
வேண்டும்? 'சிரத்தயந்த :' நம்பிக்கையோடு.

"நம்பிக்கையோடு நலம் பெறச்செய்தால்
தும்பிக்கையான் நமக்குத்துணை புரிவானே." சமயோசித மாலை. தும்பிக்கையான்=கணபதி. மற்றவை வெளி. இவ்வுலகில் உங்களுக்குப்பிரியமான பொருள்எது? நெய்யும் தேனும். மனதிலுள்ள அன்புதான் நெய்யும் தேனும். தேவதைகள் நெய்யில்லாமல் உணவு உண்ண மாட்டார்கள். "நெய்யில்லா உண்டி பாழ்" ஔவையார். நெய்யில்லாத உணவு நீரசம் எனப்படும். இல்லத்திலுள்ள நெய் அவனத்திற்காக. வெளியுலகத்தில் அவனஞ் செய்யும் போது இம்சையுண்டாகிறது. இதயத்தில் ஓமம் செய்யும்போது இம்சை நீங்குகிறது.

அவனப் பொருள் அன்பு. உள்ளத்தில் ஓமம் எவ்வாறு செய்யவேண்டும்? ஈஸ்வராய ஸ்வாஹா. இதயத்திலிருக்கின்ற இனிய ஸ்நேகத்தை இறைவனுக்கு அர்ப்பணஞ்செய். ஆன்மாவின் கண் அன்புவை. மிஞ்சியிருக்கிற அவித்தையை எஞ்சியிருக்கிற ஆன்மரூப நெருப்பில் அவனஞ் செய்.

பிரஹ்மாக்நௌ பிரஹ்மணாஹுதம் பிரஹ்மைவதேந கந்தவ்யம் கீதை. பிரஹ்மம்தான் நெருப்பு, பிரஹ்மம்யாகஞ் செய்பவன். இந்த யாகத்தால் இறைவனை அடைகிறுன் என்பது கீதையின் பொருள். ஏகரிஷிம்—இது நெருப்பு. குருநாதன். அதிகாரி, நெருப்புக்கும். குருவுக்கும், இறைவனுக்கும், தருமத்திற்கும் தன்னை அர்ப்பணஞ் செய்ய வேண்டும். ''தத்குருஷ்வ மதர்ப்பணம்'' கீதை. நான் என்பதைத்தனக்குக்கொடுத்துவிடு என்று தாமோதரன் தனஞ் ஜயனுக்குச் சாற்றுகிறுன்.

3

தேஷாம் ஏவ ஏஷாம் பிரஹ்ம வித்யாம் வதேத—எவன் அபரவித்தையை நன்ருகக் கற்றிருக்கிருனோ, சுரோத்திரியனுக இருக்கிருனோ, எவன் அபரவித்தையில் கூறப்பட்ட கருமம், யோகம், வழிபாடு, ஆசரணம் இவைகளையுடையவனுக இருக்கிருனோ அவன் கிரியா வந்த : கிரியையுடையவன். வேதத்தில் நிஷ்டை யுடையவனுக இருக்க வேண்டும். மேலும் ஏகரிஷிம் ஸ்வயம் ஜுஹ்வத:—ஈண்டு அக்னி—குரு. ரிஷ — ஞானத். ஞானவான் ரிஷியெனப்படுவான். குருநாதனுக்குத்தன்னை அர்ப்பணஞ் செய்ய வேண்டும். இத்தகையமனிதன் இந்நூலுக்கு அதிகாரி.

சிரோவிரதம் விதிவத் யைஸ்து சீர்ணம். இவ்வுபநிஷத்து அதர்வ வேத்திலுள்ளது. அதர்வவேதத்தை ஓதுபவர்கள் அதர்வவேத அநுயாயிகள் எனப்படுவர். இவர்கள் விசேஷ யாகஞ்செய்யும்போது நெருப்புச்சட்டியைத் தலைமிசை சுமப்பர். வேதத்தில் அவ்வாறு விதித்திருக்கிறது.

இதற்குப் பெயர் சிரோ விரதம். பண்டைய காலத்தில் அந்தணர்கள் தங்கள் அக்கினி ஹோத்திரத்திற்காக பிராஜாபத்ய என்னும் நெருப்பைத் தன்னோடு வைத்திருந்தனர். அரசனுடைய அரண்மனைக்கு மகான்கள் வந்தால் வேந்தன் வேதியரை அழைத்து நெருப்புச் சட்டியோடு சென்று மகான்களை வரவேற்பார்.

ஈண்டு சிரோவிரதத்திற்குப் பொருள்—வேதத்தில் வருகின்ற விரதத்தை நன்றாகப் பாலனஞ்செய்வது. சிரோவிரதம்—சிரோவிரதி, சந்நியாசி. இந்நூலுக்கு முண்டக உபநிஷத்தென்று பெயர். எனவே முண்டனஞ் செய்த சந்நியாசியென்று பொருள்கொள்வது நலம். வெளியில் உள்ள விலாசங்களை விட்டுவிடுவது. விலாசம்-போகவிலாசம். இவைகளை விட்டுவிடுபவன் சிரோவிரதி. இவனே இப்பிரஹ்மவித்தைக்கு விசேஷ அதிகாரி.

சிரோவிரதம்—ஞானமார்க்கம் பலஹீனனுக்கு அல்ல. இவ்வழி வீரனுக்கு. தலையைக் கொடுக்கவும் எவன் தயாராக இருக்கிறானோ அவனே சிறந்த அதிகாரி. குருவிற்காக எவன் சிரசையும்தரத்தயாராகஇருக்கிறானோ அவனுக்குரிய மார்க்கம் இது. தத்யங் ஆதர்வண—ததீச்சீரிஷியினிடத்தில் அஸ்வினிகுமாரர்கள் இவ்வித்தையைக்கற்கச் சென்றனர். ரிஷி! அஸ்வினிகுமாரர்களே! இந்திரன் என்னிடம் நீர் யாருக்காவது இந்த பிரஹ்ம வித்தையை உபதேசிப்பீரானால் நான் உமதுசிரசைக்கொய்து விடுவேனென்றான். இதனால் குமாரர்களே உங்களுக்கு உபதேசிக்க மாட்டேன் என்றார். அஸ்வினிகுமாரர்கள்—உம்முடையதலையை எடுத்து விட்டு அதில் குதிரைத் தலையை ஒட்டிவிடுகிறோம் அதிலிருந்து கொண்டு உபதேசஞ் செய்யும் என்றனர். சதகிருத்து வந்து குதிரைத் தலையை அறுத்துவிடுவானானால் மீண்டும் உம்முடைய சிரசை உமது கழுத்தில் ஒட்டிவிடுகிறோம் என்றனர்.

ரிஷி ஒப்புக் கொண்டார். அவருடைய சிரசை அறுத்து அப்புறப் படுத்தினர். குதிரைத்தலையை யொட்டினர். அக் குதிரைத்தலையிலிருந்து உபதேசம் பண்ணினதால் அவருக்கு அஸ்வசிரா என்று பெயர் வந்தது. இந்திரன் வந்தான். சிரசை அறுத்தான். அவன் சென்றதும் அஸ்வினிகுமாரர்கள் அவர்தலையை ஒட்டினர். இம்மாதிரி குருநாதனுக்கு சிரசு அறுந்துவிட்டால் தன் சிரசை குருநாதனுக்குக் கொடுக்க வேண்டும். சிரசைக் கொடுக்க வேண்டும் என்பதற்கு அருத்தம்—தேகத்திலுள்ள பற்றை விடுவதுதான்.

4

"தத் வித்தி பிரணிபாதேந பரிபிர்ஸ்நேந சேவயா" கீதை. குருநாதனுக்கு வணக்கஞ் செய்து, குருவிற்குப் பணிபுரிந்து, அடிக்கடிகேள்விகளைக் கேட்டு தத்துவஞானத்தைப் பெற வேண்டும் என்பது கீதையின் பொருள்.

சிரோவிரதம் விதிவத்யைஸ்து சீர்ணம். எவன் ஒருவன் நன்ருக அபிமானத்தை விட்டுவிட்டானே அவன் தத்வ ஞானத்திற்கு அதிகாரி. சிரசில் புத்தியிருக்கிறது. மனிதன் வேறு வேறு பொருள்களைத் தலையில் ஏற்றுகிருன். பொருள்கள் சிந்தனைகள். அன்னை, பிதா, சமுதாயம், நூலிலுள்ள வாசனை பெப்பம் சிரசில்தான் உட்கார்ந்திருக்கின்றன. இவை விக்ஷேபத்தின் விளைவால் உண்டாகின்றன.

யோகத்தின்வாயிலாக சமாதிகூடவேண்டுமானல் நிஸ்சிந்தனுக இருக்க வேண்டும். அஃதல்லாமல் உலகச் சிந்தனை யுதிக்குமானல் அது விக்ஷேபம் எனப்படும். தாம் விரும்பிய தெய்வத்தை நினைக்கும்போது வேறு சிந்தனை வந்தால் அதுவும் விக்ஷேபம். இம்மாதிரி வேதாந்த விசாரஞ் செய்யும்போது சமாதி கூடினலும், சகுணபிரஹ்மத்தை நினைத்தாலும் விக்ஷேபந்தான். இன்ன காரியத்தைச் செய்ய வேண்டுமென்று எண்ணிக்கொண்டிருக்கும்போது வேறு சிந்தனை வந்தால் அதுவும் விக்ஷேபந்தான்.. எனவே நூலிலுள்ள விசாரமனைத்தும் உத்தம அதிகாரிகளுக்காகத்தான்.

யாகம் பண்ணுபவன் சமாதியில் இருந்தால் யாகத்திற்குரியநேரம் வந்ததும் சமாதியை விட்டு யாகஞ்செய்ய வேண்டும். ஒருவன் பகவானுடைய பக்தியில் ஈடுபட்டிருக்கிறான். சந்தியாவந்தனஞ் செய்வதற்கு சமயம் வந்து விட்டது. அவன் கர்ம நிஷ்டனானல் பஜனையை விட்டு சந்தியாவந்தனஞ் செய்யவேண்டும். பக்தனானல் பஜனை பண்ண வேண்டும். நூல்களில் அதிகாரிக்குத்தக்கவாறு நியமங்கள் நியமிக்கப் பட்டிருக்கின்றன. ஆகவே எல்லோரும் தங்கள் நியமானுசாரமாக நடக்கவேண்டும். உன்னுடைய சிரசில் பலவித எண்ணங்கள் குழம்பிக் கொண்டிருக்கின்றன. அவைகளை உறுதியான விசாரஞ் செய்து தலையிலிருக்கின்ற சுமையை இறக்கு. யந்திரத்தைப்போல உன்தலையைச் சுற்ற விடாதே. தலைசுற்றினல் ஞாலம் சுற்றும். ஞாலம் உலகம்.

எதையாவது ஒன்றை இருக்கப்பிடிக்கவேண்டும். ''சிக்கனப்பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே'' திருவாசகம். உறுதியில்லாத மனம் ஊஞ்சல்போல் ஊசலாடும். முதற்கண் உறுதியைக் கடைப்பிடி. சம்சாரவாசனையை முற்றிலும் விட்டுவிடு. தூயமனத்தனயிரு. அங்ஙனமாயின் நீ அதிகாரியாகின்றாய். 10.

தொடர்ச்சி

உபநிஷத்தை முடிக்கும்பொருட்டு அனதிகாரியைக் குறிப்பிட்டு, அதன்பின்பு பிரஹ்மவித்தையின் ஆசானுக்கு வந்தனஞ் செய்கின்றார்.

11—வது மந்திரம்

3 3 1
ததேதத் சத்யம் ரிஷி : அங்கிரா : ப்ரோவாச
1 3
நைதத் அசீர்ண விரதோ அதீதே !
4 4
நம : பரமரிஷிப்யோ நம : பரமரிஷிப்ய : ம. 11

இ—ள்.

இந்த சத்யசொரூப ஆன்மாவை முன்னொரு காலத்தில் அங்கிரர் என்னும் ரிஷி உபதேசஞ்செய்தார். எவன் சிரோ விரதத்தை முறைப்படிகற்கவில்லையோ அவன் இவ்வுப நிஷத்திற்கு அதிகாரியாகான். பரமரிஷிகளுக்கு வணக்கம். பரமரிஷிகளுக்கு வந்தனம்.

தத் ஏதத் சத்யம்—இந்நூலின் முகப்பில் சௌனகர் சத்யத்தை எனக்கு உபதேசஞ்செய்யும் என்று கேட்டாரே அது தான் இந்த சத்யம். ஈண்டு சத்யம் என்றது ஞானத்தைக் குறிக்கும். எந்த ஞானத்தால் எல்லாவற்றையும் அறியலாகுமோ அந்த ஞானம்.

பிரஹ்மைவேதம் அமிர்தம் புரஸ்தாத் — இம்மந்திர முதலாக அங்கிரர் ஏனையவாக்கியங்களையும் மொழிந்திருக்கிறார். இடந்தோறும் உரைநடைகள் வேறுவிதமாகவும் காணப்படும். சில இடங்களில் சம்சாரம் க்ஷரம். பிரஹ்மம் அக்ஷரம். ஜகதீசுவரன் அக்ஷரத்தைப்பார்க்கிலும் மேலானவன் என்று மொழிந்திருக்கிறது. பரஅக்ஷரம் புருஷோத்தமன் என்றுங் கூறியிருக்கிறது. ஆண்டு அக்ஷர பிரஹ்மம் காரணவடிவமானதால் அது அபரபிரஹ்மம் எனப்படும். பரப்பிரஹ்மம் புருஷோத்தமன். இவ்வாறு பொருள் கொள்ளாவிடின் "அக்ஷராத் பரத : பர :" என்னும் வாக்கியத்திற்குப் பொருள்கொள்ள இயலாது. 'பரத : பர : ' அது தான் உண்மையான தத்வம். அதற்கு வேருக எது இருந்தாலும் பொய். எல்லாம் பொய்யே என்றபடி.

வேதத்தில் சில இடங்களில் உலகமும் சத்யம் என்று வந்திருக்கிறது— ''பிராணஸ்ய பிராண: மநசோ மந : என்றும், சத்யஸ்ய சத்யம் என்றும், சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வான்மதத்வம் சத்தியத்திற்கும் சத்யமென்று சௌனகர்க்குப் பதில் அளித்த அங்கிரர் பராத்பரசத்தியத்தை மொழிந்தார்.

ந எதத் அசீர்ண விரதோ அதீதே—எவன் அசீர்ண விரதனே, எவன் இவ்விரதத்தை முறைப்படி அனுஷ்டிக்க வில்லேயோ அவன் இதைக்கேட்க முடியாது.

நம : பரமரிஷிப்ய :- யார் பரம—மேலான ரிஷியோ அவர்க்கு நமஸ்காரம். ரிஷிகளில் பலவிதம். இக்காலத்தில் தங்களேயே ரிஷியென்று சாற்றுவாரும் உண்டு. ஞானம் கருப்பா?சிகப்பா? வேதம் என்னது என்று கூடத்தெரியாது அவர்களும் தங்களே ரிஷியென்று கூறுகிருர்கள். மறைகளில் எத்தனே மந்திரங்கள் இருக்கின்றனவோ அத்தனே மந்திரங் களுக்கும் ஒவ்வொருரிஷியுண்டு ரிஷியில்லாமல் மந்திரமில்லே.

காயத்திரி மந்திரத்திற்குரிய ரிஷி விஸ்வாமித்திரர். "ரிஷயோ" மந்த்ர திருஷ்டார:" வேதமந்திரத்தைப் பார்ப்ப வர்களுக்கு ரிஷியென்று பெயர். இவர்களில் பரமரிஷி, தேவரிஷி, மகரிஷி, இராஜரிஷி, காண்டரிஷி, சுருதரிஷி, பிரஹ்மரிஷி, இம்மாதிரி ஏழுவிதம். இந்த மந்திரத்தில் பரம ரிஷிக்கு வணக்கமென்று மொழிந்திருக்கிறது. அயன் முதல் நமது குருபரியந்தம் யாரெல்லாம்தத்வஞானத்தை உபதேசஞ் செய்திருக்கிருர்களோ அவர்களனேவரும் பரமரிஷிகள் எனப் படுவர். ஏனெனின் இந்தஞானம் சம்பிரதாய மில்லாமல் வரமாட்டாது.

அத்வைத சம்பிரதாயமும் விசித்திரமானது. இதில் ஒன்று சிஷ்ய பரம்பரை, மற்ருென்று புத்திர பரம்பரை. சங்கரர்மதத்தில் — ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளுக்குக் குரு கோவிந்தபாதர். அவருக்குக் குரு கௌடபாதர். அவர்க்குக் குருசுகப்பிரஹ்மம் இதுவரை குருசிஷ்யபரம்பரை. இவர்கள னேவரும் துறவிகள். துறவிகள் பரம்பரையென்பது குறிப்பு. சுகதேவருடைய பிதாவியாசர். வியாசருடையதந்தை பரா சரர், பராசரர்தந்தை சக்தி, சக்தியின் தந்தை வசிட்டர். வசிட்டரின் தந்தை நான்முகன், நான்முகன் தந்தை நாரணன் இது புத்திரபரம்பரை.

இதில் ஹரிநீங்கலாக அயன் முதல் வியாசர்வரை எல்லோரும் கிரகஸ்த்தர்கள். ஒரு ஆற்றில் இருவாய்க்கால் போல புத்ரபரம்பரை, சிஷ்ய பரம்பரை. இல்லறத்தவராயிருந்தாலும் சரி துறவறத்தவராயிருந்தாலுஞ்சரி ஞானம் யாரிடமிருக்குமோ அவரே யுயர்ந்தவர். உலகத்தில் உயர்ந்தவன் உதயவன். உடலில் உயர்ந்தது உணர்வு. ''ஞானம் பரம் கீயதே'' பாகவதம். அறிவு மேலாகக் கருதப் படுகிறது. சம்பிரதாயம்—சம்யக் சம்பிரதானம். குருநாதன் மாணுக்கனுக்கு நன்ருக ஞானத்தைத்தானம் பண்ணினுர். எங்ஙனம் அரசன் அந்தணனுக்குக் கோதானம் செய்கிருனென்றபடி. குருபரன் தனது வாயால் இதயத்திலிருக்கும் ஞானத்தைத் தானஞ்செய்கிருர்.

பஞ்சதசியில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் விலக்ஷண சம்பந்தத்தைப்பற்றி வர்ணனை வந்திருக்கிறது. சிருஷ்டி இறைவனுக்குப்புத்ரி, அப்பெண்ணை ஜீவனுக்கு விவாகம் பண்ணியிருக்கிறது. ''ஈசசிருஷ்டி ஜீவபோக்யம்'' என்பது போல பிரஹ்ம வித்தை குரு நாதரின் புதல்வி. அது சிஷ்யனுக்குக் கிடைக்கிறது. மனைவி கணவனுக்கு இன்பந்தருவது போல் இவ்வித்தை சிஷ்யனுடைய துன்பத்தைப் போக்கி யின்பத்தை ஈகிறது. எங்ஙனம் தந்தை தன்மகளைக் கொடுக்கும் போது இந்த மாப்பிள்ளை யோக்கியமுடையவனு? அயோக்கியனு? என்று பார்ப்பதுபோல் குருநாதனும் பிரஹ்ம வித்தையை அளிக்கிறபோது இம்மாணுக்கன் நல்லவனு? அஃதல்லவனு? என்று விசாரஞ் செய்கின்ருர். இவ்வித்தையை வைத்துக் காப்பாற்றுவானு? மாட்டானு? என்று சிந்தனை செய்து கொடுப்பார்.

நம:பரமரிஷிப்ய:— அபரவித்தைக்குரியவர் ரிஷி. பர வித்தைக்குரியவர் பரமரிஷி. குருநாதன் சீடனுடையகாதில் ஞானத்தை உபதேசிக்கிருர். அது காதுவாயிலாக மெள்ள உள்ளத்தில் நுழைகிறது. அந்தக்கரணத்திற்கு அதி

தேவதை பிரஹ்மதேவன். அயன் முதல் நமது குருபரன் வரை பிரஹ்ம வித்தைக்குச் சம்பிரதான பரம்பரை வந்திருக் கிறது. அந்த எல்லாகுருமார்களும் பரமரிஷிகள். அவர்கள் அனைவர்க்கும் வணக்கம்.

மூன்றுவது முண்டகத்தின் மூன்றுவது கண்டம் முடி வடைந்தது. மூன்றுவது முண்டகம் முற்றிற்று. முண்ட கோபநிஷத்து நிறைவேறியது.

ஓம் ஃபவசங்கர தேசிகமே சரணம்.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 2 | வேதாந்தகலை | வேதாந்தக்கலை |
| 2 | 7,8 | எந்தகலைகள் | எந்தக்கலைகள் |
| ,, | 4,5 | கோபீ,லோபீ,ராகீ. | கோபி,லோபி,ராகி. |
| 3 | 3 | தொலையாதத் | தொலையாத |
| 4 | 9 | பூச்சித் | பூச்சி |
| 5 | 12 | அக்னிசட்டியை | அக்னிச்சட்டியை |
| 7 | 6 | நூர்பிர் | நூபிர் |
| ,, | 8 | சாந்தி | சாந்தி : |
| ,, | 2 | பிருஹஸ்பதிர் | பிரஹஸ்பதிர் |
| 8 | 3 | ஞானகிரணங்களை | ஞானக்கிரணங்களை |
| ,, | 6 | கர்தா | கர்த்தா |
| 9 | 4 | அசுத்தத்தை | அசுத்தத்தைச் |
| ,, | 9 | இருக்கிறதுதென்பது | இருக்கிறதென்பது |
| 10 | 3 | சுயமபூ | சுயம்பூ |
| ,, | 16 | ஓய்வுப்பெற்ற | ஓய்வுபெற்ற |
| ,, | 6 | மலதுவாரத்திற்கு | மலத்துவாரத்திற்கு |
| ,, | 7 | இத்திசை முகன் | இத்திசைமுகன் |
| ,, | 8 | இந்ததத்வ | இந்தத்தத்வ |
| 12 | 10 | பிரதிஷட்டாம் | பிரதிஷ்டாம் |
| 13 | 9 | அர்தம் | அர்த்தம் |
| 14 | 1 | எனக்கு | தனக்கு |
| 15 | 2 | பொய்சாட்சி, பொய் சாட்சிப் | பொய்ச்சாட்சி, பொய்ச் சாட்சி |
| ,, | 9 | சமுதாயத்திற்கு | சமுதாயத்திற்கும் |
| 16 | 11 | சிறந்ததென்றுங் | சிறந்ததென்றும் |
| ,, | 14 | இந்ததத்வஞானம் | இந்தத்தத்வஞானம் |
| ,, | 3 | அங்கிரர் இடஞ் சென்று | அங்கிரரிடஞ் சென்று |
| 18 | 1 | வைக்கப்பட்டத்தீபம் | வைக்கப்பட்டதீபம் |
| 22 | 15 | ஆசைக் கொள் | ஆசை கொள் |
| 26 | 3 | சர்க்கரைசத்து | சர்க்கரைச்சத்து |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 7 | தீர்வேன் | தீருவேன் |
| ,, | 10 | சத்யத்தை | சத்தியத்தை |
| 31 | 3 | தத்வத்தைசொல்லும் போது | தத்துவத்தைச் சொல்லும் போது |
| 34 | 9 | கருங்காலிகட்டையில் | கருங்காலிக்கட்டையில் |
| 35 | 13 | இந்தபரவித்தை | இந்தப்பரவித்தை |
| 38 | 4 | காலத்தை யெதிர்ப் பார்க்கவும் | காலத்தை யெதிர் பார்க்கவும் |
| 37 | 11 | அதிஷ்ட்டானத்தை | அதிஷ்டானத்தை |
| 38 | 7 | அதிஷ்ட்டான | அதிஷ்டான |
| 39 | 5 | கண்கண்டப் பலனை | கண்கண்டபலனை |
| 40 | 12 | பின்பும | பின்பும் |
| 40 | 5 | பிரஹ்மம் மென்று | பிரஹ்மமென்று |
| 45 | 10 | மூழ்கின்ருன் | மூழ்குகின்ருன் |
| ,, | 13 | காரீய | காரிய |
| 46 | 2 | எல்லாவற்றிர்க்கும் | எல்லாவற்றிற்கும் |
| 47 | 12 | ஆலயத்தில் | வாலயத்தில் |
| 48 | 2 | செய்துக்காப்பாற்றும் | செய்துகாப்பாற்றும் |
| ,, | 5 | செயது | செய்து |
| ,, | 9 | மத்ய | மத்திய |
| ,, | 11 | நறங்களும் | நிறங்களும் |
| 49 | 10 | தெரியாதத்தன்மை | தெரியாத்தன்மை |
| ,, | 13 | சூத்ரரா? | சூத்திரரா? |
| ,, | 17 | வர்ணனைச் செய்ய | வர்ணனை செய்ய |
| 51 | 7 | நாம | நாம் |
| ,, | 12 | காணீ | காணி |
| 55 | 6 | ஒட்டை | ஓட்டை |
| ,, | 8 | ஒட்டையை | ஓட்டையை |
| 56 | 2 | நித்யம் | நித்தியம் |
| 57 | 2 | சந்த்ரன் | சந்திரன் |
| ,, | 4 | விஸ்த்தாரத்திற்கு | விஸ்தாரத்திற்கு |
| 58 | 9 | அதிஷ்ட்டானம் | அதிஷ்டானம் |
| 59 | 4 | வுண்டான | உண்டான |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 60 | 2 | உலகம | உலகம் |
| ,, | 5 | சமுத்ரம் | சமுத்திரம் |
| 61 | 13 | கல்ப்பியம் | கல்பியம் |
| ,, | 4 | மெழுகுவதியாகத் | மெழுகுவத்தியாகக் |
| ,, | 3 | காணப்படுகின்றன. | காணப்படுகின்றது. |
| 62 | 6 | அப்படிதயன் | அப்படித்தான் |
| ,, | 9 | எவ்வவு | எவ்வளவு |
| 63 | 15 | பார்கிலும் | பார்க்கிலும் |
| ,, | 1 | எந்தபொருள் | எந்தப்பொருள் |
| 66 | 2 | லையில்லாத | நிலையில்லாத |
| ,, | 9 | அநுபவபிரமாணம் | அநுப்வப்பிரமாணம் |
| 68 | 3 | கிறிஸ்தவர்கள் | கிறிஸ்துவர்கள் |
| 75 | 9 | செய்கின்றன | செய்கின்றது |
| 78 | 2 | எல்லாபொருளை | எல்லாப்பொருளை |
| 80 | 1 | ரதீரா : | தீரா : |
| 83 | 7 | தார்ஷ்ட்டாந்த | தார்ஷ்டாந்த |
| 84 | 1 | திருஷ்ட்டாந்த | திருஷ்டாந்த |
| ,, | ,,4 | திருஷ்ட்டாந்த | திருஷ்டாந்த |
| 85 | 4 | சேஷ்ட்டைகளைச் | சேஷ்டைகளைச் |
| ,, | 13 | பலவந்தபடுத்தினல் | பலவந்தப்படுத்தினன் |
| 87 | 11 | சுவாமியை | சுவாமியைத் |
| 88 | 14 | சமஸ்க்காரமும் | சமஸ்காரமும் |
| 89 | 6 | வந்திருக்கிறன | வந்திருக்கின்றன |
| ,, | 6 | மாம்சம் | மாமிசம் |
| ,, | 3 | சக்தி | சக்திப் |
| 90 | 1 | அனுபவ | அனுபவப் |
| 93 | 5 | போகும்இடம்வரை | போகுமிடம்வரை |
| 95 | 10 | பிராணனலிருந்து | பிராணனிலிருந்து |
| 96 | 5 | நிலைம்சித் | நிலைசித் |
| 98 | 5 | சைதன்ய | சைதன்யப் |
| 100 | 13 | இருக்கிறதனல் | இருக்கிறதினல் |
| ,, | 9 | கொண்டுப் | கொண்டு |
| 102 | 11 | நெருப்புக் | நெருப்பு |
| 104 | 10 | பிடிவாத | பிடிவாதக் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 105 | 5 | அக்குழந்தையழத்து வங்கியது | அக்குழந்தை அழத் துவங்கியது |
| ,, | 14 | தேசமென்னுந் | தேசமென்னும் |
| 106 | 2 | அவர்களுக்குதவம் | அவர்களுக்குத்தவம் |
| ,, | 4 | இவர்களுக்குதவம் | இவர்களுக்குத்தவம் |
| ,, | 14 | உலகவடிவமாக | உலகவடிவமாகத் |
| 107 | 2 | அன்னம | அன்னம் |
| 108 | 9 | தேரன்றியது | தோன்றியது |
| 109 | 8 | சாஸ்த்ர | சாஸ்த்திர |
| 110 | 3 | உலகம | உலகம் |
| ,, | 10 | திடீரென | திடீரெனக் |
| 111 | 6 | எந்த கருமத்தை | எந்தக்கருமத்தை |
| 112 | 3 | கார்த்தா | கர்த்தா |
| ,, | 2 | சந்தியா வ்ந்தனம் | சந்தியாவந்தனம் |
| ,, | 10 | அடக்கிசெய்ய | அடக்கிச்செய்ய |
| 113 | 13 | அவன்,எனப்படுவான் | அவர், எனப்படுவார் |
| ,, | 12 | அவனுக்குச் | அவருக்குச் |
| 114 | 2 | மனதை | மனதைச் |
| 117 | 12 | சங்ராந்தியில் | சங்கிராந்தியில் |
| 118 | 4 | அந்தபுண்ணியத்தை | அந்தப்புண்ணியத்தை |
| ,, | ,, | இந்த தவறான | இந்தத் தவறான |
| 120 | 1 | இந்தகொழுந்துவிட்டு | இந்தக்கொழுந்துவிட்டு |
| ,, | 7 | அங்குக் | அங்கு |
| 122 | 2 | அஷ்ட்டா | அஷ்டா |
| ,, | 1 | நேஷ்ட்டா | நேஷ்டா |
| 122 | 7 | இந்ததோணி | இந்தத்தோணி |
| 123 | 3 | இந்தபதினெட்டு | இந்தப்பதினெட்டுப் |
| ,, | 5 | மிகதாழ்த்தப்பட்டது | மிகத்தாழ்த்தப்பட்டது |
| 125 | 5 | இருளைகடிகிறான் | இருளைக்கடிகிறான் |
| ,, | 11 | பற்றிதட்டுண்டு | பற்றித்தட்டுண்டு |
| 126 | 1 | க்ஷீணலோஸ்ச்யவந்தே | க்ஷீணலோகாஸ்ச்யவந்தே |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 127 | 4 | கருமகிடங்கில் | கருமக்கிடங்கில் |
| ,, | 6 | மாளிகைக்கடடியிருக்கிறேன் | மாளிகைகட்டியிருக்கிறேன் |
| 128 | 3 | நீராடி | நீராடிக் |
| ,, | 6 | தொலையாதப்பிணியில் | தொலையாதபிணியில் |
| ,, | 1 | விழுகிருன் | விழுகிருர்கள் |
| ,, | 8 | இவர்களுக்குபற்று | இவர்களுக்குப்பற்று |
| 132 | 10 | பிராமணர்கள் | பிராப்ணர்கள் |
| 136 | 12,13 | நிரணயம் | நிர்ணயம் |
| 137 | 6 | வைத்யர் | வைத்தியர் |
| 139 | 2 | முழுதையும் | முழுவதையும் |
| ,, | 3 | சத்யம் | சத்தியம் |
| ,, | 6 | சத்யம் | சத்தியம் |
| ,, | 8 | சத்யம் | சத்தியம் |
| 140 | 6 | சத்யம் | சத்தியம் |
| 142 | 1 | விஸ்வாமித்ரர் | விஸ்வர்மித்திரர் |
| ,, | 6 | அந்த | அந்தப் |
| ,, | 4 | கருதி | கருதித் |
| 145 | 8 | போருேம் | போகிருேம் |
| 146 | 4 | வைராக்கியத்தை | வைராக்கியத்தைப் |
| ,, | 5 | பார்கடலில் | பாற்கடலில் |
| 147 | 11 | வெளிபடுத்துகிருன் | வெளிப்படுத்துகிருன் |
| ,, | 7 | நோக்கிறதில்லை | நோக்குகிறதில்லை |
| 148 | 16 | வைராக்யத்தை | வைராக்கியத்தைப் |
| 152 | 1 | பதினெட்டு | பதினெட்டுக் |
| ,, | 6 | அரிசியை | அரிசியைச் |
| 153 | 4 | அதைதெரிவதற்கு | அதைத்தெரிவதற்கு |
| ,, | 8 | எனக்கு பூரண | எனக்குப்பூரண |
| 154 | 5 | கயிற்றரவும்போல | கயிற்றரவம்போல |
| ,, | 8 | குருவிற்காகதவம் | குருவிற்காகத்தவம் |
| 156 | 13 | தலைகனம் | தலைக்கனம் |
| 161 | 1 | இந்தபிரம்மச்சாரி | இந்தப்பிரம்மச்சாரி |
| ,, | 13 | மலமென்தள்ளிவிட்டு | மலமெனத்தள்ளிவிட்டு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 164 | 11 | மாநிலங்களுக்கு | மாநிலங்களுக்குப் |
| 164 | 10 | இவைகளைகுரு மூலமாக | இவைகளைக்குருமூலமாக |
| 166 | 8 | இந்தசாலை | இந்தச்சாலை |
| ,, | 13 | அந்ததத்துவத்தை | அந்தத்தத்துவத்தை |
| 167 | 1 | பிரஹ்மநிஷ்ட்டம் | பிரஹ்மநிஷ்டம் |
| ,, | 6 | தருமரைசோதிக்க | தருமரைச்சோதிக்க |
| ,, | 8 | பிரஹ்மநிஷ்ட்டை | பிரஹ்மநிஷ்டை |
| 170 | 11 | சிஷயன் | சிஷ்யன் |
| ,, | 15 | நன்றாகபுகவேண்டும் | நன்றாகப்புகவேண்டும் |
| 171 | 7 | குருவைதியானம் | குருவைத்தியானம் |
| 172 | 13 | குருவைதேகவான் | குருவைத்தேகவான் |
| 176 | 3 | நிலைக்குசொத்தாகும் | நிலைக்குச்சொத்தாகும் |
| 180 | 6 | மந்நிஷ்ட்டாபுத்தே : | மந்நிஷ்டாபுத்தே : |
| ,, | 9 | அப்ரதிஷ்ட்டாளுத் : | அப்ரதிஷ்டாளுத் |
| 185 | 1 | உலகப்பொருளை | உலகப்பொருளைக் |
| 186 | 9 | கிருஷ்ண,நாமத்தை | கிருஷ்ணன்,நாமத்தைச் |
| 188 | 11 | அகற்றுவதற்காக | அகற்றுவதற்காகப் |
| 189 | 9 | நிஷ்ட்டை | நிஷ்டை |
| 194 | 15 | நடத்துகிறுயென்றுக் | நடத்துகிறுயென்று |
| 198 | 10 | நிறைந்தச் | நிறைந்த |
| 200 | 9 | அரூவமா | அருவமா |
| ,, | 12 | இந்த, அதை | இந்தத், அதைத் |
| 201 | 4 | கூறிவிட்டுக் | கூறிவிட்டு |
| ,, | 14 | பக்தரிலிருந்து | பக்தர்களிலிருந்து |
| 202 | 2 | நிஜபிரகாசம் | நிஜப்பிரகாசம் |
| ,, | 11 | பிரத்யக்ஷத்திற்கு | பிரத்யக்ஷத்திற்குப் |
| ,, | 13 | இதை | இதைப் |
| 204 | 8 | எல்லா | எல்லாப் |
| 210 | 5 | எல்லா | எல்லாச் |
| ,, | 12 | அரவிந்தருக்கு | அரவிந்தருக்குக் |
| 214 | 1 | ஆண்ணென்றும் | ஆணென்றும் |
| 219 | 3 | விதூஷகன் உடன் | விதூஷகனுடன் |
| 228 | 1 | யோகபழக்கம் | யோகப்பழக்கம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 231 | 12 | வாலறுப்படு | வாலறுபட்டு |
| 234 | 2 | சுவாதந்தரம் | சுதந்திரம் |
| 235 | 6 | அளவுபொருள்களில் | அளவுப்பொருள்களில் |
| ,, | 4 | அவஸ்த்தையை | அவஸ்த்தையைக் |
| 236 | 5 | மேலானனர் | மேலானவர் |
| ,, | 8 | காரியக்காரண | காரியகாரண |
| 237 | 4 | சொரூலட்சணம் | சொரூபலட்சணம் |
| 238 | 10 | போலதோன்றுகின்றன | போலத்தோன்றுகின்றன |
| 240 | 2 | தனக்கெனகொள்ளும் | தனக்கெனக்கொள்ளும் |
| 244 | 12 | ஸாஸ்த்திரி | சாஸ்த்திரி |
| 245 | 3 | சொல்லி | சொல்லித் |
| 246 | 7 | யாத்திரிககள் | யாத்திரியர்கள் |
| 248 | 2 | பார்த்துதான் | பார்த்துத்தான் |
| 250 | 11 | வடிவதவம் | வடிவத்தவும் |
| ,, | 11 | சுவதந்திரமாக | சுதந்திரமாகத் |
| 251 | 10 | பொருள்கூட | பொருள்கூடத் |
| 252 | 4 | இருக்கமானல் | இருக்குமானல் |
| ,, | 1 | பூமியை | பூமியைப் |
| 254 | 7 | அதிஷ்ட்டரன | அதிஷ்டான |
| ,, | 11 | அந்தசொல் | அந்தச்சொல் |
| 255 | 2 | பிரளயத்திற்கு | பிரளயத்திற்குப் |
| 257 | 1 | இந்தபிராணனும் | இந்தப்பிராணனும் |
| ,, | 10 | அந்தபரமாத்மாவிலிருந்து | அந்தப்பரமாத்மாவிலிருந்து |
| ,, | 13 | தக்ஷிணயனம் | தக்ஷிணயணம் |
| 259 | 2 | இந்தபொறிகள் | இந்தப்பொறிகள் |
| ,, | 4 | ஏழும்எழும் | ஏழும்ஏழும் |
| ,, | 4 | நம்மை | நம்மைக் |
| 260 | 2 | வடிவுபாற்கடலையும் | வடிவப்பாற்கடலையும் |
| 262 | 5 | இந்தசகல | இந்தச்சகல |
| ,, | 7 | இதைதனது | இதைத்தனது |
| 263 | 6 | அந்தபரமாத்மாவை | அந்தப்பரமாத்மாவை |
| ,, | 14 | வணக்கத்தை | வணக்கத்தைத் |
| 265 | 3 | இதை | இதைக் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 267 | 1 | யெப்படி | யெப்படித் |
| ,, | 3 | எல்லா | எல்லாப் |
| 269 | 2 | அதிஷ்ட்டானத்தில் | அதிஷ்டானத்தில் |
| ,, | 8 | வாயிலாக | வாயிலாகப் |
| 270 | 4 | அதைகாலம்கட்டாது | அதைக்காலம்காட்டது |
| 272 | 7 | மமதை | மமதைக் |
| 273 | 2 | நக்ஷத்ரம் | நக்ஷத்திரம் |
| ,, | 15 | காஷ்ட்டத்தால் | காஷ்டத்தால் |
| 274 | 5 | வடிவசந்தரன் | வடிவச்சந்திரன் |
| ,, | 7 | தொடுத்து | தொடுத்துத் |
| ,, | 8 | கணேகளே | கணேகளேக் |
| 275 | 2 | பரமாத்மாவை | பரமாத்மாவைத் |
| 276 | 8 | பிரமாணபத்ரம் | பிரமாணப்பத்திரம் |
| ,, | 10 | என்பதற்கு | என்பதற்குத் |
| ,, | 15 | பிரமாணபத்திரம் | பிரமாணப்பத்திரம் |
| ,, | 2 | லக்ஷயம் | லக்ஷியம் |
| 277 | 3 | அதை | அதைப் |
| ,, | 11 | உணர்வுவுதிப்பதுதான் | உணர்வுஉதிப்பதுதான் |
| ,, | 13 | என்று | என்ற |
| ,, | 3 | அதிஷ்ட்டானம் | அதிஷ்டானம் |
| 278 | 1 | ஒரேயுபாயம் | ஒரேஉபாயம் |
| 279 | 13 | அடைவதற்குசேது | அடைவதற்குச்சேது |
| 282 | 8 | உளள | உள்ள |
| ,, | 9 | ஒன்றை தனது | ஒன்றைத்தனது |
| 283 | 5 | அந்தபரமாத்மாவை | அந்தப்பரமாத்மாவை |
| 284 | 12 | யோங்கார | ஓங்கார |
| 285 | 14 | விளேயாட்டு | விளேயாட்டுப் |
| 286 | 6 | ஆத்மதியானம் | ஆத்மத்தியானம் |
| 288 | 2 | தன்மையதா | தன்மையதாக |
| ,, | 8 | பிகாசவடிவ | பிரகாசவடிவ |
| 289 | 8 | ரூபமாக | ரூபமாகச் |
| ,, | 1 | விசாரம் | விசாரம் |
| 291 | 2 | ஸ்வாதிஷ்ட்டானம் | ஸ்வாதிஷ்டானம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 4 | எட்டுசக்ரம் | எட்டுச்சக்கரம் |
| 292 | 1 | எட்டுசக்ரம் | எட்டுச்சக்கரம் |
| 293 | 2 | அறிபடாபொருள் | அறிபடாப்பொருள் |
| 294 | 3 | யெதனுடைய, செயல்பட்டு | எதனுடைய,செயல்பட்டுக் |
| 295 | 1 | வதிருக்கிறது | வந்திருக்கிறது |
| ,, | 2 | மெழிந்தான் | மொழிந்தான் |
| 296 | 7 | அந்நியாயமாகப் | அநியாயமாகப் |
| 297 | 12 | கீதாசாரதாலாட்டு | கீதாசாரத்தாலாட்டு |
| 298 | 9 | அந்த | அந்தக் |
| ,, | 9 | அவரம் | அபரம் |
| 299 | 8 | அவரம் | அபரம் |
| ,, | 10 | யவச்சின்னச் | யவச்சின்ன |
| ,, | 11 | யவச்சின்னச்சேதனம் | யவச்சின்னசேதனம் |
| ,, | 9 | உள்ளச்சேதனம் | உள்ளசேதனம் |
| 300 | 1 | முடுச்சுபோடுவார்கள் | முடுச்சுப்போடுவார்கள் |
| 301 | 13 | உன்னைபாவியென்று | உன்னைப்பாவியென்று |
| 302 | 10 | அதிஷ்ட்டான | அதிஷ்டான |
| 303 | 1 | அதை | அதைத் |
| 307 | 10 | எல்லாபாவத்தைப் | எல்லாப்பாவத்தைப் |
| ,, | 12 | தன்னைகாமி, | தன்னைக்காமி, |
| 309 | 7 | எந்த,அந்த | எந்தப்,அந்தப் |
| ,, | 11 | எந்த | எந்தக் |
| ,, | 7 | வரிஷ்ட்டம் | வரிஷ்டம் |
| 310 | 10 | தன்னை | தன்னைத் |
| 311 | 5 | வரிஷ்ட்டம் | வரிஷ்டம் |
| 313 | 3 | இனியந்த | இனிஅந்த |
| ,, | 15 | யென் | என் |
| 314 | 11 | பிப்லம் | பிப்பலம் |
| 315 | 1 | இந்ததருவை | இந்தத்தருவை |
| ,, | 12 | இவ்அழியும் | இவ்வழியும் |
| 316 | 15 | எண்ணிபாருமம்மா | எண்ணிப்பாருமம்மா |
| ,, | 11 | இந்த | இந்தத் |
| 318 | 10 | போலதோழர்கள் | போலத்தோழர்கள் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 319 | 15 | அந்தயுண்பதற்காக | அந்தயுண்பதற்காகப் |
| 320 | 1 | யிவர் | இவர் |
| 321 | 1 | இருவராக | இருவராக்க் |
| 322 | 11 | சிவகுமாரசாஸ்த்ரி | சிவகுமாரசாஸ்த்திரி |
| ,, | 8 | தேகவடிவத்ருவில் | தேக்வடிவத்தருவில் |
| 323 | 8 | மனுடஜென்மம் | மானுடஜென்மம் |
| 326 | 2 | எப்படிகோலம் | எப்படுக்கோலம் |
| 327 | 3 | அதிஷ்ட்டான்த்தின் | அதிஷ்டானத்தின் |
| 330 | 2 | பிரம்ஹம்மும் | பிரஹ்மமும் |
| ,, | 9 | கீதாசார்த்ரலாட்டு | கீதாசார்த்தாலாட்டு |
| 331 | 2 | மற்றையவைகளில் | மற்றவைகளில் |
| 332 | 2 | மற்றையவர்கள் | மற்றயவர்கள் |
| ,, | 13 | ஆம்மகிரிட | ஆத்மகிரீட |
| ,, | 6 | இந்தபரமாத்மா | இந்தப்பரமாத்மா |
| 333 | 12 | ரூபமாக | ரூபமாகத் |
| 335 | 7 | யேதாவது | ஏதாவது |
| 336 | 4 | ராம்தார்சர்க்கு | ராம்தாசருக்கு |
| 338 | 12 | ஏடனையைவிட்டுவிடு | ஏடணையைவிட்டுவிடு |
| 339 | 11 | என்னயடியம்மா | என்னேயடிம்மா |
| 340 | 11 | அந்தகிராமத்திற்கு | அந்தக்கிராமத்திற்கு |
| 341 | 13 | பட்டிணத்தார் | பட்டினத்தார் |
| 342 | 1 | கொலேகாரனே | கொலேகாரனேக் |
| ,, | 15 | மனிதனே | மனிதனேச் |
| 343 | 7 | பொய்சாக்ஷி | பொய்ச்சாக்ஷி |
| ,, | 8 | என்ருன் | என்ருர் |
| ,, | 9 | பொய்சாக்ஷி | பொய்ச்சாக்ஷி |
| ,, | 11 | என்ருன் | என்ருர் |
| 344 | 2 | திருஷ்ட்டாவாக | திருஷ்டாவாக |
| ,, | 16 | வானபிரஸ்த்தன் | வானப்பிரஸ்த்தன் |
| 345 | 5 | செறிந்திருக்கும் | செறிந்திருக்கும் |
| 355 | 3 | சொரூமா | சொரூப்மா |
| 371 | 12 | அகப்படுகிறதில்யோ | அகப்படுகிறதில்லேயோ |
| 380 | 13 | ஸ்பிருஹத : | ஸ்பிருஸ்த : |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 389 | 3 | பொருள் | பொருள்கள் |
| ,, | 10 | கொடுகிறதில்லே | கொடுக்கிறதில்லே |
| ,, | 1 | யடைநது | யடைந்து |
| 392 | 3 | பெறக்கட்டும் | பிறக்கட்டும் |
| ,, | 4 | பைனுக்கு | பையனுக்கு |
| ,, | 6 | உத்யோகம் | உத்தியோகம் |
| 396 | 8 | நிறைப்பி | நிறப்பி |
| 398 | 6 | இந்தபிரஹ்மத்தை | இந்தப்பிரஹ்மத்தை |
| ,, | 8 | காலபடைப்பில் | காலப்படைப்பில் |
| 405 | 8 | தாத்பரியம | தாத்பரியம் |
| 405 | 4 | ஏனேயப் | ஏனேய |
| ,, | 5 | அநுமாணப்,உபமாணம் | அநுமானப், உபமானம் |
| 410 | 5 | யார்க்கு | யாருக்கு |
| ,, | 8 | செயதீரல் | செய்தால் |
| ,, | 9 | இதுமுலமாக | இதுமூலமாக |
| 413 | 4 | வழியாக | வழியாகப் |
| ,, | 10 | மாறிமாறி | மாறிமாறிக் |
| 414 | 6 | நோக்கிச | நோக்கிச் |
| 417 | 2 | அவர்க்காகப் | அவருக்காகப் |
| ,, | 12 | உவகைக்கொள் | உவகைகொள் |
| 423 | 5 | ஈசுவரஞகி | ஈச்வரஞகி |

## மதுரை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலய வெளியீட்டின் புத்தக விபரங்கள்

| | | ரூபா பை |
|---|---|---|
| 1) | பிரஹ்மானந்த யுக்திரத்னுகரம் | 20—00 |
| 2) | ஞானவாசிட்டம் | 17—00 |
| 3) | பக்தி ஞானமிர்தம் | 6—00 |
| 4) | ஈசாவாஸ்ய பிரவசனம் | 3—00 |
| 5) | பிரமசூத்திரம் முதல் அத்யாயம் | 5—50 |
| 6) | ,, இரண்டாவது அத்யாயம் | 5—50 |
| 7) | குருபரக்கண்ணி | 1—00 |
| 8) | வேதாந்த ரத்னம் | 1—50 |
| 9) | ஸ்ரீ முருக கிருஷ்ண பஜனமிர்தம் | 1—00 |
| 10) | சங்கர சரிதாமிர்தம் | 3—00 |
| 11) | பஞ்சாக்கினி வித்தையும் பக்திப் பாடல்களும் | 1—50 |
| 12) | நன்மொழிக் களஞ்சியம் ஐநூறு | 1—50 |
| 13) | சற்குருபாத வாழ்த்தும் வேதாந்த மஞ்சரியும் கீதையின் பெருமையும் | 3—00 |
| 14) | பிரமசூத்திரம் மூன்ருவது அத்யாயம் | 15—00 |
| 15) | ,, நான்காவது அத்யாயம் | 8—00 |
| 16) | திருவிளக்குப் பூஜையின் விதி | 1—00 |
| 17) | முண்டக உபநிஷத்துப் பிரவசனம் | 20—00 |



ஸ்ரீ மீனம்பிகை பிரஸ், மதுரை. (போன் : 32869)